# தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை

## பொருளதிகாரம் I

அகத்திணையியல் & புறத்திணையியல்

பாவலரேறு ச.பாலசுந்தரம்

தமிழ் வாழ்க

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

### ஆராய்ச்சிக் காண்டிகையுரை

அகத்திணையியல் & புறத்திணையியல்

உரையாசிரியர்

பாவலரேறு, பேராசிரியர்

ச. பாலசுந்தரம்

தாமரை வெளியீட்டகம்

367, மேலவீதி, தஞ்சாவூர்-9.

ஆசிரியரின் சொந்த வெளியீடு

[C] முதற்பதிப்பு — நவம்பர் 1989.

## காணிக்கை

தமிழும் தமிழரும் சிறக்கச் சால்பகம் நிறுவித் தமிழ்ச்சங்கத்தைத் தோற்றுவித்துக் கைம்மாறு கருதாது அரும்பணியாற்றி வரும் பெருங்குணச் செம்மல் முன்னாள் தமிழகஅரசு அறநிலையத்துறை ஆணையர் திருமிகு

உலக. சுப்பிரமணியனார் அவர்கட்கு.

விலை. ரூ. 60

இந்நூல் வாளமர்கோட்டை தவத்திரு
காத்தையா சுவாமிகள் அருளாசியும்
தஞ்சை, சால்பக நிறுவனர்
திரு. உலக. சுப்பிரமணியனார் ஆதரவும்
தமிழ் வளர்ச்சிக்கான தமிழ்நாடு அரசின்
திட்டத்தின்கீழ் நிதியுதவியும் பெற்றது.

ஜெமினி அச்சகம், மேலவீதி, தஞ்சாவூர்-9.

## வாழ்த்துரை

தவத்திரு காத்தையா சுவாமிகள்
வாளமர்கோட்டை.

என் அன்பிற்குரிய தொல்காப்பியத் தொண்டர் பாலசுந்தரம் எழுதியுள்ள தொல்காப்பியம் பொருளதிகாரம் ஆராய்ச்சிக் காண்டிகை உரையின் முதல் பகுதியாகிய அகத்திணையியல் புறத்திணையியல் உரை நூலைப் பார்த்து மிகவும் மகிழ்ச்சி யடைந்தேன். இவரைப் பற்றியும் இவரது தமிழ்த் தொண்டு பற்றியும் எழுத்ததிகார உரைப் புத்தகத்தில் யான் கூறிய வாழ்த்துரைகளை நினைவு கூர்ந்து இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

தொல்காப்பியப் பொருளதிகாரம் என்னும் இலக்கணம் தமிழ் மொழிக்கே அமைந்த சிறப்பு எனக் கற்றவர் கூறுகின்றனர். அதற்குப் பழைய உரைகள் உள்ளன என்றாலும் அவற்றில் கூறப் பெறாத பல விளக்கங்கள் இவ்வுரையில் செய்திருப்பதாகச் சொல்லி சிலவற்றை என்னிடம் எடுத்துக் கூறினார். கேட்டு மகிழ்ச்சியுற்றேன். தமிழ் வளர்ச்சியில் ஆர்வமுடைய பேரறிஞர் கள் இதனை ஆராய்ந்து புதிய செய்திகளைத் தமிழுலகம் அறியச் செய்ய வேண்டும். தமிழாராய்ச்சி மாணவர்களும் ஆசிரியர் களும் இந்நூலைப் பெற்றுப் பயிலும் வாயிலாக இவ்வுரை யாசிரியருக்கு ஊக்கமும் ஆக்கமும் தரவேண்டும்.

தொடர்ந்து மற்றைய பகுதிகளும் விரைந்து வெளிவரவும் இவர் பல்லாண்டு உடல் நலத்தோடும் வளத்தோடும் இருந்து செந்தமிழ்க்கு ஆக்கமான பணிகளை மேலும் மேலும் செய்யவும் எல்லாம் வல்ல ஸ்ரீ சௌந்தரநாயகி சமேத சுந்தரேசப்பெருமான் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறேன். வாழ்க!

செ. காத்தையா

## பாராட்டு வாழ்த்துரை

தஞ்சை சால்பக நிறுவனர்
**திரு யு சுப்பிரமணியன்** இ. ஆ ப. (ஓ)

மதிப்பிற்குரிய பாவலரேறு ச. பாலசுந்தரம் அவர்களின் தொல்காப்பிய எழுத்ததிகாரம் — சொல்லதிகாரம், ஆராய்ச்சிக் காண்டிகை உரை நூல்களைத் தொடர்ந்து, யான் விருப்பத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் பொருளதிகாரத்தின் முதல்

பகுதியாக வந்துள்ள அகத்திணையியல் — புறத்திணையியல் ஆராய்ச்சிக் காண்டிகை உரை நூலைப் படித்துப் பார்த்துப் பெரிதும் மகிழ்ச்சியுற்றேன் — எழுத்ததிகாரம் — சொல்லதிகாரம் உரைகளைப் போலவே அவ்வவ்வியல்களில் கூறப்படும் செய்திகளைச் சுருக்கமாகக்கூறித் தாம் கண்ட புதிய கருத்துக் களை ஆங்காங்கே குறிப்பிட்டு விளக்கியுள்ளார்.

மக்களின் வாழ்வியலை ஒட்டி இலக்கியம் செய்வதற்குரிய நெறிமுறைகளை அறிவியலுக்கு ஒப்ப வகைப்படுத்திக் கூறும் இலக்கணமாகிய பொருளதிகார இலக்கணத்தைப் பெற்றிருப்பது தமிழ் மொழிக்கு அமைந்துள்ள தலையாய சிறப்பாகும். இதில் கூறப்படும் இலக்கணச் செய்திகள் இலக்கியம் பற்றியவையாக இருந்தாலும் அவை பண்டைத் தமிழினத்தின் வாழ்வியல் முறையினையும் போக்கினையும் அரசியல் ஆட்சிமுறைகளையும் தெரிந்து கொள்வதற்கு உதவுவனவாக உள்ளன. உலக மக்களின் நாகரிக வளர்ச்சி பற்றியும் பண்பாடு பற்றியும் பண்டைத்தமிழ் நெறிபற்றியும் புரிந்துகொள்ளும் முறையில் பொருளதிகாரக் கோட்பாடு பற்றிய முன்னுரை அமைந்துள்ளமை பாராட்டத்தக்கது.

பழைய உரைகளினால் தெரிந்துகொள்ள இயலாத பல செய்திகளை இக்காண்டிகையுரை தெளிவாக விளக்குகிறது. சூத்திரங்களின் கருத்துக்களை சங்க இலக்கியங்களிலிருந்தே ஆதாரங்காட்டி விளக்கியுள்ளமை காணத் தக்கது. தமிழ் நெறியை விளக்கி வற்புறுத்தும் இடங்களில் இவரது நுட்பமான ஆராய்ச்சித்திறன் விளங்குகிறது. தொல்காப்பியத்தின் நுண்ணிய கருத்துக்களை ஓரளவு புரிந்துகொள்ள இக்காண்டிகையுரை மிகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. தமிழினத்திற்குச் சிறப்பையும் தமிழ்மொழிக்குப் பெருமையும் தரும் தொல்காப்பியக் கருத்துக்களை யாவரும் அறிந்து கொள்ள வேண்டுமென்னும் விருப்பத்தால் பாவலரேறு அவர்கள் ஆற்றிவரும் தொண்டிற்குத் தமிழினம் என்றும் நன்றியுடனிருக்கக் கடமைப்பட்டுள்ளது. தமிழ் உலகம் இதன் பயனைப் பயின்றறிய வேண்டுமென்பது என் விருப்பம். பொருளதிகாரத்தின் மற்றைய பகுதிகள் விரைவாக வெளிவரவும் இவ்வுரையாசிரியர் பல்லாண்டுகள் எல்லா நலத்தோடும் வாழ்ந்து தமிழ்மொழிக்கு மேலும் தொண்டாற்றிச் சீர்த்தி பெறவும் இறைவன் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறேன். வாழ்க!

அன்பன்

**யு. சுப்பிரமணியன்**

# என் உரை

தமிழ் தமிழர் வரலாற்றினைப் பற்றிக் கடந்த பல நூற்றாண்டுகளைக் காட்டினும் இவ் இருபதாம் நூற்றாண்டில் வெளிவந்துள்ள கருத்துக்கள் பலவாகும். அவற்றுள் ஒரு கூறே தமிழ் இலக்கியம் - இலக்கணம் பற்றியதாகும். பொதுவாக இந்தியத் துணைக் கண்டத்தில் வழங்கும் மொழிகளுக்குத் தாயாகவும் வழிகாட்டியாகவும் இருப்பது வடமொழி எனப்படும் சமற்கிருதமாகும் என்பது முன்னைய ஆய்வாளர் பலரின் முடிபாக இருந்தது. அதனைத் தகர்த்துக் கால்டுவெல் அவர்கள் ஆரியமொழிக் குடும்பம் வேறு திராவிட மொழிக் குடும்பம் வேறு. திராவிட மொழிக் குடும்பம் என்பது தமிழ்மொழியைத் தலைமையாகக் கொண்டது என நிறுவியபின் ஆய்வாளர் பலர் அம்முறையில் ஆராய்ந்து பல கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளனர். எனினும், தமிழிலக்கணக் கோட்பாடுகள் சமற்கிருதத்தைப் பின்பற்றியவையே என்பது இன்றும் பலர் கருத்தாக உள்ளது.

யான் புலவர் கல்லூரியில் ஆசிரியனாக அமைந்து ஆறுமுக நாவலர் இலகணச் சுருக்கத்திலிருந்து எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணிபற்றிய இடைக்கால — பிற்கால நூல்களைப் பாடஞ்சொல்லிப் பின் தொல்காப்பியத்தைப் பாடம் சொல்லும் நிலை ஏற்பட்டபோது உரையாளர்தம் கருத்துக்களைப் புரிந்து கொண்டு விளக்குதலே தலையாய நோக்காக அமைந்திருந்தது அதன்பொருட்டு இதுகாறும் வழக்கிலுள்ள பலஇலக்கண நூல்களையும் அவற்றின் உரைகளையும் பயின்று ஆராயும் நிலைஏற்பட்டது. ஆராயுங்கால் அவையாவும் வடமொழிக் கோட்பாடுகளையே மதித்து விளக்குவனவாக உள்ளமை புலப்பட்டது.

அவ்வாறாயின் தமிழ் ஆரியத்தினின்று வேறுபட்டது தனித்தன்மையும் கோட்பாடுகளையும் உடையது என்பது எவ்வாறு பொருந்தும்? என்றவினாவே உரையாளர்களின் கருத்துக்களை விலக்கித் தொல்காப்பிய நூற்பாக்களை அறிவியற் கண்ணோட்டத்துடன் ஆராயத் தூண்டியது. பிரயோக விவேக நூலாசிரியரும், வீரசோழிய உரையாசிரியரும் சிவஞான முனிவரும், சுவாமிநாத தேசிகரும் தமிழ்நெறிக்கும் வடநூல் நெறிக்கும் உள்ள வேறுபாடுகளை ஒவ்வொரு கோணத்திற் சுட்டி எடுத்துக்காட்டியுள்ள செய்திகளும், நச்சினார்க்கினியர் பாயிர உரையிலும் கற்பியல் நான்காம் சூத்திர உரையிறுதியிலும் கூறியுள்ள செய்திகளும் எனது புதிய பார்வைக்குத் திறவுகோலாக அமைந்தன. நச்சினார்க்கினியர் கூறும் செய்தி தொல்காப்பியர் பாரதம் பாடிய வியா முனிவர்க்குமு தியவர்சந்

தொல்காப்பியம் ஆதியூழியின் அந்தத்தே செய்யப்பட்டது என்பதாகும்.

தமிழுக்கும் வடமொழிக்கும் இலக்கண அமைப்பில் அமைந்துள்ள வேறுபாடுகளுள் தமிழ் எழுத்திலக்கணத்தில் வருக்க்ங்களை மேற்கொள்ளாமை - சார்பெழுத்தின் அமைப்பு - சந்தியில் தீர்க்கசத்தி, குணசந்தி விருத்தி சந்தி முறைமையை மேற்கொள்ளாமை - மாத்திரைக் கொள்கை - மொழிமுதல் மெய் வாராமை முதலியவையும் - சொல்லிலக்கணத்தில் - திணைப் பாகுபாடும் - ஆண்பால் பெண்பால் உயர்திணையளவே கொண் டுள்ளமையும் - தெரிநிலைவினை - குறிப்புவினைக் கோட்பாடும் - மூன்று காலத்தின் மேல் விரியாமையும் - எழுவாய் வேற்றுமை முறைமையும், ஆகுபெயர்க் கோட்பாடும் - தொகைமொழிப் பாகுபாடும் உரிச்சொற்கள் இடைச்சொற் சேர்க்கையால் பெயராகவும் வினையாகவும் மாறும் என்பதும், சில பெயர்ப் போலியாயும் வினைப் போலியாயும் நிற்கும் என்பதும் இவை போல்வன பிறவும்-பொருளதிகாரத்தில் ஒழுகலாறு அடிப்படையில் வகுத்துக் கொண்டுள்ள கைக்கிளை முதலாய திணையமைப்புக் களும், முதல் கரு உரி என்னும் பொருண்மையும் - களவு - கற் பென்னும் கைகோட் பிரிவுகளும் - உவமவியலுள் கூறப்படும் உள்ளுறை உவமக் கோட்பாடுகளும் - செய்யுளியலுள் கூறப் படும் வெண்பா ஆசிரியப்பா முதலாய பாவமைப்புக் கொள்கை யும் அவற்றின் ஓசைபற்றிய கொள்கையும் அடியமைப்புமுறைமை யும் - இவைபோல்வன பிறவும் தலையாயவையாகும்.

ஒரு மொழியின் எழுத்திலக்கணம் சொல்லிலக்கணம் பற்றிய கொள்கைகள் அம்மொழியின் இலக்கியக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டவையேயாம். அம்முறையில் வட மொழி இலக்கியக் கொள்கையொடு சிறிதும் இயைபில்லாத தனித்ததொரு (உலகில் பிற எம்மொழிக்குமில்லாத) இலக்கியக் கோட்பாட்டினை உடைய தமிழ் - எழுத்திற்கும் - சொல்லிற்கும் - மெய்ப்பாடு போன்ற செய்யுளுறுப்புக்கட்கும் வடமொழியைப் பின்பற்றியது என்பது எவ்வாறு பொருந்தும்? - பொருளதிகாரக் கோட்பாடு எதனைப் பின்பற்றியது? என்ப-என்மனார்-போன்ற வழிநூல் வாய்ப்பாடுகளால் தொல்காப்பியம் எவ்வெந்நூல்களைச் சுட்டுகின்றதோ - அவ்வந்நூல்களே எழுத்திற்கும் சொல்லிற்கும் அடிப்படை என்பதே நேர்மையாகும்.

இனி, கால வரையறையைக் காணும் பொழுது - சொற்களை யும் அவற்றின் ஆட்சியையும் மட்டுமே கொள்ளாமல், அரசு வரலாறு - சமய வரலாறு முதலியவற்றையும் கொள்ளுதல் வேண்டும். ஆட்சி வரலாறுகளைக் கூர்ந்து நோக்கின் அவை சமயக் கொள்கையின் ஆக்கத்தால் நிகழ்ந்து வந்து கொண்

டிருத்தலைக் காணலாம். இற்றைக்கு இந்தியத் துணைக் கண்டத்தில் நிலவும் சமயங்களுள் கிறித்துவுக்கு முற்பட்டவை, வைதிகச் சமயம் சமணம், பவுத்தம் ஆகிய மூன்றுமேயாகும். யாவும் இந்தியாவின் வடபகுதியில் தோன்றிப் பிற இடங்களில் பரவியவை. வைதிகச் சமயம் தனி ஒருவரான் தோற்றுவிக்கப் பட்டதன்று. தனியொரு கோட்பாட்டினதுமன்று. பல்வேறு சான்றோரால் அமைக்கப்பெற்றுப் படிப்படியாகச் செம்மை செய்யப் பெற்று விளங்குவதாகும்.

இற்றைக்கு வரலாற்றாசிரியன்மார் ஆரியர்கள் மத்திய ஆசியாவினின்றும் வந்தவர்கள் இந்தியாவிற்கு வந்தபின் இந்திய உள்நாட்டு மொழிகளொடு தங்கள் மொழியையும் கலந்து சமற்கிருத மொழியைப் படைத்து அதனை எழுத்து வழக்கிற்கு மட்டும் பயன்படுத்தி வந்தனர் என்று பல சான்றுகளொடு நிறுவி யுள்ளனர். அது மட்டுமன்று அவர்கள் இந்தியாவிற்குள் வந்த காலத்து ஆண்டு வாழ்ந்தவர் திராவிட மக்கள என்றும் வரைந்துள்ளனர். சுருக்கமாகச் சொன்னால் அப் பழந்தமிழ் மக்களின் மொழியையும், சமயக்கோட்பாட்டினையும் அடிப்படை யாகக் கொண்டே தம் மொழியையும் சமயத்தையும் படைத்துக் கொண்டனர் என்பது புலனாகும். காரணம் - நால்வருணக் கோட்பாடு வேள்வி - மந்திரம் என்பவை மேலை ஆரிய மக்களிடத்தில் முன்னும் இல்லை இன்றும் இல்லை. ஆரியர்கள் தமிழரிடத்திலிருந்து எடுத்துக் கொண்ட கொள்கைகளை உள்ளவாறே மேற்கொள்ளாமல் அவற்றைத் தங்கள் இன நலத்திற்கேற்பத் திரித்துக் கொண்டு தம் வல்லாண்மையான் வற்புறுத்தத் தொடங்கிய சூழலில்தான் - சமணக் கோட்பாடும் அவ்விரண்டிலும் காணப்பட்ட சில முரண்பாடு காரணமாக பவுத்தக் கோட்பாடும் தோன்றிப் பரவின.

சமணமும் பவுத்தமும் தென்னகத்திற் பரவுவதற்குமுன் தமிழர் களிடையே இருந்த சமயக் கோட்பாடு வைதிகக் கோட்பாட்டி னால் கலப்புறுவதாயிற்று. சில அழியலாயின - சில திருத்தப்பட லாயின. பின்னர் சமண பவுத்தர்களால் சில அழிந்தன. இடைக்காலத்தில் அவர்களே பல நூல்களைச் செய்ய முற்பட்டுப் படைத்துள்ளனர்.

தொல்காப்பியம் தமிழகத்தில் வடமொழியையும் வைதிக சமயத்தையும் வலிந்து பரப்ப முற்பட்டதொரு காலக் கட்டத்தில் பழந்தமிழ் நூல்கள் வழக்கொழியும் சூழ்நிலையை எண்ணிப் பழந்தமிழ் கோட்பாடுகளைக் காக்குமுகத்தான் தொகுத்துச் செய்யப்பட்டதாகும். அக்காலம் வைதிக சமயத்தை எதிர்த்துச் சமணம் தலைதூக்கிய காலமாகும். தொல்காப்பியம் ஆரியக் கோட்பாட்டினுக்கு மாறானது என்னும் ஒரு தகுதி பற்றியே சமணர்கள் அதனைப் பயின்று காத்தனர் என ஊகிக்கலாம்.

கி பி முதல் நூற்றாண்டில் தொடங்கிய வைதிக சமய - சமண சமய ஊமைப்போரின் வெளிப்பாடே களப்பிரர் ஆட்சியாக முதிர்ந்தது. அஃது இன்னும் இருண்ட காலமாகவே உள்ளது. அந்நிலையில் சமணர்தம் ஆதிக்கம் ஓங்கியது. அவர்கள் சங்கங்களையும் பள்ளிகளையும் நிறுவிக் கல்வி வாயிலாகச் சமயத்தைப் பரப்பத் தலைப்பட்டனர். ஆண்டவர்கள் சமணத்தை ஏற்றிருந்தனர் சமண பவுத்த எதிர்ப்பு ஆறாம் நூற்றாண்டில் தொடங்கித் திருஞானசம்பந்தர் முதலானோரால் வளர்க்கப் பெற்றுப் பத்தாம் நூற்றாண்டில் வெற்றி கண்டது. ஏறத்தாழ முதல் ஐந்நூறு ஆண்டுகளில் பெரிதும் பயிலப்படாது கிடந்த தொல்காப்பியத்திற்குச் சமணர்கள் தம் சமய நோக்கில் உரை காணத் தொடங்கினர். அவ்வுரைகளின் தொகுப்பே இளம்பூரணர் பெயரால் இன்று வழங்கி வருகிறது. வைதிக சமயம் நன்கு வேரூன்றியபின் 13 ஆம் நூற்றாண்டு முதல் வடமொழிக் கோட்பாடுகளையும் வைதிக சமய நெறியையும் அடிப்படையாகக் கொண்டு தொல்காப்பியத்திற்கு உரை எழுந்தன மேற்கூறப்பட்ட கருத்துக்கள் வரலாற்று அடிப்படையில் ஊகிக்கப்பட்டவையாகும். இவை எதிர்காலத்தில் சான்றுகளால் நிறுவப்படும் என்பது எனது உறுதியான கருத்து. இவ்வடிப்படையில் சிந்தித்துத் தொல்காப்பியத்திற் காணப்படும் அகச்சான்றுகளைக் கொண்டு நான்மறை - ஐந்திரம் முதலியவற்றிற்கு விளக்கந் தரப்பட்டுள்ளது. ஏரண நூல் முறையில் விரிவான ஆய்வுரை பின்னர் வரும்.

## நன்றியுரை :

இப்பொருளதிகார உரையையும் கண்டு மகிழ்ந்து நல் வாழ்ந்தருளியுள்ள தவத்திரு காத்தையா சுவாமிகளுக்கு என் நன்றி சான்ற வணக்கம் உரியது. ஓர் உடன்பிறப்பாக அமைந்து ஊக்கி இவ்வுரையைப் படித்து உவந்து வாழ்த்துரை நல்கியுள்ள பெருந்தகை திரு உலக. சுப்ரமணியனார் அவர்கட்கும் எழுத்திற்கும் சொல்லிற்கும் வரைந்தமை போல இப் பொருளுரையையும் ஆழ்ந்து நோக்கி அரியதொரு ஆய்வுரையை வழங்கியுள்ள உழுவலன்பர் இலக்கணச் செம்மல் திரு. வே. கோபாலையர் அவர்கட்கும் தொடர்ந்து எனது உரை வெளிவர ஆவன செய்து உதவும் அன்பு சான்ற முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பனார் அவர்கட்கும் என்றும் நன்றியுடையேன். முன்னைய நூல்களை யொப்ப இதனையும் நன்கு அச்சிட்டு உதவியுள்ள பேராசிரியர் திரு. பூ. நா இராமச்சந்திரன் அவர்கட்கு நன்றி கூறுகிறேன். இச்சிறியேனைப் பணி கொண்டு இனிது நிறைவேற்றிவரும் இறையருளைச் சிந்தித்து வணங்குகிறேன். வாழ்க தமிழ்நெறி !

அன்பன்

**ச. பாலசுந்தரம்**

# ஆய்வு முன்னுரை

**பண்டித, வித்துவான் தி. வே. கோபாலையர்.** எம். ஏ.,

தொல்காப்பியம் எழுத்துப்படலம், சொற்படலங்களைத் தொடர்ந்து பொருட்படலம் அகத்திணையியல் புறத்திணையியல் கட்குப் பெரும்புலவர் பாலசுந்தரனாரின் ஆராய்ச்சிக் காண்டிகை யுரை வெளிவருகின்றது. ஆசிரியர் பல்லாண்டுகளாகத் தொல்காப்பியம் பற்றி ஆராய்ந்து கண்ட அரிய செய்திகள் பல இப்பகுதிகளிலும் மிளிர்கின்றன.

அறம் பொருள் இன்பம் வீடு என்ற உறுதிப்பொருள் நான்கனையும் அடிப்படையாகக் கொண்டே செய்யுள்கள் தோன்றுவனவாம். அவற்றுள் இன்பத்தை அகம் என்றும் ஏனையவற்றைப் புறம் என்றும் தமிழ்ச் சான்றோர் மனங் கொண்டனர். நாடக வழக்கும் உலகியல் வழக்கும் பெரும்பான்மையும் பற்றி அகப்பொருளையும், ஓரளவு பின்பற்றிப் புறப் பொருளையும் தம் செய்யுள்களில் விரித்துரைத்தனர். எந்தச் செய்தியைக் குறிப்பிட்டாலும் அதனை அகம் புறம் என்ற இரண்டனுள் திணை துறை வகுத்து அடக்கிக் கூறும் வகையில் தமிழில் பொருளிலக்கணம் அமைந்துள்ளது. இஃது இம்மொழியின் சிறப்பியல்புகளுள் தலையாயது. "எழுத்தும் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத் தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேம் எனின் இவை பெற்றும் பெற்றிலேம்" என்ற இறையனா ரகப்பொருள் உரைச் செய்தி பொருளிலக்கணத்தின் சிறப்பை உணர்த்துவ தாகும்.

தொல்காப்பியப் பொருட்படல அகத்திணை இயல் புறத் திணை இயல்களுக்குப் பண்டை உரையாசிரியராம் இளம்பூரணர், ஆசிரியர் நச்சினார்க்கினியர் என்ற சான்றோர் இருவர் உரை யொடு ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் வரைந்துள்ள உரையும் உரை வளங்களில் அறிஞர் பலர் குறிப்பிட்டுள்ள பல ஆராய்ச்சிக் கருத்துக்களும் இவ்வியல்கள் பற்றி அறிய நமக்கு உதவுவன. இவற்றில் காணக்கிட்டாத பல அரிய இனிய செய்திகள் இவ்வாராய்ச்சிக் காண்டிகை உரை வாயிலாக நாம் அறியும் வாய்ப்புப் பெற்றுள்ளோம். நம் தமிழ்மொழி பற்றிய ஆராய்ச்சி பெருகிவரும் இந்நாளில் இவ்வாராய்ச்சிக் காண்டிகையுரை அகப்பொருள் புறப்பொருள் இலக்கணங்களைத் தெளிவாக உணர முற்படுவார்க்குப் பெரிதும் உதவும் என்பது ஒருதலை.

இனி இதன் வாயிலாக நமக்குக் கிட்டியுள்ள அரியபல செய்திகளையும் நிரலே நோக்குவோம்.

ஏழுவகை மதங்களும் இயல்புளி அமைய இக்காண்டிகையுரை இனிதின் இயல்கிறது. ஆசிரியர் பெரும்பாலும் இளம்பூரணர் கொண்ட பாடங்களையே கொண்டுள்ளார் எனினும்,

உயர்ந்தோர்க்குரிய ஓத்தினான,
வேந்துவினை இயற்கை, வேந்தனின் ஒரீஇய
ஏனோர் மருங்கினும் எய்திடன் உடைய (நூற் - 33)

என இரு நூற்பாக்களை இணைத்து 'உடைத்தே' என்ற முடிபினை, 'உடைய' எனக்கொண்டுள்ளார்.

ஒன்றாத்தமரினும் பருவத்தும் சுரத்தும்
ஒன்றியமொழியொடு வலிப்பினும் விடுப்பினும் (நூ - 42)

என்பதனுள் இளம்பூரணர் பாடத்தைவிடுத்து 'ஒன்றிய தோழியொடு' என்ற நச்சினார்க்கினியர் பாடத்தைக் கொண்டுள்ளார். கலியே பரிபாட்டு ஆயிருபாவினும் (நூ - 55) என்ற இளம்பூரணர் பாடத்தைக் கலியே பரிபாட்டு ஆவிரு பாவினும் எனவும்' சுட்டியொருவர் பெயர் கொளப்பெறாஅர் (நூ - 56) என்ற பாடத்தை விடுத்துப் 'பெறாஅ' எனவும் பாடங்கொண்டுள்ளார். மாபெருந்தானையர் (நூ - 62) என்ற முன்னோர் பாடத்தைவிடுத்து மாவருந் தானையார் என்ற பாடத்தைக்கொண்டுள்ளார். [1] நச்சினார்க்கினியரைப் பின்பற்றி வஞ்சிதானே முல்லையது புறனே' (நூ - 63) உழிஞைதானே மருதத்துப்புறனே (65) தும்பைதானே நெய்தலதுபுறனே, (71) வாகைதானே பாலையதுபுறனே (75) காஞ்சிதானே பெருந்திணைப் புறனே (79) என்ற அடிகளைத் தனித்தனி நூற்பாக்களாகக் கொண்டுள்ளார்.

மறங்கடைக் கூட்டிய குடிநிலை (நூ - 61) என்பதற்கு நச்சினார்க்கினியரையடுத்துத் "துடிநிலை" எனப் பாடங் கொண்டுள்ளார். அனைநிலைவகை (நூ - 77) என்ற முன்னவர் பாடத்தைவிடுத்து 'மனைநிலைவகை' எனக்கொண்டுள்ளார். [2] வேலைநோக்கிய விளக்குநிலை (நூ - 91) என்பது இளம்பூரணர் பாடம் 'வேலினோக்கிய' என்றபாட வேறுபாடும் உண்டு.

1. மாவரும் தானையர் என்பதே நச்சினார்க்கினியர் பாடம் என்பதுஅவர் உரையான் தெளியப்பட்டது.
2. மனைநிலை வகையென்பது பாடபேதமன்று புணர்மொழிப் பிரிப்பான் அமைந்தது.

பாடவேறுபாட்டைக்கொண்டு அதனை வேலின் ஒக்கிய என்று பிரித்துப்பொருள் செய்துள்ளார்.

புதியகருத்துக்களைக் குறிப்பிடவேண்டிய இடங்களைத் தவிர ஏனையபலவற்றிலும் இளம்பூரணரைத் தழுவியுள்ளமை காணலாம். எனினும் தமக்கு நச்சினார்க்கினியரிடத்தும் உள்ள ஈடுபாட்டினைப் பெரும்பொழுது சிறுபொழுது வரையறைகளை விளக்குமிடத்து அவர் கூறியவற்றை ஒட்டி விளக்கம் வரைவது கொண்டும் முழுமுதல் அரணத்துக்கு அவர்கூறும் விளக்கத்தை எடுத்தியம்புவது கொண்டும் "தானையானைகுதிரை" என்ற தொடருக்கு அவர் விளக்கத்தை எடுத்துக்காட்டிப் போற்றுவது கொண்டும் வெளிப்படுத்தியுள்ளார். இவ்வாறே நாவலர் உரையையும் சுட்டியுள்ளார்.

இனி, இக் காண்டிகையுரையில் நுட்பமாக விளக்கப்பட்டுள்ள செய்திகளை நிரலே நோக்குவோம்.

இவ்வீரியல்களுக்கும் உரை எழுதுதற்கு மேற்கொண்ட அடிப்படைக்கோட்பாடுகளை இவ்வாசிரியர் பொருளதிகாரப் பாயிரவுரை, அகத்திணையியல் முன்னுரை, 14,22, ஆகிய நூற்பாக்களின் விரிவுரை, புறத்திணையியல் முன்னுரை, பாடாண்டிணை பற்றியதொரு சிறுகுறிப்பு ஆகியவற்றில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். இவற்றுள் இயம்பப்பட்டுள்ள செய்திகள் இவருடைய நுண்மாண் நுழைபுலத்திற்குச் சான்று பகர்கின்றன கூர்ந்து நோக்கி உளங்கொளற்பாலன. 'அகம்' என்பதன்பொருள் நன்கு விளக்கப்பட்டுள்ளது. [பக் - 3,4] கைக்கிளை ஒருவர் மாட்டுக்கிளர்ந்த முற்றுப்பெறாத காதல், பெருந்திணை அளவிறந்த வேட்கை, கைக்கிளையும் பெருந்திணையும் நடுவண் ஐந்திணையின் குறைவும், பெருக்கமும் ஆகிய விகாரங்களேயாதலின் அவை அகனைந் திணைக்குள் அடங்கி நிகழும். கைக்கிளை முல்லையினும் குறிஞ்சியினும் பெருந்திணை மருதத்தினும் நெய்தலினும் மிக்குவரும், கைக்கிளைக்குப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் பெருந்திணைக்கு இரங்கலும் ஊடலும் அவற்றின் நிமித்தங்களும் உரிப்பொருளாக அமையும் (பக் - 2, 6, 18, 39) என்னும் விளக்கம் நோக்கத்தக்கது.

திணைஎன்பது ஒழுகலாறு. முல்லை முதலாய திணைக் குறியீடுகள் நிலப்பெயராகவும் வழங்கப்படும். காடுமுதலாய நிலங்களுள் வேறுபல பூக்களும் மரங்களும் இருப்ப முல்லை முதலாயவற்றைத் தேர்ந்து அவற்றான் நிலப்பகுதிகளைக்

குறியீடு செய்தமைக்குக் காரணம் அப்பெயர்கள் ஒழுக்கத்தைக் குறிக்கவும் ஏற்புடையனவாக அமைத்திருத்தலேயாம். அங்ஙனம் இருதிறனும் உணர்த்தும் வகையில் தேர்ந்தமைக்குக் காரணம் புறத்திணைகளையும் இருதிறனும் அமையப் பூக்களால் குறியீடு செய்தற் பொருட்டேயாம் என்று குறிப்பிடும் ஆசிரியர் தரும் விளக்கம் சொற்பொருள் ஆராய்ச்சியுடன் விளங்குகின்றது. (பக்-14,15) காடுறையுலகம் முதலாய நானிலங்களும் கார்முதலாய அறுவகைப் பெரும்பொழுதுகளும் மாலைமுதலாய அறுவகைச் சிறுபொழுதுகளும் இயற்கையின் அடிப்படையில் தோன்றுவன ஆதலின் அவை முதற்பொருள் எனப்பட்டன. அந்நிலமும், பொழுதும் காரணமாகத் தோன்றும் மா மரம் முதலியன கருப்பொருள்கள். இயற்கையும் செயற்கையும் காரணமாகத் தோன்றும் உணர்வுகள் அவைபற்றிய ஒழுகலாறுகள் உரிப் பொருள்களாம். எனவே இவற்றை முதல் கரு உரி என்று குறிப்பிடுதல் மரபாகும் (பக் - 4, 12) அகத்திணை இயல் நூற்பாக் களின் முறைவைப்பு (பக் - 5) அகத்திணையியலை அடுத்துக் களவியல் கற்பியல்களை வையாமல் புறத்திணையியலை அமைத் துள்ளமைக்குக் காரணம் (பக் - 5) பற்றிய விளக்கங்கள்.

ஒரு செய்யுளுக்குத் திணை காணுங்கால் முதற்பொருளுக்கு முன்னுரிமை தரல் வேண்டும். அஃதின்றேல் கருப்பொருட்கும் அதுவுமின்றேல் உரிப்பொருளுக்கும் உரிமை தந்து கூறல் வேண்டும் என்று இளம்பூரணர் கருத்தை ஏற்று அதனைக் காரணத்தொடு விளக்கி ஏற்ற எடுத்துக்காட்டுக்கள் தந்துள்ளார். (பக். 10—12)

மக்கள் கருப்பொருளே என்பதனையும் ஏனைய கருப் பொருள்களின் அவர்கள் வேறுபட்டவர் என்பதனையும் பல இடங்களில் இயைபு பற்றிச் சுட்டியுள்ளார். (பக். 9, 47, 48, 52, 53) இயற்கைத்திரிபு வேறு மக்களான் ஆக்கிக் கொள்ளப் பெறும் செயற்கை வேறு என்ற செய்தி இடம் நோக்கி நன்கு விளக்கப்பட்டுள்ளது. (பக்-13) பண்டு ஆவணி தொடங்கி ஆடி இறுதியாகத் தமிழர் ஓராண்டினைக் கொண்ட அரிய செய்தி விளக்கப்பட்டுள்ளது. (பக்-19) முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற முறை வைப்பு. மருதம், நெய்தல் இரண்டற்கும் பெரும் பொழுது வரையறுத்துக் கூறாமைக்குக் காரணம் (பக்-29) திணை மயக்குறுதலும் என்ற நூற்பாத் தொடர் அமைக்கப் பட்டதன் நயம் (பக்-32) ஆகியவை இனிது இடம் பெறுகின்றன.

ஐந்திணைக்குரிய மக்களே புறத்திணையில் வெவ்வேறு (சமுதாயப்) பெயர் கொண்டு வழங்கப்படுவர் என்ற

இன்றியமையாச் செய்தி விரிவாக விளக்கப்பட்டுள்ளது. (பக்-53, 54) புணர்தல் முதலாகிய ஐவகை ஒழுக்கங்களும் நிகழிடம் நவிலப் பெற்றுள்ளது. (பக்-62, 63) நற்றாய்க்குரிய கிளவிகள் அகத்திணையியலில் முதற்கண் வைக்கப்பட்ட காரணம் (பக்-73) புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும், தூதிடையிட்ட வகையினானும் (பக்-97) மூன்றன் பகுதியும் மண்டிலத்தருமையும் தோன்றல் சான்றமாற்றோர் மேன்மையும் (பக்- 98,99) காவற்பாங்கின் ஆங்கோர் பக்கமும் (பக்-101, 102) என்பவை பொருத்தமான வகையில் புதுமையாக விளக்கப் பட்டுள்ளன.

"எஞ்சியோர்க்கும் எஞ்சுதலிலவே" என்ற நூற்பாவின் முன்னர் ஒரு நூற்பா இருந்துவிடுபட்டிருத்தல் வேண்டும் என்ற இளம்பூரணர் கூற்றின் பொருந்தாமை விளக்கப் பட்டுள்ளது. (பக்-104) தெய்வத்தை முதற்பொருளோடு இணைத்துக் கூறியதன் பயன் (பக்-17, 18) கூறப்பட்டமை போலவே தெய்வத்தை உள்ளுறையுவமத்துக்குப் பயன்படுத்தாதன் காரணமும் ஆராய்ந்து விளக்கப்பட்டுள்ளது (பக்-112) "முன்னையநான்கும் முன்னதற்கென்ப" என்ற நூற்பாவின் உரை இளம்பூரணர் கண்ட உரையை உட்கொண்டும் அவர் வரைந்த விளக்கங்களை விடுத்தும் எடுத்துக்காட்டுக்களுடன் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. (பக்- 121, 122)

"காமஞ்சாலா இளமையோள்வயின்" "ஏறியமடற்றிறம்" என்ற நூற்பாக்கள், முதல்கரு உரிப்பொருள் என்பவை முல்லை முதலாய திணைகளை உணர்தற்குப் பொருளாமாறுபோலக் கைக்கிளை, பெருந்திணைகளை உணர்தற்குப் பொருட் குறிப்புக்களாம் என்ற புதிய செய்தி இடம் பெற்றுள்ளது. (பக். 115, 116).

துறை, கிளவி என்பனவற்றின் விளக்கம் (பக் - 132) அகத்திணை ஒழுகலாறுகளுக்குக் காலம் அடிப்படையாகக் கொள்ளப்பட்டு முல்லை முதலாக எண்ணப்பட்டவாறு போலப் புறத்திணை ஒழுகலாறுகளுக்கு அறம் அடிப்படையாகக் கொள்ளப்பட்டு வெட்சி முதற்கண் வைத்துக் கூறப்பட்டது (பக் - 133) புறத்திணைகளைத்தொகுத்து நூற்பா செய்யாத தற்குக்காரணம் (பக் - 132) விளக்கப்பட்டுள்ளன.

'வேந்து விடுமுனைஞர்' என்ற தொடருக்குப் பொருளும் விளக்கமும் (பக் - 134) ஆனிரைகளைக் கவர்தலும் பேணலும் அனைத்தும் மறவர்க்குரிய ஒழுக்கமாக அமைவதன் காரணமும்

(பக் - 134) 'படையியங்கரவம்' என்பதன் விளக்கமும், விரிச்சி ஊர்கொலை, பூசன்மாற்று, பாதீடு என்பனவற்றின் விளக்கமும், மாவரும் தானையர் என்றபாடத்தின் சிறப்பும் (பக் - 145) மலைந்த பூப்பற்றிய துறைகளின் விளக்கமும், வயவர் ஏத்திய வாடாவள்ளி, பூவைநிலை, பிள்ளைநிலை, தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தல் என்பனவற்றின் புதிய வளக்கங்களும், "வெறியறி சிறப்பின்" என்ற நூற்பாவில் போர் தொடங்க மேற்கொள்ளும் பொதுவாகிய துறைகளும் மறவர் கரந்தைப் பூச்சூடுதலாகிய துறையை உள்ளடக்கிய வெட்சி யின் மறுதலைக் கூறாகிய துறைகளும், போர் மேற்கொண்ட பின்னரும் போர்முடிந்தபின்னரும் நிகழும் ஒழுகலாற்றிற்குரிய பொதுவான துறைகளும், கூறப்பட்டுள்ளன என்னும் விளக்கங்கள் இவ்வுரைக்கண் சிறப்பாகக் காண்கிறோம்.

வெட்சி முதலாய ஏழும் குறிஞ்சி முதலாய ஏழற்கும் புற மாகியதன் காரணங்கள் கற்பனை நயந்தோன்ற விரித்துக் கூறப்பட்டுள்ளன. பாடாண்டிணை பொதுவியல்பும் சிறப்பியல் பும் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. (பக்-158) எஞ்சா மண்ணசைவேந்தன் (பக்-154) வயங்கல் எய்திய பெருமை (பக்-158) மாராயம் பெற்ற நெடுமொழி (பக்-159) பொருளின்றுய்த்த பேராண்பக்கம் (பக்-160) பெருஞ்சோற்று நிலை (பக்-161) குன்றாச் சிறப்பின் கொற்றவள்ளை (பக்-163) என்பனவற்றிற்குப் புதிய விளக்கங்கள் வரையப்பட்டுள்ளன. உழிஞை வஞ்சியை யடுத்து அமைந்த காரணம் விளக்கப் பெறுகிறது. (பக்-166) உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு (பக்-163, 169) நாள்கோள் (பக்-173) என்பவற்றின் விளக்கம். குடை-வாள் நாள்கோள் உழிஞைக்குச் சிறப்பாகக் கூறப்பட்டகாரணம். உழிஞைத்தொகைநிலை தும்பைத்தொகை நிலை விளக்கமும் வேறுபாடும் (பக்-178) நொச்சி என்ற சொற்பொருள் விளக்கம் (பக்-175) மைந்து-சென்று தலை யழித்தல், தார் (பக் - 180, 181, 186) என்பனவற்றின் விளக்கங்கள் குறித்துணரத்தக்க சிறப்பினவாய் உள்ளன.

பார்ப்பனப்பக்கம், அரசர் பக்கம், ஏனோர் பக்கம், அறிவன் தேயம், தாபதப் பக்கம் பொருநர் பக்கம் (பக்-194-206) என்பனவற்றின் விளக்கம் போற்றி வரவேற்கத் தக்க புதுமை யோடு உள்ளது. 'மனைநிலைவகை' என்பதன் பொருளும விளக்கமும் இன்றியமையாதனவாகத் தோன்றுகின்றன. (பக் - 207-9) நல்லாண்மை, வல்லாண்மை (பக் - 216) ஒல்லார் இடவயின் புல்லியபாங்கு (பக் - 218) இவற்றின் புதிய உரை-

காண்க. பொருளொடு புணர்ந்த பக்கம் முதலிய மூன்று துறைக்ளும் நன்கு விளக்கப் பட்டுள்ளன (பக் - 224, 5) ஈரைந்தாகும் என்ப பேரிசை என்ற நூற்பாப் பகுதியின் பகுப்பு புதியது. (பக் - 236) தாமே எய்திய தாங்கரும்பையுள் - புதிய வுரை நோக்கத்தக்கது (பக் - 238) அமரர்கண் (பக் - 247) புரைதீர்காமம், கடவுள், ஏனோர் என்றபகுப்பு, கொடி நிலை - கந்தழி வள்ளி உரை விளக்கம், பாடாண்கொற்ற வள்ளை விளக்கம் (பக் 247 - 262) அறியத்தக்கன. கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலை ஒரே துறையாகக் கொண்டு கூறும் விளக்கம், இயன்மொழி வாழ்த்துப்பற்றிய செய்திகள், விளக்குநிலை, புறநிலை வாழ்த்து - கைக்கிளை வகை (பக்-264-272) என்பவற்றின் விளக்கங்கள். சிறந்தநாள், பிறந்தநாள் பற்றிய செய்திகள். நாளும் – ஓம்படை (பக்-281, 2) விளக்கம் ஆகியவை இன்றியமையாத சிறப்புடையனவாகும்.

இனி, சொல், சொற்றொடர் பற்றிய அரிய விளக்கங்கள் காணத்தக்கவை. அவற்றுள் சில :- பாடாண் = பெருமைபெறும் ஆளுமைத்திறன் (பக் - 15, 246) புத்தேளிர் = புத்தொளியர் → தேசுடையார் → தேவர் (பக் - 16) முட்டடி = முச்சீரடி (பக்-16) காலம் = புவியினது சுழற்சியானும் ஞாயிற்றினது இயக்கத் தானும் திங்களின் நிலைமையானும் அறியப்படும் அருவப் பொருள் (பக்-18) கூதிர் = குறுமழைக்காலம் (பக்-21) வைகுறு = குறு வை. இருள் குலைந்து மெலிந்து குறைதல் இது முன்பின்னாகக் கூடி ஒரு சொல்லாக மருவியதொரு குறியீடு (பக் - 22) விடியல் = எழுஞாயிற்றின் தாக்கத்தான், வைகிய மெல்லிருள் வீடுற்றுக் கழிதலான் விடியல் எனப்பட்டது (பக் - 22) எற்பாடு = ஞாயிறு சென்று படும்பொழுது, அந்தி → அந்த முறுவது (பக்-25) முடிவுநிலை = வேனிலின் முடிவாகிய முதுவேனில் (பக்-26) வேனில் = வெம்மை நிலைபெறும் பொழுது நண்பகல் — நள் + பகல் → செறிந்த பகல் (பக்-26) காலை = கதிர் எழும் (கால் கொள்ளும்) விடியற்பொழுது (பக்-22) பகல் = பொழுது, ஒருநாளின் ஒளியை உடையபக்கம். (பக்-26) இருவகைப் பிரிவு = பெரும்பொழுது வகையும் சிறுபொழுது வகையும் (பக்-29) நிமித்தம் = புணர்தல் முதலிய செயல்கள் நிகழ்தற்கு ஏதுவாக அவற்றைச் சார்ந்து நிகழும் நிகழ்ச்சிகள் (பக்-39) புணர்தல் = கூடுதலுறுதலும் பிரிவின்றி உடனுறைதலும் (பக்-39) கலந்தபொழுது = தலைமக்கள் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்ட பொழுது (பக்-45) திணைதொறும் மரீஇய பெயர் = அக ஒழுக்கத்திற்கு உரியவாய் மரபுபற்றிவரும் பெயர். திணை நிலைப்பெயர், திணைப்பெயர் = நில இயல்பானே மேற்கொண்ட

தொழில்பற்றிவரும் பெயர் (பக்- 52, 58) *கிழவர்* = அகத்திணைத் தலைவராக வரும் கிழமை உடையோர். *ஆயர்* = ஆனிரையை உடையவர். (பக்-58) *ஆகிய நிலைமையவர்* = ஆக்கம் பெற்று அந்நிலையை எய்தியவர். *ஏவல் மரபின் ஏனோர்* = பிறரை ஏவிப் பணிகொள்ளும் மரபினராய குறுநில மன்னர் வேளிர், தண்டத் தலைவர் முதலானோர் (பக்-61) *இழைத்த ஒண்பொருள்* = இறையாகவும் திறையாகவும் விதிக்கப்பட்ட ஒள்ளிய பொருள். (பக்-66) *படிமை* = ஒழுக்கம் (பக்-66) *பின்னோர்* = அடியோரும், வினைவல பாங்கினரும் (பக்-68) *ஓத்தின் ஆன* = நான்மறைகளை அடிப்படையாகக் கொண்டெழுந்த சமயநூல், ஏரணநூல், வானியல்நூல், கோளியல் நூல், எண்ணியல்நூல், மருத்துவ நூல், பொருளியல் நூல், அரசியல் நூல், ஆகியவையும் படைக்கலப்பயிற்சிக்குரிய நூல்களும் சிற்பம், ஓவியம் முதலிய கலை நூல்களும் இலக்கண நூல்களும் பிறவும் ஆம். (பக்- 68, 69)

*முன்னிய காலம் மூன்று* = உடன் போக்கு நிகழ்ந்த இருவகைவேனிலும் பின்பனியுமாகிய காலம் மூன்று (பக்-73) *விடுத்தல்* = விடைகொடுத்தல் (பக்-84) *கடைக்கொள்ளுதல்* = மீட்டுக்கொள்ளுதல் (பக்-93) *வரயான்வகுத்த பக்கம்* = எண்ணும் எழுத்துமாகிய இயற்றமிழ்க் கலைகள் முதலியன. *கையான்வகுத்த பக்கம்* = ஓவியம் சிற்பம் நாடகக்கலை படைக்கலக் கல்வி போர் முறைக் கல்வி முதலியன. (பக்-97) *மூன்றன் பகுதி* = தானை யானை குதிரை என்ற முத்திறத்துப்படைப்பகுதி (பக்-98) *ஆங்கோர் பக்கம்* = காவற்கடமைக்கு ஒத்த பிறிதொரு பக்கத்தான் பிரியும் பிரிவு அஃது சாறயர்தலும் அவ்வழி ஆடலும் பாடலும் வல்லாரைப் பேணி அளித்தலும் தண்ணளி செய்தலும் ஆம் (பக்-101) *உள்ளுறை உவமம்* = உவமேயமாகிய பொருளைத் தன்னுள் அடக்கி நிற்கும் உவமம் (பக்-113) *காமம்* = வேட்கை மிகுதி. *மிடல்* = வலிமை, ஈண்டுவலிதிற் பற்றிநுகரும் நிலை. (பக்-118) *முன்னது* = கைக்கிளை. இது கைக்கிளைக்கு ஒரு குறியீடு (பக்-121).

*புலனெறிவழக்கு* = புலன் — இலக்கணம். வழக்கு — உலக நடக்கை. புலனெறி வழக்காவது இலக்கண நெறியான் அமைந்துவரும் நல்லிசைப் புலவோர்தம் எழுவகைச் செய்யுள் மரபு, புலனெறி வழக்காகிய செய்யுளின்கண் அகப்பொருள் பற்றி வருவன இருவகை வழக்கும் கலந்தேவரும் மரபு (பக்-124) *நாடக வழக்கு* = உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்துக் கூறுதலும் இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்துக்

கூறுதலும்போல்வன. (பக்-125) *கிளவி* = கூற்றுக்களாகக் கிளக்கப்படும் அகத்திணை வரலாறுகள் (பக்-132) *துறை* = பிரிவு. பிரிவெனினும் கூறுஎனினும் பகுதி எனினும் ஒக்கும். (பக்-121) செயல்களாகக் கூறப்படும் புறத்திணை ஒழுகலாறுகள். (பக்-132) *போகல்* = நிரந்து ஒழுங்குபடச் செல்லுதல். (பக்-136) *பூசல்மாற்று* = கருவி ஏந்தாமல் மிகைத்தெழுந்து எதிர்ந்தோரைப் பிறக்கிடச் செய்தல் (பக்-137) *தந்துநிறை* = ஊர்புகல உய்த்து வந்த ஆ நிரைகளை வேந்தற்குரிய தொழுவத்தோ ஊர் மன்றத்தோ கொண்டு வந்து நிறுத்துதல். *பாதீடு* = பகுத்து இடுதல் ஒருசொல் நீர்மைத்து (பக்-138) *வெறி* = தெய்வத் தன்மை உறுதலான் அமையும் மயக்கம். (பக்-144) *உன்னம்* = நிமித்தத்தைக் கருதிய நினைவு. அஃது ஆகுபெயராய் நிமித்தங் காணற்குரியதாகத் தெய்வத் தன்மைபொருந்திய ஒருவகை மரத்தை உணர்த்தி நின்றது (பக்-146) *பூவைநிலை* = பூவைப்பூ மலர்தலையும் குவிதலையும் நிமித்தமாகக் கொள்வதொரு வழக்கு, (பக்-147) *பிள்ளை* = பிள்ளைத்தன்மை. அஃதாவது பகையஞ் சாதவீறு அல்லது தறுகணாண்மை. அஃது அதனை உடையானைக் குறித்து நின்றது. (பக்-151) *பிள்ளையாட்டு* = பிள்ளையனைப் பாராட்டுதல். உரையாட்டு சீராட்டு, பாராட்டு என்பவைபோலப் பிள்ளையனைப் புகழ்ந்து போற்றுதல் பிள்ளையாட்டு எனப்பட்டது. *கால்கோள்* = கல்லினை நிறுத்தற்குரிய இடத்தினைக் கொளுவுதல். அஃதாவது மேடையமைத்தல் (பக்-162) *பெரும்படை* = பெருமைப் படுத்துதல், பழிச்சுதல் = வாழ்த்தி வழிபடுதல் (பக்-153) *எரிபரந்தெடுத்தல்* = சேரிதொறும் விரிந்து சென்று சுடுதல் (பக்-157) *கொற்றம்* = வென்றொறுத்தல் (பக்-159) *பொருளின்றி* = போர்க்கருவிகள் யாதுமின்றி, பொருள் என்றது வாள்முதலியபடைக் கலங்களை. (பக்-160) *பெருஞ்சோறு* = பெருமைக்குரிய உணவு (பக்-161) *உண்டாட்டு* = போர் முடிவுற்றபின் வெற்றிக்களிப்பினால் வேந்தன் மட்டொடு வழங்கும் உணவு (பக்-161) *விளக்கம்* = ஒளி, கீர்த்தி (பக்-162) *வள்ளை* = வளம், மடல் என்பது மட்டை எனவும் முனம் என்பது முன்னை எனவும் வருதல் போல வளம் என்பது வள்ளை என ஒருசொல் விழுக்காடாக வந்தது (பக்-163).

*தொல்லெயில்* = அதுகாறும் அழிவுறாமல் ஓங்கி நிற்கும்மதில் (பக்-169) *தோல்* = கிடுகு, கேடயம். அது தோலான் போர்த்துச் செய்வதாகலின் தோல் எனப்பட்டது (பக்-170) *நாள்கோள்* = நாளாவது அசுவினி பரணி முதலிய விண்மீன் களுக்குரிய பொழுதுகள். கோள்-கொள்ளுதல் அஃதாவது

அந்நாளின்கண்குடையினையும் வாளினையும் புறவீடு செய்தல் (பக்-173) நொச்சி = மதில். இது நொசி என்ற வினையுரிச்சொல்லடியாக வந்த ஆக்கப் பெயர். நொச்சி என்ற மரப்பெயர் நொ + சீ = நோயை நீக்குதல் என்னும் காரணப் பெயரான் அமைந்தது. எனினும் சொல்லொற்றுமை கருதி அதனை அகத்தோற்கு அடையாளப் பூவாகக் கொண்டனர் நூலோர் - (பக்-175) இடைமதில் = மன்னவன் கோயிலைச் சூழ்ந்தமைந்த காவல்மதில். இது செயற்கை அகழியான் சூழப்பட்டிருக்கும், அதனுள் இடங்கரும் வஞ்சனைக் கருவிகளும் இருக்கும் (பக்-176) பாசி = நீரிடைப் பாசிபோல நெருங்கியும் விலகியும் உடற்றும் போர்நிலை. பாசிமறன் = பாசிபோல ஊரவர் சூழ்ந்தும் ஒதுங்கியும் உடற்றும் போர் (பக்-177) மைந்து = மெய் + து — என்னும் இரு பண்புரிச் சொற்களின் உட்பிணைப்பாக அமைந்ததொரு பண்புப் பெயர். மொய்—வலிமையைக் குறிப்பது (பக்-180) யாக்கை இருநிலந் தீண்டா அருவகை = வீசிய வாள் முதலியவற்றான் வெட்டுண்டு வீழ்ந்த குறையுடம்பும் உறுப்பும் பரந்த நிலத்தினைத் தீண்டாமல் எழுந்தாடும்வகை. குருதியோட்டம் தலைக்குமேவாமையின் தலைஎழுந்துதுள்ளாது.(பக்-182) தார் = நால்வகைப்படைகளையும் சூழ்ந்து அலங்கல் போல முன் செல்லும் கொடிப்படை (பக்-186) கூழை = பின்னணிப்படை (பக்-187).

பாழி = வலிமை இஃது ஆகுபெயராய் உடம்பினை உணர்த்தி நின்றது (பக்-188) தொகைநிலை = (1) மறைந்த நிலை அஃது ஈண்டு மாய்ந்தொழிதலைக் குறித்துநின்றது (பக்-188) (2) ஒருங்கு குழுமியநிலை (பக்-179) நூழில் = குவித்தல். அஃது ஈண்டுப் பகைவரைக்கொன்று குவித்தலுக்கு ஆகின்றது (பக்-190) வாகை = அவரவர்க்கான தொழில் களின்கண் பிறரினும் மேம்பட்டு விளங்குதல் (பக்-192) காவல் = காவல் என்பது அந்தணர்க்கு வேட்டலும் வேட்பித்தலும் (பக்-196) அரசன் = அரையத்தை உடையவன். இச்சொல் அரையன் → அரயன் → அரசன் என மருவிற்று. அரையம் என்பது ஆர் என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயர். ஆர் — வட்டம் → கோட்டம் அஃது உடைமைப் பொருள்தரும் இசரத்தையும் அம் என்னும் இடப்பொருள் விகுதியையும் பெற்று மருவாய உட்பிணைப்புச் சொல் — (பக் - 197) மூவகைக்காலம் = நாள் — கோள் — ஞாலம் இம்மூன்றானும் நிகழும் மூவகைக்காலங்கள். அறிவன் = புவியானும் நாளானும் கோளானும் நிகழும் காலநிலைமைகளான் மன்பதைக்கு நேரும் நன்மை தீமைகளை உணர்ந்து நன்மைபெருகவும் தீமை

அருகவும் நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மந்திரங் களானும் வேள்விகளானும் செயலாற்றலும் ஆற்றுவித்தலும் செய்வோன் (பக்-203, 4) கணிவன் = நாள் கோள் நிலைமை களைக் கணித்துக் கூறுபவன் (பக்-204) தாபதர் = புலன்வழி வரும் அவாவினைத் தபுத்தவராகிய முனிவர் (பக்-205) தவத்தோர் = ஐவகை அவாவினை நீக்கமுயல்வோர் (பக்-205) பொருநர் = போரிடும் மறவரையும். வேடம் புனைந்தாடும் கூத்தரையும் குறிக்கும் சொல் (பக்-206) மனைநிலைவகை = மனைக்கிழமை பூண்டொழுகும் முதுகுடிமகளிரின் திறம்மிக்க வாகைப்பகுதி (பக்-207) மனைவி = இற்செறிப்புற்று மனைய கத்திருப்பவள் (பக்-209) நல்லாண்மை = காலமும் இடமும் தேர்ந்து தன்வலியும் மற்றான் வலியும் உணர்ந்து இயற்றும் ஆண்மைச்செயல் வல்லாண்மை = மாற்றான் வலியை மதியாது இயற்றும் ஆண்மைச்செயல் (பக்-216) ஒல்லார் = பெருஞ் செயலைச் செய்ய மாட்டாதார் (பக்-218) கண்ணுமை = கருதியொழுகுந்தன்மை. கண்ணென்னும் முதனிலைத் தொழிற் பெயர் உகரம்பெற்று மை விகுதியொடுகூடி வெளுமை கொழுமை என்றாற்போல வருவதொரு சொல்லாக்கமாம். (பக்-221) சாற்றுதல் = சான்றுடன் நிறைவுறக் கூறுதல் (பக்-230) முதுகாஞ்சி = முதுமையைக் காட்சியளவையான் நின்று காண்பிக்கும் இளமை நிலையாமை (பக்-231) நகுதல் = புணர்ச்சியை உணர்த்தும் குறிப்புச்சொல் ஆய்ந்தபூசல் = வாய்விட்டு அரற்றாமல் நுணுகிய குரலொடு நொந்து இரங்கி வருந்திய புரைசொல் (பக்-227) தாங்குதல் = தடுத்தல், பொறுத்தற்கு அரியதாதல் பையுள் = பை + உள்-பை, பே என்பதன் திரிபு பே = அச்சம். (பக்-238) படர்ச்சி = மெல்லிதாகச் செல்லும் செலவு (பக்-239) கையறுநிலை = கைவிதிர்த்துக் கலங்கும் நிலை. (பக்-240)

தாபதம் = தவம்—நோன்பு ஈண்டுக் கைம்மை நோன்பை உணர்த்தி நின்றது. (பக்-240) காடுவாழ்த்து — வாழ்த்தென்பது குறிப்புமொழி; அது புகழ்வதுபோலப் பழித்தலாம். (பக்-242) அமரர் = அமர் — போர். இகலுற்று நெருங்குதல் என்று பொருள் படும் அம்மு என்ற முதனிலையடியாகப் பிறந்த பெயர் — அமரர் விரும்பத்தக்கவர். (அமரர் எனனும் வடசொல்லின் பொருள் வேறு-இதுவேறு) (பக்-247) செந்துறை = உயர்வு நவிற்சி யின்றிப் பட்டாங்குக்கூறும் முறைமை (பக்-251) வண்ணம் = அழகும் ஓசையுமாம். ஈண்டுச் செய்யுட்கு அணி செய்யும் உவமக் கூறுகளையும்-ஒழுகு வண்ணம் முதலாய ஓசைகளை யும் உணர்த்தி நின்றது. (பக்-251) கொடிநிலை = பன்னிரு

கூறாக வகுக்கப் பெற்ற இராசிமண்டலத்துள் கொடிபோலப் படர்ந்து கிடக்கும் நாண்மீன்கள்- *கந்தழி* = பூதக் கூறுகள் தோன்றி ஒடுங்குதற்கும் - விண்மீன்கள் இயங்குதற்கும் தான் இடமாகித் தனக்கென ஒருவடிவமின்றி அருவாய் நிற்கும் ஆகாயம். *வள்ளி* = வள்ளன்மையை உடைய வான் மாரியாகிய மழை (பக்-208, 9). *கொற்றவள்ளை* (பாடாண்) = கடவுளின் வெற்றியைப் புகழ்ந்து போற்றிப் பரவும் உரற்பாட்டு. வஞ்சிக் கொற்றவள்ளை பகைவர் வளத்தினை வளைத்துக் கைக் கொள்ளுதல் (பக்-260) இயன்மொழி = இயல் — தன்மை வாழ்த்த ப்படுவோரின் பண்புகளைச் சுட்டிக் கூறுதல் (பக்-266) *விளக்குநிலை* = புரவலன்தன் செங்கோலை உயர்த்திக் கூறிய செய்தி பற்றியது. விளக்கம் - ஒளி. அது செங்கோலான் அமைந்த சீர்த்தியாகிய மிகுபுகழைக் குறித்து நின்றது. (பக்-267) *வாயுறை* = காவற்கிழமையுடைய சொற்களான் மெய்ம்மைப் பொருளை வற்புறுத்துக் கூறுதல். வாய்மை — மெய்ம்மை. உறை = உறைந்துள்ள சொற்கள் (பக்-269) *சிறந்தநாள்* = பகைவரை வென்று வாகை சூடிய நாள் *பெருமங்கலம்* - பிறந்தநாள் பற்றிச் செய்யும் விழா. (பக்-267, 6) *வாண்மங்கலம்* = மன்னவன் ஆற்றலை வாளிடத்துஏற்றிப் புகழும் விழா (பக்-278) *மண்ணுமங்கலம்* = உழிஞைத்துறையின் கண் பகைவரது மதிலைக் கைப்பற்றிய நிலையைக் கூறுவது— படாண்பகுதியில் பகைவரது மதிலை அழித்து வெற்றி கொண்ட புகழ்ச்சியைப் பின்னர் விழாவாகக் கொண்டாடுதற்கண் அத் தலைவனைப் புகழ்ந்து ஏத்துதலாம். (பக்-279) *கடைக்கூடிப் பரிசில் கடாயநிலை* = கூத்தர் முதலானோர் பரிசிலர்க்கு வழங்கும் வள்ளியோனது நகர்வாயிலை அணுகித் தம் பரிசில் வேட்கையைப் புலப்படுத்தும் உரையை அவன்பால் செலுத்திய பரிசில் நிலை என்னும் துறை. (பக் 279).

*ஓம்படை* - ஓம்புதலை அடுத்தல். அஃதாவது பாது காவலுறப் பண்ணுதல். நிமித்தங்களின் பயன்களை —— —— அறிவுறுத்தும் நிலையே ஈண்டு ஓம்படையாகும் (பக்-281, 2) *நாள்புள் நிமித்தம்* - நாளும் புள்ளும் பிறவுமாகிய இவற்றின் இயக்கங்களும், செயற்பாடுகளும் பின்னர் நிகழஇருக்கும் நன்மை தீமைகளைத் தப்பாமல் முன்னறிவிப்பன ஆதலின் அந்நிகழ்வுகளே நிமித்தமாம் நிமித்தம், விரிச்சி, வேய், ஏது நிகழ்ச்சி என்பன தொடர்புடைய ஒத்த பொருளன.

சொற்பிறப்பிறப்பியல் அடிப்படையிலும் இந்நூல் அடிப்படை யிலும் வரையப்பட்டுள்ள மேற்கூறிய சொற்பொருள் விளக்கங்கள்

நூலினைப் பட்டாங்கு உணரப்பெரிதும் உதவுவனவாகும். இனி பழந்தமிழ்மரபை உட்கொண்டு இவ்வுரையாசிரியர் புதியனவாகப் பொருள் கூறியுள்ள நூற்பாக்களை நோக்குவோம்.

1) நூற்-13. இருவகைப் பிரிவும் நிலைபெறத்தோன்றினும் ---- புலவர். என்பதற்குப் பெரும்பொழுதும் சிறுபொழுதும் ஒருபாடலில் ஒருங்கு வருதலும் உண்டு, அவற்றுள் ஒன்றே வருதலும் உண்டு. என்கிறார் (ஆய்வு) இருவகைப் பிரிவு என்பதற்குப் பெரும்பொழுது சிறுபொழுது என்பது வலிந்துரையே காலத்தை ஆசிரியர் யாண்டும் பிரிவென்று ஓதினாரல்லர், பொருள் ஐயப்படும் சொற்றொடர்களை ஆசிரியர் விளக்கமின்றி வளாகூறார். 36 ஆம் நூற்பா உரையுள் தாமே உடன்பட்ட காலிற்பிரிவு, கலத்திற்பிரிவு, என்று கோடலே நேரிதாகத் தோன்றுகின்றது.[3]

2) நூற்-15. உரிப்பொருளல்லன மயங்கவும் பெறுமே. என்பதற்கு ஒருசார் பொருள்வகை என்று செய்யுளியலுள் "இன்பமும் இடும்பையும்" எனச்செய்யுளுறுப்பாக ஓதப்படும் பொருள்வகையும் திணைமயக்கம் போலச் செய்யுளுள் மயங்கி வரப்பெறும் என்கின்றார். (ஆ) "கருமமல்லாச் சார்பென் கிளவி" என்புழி இன்மையை அன்மையாகக் கூறும் மரபு ஆசிரியர் மாட்டுண்மையான் உரிப்பொருள் இல்லனவற்றை அல்லன என ஆசிரியர் கூறியதாகக் கொண்டு உரிப்பொருள் இல்லனவாகிய கைக்கிளை — பெருந்திணைகளைக் கோடற்கண் தவறு இருப்பதாகத் தெரியவில்லை சினனேபேதைமை —-— வருமே (நூ-245) என்ற நூற்பாச்செய்தியாகத் தலைவியோ, தோழியோ தலைவன் செயல் தமக்குச் சினத்தை மூட்டு மிடங்களில் ஈரமில்லாதவன் அறனில்லாளன் மாயன் வன்கணாளன், கொடியன் என முன்னிலைப்படர்க்கை எல்ற ஈரிடத்தும் குறிப்பிடுதல் காணப்படுதலின் அச்செய்தியை இந்நூற்பாவோடு தொடர்பு படுத்துக்கூறுதற்கு இயைபு இருப்பதாகத் தெரிய வில்லை.[4]

3) நூற்- 18 கலந்த பொழுதும் காட்சியுமன்ன. என்பதற்குத் தலைமக்கள் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்ட பொழுதினும் காட்சியினும் .. என்கிறார். (ஆ) எதிர்ப்படுதலைக் கலத்தல் என்று கூறுவதன் பொருத்தம் ஆராயத்தக்கது.[5]

---

3. காலிற்பிரிவு கலத்திற் பிரிவைக் கொள்வின்—அவ்வுரையின்கண் இவ்இலக்கணம் பெறப்படாதுபோகும் என்பது என்கருத்து.

4. செய்யுளியலில் அந்நூற்பா உரையுள் இயைபு விளக்கம் பெறும்.

5. எதிர்ப்படுதல் என்பது சந்தித்தல் என்னும். வடசொற் பொருளைக் கொண்டுள்ள தென்பது என்கருத்து.

4,5) நூ-24. ஏனோர் மருங்கினும் ... பெயரே. நூ-26. ஏவல் மரபின் ... அன்னர் என்பவற்றிற்குக் கூறியுள்ள உரை. (ஆ) புறத்திணையியல் பண்பும் தொழிலும் பற்றி அந்தணர் அரசர் வணிகர் வேளாளர், அறிவர், தாபதர் முதலாகக் கூறப்படுவோர் யாவரும் அகத்திணையில் வெற்பன், நாடன் முதலிய நிலப் பெயராலேயே வழங்கப்படுவர் என்பதும், குறுநில மன்னர் தண்டத் தலைவர் முதலானோரும் அன்னர் எனவும் குறிப்பிட்டுள்ள செய்தி இவ்வீரிடங்கட்கும் உயிர்நாடியாகிய செய்தியாகும். இவ் அரிய செய்தியை இந்நூற்பாக்களின் உரை வாயிலாகப் புலப்படுத்தித் தேவைப்படும் இடங்களி லெல்லாம் இக்கருத்தை விரித்துரைத்து வற்புறுத்தும் இக் காண்டிகையுரையாசிரியர் பாராட்டுதலுக்குரியவர்.

6) நூ-30. தன் நாட்டில் தவறு ஏற்படாமல் முன்னெச்சரிக்கையுடன் காக்க வேண்டிய மன்னன் அதன்கண் பிழைநிகழ அவற்றை நீக்குதற்கு ஆட்சித்தலைவரை அனுப்புவான் என்றசெய்தி சிறப்பானதாகத் தோன்றவில்லை.[6]

7) நூ-31. முதல் நூற்பாவில் ஏனோருக்குக் காவல் பிரிவும் பொருட்பிரிவும் கூறி அதனொடு மாட்டெறியும்போது பொருட்பிரிவை விடுத்துக் காவற்பிரிவை மட்டும் மாட்டேற்றாற் கொண்டது பொருத்தமாகத் தோன்றவில்லை.[7]

8) நூ-32. பின்னோர் என்பதற்கு வணிகர் வேளாளர் என்பதனை விடுத்து யாண்டும் தலைவர்வழிச் செயற்பட வேண்டிய அடியோரையும் ஊதியம் கிட்டுமிடத்தெல்லாம் தொழிற்படும் வினைவலரையும் சுட்டுவதன் பொருத்தம் சிந்திக்கத்தக்கது.

9) நூ-33. தன்னொடு சிவணிய ஏனோர், மேவியசிறப்பின் ஏனோர், மேலோர், பின்னோர் வேந்தனின் ஒரீஇய ஏனோர் என்ற தொடர்கள் தெளிவான பொருள்தருவனவாகக் கொள்ளு மிடத்து உயர்ந்தோர் என்ற சொல்லும் நானிலங்களிலும் உள்ள உயர் குடிமக்களைக்குறிக்கும் என்று கொள்வதில் ஏதமின்று. முன்புகுறிப்பிட்டது நான்மறை ஓதுதல் - ஈண்டு நான்மறை அடிப்படையில் தோன்றிய ஏனைய நூற்கல்வி எனவே 'உயர்ந்தோர்க்குரிய ஓத்தின் ஆன' என்பதனைத் தனிநூற் பாவாகக்கொள்ளுதல் சிறவாதென்பது ஆராயத்தக்கது

6. எச்சரிக்கை பிற ஏதுக்களான் சோர்வுறுதல் இயல்பு.

7. ஒருபுடைச்சேறல் என்பதனான். பொருந்தும் என்பது என்கருத்து.

10) நூ-34 ஏனோர் மருங்கினும் என்ற உம்மையால் வேந்தன் தழுவப்படுதலின் பொருள் வயின்பிரிதல் அவனுக்கும் ஏற்புடைத்தாகாதோ ?[8]

11) நூ-35. இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் உரையே கொள்ளப்பட்டு விரிவான விளக்கந்தரப்பட்டுள்ளது.

12) நூ-36. இந் நூற்பா உடன் போக்குப் பிரிவிற்காவதொரு சிறப்புவிதி என்று கொள்வதற்கு இயைபு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.[9]

13) நூ-45. இதனை இருவகைக் கைகோளுக்கும் பொதுவாகக் கொண்ட திறன் போற்றத்தக்கது.

நூ-45. முன்னர் நிகழ்ந்ததோர் ஒழுகலாற்றினை மனங்கொண்டு செய்யுளுக்குத் திணை வகுத்தலை நுதலிற்று இச்சூத்திரம் என்பதும் நல்லுரையாகும்.

நூ-54 மடலேறுவல் எனக் கூறும் நிலை, இளமை தீராத காமஞ்சான்ற நிலை, தேறுதல் அமைந்த காமம் மிகுநிலை, மிக்க காமத்து மிடலுறாத நிலை என்ற நான்கும் ஐந்திணை இன்பத்திற்கு உரியனவே ஐந்திணையொடு முரணிய பொருள் அல்ல இளம்பூரணர் குறிப்பிடும் வெளிப்பட இரத்தல், நலம் பாராட்டல், புணரா இரக்கம் நயப்புறுத்தல் என்பனவும் ஐந்திணையொடு முரணியவையல்ல. நச்சினார்க்கினியரும் பாரதியாரும் இந்நூற்பாவிற்குக் கூறிய உரைகள் பொருத்தமின்மை வெளிப்படை. எனவே இந்நூற்பா உரை இன்னும் ஆராயத்தக்கது.

நூ-57. இந்நூற்பாவின் பொருள் 'மக்கள் நுதலிய' என்னும் முன்னைய நூற்பா வாயிலாகவே பெறப்படும். இயற்பெயர் சுட்டப்பெறாத பாடாண்டிணைக் கைக்கிளைப்பாடல்கள் மூன்று புறநானூற்றில் உள்ளன. (பா. 83, 84, 85) பழையபாடல் மேற்கோள் எதனையும் சுட்டி ஒருவர் பெயர் கூறப்பட்ட கைக்கிளைக்கு எடுத்துக் காட்டாகத்தருதற்கு இயலவில்லை. எனவே இந்நூற்பா இன்னும் ஆராயப்பட வேண்டுவதாம்.

நூ-59. 'மக்கள் நுதலிய அகனைந் திணையும்' என்பதன் கண் ஏழன் உருபுவிரித்தலை வேண்டாது வினைமுடிபைப் பெறாஅ' என்று கொண்ட காண்டிகை உரையாசிரியர் வேந்துவிடுமுனைஞர் என்பதனை எழுவாயாகக் கொள்ளாமல் மூன்றன்உருபு விரித்த செயல் ஆராய்தற்குரியது.

---

8. புறத்திணையியலில் 'ஐவகை மரபு' எனக் கூறுவதனான் ஆகாதெனத் தவிர்க்கப் பட்டது. 9. 17 ஆம் நூற்பாவோடு இயைபுடையது.

நூ-64. வினைவலியும் தன்வலியும் மாற்றான்வலியும் தூக்கித் தன்வலி மிகுமிடத்தேயே ஒருவன் பிறன் மண்ணை அகப்படுத்துவான்-வையங்காவலர் வழிமொழிந்தொழுகப்போகம் வேண்டிப் பொதுச் சொற் பெறாது இடம் சிறிதென்னும் ஊக்கந் துரப்பப் பிறன்மண்ணைக் கைப்படுத்து அம்மன்னனைத்தனக்கு அடங்கினவனாகச் செய்வது மன்னர் இயற்கையே. பிறன்தன் மண்ணை அகப்படுத்தும் வரை வாளா இருத்தல் மன்னர் இயல்புக்கு முரணானது, அவன் அகப்படுத்திய பிறகு அவன் மீது படையெடுத்து மீட்கச்செல்வதும் — மண்ணகப்படுத்திய மன்னன் படைஎடுப்புக்கு அஞ்சுகிறான் என்பதும் இயற்கைக்கு முரணானவை. தான் மண்ணை அகப்படுத்தும் முன்னரே மண்ணை இழந்தவன் படை எடுப்பை எதிர்பார்த்திருப்பான். ஆதலின் அவன் அஞ்சுதற்கு வாய்ப்பில்லை ஆதலின் இந்நூற்பா உரை ஆராயத்தக்கது.[10]

நூ-76. அருளொடு புணர்ந்த அகற்சி-காமம் நீத்தபால்- என்பவற்றின் உரை மிகச்சிறப்பாக உள்ளன.

நூ-80 பாங்கருஞ்சிறப்பின் என்ற அடைமொழிக்குரிய அடை கொளி நூற்பாவில் இல்லாதிருக்கவும் முன்னைய நூற்பாவிலிருந்து காஞ்சித்திணை என்பதனை வருவித்துக் கொண்டு வலிந்துரை செய்திருப்பதன் பொருத்தம் ஆராய்தற்குரியது.[11]

நூ-81 தாமே எய்திய தாங்கரும் பையுளும் என்ற தொடருக்கு வரைந்துள்ள உரை மிகச் சிறப்பாக உளது. ஆனால் ஏனைய துறைகள் யாவும் உயர்திணையோடும் பேய் முதலிய உயிருள்ள பொருள்களொடும் தொடர்புடையனவாகக் கூறும் ஆசிரியர் உயிரற்ற அஃறிணைச் செய்தியை இடையிடைந்து கூறுவாரா என்ற செய்தி ஆய்தற்குரியது.[12]

நூ-83. பாரதியார் உரை பின்பற்றப்பட்டுள்ளது. அமரர் என்ற சொல் பண்டைய நூல்களில் யாண்டும் தேவரைக் குறிப்பதாக அமையவும் இவ் ஓரிடத்தில் மட்டும் அமர் செய்யும் மறவரைக்குறிப்பதாகக் கோடல் அமைவுடையதாக இல்லை.

---

10. மண்ணைவளைத்தல் (நிலஆக்கிரமிப்பு) உடனடியாகப் புலப்படுவதில்லை. தூதுமுதலியவை நிகழ்த்திய பின்னரே படைகொண்டுசேறல் அரசியல் கோட்பாடு — பகைவன் அஞ்சவேண்டுமென்பது இவன் விருப்பம். அறத்தை வழுவியவனுக்கு அச்சம் இயல்பு - உழிஞை கோட்பாடு இதனை ஒட்டியே நிகழும். 11. அதிகார முறைமையான் அங்ஙனம் கொள்ளப்பட்டது.
12. துன்பம் உயிரல் பொருளானும் வருதலின் அங்ஙனம் கூறினாராகலாம்.

ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் (பொ-144) என்ற இடத்து மறவரைச் சுட்டவில்லை. இதன் பொருத்தம் சிந்தித்தற்குரியது. தலைவன் பரத்தைமை காரணமாக வரும் காமத்தைப் புரைதீர் காமம் என்று குறிப்பிடுவது ஐயுறத்தக்கது [13].

நூ-85 தத்துவப் பகுதியாகிய கடவுள் அவரல்லாத தெய்வப்பகுதியாளர் என்ற பகுப்பின் புதுமை ஆராய்தற்குரியது.

நூ-86 புரைதீர்காமம் குழவிமாட்டு நிகழ்வது வியப்பாக உள்ளது. குழந்தை மாட்டுப்பாசம் இருப்பதே உலகியல் [14]

நூ-87. கடவுளர் பற்றிய செய்திகளில் ஊர் ஊர்தி முதலியன கூறப்படுதல் பரவலும் புகழ்ச்சியும் உள்ள இடத்தன்றிப் புரைதீர் காமம் பற்றிய இடத்தன்று [15]

நூ-88. இந்நூற்பா உரை வலிந்துரையாதல் தேற்றம் (இதனினும் பொருத்தமான விளக்கம் பெறின் கொள்ளலாம்).

நூ-90. கொற்றவள்ளைக்குரிய எடுத்துக்காட்டில் ''ஐயனை ஏத்துவாம் போலப் பயமலை நாடனைப் பாடுவாம்'' எனதுச் சிறப்புத் தலைவனுக்குக் கொடுக்கப்படுகிறது. நோற்றலை நாணாதோன் குன்று முதலிய செய்திகள் முருகனுக்கு வலியக் கொள்ளப்படல் வேண்டுவன. தலைவனுக்கே உரியன. இதன்கண் பாடாண் பகுதியாண்டுளது. ஐயனை ஏத்துவாம் போல என்ற தொடரே முருகனைத் தனித்துச் சுட்டுவதாகக் கோடலாம். கடவுளரின் வெற்றியைப் புகழ்ந்துபாடும் உலக்கைப் பாட்டு புரைதீர்க்காமப் பகுதியாக நிகழும் களவொழுக்கமாகிய இடத்தினை. என்ற பொருள் சிந்தித்தற்குரியது [16].

நூ-91. கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தல் பற்றிய விளக்கம் மிக நுட்பமானவை இயன்மொழி வாழ்த்து, புறநிலை வாழ்த்துப் பற்றியனவும் அன்ன, 91 ஆம் நூற்பா

13. பாடாண்டிணை ஏனைய புறத்திணைகளின் இயைபினைப் பெரும்பான்மையாகக் கொள்வதாகலின், கடவுளர்பற்றி விதந்து கூறலின் இதுவே நூற்கருத்தாகக் கொள்ளப்பட்டது. ஊடல் பரத்தமை இன்றியும் வருமாதலின் காமம் புரைபடாது.

14. கடவுட்பகுதியரைக் குழவியாக (இளம் பருவம்) உருவகப்படுத்தித்தம் காதலை வெளிப்படுத்தல் இலக்கியக் கொள்கையாகக் கொள்ளுமிடத்து வியப்பில்லை.

15. உரை விளக்கம் சாலாதுபோலும்.

16. புரைதீர்காமப்பகுதியாக நிகழும் களவொழுக்கமாகிய இடத்தினை - என்றது 'ஓரிடத்தான' என்பதனுள் உள்ள இடம் என்பதற்கு விளக்கம். கொற்றவள்ளைகாமப் பகுதியன்று.

பாலை பற்றிய துறைகளின் தொகுப்பு என்பதும் 92 ஆம் நூற்பா புகழ்ச்சி பற்றிய துறைகளின் தொகுப்பு என்பதும் மிக நுட்பமான செய்தியாகும்.

அகத்திணையியலுள் 26—36 முடியவுள்ள பிரிவு பற்றிய நூற்பாக்களையும் புறத்திணையியலுள் 62—80 முடியவுள்ள நூற்பாக்களையும் பற்றித் தெளிவாக அவை குறிப்பிடும் செய்திகள் இவையே என்று கூறுதற்குப் போதிய பண்டைய இலக்கியச் சான்றுகள் இன்மையானும், பன்னிருபடலம் முதலாய நூல்களைப் பின்பற்றியனவும் பண்டைய மரபினின்றும் வேறுபட்டனவுமாகிய இடைக்காலப் பிற்கால இலக்கியச் செய்திகள் அவற்றிற்கு அறவும் முற்பட்ட தொல்காப்பியர் கருதும் செய்திகளைத் தெளிவாக உணர்வதற்கு உதவாமையானும் உரையாசிரியர்களிடையே கருத்து வேறுபாடுகள் ஏற்பட இடன் ஏற்பட்டுள்ளது. தமக்கு முற்பட்ட மூன்று உரைகளையும் மனங்கொண்டு காண்டிகையாசிரியர் உரை வரைந்துள்ளார். இவர் கூறியுள்ளன யாவும் நமக்கு உடன்பாடு அல்லவாயினும் பல இடங்களில் பாராட்டத்தக்க வகையில் இவர் குறிப்பிட்டுள்ள பல நுட்பமான செய்திகள் பழந்தமிழ் மரபினை உணரப் பெரிதும் உதவும் என்பது உறுதி,

இனி உரை விளக்கங்களில் உள்ள சில செய்திகளை நோக்குவோம் :-

பக்-7. நடுவணதாகிய ஒருதிணை தவிர்ந்த ஏனைய நான்கின் பெயர்க் குறியீடுகள் என்கிறார் இங்ஙனம் பொருட் பேற்றானும் அவாய்நிலையானும் பொருள் கொள்ளுமாறு நூற்பா அமையுமா? அவற்றுள் நடுவண் ஐந்திணை படுதிரைவையம் பாத்திய பண்பு நடுவணது ஒழிய. எனப் பொருள் கொண்டால் அது வலிந்துரையாகுமா?

பக்-10 முதற்பொருளுக்கு முன்னுரிமை அஃதின்றேல் கருப்பொருளுக்கும் அதுவுமின்றேல் உரிபொருளுக்கும் தரல் வேண்டும் என்பார் திணை கூறுங்கால் முதல் கரு உரி என்ற மூன்றும் ஒன்றின் ஒன்று முறையே சிறந்தனவாம் என்று குறிப்பிடுவது பொருத்தமாகத் தோன்றவில்லை[17].

பக்-17. திருமால் நப்பின்னையை மணந்த செய்தி சங்க நூல்களில் காணப்படாத செய்தி திருமகள் ஆற்றியிருப்பதாகக் கொள்ளப்படுவதும் அன்னதே வருணனொடு இரங்கல் உரிப்

17. முறையே சிறந்தன என்பதற்கு அம்முறையாற் சிறந்தன என்பதே கருத்து.

பொருளை இணைத்ததற்குக் கூறும் விளக்கம் சிந்திக்கத்தக்கது. மழையையும், வறுமையையும் தருபவன் ஞாயிற்றுச் செல்வன் என்பது பாலைக்கலி 16ஆம் பாடற் கருத்தாகத் தோன்றுகின்றது.

நூற்பா 6, 7, 9, 10. முதல் நூற்பாவை முச்சீரடியாக அமைத்து அடுத்த நூற்பாவைக் கூறுபெற்ற நாற்சீரடியாக, என்மனார் புலவர், மெய்பெறத் தோன்றும் என்ற மிகைச் சொற்புணர்த்து ஆசிரியர் நூற்பா யாத்திருப்பாரா என்பது ஆராயத்தக்கது. பெரும்பொழுது சிறுபொழுது இரண்டனையும் பெறும் திணைகளை ஒரு நூற்பாவிலும் சிறுபொழுதே பெறும் திணைகளை மற்றொரு நூற்பாவிலும் ஆசிரியர் அமைத்தார் எனல் ஒருபொருள் நுதலிய சூத்திரம் என்ற நூற்பா இலக்கணத்திற்கு முரணாகாது.[18]

பக்-29. உரிப்பொருளாகிய ஊடலும், இரங்கலும் ஆகிய உணர்வுகள் சிறுபொழுதளவில் நிகழும் குறுகிய கால எல்லையுடையவை; அவை நீட்டிப்பின் அகனைந்திணைக்கண் நிகழும் பெருந்திணைப் பகுதியாகும். எனவே மருதத்திற்கும் நெய்தற்கும் பெரும்பொழுது கூறப்படவில்லை என்ற விளக்கம் மிகவும் பாராட்டிற்குரியது.

மக்களைக் கருப்பொருளே (பக். 9, 47, 48, 53) என்று பலகாலும் குறிப்பிடும் இவர், நூ. 22 ஆம் பாயிரத்துள் கருப்பொருளின் வேறாய்ச் சிறந்தவரும் மக்கள் என்று குறிப்பிடுவது சிந்திக்கத்தக்கது. (கருப்பொருளின் இவர் வேறுபட்டவர் என்பது கருத்து)

பக்-57 அறிவரைக் கணிவன் என்றும் தாபதரை இருடியர் என்றும் இங்குக் கூறும் ஆசிரியர் 204. 205 ஆம் பக்கங்களில் குறிப்பிடும் செய்திகள் வேறாக உள்ளன. [ஈண்டு கணியர் என்று இருப்பது பிழை அறிவர் எனத் திருத்திக் கொள்ள வேண்டும்.]

பக்-66. படிமை - தவமை ஆகி ஈண்டுப் பிரிதல் ஒழுக்கத்தைக் குறித்து நின்றது. படிமை ஒழுக்கமாதலை கூறினை பெருந்திண்படிமையோனே (பதிற்-74) என்பதனான் அறிக என்றார். அப்பாடல் அடிகளை நோக்க அந்தவ ஒழுக்கத்தையே குறிக்கும் என்பது கருதப்படுகின்றது. பல்புகழ் நிறுத்தபடிமையோனே (பாயிரம்) என்பதற்கு வரைந்த உரையும் நோக்கத்தக்கது.[19]

---

18. திணைக்கு முதன்மைதரின் முரணாகும் என்பது என்கருத்து.
19. இடத்திற்குத்தக சொற்பொருள் கொள்ளப்பட்டது.

பக்-67. ஊறஞ்சி ... உறைபவர் (கலி-26) இதன்கண் இழைத்த ஒண்பொருள் வந்தவாறு புலப்பட்டிலது. பாரதியாரும் இப்பகுதியை காவற் பொருட்டுப்பிரிதற்கே எடுத்துக்காட்டி யுள்ளார். (பக்-94) [20]

பக்-73. நற்றாய் என்பது செவிலியையும் அகப்படுத்தி நின்றது என்கிறார். செவிலி கூற்று களவியலில் தனியே வருதலினாலும் நன்றாய் என்று விதந்து கூறியதனாலும் செவிலியை அகப்படுத்துதல் பொருந்துவதாக இல்லை [21]

பக்-80. 'கிழவி சொல்லின் அவளறி கிளவி' முதலிய நூற் பாக்களை நோக்க செவிலியே சுரத்தினகண் செல்வாள் என்பது கொள்ளத்தக்கது. நற்றாய் சுரம்சென்று தேடுதல் வழக்காறில்லை (பக்-120) என்ற பாரதியார் உரை உளங் கொள்ளத்தக்கது.[22]

பக்-87 ஆற்றுவிக்குந்தோழி வருவர் கொல் என்று ஐயுற்றுக் கூறலாகாமையின் இப்பாடல் தோழி கூற்றன்று என்றார் நச்சினார்க்கினியர். அது பொருந்தாது விரிக்கிற்பெருகும் என்கிறார் இவர். (கலி. 11) [புரிவயர் காதலிற் புணர்ச்சியும் தரும்' எனத்தலைவன் தலைவியிடத்துக் கூறுமெனல் பொருந்தாமையானும், 'வஸிப்பல்யான்' என வன்புறை கூறுதல் தலைவிக் கியையாமையானும், புனைநலம் வாட்டுநர் அல்லர் என்பதனானும் தோழிகூற்றாதற்கே சிறகரும் 'கொல்' அசைநிலைப்பொருட்டு]

பக்-89. 'அழிந்தெதிர் கூறி விடுப்பினும்' அவர்தம் நிலைக்கு வருந்தி அவர் செலவினை மறுத்துக் கூறித்தம் மகத்துத் தங்கச் செய்து பின்னர்ப் போக விடுமிடத்தும். இவ்வுரைக்குரிய சொற்றொடர் நூற்பாவில் இல்லை எடுத்துக் காட்டுப் பாடலின் பொருத்தமும் ஆராயத்தக்கது [22]

பக்-93. இடைச்சுர — சௌவை — தலைவி கலங்குதலை ஈண்டுக்கூறியவர் தலைவனும் கலங்குவான் (பக் 44, 45) என

20. ஆறின்றிப்பொருள் வெஃகிய பகைவரை வென்றநு இழைத்த ஒண்பொருள் பெறுதறகென்பது எனதுகருத்து.

21. அகத்திணையியலிற் கூறுவது இருவர்க்கும் ஏற்கும் என்பது என்கருத்து.

22. உம்மை சிறப்பின்மை குறித்து நின்றமையான் ஓரோவழி நற்றாய்க் குரித்தாகலாம்.

22. 'எதிர்கூறல்' என்பதற்கு அதுவிளக்கம், 'மீண்டனிர்' என்றதனான் முன்பு தங்கியிருந்தமை பெறப்படும்.

முன்னர்க்கூறியது தலைவன் பெருமைக்கு இழுக்குத்தருவதாகுமோ என்பது சிந்திக்கத்தக்கது.[23]

பக்-94. பருவம் ஒன்றாமையையும் சுரத்தருமையையும் தலைவன் கற்புக்காலத்துக் கூறியவற்றைத்தோழி கொண்டு கூறிய செய்திகள் உடன்போக்குப்பற்றிய செய்திகளுக்கு இயைபுடையன அல்ல.

பக்-102. "கடவுளர்கட் டங்கினேன்" (கலி - 93) தலைவன் தேவர் கோட்டம் காத்தற்குப் பிரிதலும் பெறப்படும் என்றார். ஈண்டுக் கடவுள் என்றது அறிவரைக் குறிப்பதாகலின் தேவர் கோட்டம் காத்தற் பிரிவன்று.[24]

பக்-123. 'கலியே பரிபாட் டாயிருப்பாவினும்' எச்ச உம்மையால் ஏனைய பாடலான் வருதல் வழக்கு என்று விளக்கந் தந்துள்ளார். அங்ஙனம் கொள்ளின் கலி, பரிபாட்டு என்ற இரண்டனையும் விதந்து கூறியதனால் பயன் ஏதுமின்று. கலி பரிபாட்டு ஆயிருபாவினும் புலனெறி வழக்கம் உரியதாகும் எனக் கூறினாரேனும் கலி பரிபாட்டு ஆயிருபாவும் புலனெறி வழக்கிற்கே வரும் ஏனைய புலனெறி—உலகியல் என்ற இரு வழக்கின் கண்ணும் வரும் என்பதே பொருளாகத் தோன்றுகின்றது.

பக்-130. தலைவனும் தலைவியும் இணைந்து நிகழ்த்தும் அகத்திணைச் செய்தியைத் தம்முள் இகலிப்போரிடும் வேந்தர் இருவர் புறத்திணைச் செய்திக்கு உவமம் கூறுதல் ஏற்புடையதாக இல்லை[25]

பக்-132. வஞ்சிமுதலிய திணைகளுள் உட்குத்தோன்றுதல் இல்லை என்கிறார். வஞ்சி இலக்கணமே அஞ்சுதகத்தலைச் சென்று அடல் குறித்தன்று என்று அமைந்துள்ளது. உட்குவரத் தோன்றுதல் ஆனிரைபுரக்கும் ஆயருக்கே உரியது.[26]

பக்-133. முதற்கண் படை எடுத்துச் செல்வோர் — "ஆவும் ... நும்மரண்சேர்மின்" என அரசியல் அறங்கருதி அறிவுறுத்துவர் என்பது புலனெறி வழக்கமேயன்றி உல

23. பாசத்தாற் கலங்குவது இழுக்காகாது.
24. அச்சொல்லாற் கூறலின் தேவர்கோட்டம் காத்தல் பெறப்பட்டது.
25. உவமம் ஒருபுடையொப்பே.
26. பகைவரஞ்சவேண்டுமென்பது வஞ்சிவேந்தன் விருப்பமேயன்றி - பகைவர் அஞ்சுவார் என்பது கருத்தன்று.

கியலுக்குச் சிறிதும் ஏலாது. அறிவுறுத்தியவர் யார்? பிற நாட்டிற் சென்று அறிவுறுத்த இயலுமா? கோநகருக்குச் செல்லும் வழியில் இருப்பவர்க்கு அறிவுறுத்தலும், நகர்க்குள் சென்று அறிவுறுத்தலும் உலகியலில் நிகழக்கூடுமா? பசுக்கள் யாருடையவை அரசனுடையவையா? குடிமக்கள் பசுக்களையா? கோநகரில் தொழுவங்கள் யாங்கிருக்கும் படையெடுப்பில் அவன் அவற்றைப் பாதுகாவாமல் வாளா இருப்பானா? ஓர் இரவில் வேற்றுமன்னன் நகருக்குச் செல்லுதல் இயலுமா? ஒற்றர்கள் அறியாது வர இயலுமா? பசுக்களைக் கவர்ந்தவிடத்து அவற்றைப் புரந்தவர்களைக் கொல்லும் ஊர்கொலை அறமாகுமா? கவர்ந்த பசுக்களைப் புல்வார்த்தி நீரூட்டி அழைத்துச்செல்ல எத்தனை நாளாகும் கன்றில்லாமல் பசுக்களை அழைத்துச் செல்லுதல் எளியசெயலா. மறவர்யாவரும் ஒரே ஊரினரா. அவ்வூர் யாருக்கு அணித்து? முதலாய வினாக்கட்கு எளிதில் விடையிறுத்தல் இயலாது எனவே வெட்சி என்பது பெரும்பான்மையும் கற்பனை கலந்த ஆகோள் ஒழுக்கம் என்றே கொள்ள வேண்டியவராய் உள்ளோம்.[27]

பக்-136. படையியங்கரவம்: அரசன் ஆணை கேட்டுக் கலித்தெழும் ஆரவாரத்தைப் படையியங்கு அரவம் என்பது ஏற்குமா?[28]

பக்-137. ஆனிரைகளுக்கு ஊறு நேரும் என்று எண்ணிக் கருவி ஏந்தாமல் மிகைத்தெழும் அற உணர்வுடையோர் ஊர்க் கொலைபுரிந்த மறவர் என்பது வியத்தற்குரியது.[29]

பக்-139 களவில் ஆனிரையை வேற்றவர் அறியாதவாறு சென்று கைப்பற்றி வரும் வழியில் பாணரும் கூத்தரும் யாங்கிருந்து வந்தனர்? [30].

பக்-141 புறங்கடைக்கூட்டிய-என்ற நூற்பாவில் நச்சினார்க்கினியர் இவை வெட்சியின் புறம் என்ற கருத்தே பாரதியாரால் மறுக்கப்பட்டுள்ளது அவர் கூறும் விளக்கம் மறுக்கப்படவில்லை.

பக்-142, "பொருந்திலைக் கருதிய புறத்திணை மருங்கின், மரபொடு வரூஉம் துறையுமாருளவே" என்றாற் போன்றதொரு நூற்பா இருந்து மறைந்தது போலும் என்ற காண்டிகையுரையாசிரியர் ஊகம் தக்கதே. அஃதிருப்பின் 'வெறியறி சிறப்பின' என்ற நூற்பா தெளிவாகப் புலனாகும்.

27-30. இதற்கு கோட்பாட்டு முன்னுரையில் ஓரளவு அமைதி பெறலாம்.

பக்-143. காந்தள் முதலியவை வெட்சித்திணையொடு பெரிதும் தொடர்புடையவை என்கின்றார். காந்தள் வள்ளி முதலிய கூத்து நிகழ்த்திய பகைவர் நாட்டு ஒற்றர் வாயிலாக வெட்சியார் செய்வன உணர்ந்து தந்நாட்டில் முடுகுதல் இயலும் எனவே தொடர்புடையன என்பது ஆராய்தற்குரியது.

பக்-146. மாவருந்தானை வெட்சிக்குப் பொருந்தாது. மாபெருந்தானை மறவேந் அடையாளப் பூச்சூடுவர் யானையும் குதிரையும் அவற்றின்மேல் இவர்ந்தோர் சூடிய பூக்களாலேயே இன மன்னர்க்குரியன என்பது பெறப்படும் எனவே மாபெருந் தானையர் என்ற பாடமே சிறக்கும்.

பக்-147. உன்னமரத்தால் நிமித்தங்கோடலை உன்ன நிலை எனச்சுருக்கமாகக் கூறியவர் காயாவினால் நிமித்தங் கோடலை, மாயோன் ... ... பூவைநிலையும் எனப்பல அடையடுத்துக்கூறார். உன்னத்தை நிமித்தம் கொண்டதாகப் பாடல் உண்டு. காயாவைக் கொண்டதாக எதுவுமில்லை. எனவே மன்னரை மாயோனொடு ஒப்பிட்டுக் கூறுதலே பூவைநிலை. பூவைநிலை பாடாண்டிணைக்கே ஏற்பது அன்றோஎனின்? வெட்சிக்கே உரிய ஆபெயர்த்துத்தருதல் இந்நூற்பாவில் இடம் பெற்றாற்போல, பாடாணுக்குரிய பூவை நிலையும் இப் பொதுநூற்பாவில் இடம்பெற்றது எனக்கோடற்கு இழுக்கொன்றுமில்லை.

பக்-149. தலைத்தான் நெடுமொழி தன்னொடு புணர்த்தலுக்குக் காட்டிய புறநானூற்றுப் (71, 72, 73) பாடல்கள் இளனது பிழைப்பின் ஒருவாகியர் எனத்துன்னருஞ் சிறப்பின் வஞ்சினம் பற்றிய காஞ்சிக்கே எடுத்துக்காட்டாதல் அகும். இவரும் அதநுறைக்கு 73 ஆம் பாடலை எடுத்துக் காட்டி யுள்ளார். அது நிலையாமை பற்றியது என்ற விளக்கமும் தந்துள்ளார்.

பக்-157. எரிபரந்தெடுத்தல் — ஒருதவறும் அறியாதமக்கள் இல்லங்களையும் வயல்களையும் உடைமைகளையும் பாழாக்கும் இக் கொடுஞ் செயல் பகைவரது மண்ணாசையை அழித்தற்காகச் செய்யப்பட்டதா என்பது ஆராய்தற்குரியது. 31

பக்-158. வயங்கல் எய்திய பெருமை. வீரரொடு பொருது வென்ற விளக்கம் பெருமைதரும் பொதுமக்கள் உடைமைகளை அழித்துப் பெருமை பெறுதல் இயலுமா? பகைவரை அஞ்சச் செய்ய இதுதான் வழியா? இப் பகுதிக்கு நச்சினார்க்கினியர்

கூறிய உரையைச் சூத்திரச் சொல் இயைபிற்குப் பொருந்தாது என்னும் இவர் அவர் கூறிய உரைச் செய்தியை வயங்கல் எய்திய பெருமைக்கண் அடக்கியுள்ளமை பக். 165) நோக்கத் தக்கது.[32]

பக்-155 மண்ணைநச்சிய வேந்தன் தன் நாட்டகத்து அஞ்சி உறைந்திருப்பான் என்றார் அவனும் தமிழ் மன்னனே அவனுக்கும் வீரம்உண்டு வஞ்சிமுதலிய திணைகளுள் உட்குத் தோன்றுதல் இல்லை. (பக் 32) என்று இவர் கூறியதும் உட்கொளத்தக்கது. இவ்வொழுக்கம் மண்ணசையுற்ற பகைவனிடத்து முறையால் தூதுவிட்டு அது பயன் தாராதவழி ஆதந்து ஓம்பியபின்னர் நிகழ்வது என்றார். தூதுவிட்டுப்பயன் தாராத வழிக் களம்வகுத்துப் போரிடும் தும்பையே நிகழத்தக்கது மக்களுக்கு ஊறு விளைக்கும் இவ்வஞ்சியொழுக்கம் அடாது.[33]

பக்-156. நால்வகைப் படைமறவர் எழுப்பும் வஞ்சி அரவத்தை இயங்குபடை அரவம் என்றார். என்ற விளக்கந்தரும் இவர் வெட்சித்திணையொடு பெரிதும்தொடர்புடையது (பக் 143) என்றுகூறும் மாவருந்தானையர் (பக் 146) என்பதன் பொருத்தம் ஆராய்தற்குரியது. களவில் நிரைகோடல் கருதி இரவில் வருவோர் யானை குதிரைகளுடன் வருவது ஒவ்வாததாகும்.[34]

பக்- 160. பொருளின்றி — போர்க் கருவி யாதுமின்றித் தனித்து நிற்பானைத் தூய வீரன் படைக்கலங்களொடு எதிர்த்தலை ஒருபோதும் துணியான் பகைவரை மதியாது செலுத்தும் பேராண்மை ஒரு சிலர் மாட்டுநிகழ்வதாகலின அதுவும் ஒரு துறை.[35]

பக்- 161. பெருஞ்சோற்றுநிலை: பொர எழுந்த வீரரிடம் தன் நன்றியுணர்வைக் காட்ட போருக்குப் புறப்படும் முன் வழங்கும் விருந்து பற்றியது. பொரஎழுந்த வீரர் எல்லோரும் போரின் பின்னரும் உயிருடன் இருத்தல் நிகழக்கூடியதன்று ஆகலின் இது போருக்குமுன் வழங்கப்படுவதே. இதனை நச்சினார்க்கினியர் உரையாலும் உணரலாம். பெருஞ்சோற்று மிகுபதம் (புறம்-2) என்பது இறந்த வீரர் நற்கதியடைய வழங்கிய பிண்டம். இதனை (அகம் 233) ஆம்பாடலாலும் உறுதி செய்யலாம்.

---

31, 32, 33, 34, 35. இவையெல்லாம் உலகியல் வழக்கினை நாடக வழக்காக்கிக் கொள்ளும் இலக்கியக் கோட்பாடுகள்.

பக்-163 : கொற்றவள்ளை : பொருட்செறிவுடைய ஒரே தொடரை ஒரு இயலில் இரு வேறிடங்களில் வெவ்வேறு பொருளில் வழங்குவாரா என்பது ஆராயத்தக்கது. பரவலும் புகழ்ச்சியுமின்றி நிகழ்ந்த நிகழ்ச்சியை உட்கொண்டு பின்னர் மகளிர்பாடும் உலக்கைப் பாட்டு வென்ற வேந்தரின் கொற்றத்தை யும் தோற்றோன் அழிவையும் மாத்திரம் கிளக்கும் நிலையில் வஞ்சியாதற்கு இழுக்கின்று

பக்-164. அழிபடைதட்டோர் = உயிரை அழிக்கும் படைக் கலன்களைத் தம் தறுகண் ஆண்மையால் தடுத்து விழுப்புண் பட்ட மறவர் என்பது காண்டிகையுரை. அழிக்கும் படைகளைத் தடுத்தோர் என்பதே சொற்றொடரின் பொருள் எஞ்சியவை வருவித்துக் கொள்ளப்பட்டுள்ளன. பொறிநுதல் வியர்த்தல் என்பது நுதல் வியர்பொறித்தல் எனக் கொள்ளப்படுவதுபோல படைதட்டு அழிந்தோர் எனக்கொண்டு பொருள் காணுதற்குரிய தொடர் இவரும் தடுத்தோர் என்று அமையாமல் தடுத்து விழுப் புண்பட்ட மறவர் என்றே பொருள் செய்துள்ளார். படைதட்டு அழிந்தோர். கவர்பொருள் தரும் தொடரன்று மாறாகத் தெளிவு தருவதே.

பக்-165. அறநெறி இகந்து ...... படையொடு சென்று முற்றுதலானும்.. ...தலைவி ஊடற்குக் காரணமாக அமைதலின்— இக்காரணங்களின் பொருத்தம் சிந்திக்கற்பாலது.

பக்-1·8. தோல்வியுற்ற நொச்சி மறவர் வென்றுள்ள வேந்தனைப் பணிந்து அவற்கு ஆளாகக் குழு முதல் — இது மறத்துறை வீரர்க்கு ஏற்குமா? தொகைநிலை என்பதற்குத் தோற்ற வேந்தரின் படையாளரையும் தொகுத்தல் இன்றியமை யாததா ?

பக்-182. “பலர் ஒருவனை அணுகிப் பொருதற்கு அஞ்சி அகலநின்று கணை எய்தும் வேலெறிந்தும் போர் செய்ய” இது நச்சினார்கினியர் உரை.வேல் மிகுவேந்தனை மொய்த்தவழி என்பதற்கு இவரும் வேலான் போர் செய்தலான் வெற்றி மிகுகின்ற வேந்தனை அது பெறாத மாற்றோர் அவனை அழிக்கச் சூழ்ந்த இடத்து’ என்று உரை கூறுகிறார். எனவே ஒருவனைப் பலர் எதிர்த்தல் இவர்க்கும் உடன்பாடு. வீரர் நெருங்கி நின்று பொராமையால் ஆசிரியர் அவர் செயலாகக் கூறாமல் படைக்கலன்களின் செயலாகக்—‘கணையும் வேலும் மொய்த்தலின்’ என்பதனை உட்கொண்டு நச்சினார்க்கினியர் அவ்வாறு பொருள் செய்துள்ளார். ஒப்பற்ற சிறப்பு புண்பட்ட வீரனுக்கேயன்றி கூடி எதிர்த்த பகைவர்க்கன்று—அறத்தின்

நீங்கி வஞ்சித்தொழுகுதல் வழுவாயினும் பிறிதாறின்று (பக்-191) என்று இவரும் உடன் பட்டுள்ளார். ஆதலின் நச்சினார்க்கினியர் உரைக்கண் இழுக்கின்மை போதரும்.

நச்சினார்க்கினியர் வெட்சித்தும்பை என்னாமல் வெட்சிப் புறத்துத் தும்பை என்றாற்போலக் கூறுதலின், வெட்சியாகத் தொடங்கித் தும்பையில் முடிந்தபோர் என்றாற்போலப் பொருள் தருதலின் மயக்கம் இருப்பதாகத் தோன்றவில்லை.

பக்-190 உடைந்த வீரரைக் கொன்று குவித்தல் ஒரு துறையாக அமைந்திருத்தல் காண்டிகையாசிரியர் குறிப்பிடும் தும்பை மறவரின் தறுகண் ஆண்மைக்குச் சிறுமை தாராதோ?

பக்-201. ஏனோர் என்பதன் விளக்கமும் வாகை ஒழுக்கத்திற்கு உரியராகாதார் பற்றிய செய்தியும் அறிநது இன்புறற்குரியன

பக்-204. அறிவர் = முழுதுணர்ந்தோர். மற்று மக்களிடம் காணப்படும் விருப்பு வெறுப்பு வெற்றி தோல்விகளுக்கு அடிமைப் படாத வீறே அவர்க்கு வாகையாம்.

பக்-205 ஊண் நசையின்மை முதலியவை நோன்பாகலின் வாகைக்குப் பொருளாகா என்கிறார். தவம் செய்வோருக்குரிய ஐம் பொறி அடக்கலின்பாற்படும் இவையும் வெற்றியாதலின வாகைக் குரியவாதற்கண் இழுக்கென்னை? தாபத நிலை விளக்கத்தில், தாபதம் = தவம் (நோன்பு) ஈண்டுக் கைம்மை நோனபை உணர்த்தி நின்றது என்று இவரும் குறிப்பிட்டுள்ளார் (பக்-240) கௌந்தியடிகள் சபித்துப் பின் சாபநீக்கம் செய்யும் ஆற்றல் பெற்றதாலேயே அவர் தாபதராகார். அவர் யோக நெறியில் ஒழுகியதாகக் கருத இயலவில்லை.

பக்-207, 8. மனைநிலை வகை = பொருள் செய்தமை சிறப்பாக இருப்பினும் அஃது ஆசிரியர் கருத்தாயின் இங்ஙனம் அகப்படச்சூத்திரியாது, விரித்துக் கூறியிருப்பார். ஆகலின் இக்கருத்தை அனைநிலை வகையுள் இணைத்துக் கூறலாம். அனைநிலை வகை என்பதனைத் தனியொரு வகையாகக் கொண்டதனாலேயே ஆசிரியர் அனைநிலை வகையொடு ஆங்கெழுவகையின் என யாத்துள்ளார். அனைநிலைவகை என்ற தொடரையடுத்து—வகை என்ற சொல்லைக் கொண்ட தொடர் இவ்விடத்திலேயே உள்ளது. இங்குள்ள அனைநிலை வகை மேற்கூறியவற்றைச் சுட்டி நிற்கும் தொடர் அன்று. இவ்விலக்கணம் பெரும்பாலும் ஆடவரை அடிப்படையாக வைத்துக் கூறப்படும் இலக்கணம் தலைவன் பெயர் கூறவே

தலைவிபெயர் தானே வந்தியையும் (பக். 59) என இவரே குறிப்பிட்டுள்ளதும் உளங்கொளத்தக்கது.

பக்-211. பாலைத்திணை ஏனைய நான்கு நிலங்களின் திரிபாக அவற்றைச் சார்ந்து வருதல் போல அதன் புறமாகிய வாகையும் வெட்சி முதலிய ஒழுகலாறுகளின் அடிப்படையில் வருமென்கிறார்—வெட்சி முதலிய ஒழுகலாறுகள் பொருநவாகை ஒன்றற்கே உரியன. ஏனைய பல வகைப்பட்ட வாகைக்கு அவறறொடு தொடர்பு எதுவுமின்று. [36]

தலைவி தலைவன் சொற்பிழையாது பிரிவுத்துன்பினை வெளிககாட்டாது. இல்லில் இருப்பது போலத் தலைவனும் தலைவிதன் சொற்பிழையாது பிரிவுத்துன்பத்தை உள்ளத் திருத்திக கடமை உணர்வோடு பாசறைக்கண் இருக்கும் செயலும் அமைந்துள்ளது எனக் கோடற்கண் தவறு இருப்பதாகத் தெரியவில்லை.

பக்-214. முன்றேர்க் குரவை : தேரோரை வென்ற வேந்தன் தன்தானைத் தலைவரொடு கை பிணைத்து ஆடும் ஆடல் என்றார் நச்சினார்க்கினியர் - தானைத் தலைவரைத் தானை மறவர் என்று கொண்டு அவ்வுரை வென்ற கோமான் என்னும் சால்பிற்குச் சிறவாமையறிக என்கிறார். வெற்றிக் களிப்பை அதனை வழங்கிய தானைத் தலைவரொடு இணைந்து கொண்டாடுதற்கண் சால்பிற்கு இழுக்கு எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

முன்தேர்க்குரவை பின்றேர்க் குரவை — இவற்றிற்கு வழங்கப்பட்டுள்ள விளக்கம் நன்று.

பக்-218 தன்னை வேட்டலாகிய அவிப்பலியும் என்றார். இரண்டும் வெவ்வேறானவை. தொல்காப்பியத்தில் அவிப்பலியே கூறப்பட்டுள்ளது. ஒல்லார் இடவயிற் புல்லிய பாங்கினும்—பகையாயினாரிடத்தே அவர்தம் பகைமையை நீக்கி அவரைத் தழுவிக்கொண்ட பகுதியும் — எடுத்துக்காட்டு இல்லை. அவர்தம்

---

36. கொடை, கொற்றவள்ளை, மாவருந்தானையர் மலைந்தபூ, காட்சி, கால்கோள் நீர்ப்படை, கொள்ளார்தேஎம் குறித்த கொற்றம், குடையும் வாளும் நாள்கோள் மண்ணுமங்கலம் முதலாயவை, பார்ப்பார் அரசர் அறிவர் ஆகியோருடன் தொடர்புடையவையாக இருத்தலானும் போர்வெற்றிக்கு வேளாளர் பங்கு மறைமுகமாக அமைய வேண்டுதலானும் அங்ஙனம் விளக்கம் தரப்பட்டது.

பகைமையை நீக்கி என்பது வருவித்துக் கொண்டதொடர். இதன்கண்ணும் ஏரோர் களவழியிலும் மறவீறு யாங்குளது.[37]

பக்-220. கட்டில் நீத்த பாலுக்கு அரிசில்கிழார் செய்தியைக் குறிப்பிடுகிறார் — அறம் நோக்கி அவர் அதனைத் தவிர்ந்த தாகவும் கூறுகிறார் — மறத்தொடு நாடாளும் ஆற்றல் அவருக்கு உண்டா? ஆளும் தகுதி முற்ற இருந்தும் அதனை விட்டுக் கொடுத்தாரா? என்பன ஆய்விற்குரியன. பரதனும் பார்த்தனும் ஆளும் ஆற்றல் பெற்றிருப்பினும் இளையவன் ஆளுதல் கூடா தென்ற அற உணர்வான் கட்டில் நீத்தனர். அவர்கள் தவம் முதலிய ஆக்கம் நோக்கித் துறந்தாரால்லர் என்பன கருதத் தக்கன.

எண்வகை அவையத்தார் என்கிறார் எண்வகை என்பன விளக்கப் பெறவில்லை.[38]

பக்-221. கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமை தாபதப் பக்கத்துள் அடங்கும் என்கிறார். தாபதருக்கு இவர் கூறும் இலக்கணத்தொடு இதுபொருந்துமா என்பது சிந்திக்கத்தக்கது.

பக்-224 பிழைதோர்த் தாங்கும் காவலில் இம்மை மறுமைக் காவல் இரண்டையும் அடக்கி அரசன், சான்றோர் எனயாரை அச்செயற்கு உரிமையுடையவராக்கிக் கோடலே சாலும்.

பக்-236. ஈரைந்தாகும் பேரிசை என்கிறார். பெருங் காஞ்சி, முதுகாஞ்சி, பேயக்காஞ்சி தொடாக்காஞ்சி எனபன பேரிசை உடையனவா என்பது சிந்திக்கத்தக்கது.

பக்-242. "முதியோள் சிறுவன் படையழிந்து மாறின்ன் என்று பலர் கூற" என்ற புறப்பாட்டுத் தொடரால் படையில் புறங்காட்டி வருதலும் நிகழ்தல் உண்டு என்பதும் அங்ஙனம் வந்த மகனைப் பெற்ற தாய் தன் மறக்குடிக்கு அஃது இழுக்கெனத் தன்னை மாய்த்துக் கொள்ளுதலும் உண்டென்பது போதரும். எனவே நச்சினார்க்கினியரின் முதல் உரை மறுக்கத் தக்கதன்று. பல்படை ஒருவற்கு உடைதலின் மற்றவன் ஒள் வாள் வீசிய நூழிலும் என்பதனால் படைவீரர் தோற்றோடும் இழிநிலையும் அங்ஙனம் ஓடிய வரை வெட்டி வீழ்த்தும் மிக்கிழி நிலையும் தொல்காப்பியத்தில் காணப்படுகின்றன.

---

37. மன்னித்தல் மறவீறு எனல் வழக்கு - மறவீறு என்பது மிகுதிபற்றி அமைந்தது.

38. எண்வகை என்றது அவையத்தார்க்கு வேண்டும் குணங்களை.

பக்-243. தலைப்பெயல்நிலை மறத்தகவு நோக்கியது. பாலைநிலை புகழ்நிலை நோக்கியது. இவையிரண்டும் மறச் செயலின் பாற்படுவன. கணவனொடு முடிந்த படர்ச்சியும் புகழ்நிலை நோக்கியது. சாதலின் இன்னாததில்லை என்பதை அறிந்தும் கணவனொடு முடிதல் மனத்திண்மையைப் புலப் படுப்பதாம். எனவே இருவகைக்கும் விழுப்பவகை விழுமவகை என்ற பெயர்களே பொருந்தும் போலும்.

பக்-246. பாடாண் கைக்கிளைக்குப் புறனாமாறு விளக்கப் படவில்லை.[39]

பக்-254. காலக் கடவுளைத் தெய்வப் பகுதியுள் அடக்கி யுள்ளார். பக்-257 தெய்வமாகவே குறிப்பிட்டுள்ளார்.

பக்-258. நாள், கோள், திங்கள், ஞாயிறு, கனையழல் பதிற்-14 என்ற அடியில் ஞாயிற்றையும் திங்களையும் நாள் கோள் இவற்றின் வேறாகக் குறிப்பிடும் மரபு காணப்படுகிறது.

பக்-251, 52. எடுத்துக்காட்டுக்களாகத் தந்த புறம் 32, 38 என்பன செந்துறையாக வண்ணித்துக் கூறும் பகுதியாகுமா?[40]

பக்-225. ஞாயிற்றுப்புத்தேன், திங்கட்புத்தேள் எனப் பண்டையிலக்கியங்கள் கடவுளாகக் கோடலின். காமப் பகுதி கடவுளும் வரையார் என்பதனுள் இவையடங்கும்.

பக்-256. "ஊரொடு தோற்றமும்" இதன்கண் எடுத்துக் காட்டப்பட்டுள்ள பகுதிகள் புரைதீர் காமம் புல்லிய வகையாற் கூறப்படும் பாடாண்டிணைப் பகுதி ஆகுமா?[41]

பக்-257 வேந்தரைச் சார்த்து வகையான் கடவுளாகக் கூறுமிடத்து அவரும் கடவுட் பகுதியராவர், என்னுமிவர் பூவை நிலைக்கு நச்சினார்க்கினியர் கூறிய உரையை மறுத்தது ஏன்? வேந்தரைச் சார்த்து வகையான் கடவுளாகக் கூறத் தொல் காப்பியத்தில் வேறு நூற்பாப்பகுதி உண்டா?[42]

---

39. பாடாண்டினை பற்றிய சிறுகுறிப்பு - என்னும் விளக்கத்தில் ஓரளவு அமைத்து விட்டமையின் தனியாகப் பிரித்துக் கூறவில்லை.
40. பூவா வஞ்சியும் தருவன், மதுரையும் தருவன், கொண்டகுடுமித்து (புற-32) செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும் வெண்டிங்களுள் வெயில் வேண்டினுக் (38) முதலியவை வண்ணித்தலாகும்.
41. புரைதீர்காமப் பகுதிக்கண் இவை உடன் அமைந்து வருமென்பதே நூற்பாக் கருத்து.
42. பரவலும் புகழ்ச்சியுமாகக் கூறுதற்கண் வண்ணப்பகுதி வரைவின்று (சூ-34) என்ற பகுதி சார்த்து வகையாதற்கு ஏற்கும் என்பது என் கருத்து.

பக்-249. 'பாடுநர்க்கீத்த' என்பது மன்னைக் காஞ்சிக்கு இவர் தந்த மேற்கோள் அது பாடாண்டிணைப் பகுதிக்கும் மேற்கோளாதல் யாங்ஙனம்? [43]

பக்-268. கபிலம்-புகர்நிறம் அந்நிறத்தையுடைது கபிலை. கபிலை = செந்நிறப்பசு. அது பெற்றதனை ஆகுபெயரான் உணர்த்தி நின்றது. ஏற்றினை நீக்குதல் வேண்டிக் கபிலை எனறார். என்ற தொடர்ப்பொருள் புலப்படவில்லை. புறம் 166ல் வேள்வியிடத்துப் பார்ப்பாருக்குப் பெற்றம் வழங்கியமை இடம் பெறவில்லை.

விளக்குநிலை: செங்கோல்நிலை என நேராகக் கூறாமல் இங்ஙனம் போந்த பொருளாகக் கூறியதன் கருத்துப் புலப்படவில்லை.

பக்-270, 71. "எருமையன்ன" — ஓங்கு மலை — இவ் இரண்டனையும் வாயுறை வாழ்த்தாகக் கொள்ளுவதில் இழுக்கு எனை என்பது விளக்கப்படல் வேண்டும். [45]

இனி "கருங்கால் வேங்கை'—இதன்கண் குறிஞ்சியில்வேனில் மயங்கிற்று என்று வாளா கூறுவதை விட வேங்கை பூக்கும் காலம் வேனிலாகலான்' என்றாற் போன்ற சிறு விளக்கங்களொடு எடுத்துக்காட்டுப் பாடல்கள் அமைந்திருப்பின் கற்பார்க்கு அக்குறிப்புகள் பெரிதும் தெளிவுதரும்.

இதுகாறும் பெரும்புலவர் பாலசுந்தரனார் பொருட்படல அகத்திணையியல் புறத்திணையியல்களுக்கு வரைந்துள்ள ஆராய்ச்சிக் காண்டிகையுரையில் அவர்கொண்டுள்ள பாடங்கள்- நுட்பமாக விளங்கியுள்ள செய்திகள், சொற்பொருள் விளக்கங்கள் புதியனவாகப் பொருள் கூறியுள்ள நூற்பாக்களின் ஐயங்கள் ஐயுறுதற்கு ஏதுவான உரைப்பகுதிகள் ஆகியவைப்பற்றி ஓரளவு நோக்கினோம். இவ்வுரையைக் கூர்ந்து நோக்கின் முன்னை

---

43. முதல் ஆறு அடிகள் பாடாண்டிணைப் பகுதியாக அமைந்துள்ளன.

44. ஆன், பெற்றம் என்பவை இருபாற்கும் பொதுவாக அமைந்துள்ளமையானும் கபிலைப்பசு என வழக்காற்றினுள் கபிலை பசுவையே குறித்து வழங்கலானும் இவ்விளக்கந்தரப்பட்டது.

45. புறம்-5—திரயங்கொள்பவரொடு ஒன்றாது, காவல் குழவிகொள்பவரின் ஓம்புமதி என அறிவுறுத்தியதன்றி அதன்கண் வாழ்தின்மையானும், புறம். 55—ல் நீடுவாழிய என வாழ்த்துரை அமைந்திருப்பினும் வற்புறுத்தம் புடுவது அறவுரையே ஆகலானும் — புறநானூற்றுத்துறையாசிரியர் கருத்தும் அதுவேயாகாலானும் வாயுறை வாழத்தாதற்கு அவை சிறவா.

உரைகளிற் காணக்கிட்டாத பல அரிய செய்திகள் உணர்தற்கு வாய்ப்புக் கிட்டும் என்பது ஒருதலை.

வழக்கம்போல அச்சுப் பிழைகள் உள்ளன. ஆனால் அவற்றால் பொருள்உணர்தற்கு ஏதம் ஏற்படவில்லை. ஆசிரியரின் இவ் அரிய முயற்சி தமிழ்த்தாய்க்குப் புதியதோர் அணிகலமாகத் திகழ்கிறது என்பதில் இரண்டு கருத்துக்கள் இருத்தற்கு இடமில்லை. ஆசிரியரின் தொல்காப்பிய உரை முழுமையும் வெளிவந்து தமிழ் கூறும நல்லுலகத்துச் சிறந்த வழி காட்டியாக விளங்குவதாகுக. ஆசிரியர் பன்னலனும் பெற்று நோய்தபு நோன்றொடையுடன் பல்லாண்டு வாழப் பரம் பொருளின் திருவருள் துணைபுரிக!

புதுச்சேரி
24—6—1989

அன்பன்
தி. வே. கோபாலையர்,

தமிழ் வாழ்க

# தொல்காப்பியப் பொருளதிகாரக் கோட்பாடுகள்

**முன்னுரை:** மன்பதையுள் மக்களினம், ஆறாவது அறிவிற்குக் காரணமாகிய மனத்தையும் அதன் கூறுகளாகிய புத்தி-சித்தம், முனைப்பு என்னும் அகக்கருவிகளையும் ஆன்ம உணர்வினையும் பெற்றுள்ளமையான் மாண்புடையதாகிக் காலந்தொறும் பண்பாடு நாகரிக ஒழுக்கங்களான் வளர்ந்து வருதலின் தமிழ் நூலோர் மக்களை உயர்திணையென வகுத்துரைத்தனர்.

மக்கள் காலந்தொறும் உயர்ந்து வருதற்குக் காரணம் மொழிப்பேறு. மொழியைப் படைத்துக் கொண்ட மக்கள் அதன் வாயிலாகவே அறிவாற்றலைப் பெருக்கி வளர்ந்து கொண்டு வருகின்றனர். மக்கள் தம் ஐம்புல வாயிலாக அகமும் அகத்தின் வாயிலாக ஆன்மாவும் ஆராத இன்பத்தைப் பெறுதலையே குறிக்கோளாகக் கொண்டுள்ளனர். இன்ப நாட்டம் எல்லா உயிர்கட்கும் பொதுவாயினும் பிற உயிரினங்கள் நாடும் இன்பம் அவற்றின் புற உடம்பை எல்லையாக உடையது. மக்கள் நாடும் இன்பம் புற உடம்பையும் அதற்கு அடிப்படையான அக உடம்பையும் அதற்கு அப்பாற்பட்டதாகிய ஆன்மாவையும் எல்லையாக உடையது. அதனான் அவ்இன்பத்தைப் பெறுதற்குரிய நெறி முறைகளை வகுத்துக் கொண்டு அவற்றின் வழி ஒழுகும் கட்டுப்பாட்டினை அவர் மேற்கொள்வாராயினர். அம்முறையான் அமைந்தவையே அகவாழ்க்கை என்னும் மனையற நெறியும் புற வாழ்க்கை என்னும் அரசியல் சமுதாய நெறியும்.

அகவாழ்விற்குரிய பல்வேறு பொருள்களை ஆக்கலும் அடைதலும், வழங்கலும் நோக்கிக் குழுமிய மக்கட்குழுவே சமுதாயமாகும். அச்சமுதாயத்துள் அழுக்காறு அவா வெகுளி முதலாயவற்றான் நேரும் பகைமையும் பூசலையும் போக்குதற்கும் களிப்பையும் அறிவையும் தரும் பல்வேறு கலைகளை வளர்த்தற்கும் மக்களான் உருவாக்கிக் கொள்ளப்பட்டதே அரசாங்க அமைப்பாகும். இங்ஙனம் மனைவாழ்க்கை என்னும் அமைப்பு முதலாக அரசாங்க அமைப்பு இறுதியாக அமைந்த நாகரிகக் கோட்பாடுகள் தோன்றப் பல நூற்றாண்டுகள் ஆகியிருக்கும். மக்களினம் விலங்குநிலையினின்று படிப்படியாக வேறுபட்டு வளர்ந்த வரலாறு வியப்பும் பெருமிதமும் தருவதாகும்.

கற்கால முதலாக இன்றைய விஞ்ஞான வளர்ச்சிக் காலம் வரை மக்களினத்தின் குறிக்கோளை ஆராயின் அது பல் வகையானும் எய்தும் இன்பம் ஒன்றையே நோக்கி இருப்பதைக் காணலாம். அவ் இன்பத்தை அடையும் முறைகள் காலந் தொறும் சிறிது சிறிது மாறி வந்துள்ளமையைத் தவிர அடிப்படைக் குறிக்கோளில் இன்றளவும் மாற்றம் யாதுமில்லை என்பது கண்கூடு.

மக்களின் பண்பும் செயலுமாகிய நாகரிகமும் நெறிமுறை களும், நாட்டின் நில அமைப்பு — தட்பவெப்பச் சூழல்கள் — பருவகாலத் தொடர்பு-மரஞ்செடி கொடி விலங்கு பறவை முதலாய கருப்பொருள் ஆகிய இயற்கையமைப்பினையும், அறிவு - ஆற்றல் வேட்கையாகிய செயற்கைப் பண்புகளையும் ஒட்டியே அமைந்து வளர்ந்துள்ளமையைப் பல்வேறு நாடு — இன — அரசு பற்றிய வரலாறுகளான் அறியலாம். அம்முறையில் தமிழ் கூறும் நல்லுலக வரலாற்றினைக் காட்சி — கருதல் — நூல் ஆகிய அளவைகளான் காண்போம்.

பாரத நாடென்னும் நாவலந்தீவின் ஒருபகுதி திசை காரணமாகத் தென்னாடு எனவும் மொழிகாரணமாகத் தமிழகம் எனவும் வழங்கப்பட்டு வருகின்றது. வேங்கடமலைப் பகுதியை வட எல்லையாகவும் குமரியைத் தென்எல்லையாகவும் வங்கக் கடலைக்கீழ் எல்லையாகவும் அரபுக்கடலை மேலெல்லையாகவும் கொண்டுள்ள நிலப்பகுதியே தமிழ் கூறும் நல்லுலகம் எனத் தொல்காப்பியப் பாயிரத்தால் அறியலாம். இந்நிலப்பகுதி சேர சோழ பாண்டியர் எனனும் தொல்பழங்குடியினரான் ஆளப்பட்டு வந்துள்ளமையைத் தொல்காப்பியம் சுட்டுகின்றது (செய்-75).

வண்புகழ் மூவர்தம் ஆட்சிக்காலத்து இத்தண்பொழில் வரைப்பின்கண் பண்பாடு பழக்க வழக்க நெறிமுறைகளான் மக்கள் அந்தணர். அரசர், வணிகர், வேளாண்மாந்தர் என நாற்பெரும வகையினராகவும் அவருள் அடியோர், வினைவலர், இழிசினர் முதலாய உட்பிரிவினரும் அமைந்து விளங்கியுள்ளமை யையும் அம்மூவேந்தரின் பாங்காக அவர்க்கு அடங்கியும், அடங்காதும். பல்வேறு சிற்றரசரும் குறுநில மன்னரும் பெருநிலக்கிழாரும் இருந்துள்ளமையையும் — பாலைநிலத்தும் குறிஞ்சிநிலத்தும் வாழ்வோர் சிலர் பெருங்குழுவினராகக் கூடித் தலைவன்மாரை அமைத்துக் கொண்டு தன்னாட்சி புரிந்து வந்துள்ளமையையும் — தொல்காப்பியப் பொருட் படலமும், சங்கஇலக்கியங்களும் தெரிவிக்கின்றன.

மேற்கூறிய வேந்தர் — மன்னருள் பலர் பேராற்றலுடையரா யிருந்துள்ளனர். அவர்தாம் தம் ஆளுகைக்குட்பட்டோரையும் அணுகியிருப்போரையும் பேணிப் புறத்தலையும் – தம் தலைமைப் பாட்டை நிலை நிறுத்திக் கொள்ள மாற்று வேந்தரொடும் குறு நில மன்னரொடும் போரிடுதலையும் தொழிலாகக் கொண்டிருந்தமையும் தொல்காப்பியம் சுட்டுகின்றது.

சங்ககால இலக்கியங்களின் அடிப்படையில் தொல் பழங் காலத் தமிழக மக்கள் வாழ்க்கை நிலை, சமுதாய நிலைகளைக் கருதலளவையான் நோக்குமிடத்து முப்புறமும் கடலாற் சூழப் பெற்ற பரந்த கடற்கரையையும் குன்றும் மலையும் சூழ்ந்த சாரல் களையும் அடர்ந்த காடுகளையும் சிற்றாறு பேராறுகளையும் இடையிடையே வளமற்ற நிலப்பரப்புக்களையும் கொண்டு நீண்ட வேனிலையும், அளவான பனியையும் மழையையும், கோடை யும் கொண்டலும் வாடையும் தென்றலுமாகிய காற்றுக்களையும் பெற்று நிலவளமும் கடல் வளமும் உடையதாகத் திகழும் தமிழகத்தில் பல்வேறு மரம் செடி கொடிகளும் பறவைகளும் விலங்கினமும் தோன்றித் திகழ்வனவாயின. விலங்கினத்தின் ஒருபிரிவாகக் கிளைத்த மக்களினம் உடலமைப்பானும் மூளைக் கனத்தானும் வேறுப்பட்டுள்ளமையின் வாழும் முறையில் பிற விலங்கினத்தினின்றும் மாறுபட்டுப்படிப்படியாக வளர்வதாயிற்று. அம்மக்கள் காயும், கிழங்கும் பழமுமாகியவற்றொடு பறவைகளை யும் சிறுவிலங்குகளையும் வேட்டையாடியும் நீர்நிலைகளில் மீன்களைப்பிடித்தும், புற்றீசல்களையும், மனற்றவளையையும் அகப்படுத்தியும் உணவாக்கிக்கொண்டு மரப்பொந்துகளை அண்டியும் கற்குகைகளை அடுத்தும் வாழ்ந்து படிப்படியாக வேட்டைக் கருவிகளை ஆக்கிக் கொண்டும், சிறுகுடில்களை அமைத்துக் கொண்டும் மரத்தை உரசித் தீயை உண்டாக்கிக் கொண்டும் மரப்பட்டை, விலங்கின தோல், தழைக்கொத்துக்கள் ஆகியவற்றான் உடம்பை மறைத்துக் கொண்டும் வளரலாயினர்- மலர்கள், கிளிஞ்சல், சங்கு, பறவையின் இறகு முதலியவை அணிகலன்களாயின. தனித்தும் இணைந்தும் வேட்டை முதலாயவற்றைப் புரிந்த நிலையினும் குழுவாகக் கூடிச் செயலாற்றுவது பாதுகாப்பும் ஈட்டமும் தருவதனை அறிந்து கூட்டமாக வாழத்தலைப்பட்டனர்.

இக்கால கட்டத்தில் தான் குறிப்புமொழிகளும் அடையாள மொழிகளும் உரிமை உணர்வுகளும் நெறிமுறைகளும் உறவு முறைகளும் இன்றியமையாத நிலைமையான் தோன்றலாயின. இயற்கையாக விளைந்த மூங்கில்நெல் வரகு சாமை தினை

முதலியவற்றை உணவாக்கிக் கொண்ட நிலையினின்றும் முன்னேறி அவற்றை விளைவிக்கத் தலைப்பட்டனர். பால் பயன் ஒன்றையே கருதித் தம்மொடு சேர்த்து வளர்த்து வந்த ஆனிரைகளை உழுதற்கும் பொதி முதலாயினவற்றைச் சுமத்தற்கும் பயன்படுத்தி அவற்றைப் பெருக்கிக் கொண்டு உணவுப் பயனாக ஆடு கோழிகளைக் கைக் கொண்டனர். இந்நிலையில் ஆனிரைகள் உயர்ந்த பொருளாகவும், செல்வமாகவும் சிறப்புற்றன. பின்னர் இரும்பு, செம்பு, பொன் முதலிய மாழை (உலோகங்கள்) களை உருவாக்கிப் பயன் கொள்ளலாயினர். உலோகப் பயனைப் பெற்ற காலகட்டத்தில்தான் குடும்ப முறை சொத்துரிமைச் சிந்தனைகள் தோன்றலாயின. நன்செய் அமைப்பும் உழவு முதலாய தொழில்களும், ஆடல் பாடல் விளையாட்டு முதலிய கலைகளும், தெய்வச் சிந்தனையும், வழிபாடுகளும் வளரலாயின.

சிறுகுடும்பங்கள் கூடிக் குழுமுறையாக வளர்ந்த காலத்தில் ஒரு குழுவினர் — மற்றொரு குழுவினரிடமிருந்து தம்மைக் காத்துக் கொள்ளவும் அவர்பால் மிக்கிருக்கும் வளங்களை பறித்துக் கொள்ளவும் எண்ணங்கள் வளர்ந்த நிலையில் களப்போர் உணர்வும் செயலும் போர்க்கருவிகளும — போர் பயிற்சியும் பெருகலாயின. படையும் படைத்தலைமையும் இன்றியமையாமை காரணமாக ஏற்படலாயின. சமுதாய ஒழுகலாற்றுச் சிந்தனை பெருகின. அதன் காரணமாகப் பொதியிலும், மன்றங்களும், நீதிநெறிகளும் அறங்கூர் அவைகளும் அமைவனவாயின. பொதுவுடைமை மனப்பான்மை தனியுடைமை வேட்கையாக மாறி வளரத் தலைப்பட்டது. ஊராட்சி அமைப்பும் நாடாட்சியமைப்புகளும் தோன்றி நிலைபெறுவனவாயின.

அங்ஙனம் ஊராட்சி முதலிய ஒழுங்கு முறைகளை வகுத்து ஒழுகும் வாய்ப்பும் வளமும் மனநிலையும் அமையாமல் வளமற்ற பாலைநிலபகுதிகளிலும், மலைப்பக்கங்களிலும் வாழ்ந்து வருவோர் தனித்தும் குழுவாகக் கூடியும் வழிப்பறி செய்தும், முல்லை நிலத்தும் மருதநிலத்தும் வாழ்ந்துவரும் மக்களின் ஆனிரை முதலாய பொருள்களைக் கொள்ளையிட்டும் எதிர்க்கும் சிறுகுழுவினரை அழித்தும் துன்புறுத்தியும் வருவாராயினர். அந்நிலையில் அத்தகுகொடியோரை வென்றொறுக்கவும் தம்மையும் தம் உடைமைகளையும் காத்துக்கொள்ளவும் குடிமக்கள் ஒவ்வொருவரும் படைக்கலப்பயிற்சியும், போர்ப் பயிற்சியும் பெறவேண்டிய கடப்பாட்டிற்கு ஆளாகி அப்பயிற்சி

களைப் பெற்றுத்திகழ்வாராயினர். பயிற்சி தரவும் அவர்களை வழிநடத்தவும் பொறுப்பேற்றவர் நாளடைவில் அவர்கட்குத் தலைவராயினர், அங்ஙனம் அமைந்த தலைவர்களே படிப்படியாக மன்னராயும் வேந்தராயும் முதிர்ந்தனர் துணைமக்கள் குடிமக்களாயினர். தலைவற்கு ஊதியமாக அளிக்கப்பட்டு வந்த பொருள்கள் வரிப்பொருளாக மாறின. மக்களின் தனிஉடைமை அரசற்குப் பொது உரிமையாயின. அரசற்குக் காவல் மதில் சூழ்ந்த மனைகளும் நால்வகைப் படைகளும் அமைச்சர் முதலான அரசச் சுற்றங்களும் ஏற்படலாயின.

இதுகாறும் கூறப்பெற்றவை வரலாற்று ஆசிரியன்மார் பலர் ஆராய்ந்து தேர்ந்து கூறியுள்ள உலக மக்கள் வரலாற்றின் மிகச் சுருக்கமாகிய குறிப்புக்களேயாம். மேற்கூறிய பொது வரலாற்றினின்று தமிழக வரலாறு மாறுபட்டதன்று. அமைப்பு முறைகளுள் சில முன்பின்னாக நேர்ந்திருக்கலாம்.

பொதுவுடைமைக் குழுநிலை வாழ்க்கை மாறித் தனியுடைமைக் குடியாட்சியாக வளர்ந்து சூழ்ச்சியும் சூழ்நிலையும் காரணமாக முடியாட்சியாக முற்றிய பின்னர், மன்னன் தெய்வத்தொடு ஒப்பக் கருதப்பட்டான். ஆக்கவும் காக்கவும் அழிக்கவும் உரிமையுடையவனாக ஏற்றுக் கொள்ளப்பட்டான். மன்னனும் தன் குடிமக்களை தன் மக்களாகக் கருதித் தண்ணளியும் செங்கோன்மையும் உடையனாயினான் — மற்றை நாட்டு மன்னரொடு போரிட்டு அந்நாட்டு வளங்களைக் கைப்பற்றித் தன்னாட்டவர்க்கு அளித்தலைப் பொறுப்பாக எண்ணினான். பகைவரை வென்று அவரையும் அவர் நாட்டையும் அழித்தலைக் கடமையாகவும் வீரமாகவும் கருதினான். தெய்வக் கோட்பாடுகளையும் கல்வியையும் ஆடல் பாடல் முதலாய கலைகளையும் வளர்த்தான். பல்வேறு விழாக்கள் புரிந்து மக்களை உவப்பித்தான். அருந்தவர், அந்தணர் — சான்றோர்களைப் போற்றினான் — புலவோரைப் பேணினான்.

குடியாட்சிக் காலத்தில் வந்து கலந்த ஆரியர் தமிழகத்தில் உயர்ந்தோராக விளங்கிய அந்தணர் அறிவர் மறையோர் ஆகியவரோடு தொடர்பும் உறவும் கொண்டு படிப்படியாகத் தமிழகச் சூழ்நிலைக்கு ஏற்ப மாறித் தம் தனித்தன்மையைப் பேணி வாழ்ந்து வரலாயினர். கல்வி கேள்விகளான் உயர்ந்தனர். வேள்வி முதலாயின புரிந்து சிறந்தனர். தேவகோட்டம் முதலாயவற்றைப்பேணும் உரிமைகளையும்

பூசனை புரியும் கடமைகளையும் மேற்கொண்டனர். தமிழக நாற்பால் வகுப்புமுறை படிப்படியாக ஆரிய நால்வருண முறையாக மாறின. வருணமுறை குலப்பிறப்பு அடிப்படையில் ஊற்றம் பெறலாயிற்று. இனமுறைமை குல முறைகளாக அமைவனவாயின. அந்தணர்—மறையோர் என்னும் தகுதி வேறுபாடுகள் குறைந்து பார்ப்பனர் என்னும் குழுப்பெயர் வழக்காற்றிற் சிறத்தலாயிற்று. பார்ப்பார் அரசமைப்பில் ஓர் அங்கமாயினர்

அரசவை, நூலோரவை, பேரவை அறங்கூறவை முதலாய அவைகளில் சிறப்பும் தலைமையும் பெறலாயினர். அரசர், குல வழி ஆட்சி உரிமைபெற்று முடிசூடி—படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண் முதலாய அங்கங்களொடு தனிப்பிரிவாக (வருணமாக)த் திகழ்வாராயினர்.

குடியாட்சிக் காலத்தில்—பண்டமாற்று நிலையில் இருந்த வாணிகம் — கூல வாணிகம் அறுவை வாணிகம் பொன் வாணிகம் பண்ட வாணிகங்களாகப் பெருகின. கடல் வழி நிலவழி வணிகர் வளர்ந்தனர். (நாணயம்) காசு மாற்று வழி வணிகம் அமைந்தது. வணிகர் அரசற்கு உறு துணையாய் — எட்டி — காவிதி முதலாய சிறப்புப்பெற்றுத் திகழ்ந்தனர். வேளாளர் எண்வகைக் கூலங்களையும் பிற விளைபொருள்களையும் விளைத்தனர். உழவர் வேளாண்மையொடு வாளாண்மையுடையராயும் இருந்தனர். போரில் ஆற்றல் மிக்க செயல் புரிந்த வீரர்கட்கு அரசன் விளை நிலங்களையும்— கரம்பைச் சிற்றூர்களையும் பரிசாக வழங்கிச் சிறப்பித்தான். அந்நிலையில் சிலர் உழுதுண்போர் நிலையிலிருந்து உழுவித்துண்போராய் — பெருநிலக்கிழாராய் மாறினார். சிறந்த கலைஞர்க்கும் புலவோர்க்கும் மன்னன் பெரும்பொருள்களையும் சிற்றூர்களையும் பரிசிலாக வழங்கினான். அவருள்ளும் சிலர் உழுவித்துண்ணும் நிலக்கிழாராக மாறினர். மன்னனால் வரிசை பெற்ற பெருவீரர்கள் தானைத் தலைவராகவும் உழையிருந்து பணியாற்றும் அமைச்சராகவும் உயர்ந்தனர். குறு நிலப்பரப்பை ஆளும் பொறுப்பும் மன்னனால் வழங்கப்பட்டது.

வேந்தரும் — மன்னரும் மாற்றாரை வென்று வாகை பெற்ற வழி தோல்வியுற்ற மன்னர் திறை செலுத்தும் சிற்றரசாக மாறினர். செல்வப் பொருள்களேயன்றி யானை குதிரை காலாள் முதலிய படைகளும் திறைப் பொருளாக வழங்கப்பட்டன வென்றோர் தோற்றோரைப் பணியாளர் நிலைக்குத்

தாழ்த்தி ஏவல் கொண்டனர். பகைப்புலத்தில் கவரப்பட்டவர் சிலர் அடிமைநிலைக்கு ஆளாயினர். அடியோர் வினைவலர் பரம்பரையும் அமைவதாயிற்று. பலர், கொல்லு, தச்சு, ஆடை நெய்தல் கட்டிடம் சிற்பம் ஓவியம் முதலாய தொழில் புரிவோ ராகத் திகழ்ந்தனர். உணவு உண்டாட்டு வகையில் கள் அடுதலும், தேன் எடுத்தலும் கள் விற்றலும் இன்றியமையாத தொழிலாக வணிகமாகத் திகழ்ந்தன. கலைத்தொழிலுள் யாழ் சமைப்போரும் பறை முழவு முரசு வங்கியம் முதலாய இசைக் கருவிகளைச் செய்வோரும் உண்டாயினர். போர்க்கருவி களுள் மெய்ம்மறை (மார்புக்கவசம்) காற்செருப்பு கிடுகு (கேடகம்) முதலாய கருவிகள் தோலாற் செய்யப் பெறுபவை யாதலான் தோலைப் பதப்படுத்தல் முதலாய தொழில் புரிவோரும் — தோல் துன்னுபவர் (செருப்புத் தைப்போர்) முதலானோரும் சமுதாயத்துள் இன்றியமையாத உறுப்பினராய் வாழ்ந்தனர். இன்னோரைப் புலையர், இழிசினர் என இலக்கியம் புகல்கின்றது. இங்ஙனம் தொழில் காரணமாகப் பிரிந்தவர் நாளடைவில் ஓரினமாகக் கீழோர் என்னும் பெயராற் சுட்டப் பெற்றனர். அவ்வத்தொழில் குல வழியாகப் பயின்று வந்த நிலையில் சாதியாக வழங்கப் பெறலாயிற்று.

மேற்கூறிய புறவொழுக்க மக்கள் வரலாறு, சங்க இலக்கியங் களிலும் — வரலாற்று ஆசிரியன்மார் குறிப்புக்களிலும் காணப் படும் வரலாற்றுச் சுருக்கமாகும். இங்ஙனம் வளர்ந்தமைந்த புறவாழ்க்கைத் திரிபுகளுக்கு ஏற்ப அகவாழ்க்கை (மனையறம் — குடும்பம்) யமைப்பும் மாற்றம் பெற்றது.

சிறுவிலங்குகளும் மலைநெல் முதலியவளங்களும் அமைந்த மலைப்பகுதிகளில் வாழ்ந்தோரும் கான்யாறு பொருந்திய முல்லை வளம் நிறைந்த காடுகளில் வாழ்ந்தோரும் மீன்வளம் அமைந்த கடற்கரைப் பகுதிகளில் வாழ்ந்தோரும் - வளமில்லாப் பாலைநிலத்து வாழ்ந்தோரும் படிப்படியாக நாகரிகம் உற்றுக் கூட்டுக்குடும்பமாகவும் குழுக்களாகவும் வாழத் தலைப்பட்டுப் பயிர்த்தொழிலை யுணர்ந்து நெல் முதலாய கூலங்களை விளைத் துண்ணும் நிலையில் வளர்ந்த காலத்தே பண்பாட்டு நெறி முறைகள் தோன்றலாயின. ஒரு குழுவினுள்ளும் — பிறகுழுவி லிருந்தும் மகளிரைக் கொண்டும் கொடுத்தும் கணவன் மனைவி உறவு அமைந்தபோது மணச்சடங்குகளும் மனைவிழாக்களும் தெய்வவழிபாடும் அமையலாயின. ஓராடவனும் ஒருத்தியும் தனிமையிற்கண்டு காதலுற்றப்பின் உற்றாரறிய மணந்து கொள்ளும் நிலைகள் ஏற்படலாயின. அங்ஙனம் கரவாகக்

காதலித்தோர்க்குத் தடைகளும் நிகழ்ந்தன. ஒருவரை ஒருவர் கைவிடும்சூழலும் அமைந்தன. கூட்டுக்குடும்ப நிலையில் ஒருத்தியை மணந்து கொள்ள விரும்பிய ஆடவன் தனிக் குடும்பமாக வாழ்தற்கு வேண்டும் பொருளை ஈட்ட வேண்டிய கடப்பாட்டிற்கு ஆளாயினான். தொடக்ககாலத்தில் விலங்கு களைப் போரிட்டுக்கொன்று தன் ஆற்றலைக் காட்டி அவற்றையே பொருளாகப் பரிசு கொடுத்து மணந்து கொண்ட நிலைமாறிச் செல்வப்பொருள் ஈட்டித்தரும் நிலைக்கு நாகரிகம் வளர்ந்தது. கூட்டுக் கூடும்பத்தில் ஈன்றாளுக்குத் தலைமைப் பொறுப்பிருந்தது. தனிக் குடும்பமுறை வளர்ந்த காலத்து ஆடவர்க்குத் தலைமைப் பொறுப்பு மாறியது. ஆடவன் தன் ஆளுமைக்கும் பொருளீட்டும் தன்மைக்கும் ஏற்ப ஒருத்திக்கு மேற்பட்ட பெண்டிரை மணந்து கொண்டான். நாகரிக வளர்ச்சிக்கு முதற்கண் வாய்ப்பாக அமைந்தவை முல்லைநிலப் பகுதிகள், நாகரிகத்தின் முதிர்ச்சிக்கு வாய்ப்பாக அமைந்தவை மருதநிலப் பகுதிகளாகும். மக்கள் வேட்கை, குணம், செயல்கள் பெரும்பான்மையும் அவ்வந்நிலச் சூழல்களை ஒட்டியே அமைந்து — பிற நிலத்து மக்களொடு கொண்டு கொடுத்து வாழும் முறைமையால் கலப்புறுதலாயிற்று.

ஆடுமாடுகளே பெருஞ்செல்வமாக அமைந்த தொடக்க காலத்து முல்லைநில மக்கள் அவற்றைப் பெருக்கவும் பேணவும் தொடங்கிவளர்த்தனர்.ஆனிரைகள் மேய்வதற்குரிய நிலப்பரப்புக் களை உரிமையாக்கிக் கொண்டனர். இந்நில உரிமைப் பாட்டில் பூசல்கள் எழுந்தன. வன்மையுடைய குழுவினர் வன்மை குறைந்த குழுவினரின் ஆனிரைகளைக் கவர்ந்து கொள்ள முயன்றனர். கவர்வோர்க்கும் காப்போர்க்கும் பூசல் நிகழ்ந்தன. ஆனிரைகளைக் காக்கவும் பேணவும் கொட்டில்கள் கூடங்கள், ஆயர்கள் தங்கி வாழ வனமனைகள் அமையலாயின. இவற்றின் வளர்ச்சி காரணமாகச் சிற்றூர் — நாடு — நகர் — அரண்மனை — அரண் அகழி படை, முதலியவை பெருகி அமைந்தன. பண்பாடும் நாகரிகமும் வளர்ந்து உயர்ந்த நிலைமையிலும், பழைய நடைமுறைகளின் அடிச்சுவடுகள் மறையாமல் புதிய வடிவங்களைப் பெற்று வளர்ந்தன. மருத நில நாகரிகம் தெய்வ வழிபாட்டு விழா—வேள்வி—ஆடல் பாடல் கூத்து — பல்வேறு விளையாட்டுக்களாக வளர்வனவாயின. ஆடல்—பாடல் — கூத்து இயற்றும் மகளிர் — ஆட்சித்தலைவர், பெருஞ்செல்வர் — மன்னர் முதலானோரால் பேணுதற்குரிய ராயினர். அந்நிலையில் அவர் காதற்பரத்தையராயும், காமக் கிழத்தியராயும் அமையும் சூழல் அமைவதாயிற்று. திருக்கோயிற்

பணிக்கமர்ந்த மகளிர் கோயிற் பொறுப்பேற்றிருந்த மேனிலையாளர் பேணுதலுக்காளாயினர். அவர் வரைவில் மகளிர் என ஒரு வகையினராயினர்.

முடியாட்சிமுறை தொடங்கி அது குடிவழி உரிமையாக வளர்ந்த நிலையில் வேந்தனுக்குரிய அங்கங்கள் அமைதல் இன்றியமையாத்தாயிற்று. நால்வகைப்படை, அவை பற்றிய துணையாளர் துணைப்பொருள்—பணியாளர் பட்டத்தரசி—அரசிக்குரிய பணிப்பெண்டிர் — வினைவலார் — அடியோர் முதலானோர் அமையலாயினர். இந்நிலை மக்களால் மக்களைக் கொண்டு மக்களுக்காக உருவாக்கப்பட்டதன்றித் திடீர் என்று தோன்றியவையல்ல. ஒருவராலோ சிலராலோ திணிக்கப்பட்டதுமன்று. நில அடிப்படையில் நாட்டுப்பிரிவும்—பிறப்படிப்படையில் இனப்பிரிவும் அறிவு ஆற்றல் அடிப்படையில் உயர்வு தாழ்வுப்பிரிவும் — அமைவனவாயின. மணவுறவுக்கோட்பாடு-ஆள்வோர் ஆளப்படுவோர் முறைமை, பொருள் முதலாயினவற்றை ஈட்டித்தனிமையுடைமையாக்கிக் கொள்ளும் உரிமை ஆயவை உள்ளவரை — மேற்கூறப்பெற்ற மக்கட்பிரிவுகளும் வழக்காறுகளும் நிலைபேறுடையனவாகவே திகழும். வடிவங்களும் நெறிமுறைகளும் வேறுபடலாம். அடிப்படை வேறுபடாது — அதுதான் உலக இயக்கத்தின் இயற்கை.

மேற்கூறிய வரலாற்றுக் குறிப்புக்களின் அடிப்படையில்தான் தொல்காப்பியப் பொருட்படலக் கோட்பாடுகளை அறிய இயலும். சங்க இலக்கியங்கள் ஓரளவே துணை செய்யும். தொல்காப்பியத்துட் கூறப்பெறும் இலக்கணக் கோட்பாடுகள் ஒரு குறிப்பிடத்தக்க கால எல்லையிலோ — ஓரிருவர் அல்லது ஒரு குழுவினராலோ ஆராய்ந்து அமைக்கப்பட்டனவல்ல. அவை பல நூற்றாண்டுகளாகப் — பல்வேறு நல்லறிஞரான் பல கூறுபாடாக அமைந்து பயிலப்பட்டு வந்தனவாகும் பரந்துபட்டு விரிவாகவும், அறிந்து கோடற்கு அரியனவாகவும் கிடந்த அந் நூல்களில் கூறப்பட்டிருந்த அடிப்படைக் கோட்பாடுகளில் இயற்றமிழுள் செய்யுளாக்கத்திற்குரியவற்றை மட்டும் பிரித்தெடுத்துத் தான் வாழ்ந்த காலத்து நிலவிய இருவகை வழக்கொடும் ஒப்பு நோக்கி ஒரு நூலாகத் தொகுத்து வழங்கியதொன்றே தொல்காப்பியர் செய்த பணியாகும்.

இற்றைக்கு வழக்கிலிருக்கும் தொல்காப்பியத்தை ஊன்றி நோக்குமிடத்துச் சில இடங்களில் நூற்பாக்கள் மறைந்தும் சில இடங்களில் செய்து சேர்க்கப் பெற்றும் — சில நூற்பாக்களில் சில

சொற்கள் மாற்றப்பட்டும் சில அடிகள் குறைக்கப்பெற்றும் சேர்க்கப் பெற்றும் இருக்கலாம் எனக் கருத வேண்டியுளது. அவற்றை ஆராய்ந்து சுட்டிக்காட்டப் புகின் அம்முறையே பற்றி எதிர்காலத்தில் பலர் பலவகையாகத் திருத்தம் கூறுவதற்கும் திருத்துவதற்கும் ஏதுவாகி விடும். அது தமிழிலக்கணத்தின் அடிப்படையையே மாற்றி அழிவு செய்து விடும் என்னும் அச்சத்தான் அம்முயற்சி தவிர்க்கப்பட்டது.

## கோட்பாடுகளின் அடிப்படை :

தொல்காப்பியத்தின் நோக்கு தமிழிலக்கிய வரைவியலைச் சமுதாய உளவியலின் அடிப்படையில் புலப்படுத்துவதேயாதலின் நாடக வழக்கும் உலகியல் வழக்கும் விளங்கத் தொல்லோர் மரபுகளை அறிவியலுக்கேற்ப வகைந்து கூறுவதாக உள்ளது.

இலக்கியம் என்பது மக்களின் வாழ்க்கையமைப்பினையும் நடைமுறையையும் கருவாகக்கொண்டு அம்மக்கட்சமுதாயம் பல்லாற்றானும் மேம்பாடுறுதலைக் குறிக்கோளாகக் கொண்டு தன்கருத்தைக் கற்பனையொடு கலந்து நாடக வழக்காகச் சுவையும் மெய்ப்பாடும் அமையச் செய்யப்படுவதொரு அறிவியற் கலையாகும். அதனை நிலைபேறுடையதாக எவ்வாறு படைத்தல் வேண்டும் என மரபு குலையாமல் அளவை முறையான் வகுத்துக் கூறுவதே யாப்பிலக்கணமாகும். அம் முறையில் மாத்திரை, எழுத்து ; சொல் ஆகிய கருவிகளையும்— அகமும் புறமுமாகிய பொருள்களையும், மெய்ப்பாடு, நோக்கு மரபு ஆகிய உறுப்புக்களையும் எடுத்துக்காட்டி விளக்கி ஓசையும் ஒழுங்கும் படச்செய்யுளை அமைக்கும் முறையினைச் செய்யுளியலுள் விளக்குகின்றது தொல்காப்பியம்.

தொல்காப்பியத்துள் கூறப்பெறும் பொருளிலக்கணக் குறியீடுகள் யாவும் தொன்றூலோர் வழங்கியவை. வேண்டுமிடத்து வேண்டுமளவு விளக்கம் செய்த தொன்றே தொல்காப்பியர் செய்த பணியாகும். தொல்காப்பியர் இந்நூலைச் செய்த காலத்து மக்கள் வாழ்க்கை முறையும், அரசியல் சமுதாய அமைப்பு முறைகளும் தொடக்க கால அமைப்பினின்றும் செம்மையுற்றுச் சிறந்து பண்பட்டிருந்தன. எனினும் இலக்கணக் கோட்பாடுகள் தொன்று தொட்டு மரபாக வருதலான் அக்குறியீடுகளை வைத்தே விளக்கிச் செல்கின்றார் ஆசிரியர். எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் காணலாம்.

பட்டினும் நூலினும் நெய்த ஆடைகளையும் பொன்னினும் மணியினும் குயின்ற அணிகளையும் அணிந்து மகளிர் திகழும்

மூவேந்தர் ஆட்சிக்காலத்தில் நல்லிசைப் புலவோர் தம் செய்யுளுள் தலைவன் கலிமாப்பூட்டிய தேரின்கண் வந்து தலைவிக்குக் கையுறையாகத் தழைதந்து தலைவிக்கு அளிக்கும்படியாகத் தோழியை யிரந்து பின்னிற்கிறான். தோழி அதனை மறுப்பதாகவும் எனக்குந் தழையாயின என்னைக்கும் தழையாயின என அமைதி கொள்வதாகவும் கருத்துக்கள் அமைந்துள்ளன. அவற்றிற்குத் திணையும்—கிளவியும் (துறையும்) குறிக்கப்பட்டுள்ளன. இத்துறைகளுக்கு அடிப்படை கற்காலத்து மக்கள் ஆடை நெய்தும் அணிகலன்களைச் செய்தும் அணிய அறிந்திராத நிலையில் தம் உடலுறுப்புகளை மறைக்க மரப்பட்டையையும் அடர்ந்த தழைக்கொத்துக்களையும் உடையாக உடுத்தியும் மலர்களைத் தொடுத்துத் தலை, கழுத்து, தோள், கையாகிய உறுப்புக்களிற் புனைந்தும் தனி மலர்களை காதுகளிலும், கூந்தலிலும் செருகியும் தம்மை ஒப்பனை செய்து கொண்டனர். அண்மைக்காலம் வரை ஆடவர் தலையிலும் காதிலும் மலர்களை அணிந்து வந்தமையை இலக்கியங்களானும் நாட்டுப்புற விழாக்களாலும் அறியலாம். அக்கால எல்லையில் தான் விரும்பிய ஒருத்தியிடத்துத் தன் விருப்பத்தைப் புலப்படுத்தும் குறியீடாக, பரிசாக ஆடவன் தழையையும் மலர்களையும் கையுறையாக வழங்கினான். அவ்வழக்கு நாகரிகம் முதிர்ந்து ஆடையணிகள் வேறுபட்ட காலத்தினும் இலக்கிய வழக்காக அமைவதாயிற்று.

அகப்பொருளிலக்கணத்துள் துணை உறுப்பினராகக் கூறப்படும் — செவிலியர், தோழியர், ஆயத்தார் — இளையர், பாங்கர் பாகர், தோழர் முதலானோர் மன்னரும், பெருஞ்செல்வரும் ஆகியோருக்கே வாய்ப்பதற்கு இயலுமேயன்றி இடைத்தர வாழ்க்கையினருக்கு வாயாமை வெளிப்படை — எனினும்— திணை நிலை மக்கள் முதல் நாற்பாலார் யாவர்க்கும் ஒப்பவே நல்லிசைப் புலவோர் இலக்கியம் செய்து வந்திருப்பதைக் காணுகின்றோம்.

நாகரிகம் முதிராத காலத்தில் இள மகளிரைப் பிறர் கவர்ந்து செல்லாமல் பேணுமுகத்தான் தாயர் அவர்தம் இடையில் கயிற்றை பணித்து கைக்கொண்டும் இராக்காலத்தில் அவர்தம் கால்களில் கயிறிட்டுப் பிணித்துக் காத்தும் ஒருவனிடத்து மணமுடித்துக் கொடுக்கும் வரை பேணி வந்தனர். ஒருவனிடத்து ஒப்பிக்கும் பொழுது கால்தளையை விடுவித்துக் காவற் பொறுப்பினை அவனிடத்து ஒப்பித்தனர். இடைக்கயிறு நாகரிகமும் முதிர முதிர மேகலையாக உருக்கொண்டது. கால் கட்டுச் சிலம்பாக மாறியது. திருமணக் காலத்தில் காற் சிலம்பை கழிக்கும் சடங்கு அப்பழ மரபின் சின்னமேயாகும்.

ஒருவன் தான் விரும்பிய ஒருத்தியை அவர்தமர் காரணமாகப் பெற முடியாத நிலையில் தன் விருப்பினை, அவளையும் தன்னையும் உடைய குழுவினர் அறிந்து உதவ ஏறுதற்கரிய கருக்கமைந்த பனைமரத்தின் கண் ஏறியமர்ந்து தன் உறுதியைப் புலப்படுத்திய நிலைமை நாகரிகம் வளராத காலத்து மேற்கொண்ட அவ்வழக்குப் பிள்னர் மடலேறுதல் — மடலூர்தல் — மடல்மா ஊர்தலாகப் பிறழ்ந்து கற்பனை வழக்காக மாறி இலக்கணத்தில் இடம் பெற்றுள்ளது.

குழுநிலைக் குடியாட்சிக் காலத்தில் குறைந்த அளவினரைக் கொண்ட சிற்றூர்கள் (சேரி) அணுக அணுக அமைந்திருந்து மக்கள் பெருகப் பெருகச் சிற்றூர்கள் இணைந்து பேரூர்களாக— நாகரிகம் வளர வளர நகர்களாக ஓங்கிய பின்னரும் களவிற் கூடிய ஒருத்தியை அவன் பெற்றோர் உடன்படாத நிலையில் அழைத்துச் செல்லும். உடன்போக்குப் பற்றிய கிளவிகள் அரிய சுரத்தினைக்கடந்து செல்வதாகவே புலவோரான் செய்யுள் செய்யப் பெற்றுள்ளன. இரவுக்குறி யிடையீடு பற்றியவையும் வருந்தொழிற்கு அருமை கூறலும் அத்தொடக்ககால ஊரமைப்பினை ஒட்டிய மரபுகளே.

கூட்டுக் குடும்பம்—குழுநிலை ஆட்சிக் காலத்தில் ஆடுமாடுகளையே செல்வமாகக் கொண்டிருந்தமையின் ஒரு குழுவினர் மற்றொரு குழுவினரிடமிருக்கும் ஆனிரைகளை கவர்தலும் அவர் தடுத்துப் போர் புரிதலும் - மேய்ச்சல்நிலப் பற்றாக்குறை நேருமிடத்து நில எல்லையை அகலப்படுத்தலும், அகலப்படுத்தப் படுமிடத்து அங்கு வாழும் குழுவினர் எதிர்ப்பதுர்—அதுகாரணமாகப்போரிடுதலும் குடிசைகளை எரிந்து அழித்தலும்—ஒரு குழுவினர் பிறிதொரு குழுவினர் உதவியை நாடுதலும், பெறுதலும் அத்தகைய சூழலில் தனிப்பட்ட பகையினைத் தீர்த்துக்கொள்ள முற்படுதலும் கொள்ளையிடுதலுமாகிய நடைமுறைகள்—நாகரிகமும் பண்பாடும் பெருகிய காலத்தில் நேரும் இகலுக்கும் போருக்கும் குறியீடுகளாக அமைந்தன. அம்மரபு பற்றியவையே வெட்சி முதலாய திணைகளும் அவற்றின் துறைகளுமாகும்.

போருக்குக் காரணமும் — போர் முறையும் — போர்க்கருவிகளும் மாறினும் அடிப்படை உணர்வும் நோக்கும் மாறவில்லை. முள்வேலிகளான் அமைந்த காப்பும் சுவர்களும் — வல்லரணாகவும் பெருமதில்களாகவும் உருப்பெற்றன. நாடக வழக்கில் அவை முழுமுதலரணங்களாயின.

மரப்பொந்துகளிலும் குகைகளிலும் வாழ்ந்தபோது தாம் வேட்டையாடிப் பாதுகாப்பின்றி வைத்திருந்த விலங்குகளையும் தசைகளையும் பிறவிலங்குகள் இரவில் கவர்ந்து சென்றமையை அறியாமல் பேயும் பூதமும் அவற்றை எடுத்துச் சென்றனவாக கருதினர். காட்டுத்தீயை ஆற்றல் வாய்ந்த தெய்வமாகக் கருதினர். நெருப்பில் வெந்த விலங்குகளின் தசை சுவையாக இருந்தலை அறிந்து நெருப்பிலிட்டு வாட்டி உண்டனர். நெருப்பிலிட்ட பொருள் வெந்து சுருங்கியதனை நெருப்புக்கடவுள் உண்டதாக எண்ணினர். கொடிய விலங்குகளினின்று பாதுக் காத்துக் கொள்ளவும். குளிர்காயவும் நெருப்புப்பயன்பட்டமை யின் தாம் வேட்டையாடிய விலங்குகளில் ஒரு பகுதியை நெருப்புக் கடவுளுக்குப் பலியாக இட்டனர்—இவ்வழக்கே வேள்வியாக முதிர்ந்தது. பேய்களுக்கும் கூளிகளுக்கும பலி யிடும் வழக்கும் அங்ஙனம் தோன்றி முதிர்ந்த வழக்கமேயாகும். இவைபோல் நாகரிகமும் பண்பாடும் வளர்ந்த நிலையிலும் அவை பேய்நிலை—அவிப்பலி முதலாய துறைகளாகப் புறத்திணைக் கண் இலக்கணக் குறியீடுகளாக அமைந்தன. விலங்குகளை அச்சுறுத்தவும் புதர்கள் காடுகளினின்றும் வெளிப்படவும் அலைக்கழிக்கவும்—கொட்டப்பட்ட பறைகளும்—கொம்புகளும் பின்னர் போர்க்களத்தில் ஓர் அங்கமாக அமைந்து துடிநிலை முதலாய துறைகளாக அமைந்தன. வேட்டம் முடிந்தபின் ஆடிப்பாடி மகிழ்ந்த வழக்கு முன்றேர்க்குரவை பின்றேர்க்குரவை யாக வடிவு கொண்டன.

இங்ஙனம் அகத்திணைக்கண் அமைந்துள்ள கிளவிகளும், புறத்திணைக்கண் அமைந்துள்ள துறைகளும் நாகரிகம் உறாத பண்டைய மக்களின் வழக்காற்றின் வந்த குறியீடுகளே ஆதலின் அக்குறியீட்டமைப்பிற்கேற்ப இலக்கண ஆசிரியன்மார் நாடக வழக்காகப் புனையப்பெறும் இலக்கிய அமைப்பிற்குரிய இலக்கணங்களைக் கூறிச் சென்றனர். அஃதாவது ஒரு குழுவினரிடத்துள்ள ஆனிரைகளுள் சிலவற்றை கவர்ந்து கொள்ளக் கருதிய பிறிதொரு குழுவினர் நள்ளிரவில் ஓரிருவரை விட்டு ஆனிரைகள் அடைத்து வைக்கப்பட்டிருக்கும் இடத்தை யும் அவற்றைக் காவல் புரியும் ஆடவர்களின் தொகையையும் பிறவற்றையும் அறிந்துவரச் செய்து அச்சூழலுக்கேற்பத் தம் குழுவினரைப் பறை முதலிய ஓசைகளை எழுப்பித் திரட்டிக் கொண்டு சென்று கவர்தலும்-எதிர்த்தவர்களொடு போரிடுதலும்-அவர்களின் குடிசைகளுக்குத் தீயிட்டு அவர்தம் கவனத்தை மாற்றுதலும் பூசல்களுக்கிடையே சிலர் ஆனிரைகளை ஓட்டிக்

கொண்டு வந்துவிடுதலுமாகிய வழக்காறுகளே — நாடும் நகரமும் கோட்டையும் மதிலுமாக நால்வகைப் படை வளத்தொடு வாழும நிலையில் பிறநாட்டின் வளங்களைக் கவரச் செல்லும் போர் நிகழ்ச்சிகளை இலக்கிய வாயிலாகச் சுட்டுதற்கண் பாக்கத்து விரிச்சி, ஒற்றினாகிய வேய், படையியங்கரவம், செலவு, புறத்திறை ஆகோள், ஊர்கொலை - பூசல் மாற்று — எரி பரந்தெடுத்தல் முதலாய இலக்கணக் குறியீடுகளாக அமைந்தன. இத்தகைய வரலாற்று உண்மைகளையும் — இலக்கிய மரபுகளையும் தேர்ந்து தொல்காப்பியப் பொருளிலக்கணக் கோட்பாடுகளை ஓர்ந்துணர்தல் வேண்டும்.

ஆரியம் உள்ளிட்ட பண்டைய மொழியறிஞர் தம் இலக்கியக் கோட்பாடுகளை நோக்கின் அவை காவியம், நாடகம் கதை என்கின்ற முறையில், மன்னர் முதலானோர் வரலாறுகளையும் புராணக்கதைகளையும், அரிதாக நிகழும் நிகழ்ச்சிகளையும் உருவகமாக அமையும் புனைகதைகளையும் அடிப்படையாகக் கொண்டு அவர் படைக்கக் கருதிய இலக்கியத்திற்கேற்பக் கதையை வரையறை செய்து அறம் முதலாய உள்ளுறைகள் அமைய ஒன்பான் சுவை பொருந்தக் கதை மாந்தர்களின் பண்பொழுக்கச் செயல்கள் புலப்படுமாறு பல்வேறு உத்திகளான் வெளிப்படுத்த வேண்டும் என்ற முறையில் அமைந்திருப்பதைக் காணலாம்.

தமிழ்நூலார் கூறு பொருளிலக்கணமாகிய இலக்கியக் கொள்கை, நிலம் நீர் வளி முதலாகிய இயற்கையொடுபொருந்தி எற்றைக்கும் மாறுபடாத மக்கட்டன்மையின் அடிப்படையில் அம்மக்களின் உணர்வும் வேட்கையுமாகிய வாழ்க்கைத் தத்துவத்தைப் புலப்படுத்துவதாய் இருபாலரின் ஒழுக்கத்தை நெறிப்படுத்தும் நோக்கில் அமைந்ததாகும். மக்கள் வாழ்வாங்கு வாழ்தற்குத் துணையாகும் பொருள்களும் கருவிகளும் காலந்தொறும் வளர்ந்து செல்லும் நாகரிகங்களான் வேறுபடினும் மக்களின் வாழ்க்கை நோக்கும், பயனும் திரிபுறாதவாறு நெறிப்படுத்துதல் தமிழிலக்கணத்தின் தனித் தன்மையாகும்.

அகத்திணையியலுள் மக்கட் பண்பும் ஒழுகலாறும் முதற்பொருளாய நிலத்தையும் காலத்தையும் கருப்பொருளாகிய உணவு நீர் முதலியவற்றையும் அடிப்படையாகக் கொண்டவை எனக் கூறும் கொள்கையை இற்றைக்கும் நாம், இது காவிரிக்கரை பண்பாடு இது கங்கைக்கரை பண்பாடு. இது கீழ்க் கடற்கரை பண்பாடு எனவும் திராவிடப் பண்பாடு ஆரியப்பண்பாடு, ஐரோப்பியப் பண்பாடு, ஆசியப்பண்பாடு, உருசியப்பண்பாடு, சீனப்பண்பாடு எனவும் விரித்துக் கூறி வருகின்றோம்.

அறிவுநிலை, ஆளும்நிலை, பொருள் ஈட்டலும் வழங்கலு மாகிய நிலை, தொழில்நிலை ஆகிய மக்களின் செயற்பாடு கருதி வகுத்துக் கூறப் பெற்றுள்ள அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்னும் பகுப்பமைவு, இற்றைக்கு ஆட்சியாளர், கல்வியாளர் தொழிலாளர், பணியாளர், என்றும் முதலாளிகள், படையாளர்கள், என்றும் கூலிகள் என்றும் பாகுபட்டுள்ளது, [தொல்காப்பிர் நூல் செய்த காலத்து மக்கள் மேற்கொண்ட செயல்களின் அடிப்படையில் நாற்பாற்பகுப்பு அமைந்ததாகும். அதுவே பின்னர் ஆரியத்தின் தாக்கத்தானும் தமிழக அந்தணர் அரசர்களின் தந்நலத்தானும் வருணக் கோட்பாடாகப் பிறப்படிப் படையில் மாற்றப் பெற்றுச் சாத்திர வாயிலாக நிலைபெறுத்தப் பட்டுள்ளது] பண்டைத் தமிழகத்தில் நாற்பாற்பகுப்பும் பிறப்படிப்படையில் அமைந்ததன்று என்பதை அகத்திணைக் கண் கூறப்பட்டுள்ள பிரிவு பற்றிய நூற்பாக்களானும் புறத்திணைக்கண் கூறப்பட்டுள்ள வாகைத்திணை பாடாண் டிணைத் துறையமைப்புக்களானும்—மரபியலுள் நாற்பாலாரின் செயலாண்மையுப ஆடையாளங்காணும் முறையும்பற்றிக் கூறப் பட்டுள்ள நூற்பாக்களானும் அறியலாம். [அச்சூத்திரங்களின் செம்பொருளை இக்காண்டிகையுரை வாயிலாகத் தெளிக.]

அன்றைய ஆட்சி முடியாட்சி எனினும் அது வல்லாண்மை யும் படைவலிமையும் உள்ளவரிடத்தேயே அமைந்திருந்தது. இன்று குடியாட்சி எனினும் செல்வவலிமையும் கட்சி வலிமையும் உடையவரிடத்தே அமைந்து வருகிறது. அன்றைய கல்விப் பிரிவு இன்று தொழில் நுட்பம் பெறச் செல்வதாக மாறியுள்ளது. தூது துணை என்பவையும் ஒற்றாய்தலும் அவ்வாறே உள்ளன. அன்றைக்கு ஆனிரைகவர்தல் என்னும் குறியீட்டால் நிகழ்ந்தவை இற்றைக்கு கொள்கை யைப் பரப்புதல் புகுத்துதல் வாயிலாகச் சுரண்டுதலாக மாறியுள்ளது. அற்றைக்கு மன்னன் தலைமையில் குடிமக்களும் படைவராகஇருந்து போரிட்டனர். இற்றைக்கு ஆளுந்தலைவர்கள் திட்டமிட்டுக் கூறத் தனியே வளர்க்கப்படும் படைகள் போரிடு கின்றன. அன்றைய பாடாண்டிணையாகிய புகழ்தலும் பரவலும் ஓரளவில் நிகழ்ந்தன. இற்றைக்குப் பத்திரிகை, திரைப்படம் வானொலி, தொலைக்காட்சிகள் வாயிலாகவும் மேடை விழாக்கள் வாயிலாகவும் அளவு கடந்து நிகழ்கின்றன. வஞ்சி உழிஞைப் போர் அமைப்பில் கருவிகள் மாற்றமன்றிச் செயற் பாடுகளில் மாற்றமில்லை. எனவே மக்கள் மனநிலையிலும், செயல் நிலையிலும் தொல்காப்பியங் கூறும் தத்துவக் கோட்பாடு திரிபின்றி அமைந்திருப்பதைக் காணலாம்.

அவ்வாறே ஆண் பெண் காதல் உணர்விலும், காதலரிடத்து நிகழும் செயற்பாடுகளிலும் காதலர்க்கு வரும் இடையூறுகளிலும் புறச்சூழல் — துணைப்பொருள் மாற்றமன்றி அகநிலை மாற்றம் யாதுமில்லை. மணந்து கொண்டு இல்லறம் நிகழ்த்துமிடத்தும் கற்பியலிற் கூறும் ஒழுகலாறு அடிப்படையில் மாறாமல் நடந்து வருதலைக் காணலாம். தொல்காப்பியம் கூறும் பொருளதிகாரச் செய்திகள் வழக்கொழிந்தவையல்ல என்பதும் அவை கற்பனை வழக்கல்ல என்பதும் மக்களினத்தின் குணவியல்புகளின் அடிப்படையில் நோக்கின் தெளிவாகும்.

இனி அகத்திணையியல் புறத்திணையியல்களுள் அமைந்துள்ள செய்திகளைச் சுருக்கமாகக் காண்போம்.

## பொருளிலக்கண அமைப்பு :

தொல்காப்பியப் பொருளதிகாரம் தொன்னூலோர் வகுத்த எழுவகைச் செய்யுள் இலக்கியங்களைப் படைத்தற்குரிய நெறிமுறைகளைத் தொகுத்துச் சுருக்கமாகக் கூறுவதாகலின், செய்யுளியல் தவிர்ந்த ஏனைஇயல்கள் அச்செய்யுட்குரிய பொருட் கூறுபாடுகளையும், அவற்றிற்குரிய கருவிகளையும் பற்றியவையே யாகும் என்பது செய்யுளியல் முதல் நூற்பாவான் தெளியலாம். அந்நூற்பாக் கூறும் முப்பத்து நான்கு செய்யுளுறுப்புக்களுள் திணை, கைகோள், கூற்று, கேட்போர், பொருள்வகை, துறை என்பவை பொருட் கூறுபாடுகளாகும் அவற்றுள் கூற்று, கேட்போர் என்னும் உறுப்புக்கள் இலக்கியத்திற்குரிய மாந்தர் பற்றியவையாகும்.

**திணை :** பொருளதிகாரத்துள் திணை என்பது மக்களின் ஒழுகலாற்றையும், அவ்வொழுகலாற்றிற்குரிய பண்பும் தொழிலுமாகிய செயல்களையும் அவற்றிற்கு அடிப்படையான துணைப் பொருள்களையும் ஒருங்கு சுட்டும் இலக்கணக்குறியீடாகும். அஃது இலக்கண முறைமைமாற் கூறுமிடத்து முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் ஆகிய மூன்றற்கும் உரிமையுடையதொரு தொகுதிப் பெயராக அமைவதாயிற்று.

**முதற்பொருள் :** இயங்குதிணையும் நிலைத்திணையுமாகிய உலகத்துப்பொருள்கள் தோன்றுதற்குக் காரணமும் அவற்றிற்கு ஆதாரமுமாக விளங்கும் மண்ணகமாகிய புவியும், அப்புவியின் சுழற்சியான் நிகழும் காலக்கூறுபாடுகளுமாகும். புவியின் இயற்கையமைப்மைப்பை ஒட்டி மலை சார்ந்த நிலம், காடு அடர்ந்த நிலம், ஆறுகள் பரந்து செல்லும் சமநிலம், கடற்கரையைச் சார்ந்த மணற்பரப்புடைய நிலம் எனப் பிரித்து நானிலம்

என வழங்குவர். இவற்றைத் தொல்காப்பியம் காடுறையுலகம் மைவரை உலகம் தீம்புனலுலகம் பெருமணலுலகம் என்று கூறுகின்றது இந்நானிலத்துள் வறண்ட சில பகுதிகளைப் பாலை நிலம் என்று கூறுவர். புவியானது ஞாயிற்றினின்று தோன்றியதாகலின் அதன் ஈர்ப்பாற்றலுக்கு உட்பட்டதாக ஏனைய கோள்களின் ஒளியையும் நாள் மீன்களின் ஒளியையும் அவற்றின் தாக்கத்தையும் பெற்றுச் சுழன்று கொண்டே ஞாயிற்றை சூழ்ந்து வரும் இயல்பினது. அங்ஙனம் புவிதானே சூழலும் சுழற்சியான் சிறுபொழுதுகளும் கதிரவனைச் சூழ்ந்து வரும் நிலைமையான் பெரும் பொழுதுகளும அமைகின்றன. பெரும்பொழுதினைப் பருவம் என்று கூறுவர். (பிற விளக்கம் நூலுரையுட் காண்க) அவ்வாற்றான் நிலமும்பொழுதுமாகிய இவற்றை முதற்பொருள் என நூலோர் வகுத்துரைத்தனர்.

கருப்பொருள் : பருவம் பொழுது ஆகிய காரணங்களான் நிலப்பகுதிகளில் பிறந்து திகழும் இயங்கு திணையும் நிலைத் திணையுமாகிய பொருள்களும் இயங்கு திணையுள் ஓரினமாகிய மக்களின் செயல்களும் அச் செயல் காரணமாக விளையும் இயற்கையும் செயற்கையுமான பொருள்களும் கருப்பொருளாம். இவற்றை இலக்கண நோக்கில், தெய்வம் உணா, மா, மரம், புள், பறை செய்தி, (தொழில்) யாழ் (இசை) முதலியவையாகப் பகுத்துக் கூறுவர். நீர்நிலை - பூ - முதலியவை அவற்றுள் அடங்கும். மக்களும் கருப்பொருளே எனினும் திணையுள் ஒரு கூறாகிய உரிப்பொருள் என்பது மக்களின் ஒழுகலாறு பற்றிய தாகலின் உரிப்பொருளை நிகழ்த்தும் மக்களை கருப்பொருளொடு கூட்டிக் கூறுதல் மயக்கத்திற்கு இடனாகும் என்பதனை ஓர்ந்து தொன்னூலார் மக்களை கருப்பொருளின் வேறாக அமைத்துக் கூறினார். பின்னூலார் இவ் அறிவியல் நோக்கின்றி உயர்ந்தோர் அல்லோர் என மக்களையும் கருப்பொருளுள் சேர்த்துக் கூறினர்.

கருப்பொருள்கள் அவ்வந்நிலவமைப்புச் சூழல் காரணமாகத் தோன்றுவன. ஒரு நிலப்பகுதியில் தோன்றும் மரஞ்செடி கொடிகள் விலங்குகள் பிறிதொரு நிலத்தில் தோன்றுவதில்லை. மண்ணமைப்பு நீர்வளம் காற்று முதலியவையே அதற்குக் காரணமாகும். ஒரு நிலத்தில் தோன்றும் பொருளைப் பிறிதொரு நிலத்தில் கொண்டு சேர்க்கலாம்- விளைவிக்கலாம் எனினும் அஃது இயல்புரிமையாகாது. கலத்தல் உரிமையாகும். அஃதாவது சேறும் நீர்வளமுமிக்க மருத நிலத்தில் இயல்பாகத் தோன்றி வளரும், தாமரை—எருமை, நீர்க்கோழி முதலியவை

பிறநிலத்தில் உள்ள நீர்நிலைகளில் சிறுபான்மை தோன்றும். மலைநிலத்து மக்கள் எருமை முதலியவற்றை வளர்த்துப் பயன் கொள்ளலாம் எனினும் அவை அந்நில இயற்கையொடு ஒத்தன அல்ல. ஒரு நிலத்தில் இயல்பாக அமைந்த நீர் நிலைகள், வீசும் காற்று, காய், கனி, கிழங்கு, வரகு-சாமை தினை-விளைவிக்கும் செந்நெல் கரும்பு முதலியவற்றை உண்டு அருந்தி நுகரும் மக்கள் அவ்வச் சூழலுக்கு ஏற்ற உடலமைப்பையும் பண்புகளையும் வேட்கை உணர்வுகளையும் கொண்டிருப்பர்-மரஞ்செடி கொடி-புள் விலங்கு முதலியவை அவ்வந்நிலப் பண்புகளைக் கொண்டிருத்தல் போலவே கருப்பொருளுள் ஓரினமாகிய மக்களும் கொண்டிருப்பர், எனினும் உடலியக்கம் அறிவியக்கம் காரணமாகவும் கொண்டு கொடுக்கும் உறவுமுறை காரணமாகவும் பண்பாட்டுணவுர்கள் கலந்து விளங்கும். விளங்கினும் அவ்வந்நில உணர்வு அவ்வம் மக்களின் அடிப்படைத் தன்மையாகும். அதனான் நானிலங்களுள் ஒவ்வொரு நிலத்திற்கும் ஓர் அடிப்படைப் பண்பியல்பு உண்டென்பதை அறிவியல் அடிப்படையில் துய்த்துணர்ந்து தெளிந்த சான்றோர் மக்களின் ஒழுகலாற்றுணர்வை நில அடிப்படையிலேயே வகுத்துப் பொருள் இலக்கணத்தைக் கூறிச் சென்றனர்.

திணைப்பகுப்பும் குறியீடும் : அகத்திணைகள் கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை பெருந்திணை என ஏழு வகையாகக் கூறப்பட்டுள்ளன. அகப்பொருளாகிய ஒழுகலாற்றினைப், புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என ஐவகை உரிப்பொருளாக வகுத்துள்ளனர். இவ்வுரிப் பொருளுணர்வுகளையும் நிகழ்வுகளையும் சுட்டும் இலக்கணக் குறியீடே மேற் கூறப்பெற்ற ஏழும், அஃதாவது குறிஞ்சி என்பது புணர்தல் உரிப்பொருளையும், முல்லை இருத்தலையும், மருதம் ஊடலையும், நெய்தல் இரங்கலையும், பாலை பிரிதலையும் உணர்த்தும். இக்குறியீடுகள் குறிப்பாக அகஉணர்வினையும் வெளிப்படையாக நிலத்தின் கருப்பொருளாகிய பூக்களையும், மரங்களையும் உணர்த்தும். அஃதாவது மலை, மலை சார்ந்த நிலப்பகுதியின் இயற்கையமைப்பும், பருவச் சூழலும் புணர்ச்சி வேட்கையைத் தோற்றுவிக்கும் தன்மையன. இவ்வாறே ஏனையவும், அவ்வாற்றான் காடுறையுலகமாகிய நிலப்பகுதி முல்லை எனவும் மைவரை உலகம் குறிஞ்சி எனவும் தீம்புனலுலகம், மருதமெனவும், பெருமணல் உலகம் நெய்தல் எனவும் சுட்டப்பெறுவன வாயின, எனவே முல்லை, குறிஞ்சி என்னும் குறியீடுகள் நிலப்பகுதியையும், ஒழுகலாற்றையும் இடம்நோக்கி உணர்த்துவனவாயமைந்தன.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்தும் அகனைந்திணை அல்லது நடுவண் ஐந்திணை எனப் படும். இவற்றின் இருமருங்காக நிகழும் ஒழுக்கமே கைக்கிளை— பெருந்திணை எனபவை. இவற்றை அகப்புறம் எனவும் வழங்குவர். அகனைந்திணையாவது ஒத்தகிழவன் கிழத்தியர் பால் அன்பு அடிப்படையில் நிகழ்வதாகும். இருவருள் ஒருவரிடத்து மட்டுமே தோன்றும் காதல் உணர்வு கைக்களை எனப்படும். ஒப்புமை குறைந்தும் மிக்கும் அன்பின்றிக் காம வேட்கை காரணமாக நிகழும் செயல்கள் பெருந்திணை எனப் படும். கைக்கிளை—பெருந்திணை என்பவை அன்பின் ஐந்திணையின் குறைவும் பிறழ்வுமாகிய விகாரங்களேயாதலின் அவற்றிற்கெனத் தனியே முதற்பொருள் கருப்பொருள் பாகு பாடுகள் இலவாயின.

அகனைந்திணைகளை மேற்கூறிய முதற்பொருள் கருப் பொருள் உரிப்பொருள் ஆகிய முக்கூறுகளின் அமைப்பினால் உணர்தல்வேண்டும். கைக்கிளை பெருந்திணைகளை அவரவர் கூறும் கூற்றுகளான் அறிதல் வேண்டும். [பிற விளக்கங்களை நூலுரையுள் கண்டுகொள்க.]

புறத்திணைகள் : இருநிலை உள்ளதொரு பொருளைச் சுட்டும்பொழுது உட்பகுதி வெளிப்பகுதி அல்லது அகப்பகுதி புறப்பகுதி எனச் சுட்டுதல் மரபு. அஃதாவது அகமின்றிப் புறம் இன்றாதலின் அகப்பகுதிக்கே தலைமை தந்து அதன் மறு பகுதியைப் புறம் எனக்கூறுதல் மரபு. அம்முறையான் கைக் கிளை முதலாய அகத்திணை ஏழும் தலைமையும் சிறப்பும் உடையனவாயின. அகப்பொருள்பற்றி ஒழுகும் மாந்தர் அவ் வொழுக்கத்திற்குத் துணையாதல் வேண்டிப் புரியும் ஒழுகலாறு களே புறப்பொருளாக அமைதலின் — புறத்திணை என்பவை அகத்திணைகளின் புறக்கூறுகளே எனத்தொல்காப்பியம் கூறு கின்றது. அவ்வாற்றான் புறத்திணைகளும் ஏழாக அமைவன வாயின. அவையாவன : வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பவையாகும். அவை முறையே குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் பாலை, பெருந்திணை, கைக்கிளை ஆகியவற்றின் புறத்திணைகளாகும்.

புறத்திணைகள் செல்வத்தையும், அறிவையும், ஆளுமை யையும், புகழையும், வீடுபேற்றையும் குறிக்கோளாகக் கொண்டவையாதலின் இன்ப உணர்விற்கு அடிப்படையான முதற்பொருள் கருப்பொருள் சார்பு இவற்றிற்கு இன்றியமை

யாதனவாகக் கொள்ளப்படவில்லை. எனினும் நிலப்பகுதியும் பருவ காலமும் ஓரளவு சார்பாக அமைந்து வரும். அகத்திணை இலக்கியங்களின் திணைக் கூறுகளை முதல் கரு உரி என்னும் சார்பானும் புறத்திணை இலக்கியங்களின் திணைக் கூறுகளை நிகழ்ச்சிக் குறியீடாகிய துறைகளின் சார்பானும் தேர்ந்துணர்தல் வேண்டும்.

உரிப்பொருள் : புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல் ஊடல், இவை ஒவ்வொன்றிற்கும் உரிய நிமித்தங்கள் ஆகியவை அகத்திணைகளுக்குரிய உரிப்பொருள்களாகும். ஆனிரை காரணமாக நிகழும் பூசல், மண்ணசை காரணமாகச் செய்யும் போர்-எயிலை முற்றுதல் - காத்தல் பற்றி நிகழும் போர்-மறவீறு காரணமாகப் புரியும் போர் - தத்தம் ஆற்றல், அறிவு, செயல் ஒழுக்கம் ஆகியவற்றாற் பிறரினும் மிக்குத் தோன்றும் ஒழுகலாறு. நிலையாமை பற்றிய தெளிவினால் எய்தும் மெய்யறிவு-புகழ்தலும் பரவலுமாகிய பெருமைப் பேறுகள்-தெய்வம் பராவல் பாராட்டல் - இவ்வற்றின் சார்பாக மேற்கொள்ளும் செயல்கள் புறத்திணைக் குரிய உரிப்பொருள்களாகும். பொதுவாக அகமும். புறமும் பற்றிய மக்கள் ஒழுகலாறுகள் யாவும் உரிப்பொருளாக அமையும். அகப்பொருள் ஒழுகலாறு மணம் புரிந்து இல்வாழ்க்கையை மேற்கொள்வதற்கு முன்னைய நடைமுறை மேற்கொண்ட பின்னைய நடைமுறை என இரு பகுதியாக நிகழும். அவற்றைக் கைகோள் என்பர். அவை, களவு-கற்பு என வழங்கப்பெறும். அகத்திணையின் கண் இயற்கைப் புணர்ச்சிக்கு முன்னும் உடன் போக்கின் கண்ணும் நிகழும் சில நிகழ்ச்சிகள் சார்பு உரிப் பொருளாக அமையும் அவ்வாறே படை எடுப்பிற்கு முன்னர் நிகழும் சிலபல செயல்களும் வஞ்சினமுரைத்தலும், போர்க் களத்துப்பட்ட வீரமறவர்க்குக் கல்நட்டு வழிபாடு புரிதலும் பிறவும் புறத்திணைக்கண் சார்பு உரிப்பொருளாக அமையும்.

## அகத்திணை — புறத்திணைக்குரிய மாந்தர் :

அகத்திணை மாந்தர் : அகத்திணை ஒழுகலாறு இன்பம் பற்றிய உணர்வு ஒழுக்கமாய் மக்களினம் முழுமைக்கும் பொது வாக அமைந்து நிகழ்தலான் அவரைக் குறிப்பிட்டு இயற்பெயர் முதலியவற்றானும் நாற்பாற்பெயரானும் சுட்டி வழங்காமல் நிலப்பண்பாடு தோன்றும் மரபுப்பெயர்களான் அவரை வழங்குவர். அப்பெயர்கள் வினைபற்றியும் அகஒழுக்கம் பற்றி யும் அமையும். துணைமாந்தர்தம் பெயர்கள் அவ்வத்துணை நிலை உறவுபற்றியமையும். அம்முறையான் ஆடவர்பெயர்

வெற்பன், பொருப்பன், நாடன், ஊரன், மகிழ்நன், கொண்கண் துறைவன், காளை, மீளி—எனவும் குறவன், பொதுவன், நுளையன் எனவும் மகளிர்பெயர் கொடிச்சி, ஆய்ச்சி முதலிய வாகவும் கூறப்பெறும்.

துணைமாந்தர் பெயர்கள் தோழி, செவிலி, நற்றாய், ஆயத்தார் பாணர் பாடினி, கூத்தர், கண்டோர், பாங்கன், இளையோர், பாகர் எனவும் அடியோர் வினைவலர் பார்ப்பார் அறிவர் எனவும் கூறப்பெறும்.

**புறத்திணை மாந்தர்** : போரிடுதல், காவல் செய்தல், தூது போதல், கல்வி முதலாய பணியாற்றல், பொருளீட்டல் முதலாய செயல் புரிவோராதலின் அவர் நாற்பாற் பெயரானும் மேற்கொண்டதொழில் பற்றிய பெயரானும் கூறப்பெறுவர். அம்முறையான் பார்ப்பார் (அந்தணர்), வேந்தர் (மன்னர்), மறவர், வணிகர், வேளாண்மாந்தர், அறிவர், அவையத்தார், பொருநர் முதலியவாக ஆடவர் பெயரும் மூதின்மகளிர், இல்லாள், வல்லாள் என மகளிர் பெயரும் கூறப்பெறும். புறத் திணை மாந்தராகப் புலவர், பாணர், கூத்தர், சூதர், துடியர் முதலானோரும் அமைவர்.

நாற்பாலரை இலக்கியத்துள் வரையறுத்துணர்தல் வேண்டி அவரவர்க்குப் புற அடையாளங்களும், தொழிலுரிமையும் பற்றி மரபியலுள் ஆசிரியர் கூறுகின்றார். அகத்திணைக்கண் தலைவன், தலைவி, தோழி ஆகியோர்க்கு இலக்கியநோக்கில் அமைய வேண்டிய பண்பும் செயலும் பற்றி இலக்கணத்தான் வரையறை செய்கின்றார். (களவியல் 7, 8, 35, 36) ஏனைய துணை மாந்தரைப் பற்றிய இலக்கணம் குறிப்பாக ஆங்காங்கே சுட்டப்படுகின்றது.

மேற்கூறப் பெற்ற மாந்தர் யாவரும் உலகில் வாழ்ந்து வருவோரேயாவர். அவரை இலக்கியத்துள் அமைத்துப் அகப் பொருள் ஒழுக்கங்களை கூறுமிடத்து நாடக வழக்குப் பற்றிப் புனைந்துரையாகவும் புறப்பொருள் ஒழுக்கங்களைக் கூறு மிடத்துப் பட்டாங்குக் கூறாமல் உயர்வு நவிற்சியாகவும் ஏனைய செய்யுள் உறுப்புக்களுள் ஏற்பனவற்றையெல்லாம் பொருத்திக் கூறுவர். அவ்வாற்றான் இந்நூலுள் இலக்கண நெறியாற் கூறுப் பெறும் அகத்திணை புறத்திணை பற்றிய கோட்பாடுகள் உலகியலான் ஒழுகும் மக்கள் ஒழுகலாற்றினை அடிப்படையாக வைத்து அவற்றுள் இலக்கியப் படைப்பிற்கேற்பனவற்றைக் கொண்டு அறமுதலாய பயன்களைத்தரும் வகையில்

அமைக்கப் பெற்றனவாகும் என்பது விளங்கும். பொருளதிகாரக் கோட்பாடுகளும் அவை பற்றி எழுந்த சங்க இலக்கியங்களும். பண்டைத் தமிழ் மக்களின் நடைமுறை வாழ்க்கை வரலாறு களைப் பட்டாங்குத் தெரிவிப்பன போலத் திகழ்தல் தமிழிலக்கண இலக்கியங்களின் சதுரப்பாடாகும். அவை அவ்வாறு திகழ்தற்குப் பெரிதும் காரணமாவன புறத்திணை பற்றிய பாடல்களாகும். அவையும் வரலாற்றுண்மைகள் பொதிந்த நாடக வழக்குப் பற்றியமைந்த இலக்கியங்களேயாகும். களவியல் முதலிய ஏழு இயல்களிற் கூறப்படும் கொள்கைகளை அவ்வவ்வியிலின் பாயிர உரைகளாலும் நூற்பாவுரை விளக்கங்களானும் அறிந்து கொள்க.

## சங்க இலக்கியங்கள் பற்றிய சிறுகுறிப்பு:

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு என்பவை சங்க இலக்கியங்கள் என வழங்கப்படுகின்றன. இவை கடைச்சங்க காலத்து வாழ்ந்த புலவோரான் பாடப் பெற்றவை என்பதும் வழக்கு. கடைச்சங்க வரலாறாக இறையனார் களவியலுரை கூறும் செய்தியுள் பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்குத் தொகுப்புக் குறிக்கப்படவில்லை. எட்டுத்தொகை நூல்களே குறிக்கப்பெற்றுள்ளன. இளம்பூரண ருள்ளிட்ட உரையாசிரியன்மார் பத்துப்பாட்டிலிருந்தும், திருக்குறள், நாலடியார், திணைமாலை நூற்றைம்பது முதலிய அகப்பொருள் நூல்களிலிருந்தும் மேற்கோள்களைக் காட்டுகின்றனர். தொகை நூல்களைப் பற்றி இதுவரை ஆய்வு செய்த அறிஞர் பெருமக்களும் பதிப்பித்தோரும் பல கருத்துக் களைக் கூறியுள்ளனர். சில தொகை நூல்களின் இறுதியில் இதனைத் தொகுப்பித்தோர் இவர், தொகுத்தோர் இவர், என்னும் குறிப்புக்காணப் படுகின்றது. கலித்தொகை, ஐங்குறுநூறு ஆகிய தொகையுள் இன்னதிணை இன்னாராற் பாடப்பெற்றது என்னும் சில வெண்பாக்கள் காணப் படுகின்றன. இவை ஆய்வாளருக்குச் சான்றாம் துணையாகி உள்ளன. மற்று அவ்வப்பாக்களில் வரும் அரசர் முதலானோரை யும் பாடிய புலவோரையும், பாடற்பொருள்-நடை, கையாளப் பட்டுள்ள சொற்கள் இலக்கணக்கூறு ஆகியவற்றையும் அடிப்படை யாகக் கொண்டும் ஆய்வுரைகள் வந்துள்ளன. ஆய்வாளரின் முடிபுகளுள் ஒத்தன சிலவும் ஒவ்வாதன பலவுமாக உள்ளன. ஆதலின் இக்காண்டிகையுரையளவில் எனது கருத்துக்களைத் தெரிவிப்பது கடனாகின்றது. பின்வரும் குறிப்புகளுக்குச் சான்று காட்டி விளக்கந்தரப்புகின் மிக விரியுமாகலின் முடிபுகளை மட்டுமே இங்கே குறிப்பிட்டுள்ளேன்.

இத்தொகை நூல்கள் யாவும் தொல்காப்பியத்திற்குப் பன்னூறாண்டுகள் பிற்பட்டவை. அவற்றின் இலக்கணக் கோட்பாடுகள் தொல்காப்பியத்தையும், தொல்காப்பியத்தை அடுத்துத் தோன்றிய பல இலக்கண நூல்களையும் ஒட்டியவை. அடுத்துத் தோன்றிய பன்னிருபடலம் முதலாய நூல்கள் மறைந்து விட்டமையான் சான்று காட்டுதற்கு வாய்ப்பில்லை. இருந்தன என்பதற்கு ஏது கலித்தொகையுள் முல்லைத்திணை பற்றிய பாடல்களில் வரும் ஏறுதழுவுதல் முதலாய கோட்பாடுகள் தொல்காப்பியத்துள் காணப்படாமையே யாகும். அவ்வாறே தொல்காப்பிய மரபினின்று விலகியுள்ள பாக்கள் சில ஏனைய தொகை நூல்களுள்ளும் உள. அதனான் அகத்திணையியல் முதலாய இயல்களுள் கூறப்படும் விதிகளுக்குக் காட்டப் பட்டிருக்கும் எடுத்துக்காட்டுகளுள் பல அவ்விதியை ஓரளவுக்குப் புலப்படுத்துதலன்றி முழுதும் பொருந்துவனவாக அமையவில்லை.

எட்டுத்தொகையுள் அமைந்துள்ள பாக்களின் காலநிலை கி. மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி. பி ஐந்தாம் நூற்றாண்டு வரை எனலாம். அவற்றுள் கலித்தொகையும், பரிபாடலும் ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுந்தவையாகும். அஃதாவது தமிழக ஆட்சியின் இருண்டகாலம் எனப்படும் களப்பிரர் ஆட்சிக்காலம் ஒடுங்கிப் பாண்டியர் ஆட்சி மீண்டும் தலையெடுத்த காலமாகும். குறுந்தொகை முதலாய ஏனையவை கி பி. இரண்டாம் நூற்றாண்டினை எல்லையாக உடையவை. அவற்றுள்ளும் சில செய்யுட்கள் கலித்தொகை காலத்தன வாகலாம்.

பாட்டுந்தொகையும்; வள்ளன்மையும் இலக்கிய வேட்கையும் அமைந்த வேந்தர் குடிப்பிறந்த சில புரவலர்தம் வேண்டுதலான் புலவோர்பலர் ஒரு குழுவாக அமைந்து தமிழகத்தின் பல இடங்களில் வாழ்ந்த புலவோரிடத்திருந்த செய்யுட்களைத் திரட்டி வகைப்படுத்தித் தொகுக்கப் பெற்றவையாகும் - யாவும் அப்புலவோர் குழுவான் அமைத்துக் கொள்ளப்பட்ட நூலவை (அல்லது கழகம், பள்ளி) யான ஓரிடத்திருந்து ஒருகாலத்தில் ஆராய்ந்து தேர்ந்து தொகுப் பட்டவையாகும். பாக்களுள் சில ஒரே புலவராற் பாடப்பெற்றிருக்கலாம் சில ஒரே பெயரைக் கொண்ட பலபுலவராற் பாடப்பெற்றிருக்கலாம். அரசர் பெயர் அளுள்சில குடிமரபாகக் கால்வழியினருக்கு அமைந்திருக்கலாம். சிலவரையறைகளைச் செய்துகொண்டு தொகுத்தாகாலை சிலவற்றைத் தவிர்க்கவும் சிலவற்றைப்பாடிச் சேர்க்கவும், நேர்ந்திருக்கும்.

தொகை நூல்களின் அமைப்பையும் பெயர்களையும் ஆழ்ந்து நோக்கின் அவையாவும் ஓரிருபது ஆண்டு எல்லைக்குள் ஒரே காலத்தில் தொகுக்கப்பட்டவை என்பது புலனாகும். இன்றேல் பொருள் பற்றியும் செய்யுள் யாப்புப்பற்றியும் - எண்ணிக்கை பற்றியும் பெயர் சூட்டுதல் வாயாது. அன்றியும், சேரமன்னர் களைப் பற்றியவற்றைப் பத்துபத்தாக நூறுதொகுத்து ஒவ் வொன்றற்கும் பெயர் கொடுத்து எஞ்சியவற்றைப் புறநானூற்றுள் சேர்த்துள்ளமையும் திணைக்கு நூறாக ஒவ்வொரு நூறையும் பத்துப்பத்துப்பிரிவாக ஆக்கி ஐங்குறுநூறு எனப்பெயரிட்டுள்ளமை யும், அடிகளை வரையறுத்துக்கொண்டு குறுந்தொகை நெடுந் தொகை நற்றிணை எனப்பெயர் கொடுத்துள்ளமையும் நெடுந் தொகையை களிற்றியானை நிரை மணிமிடைபவளம் நித்திலக் கோவை என வகுத்தமையோடு 1, 3, 5, 7, 9, பாலை எனவும் 2, 8, குறிஞ்சி எனவும் 4 முல்லை, 6 மருதம், 10 நெய்தல் எனவும் வரிசைப்படுத்தியுள்ளமையும் மேற்கூறிய முடிபினை மெய்ப்பிக்கும்.

இனி, தொகைப் பாக்களுக்கு அமைந்துள்ள இலக்கணக் குறியீடும் கருத்து விளக்கமும். தொல்காப்பிய நெறியை முழுதும் பின்பற்றியனவாகக் காணப்பெறவில்லை. தொல்காப்பிய நெறியப் பின்பற்றியிருப்பின் அகத்திணைப்பாக்களின் குறியீடு கிளவி எனவும் புறத்திணைப்பாக்களின் குறியீடு துறை எனவும் அமைந்திருக்கும். யாவும் துறையெனவே குறிக்கப்பட்டுள்ளமை காணலாம். புறநானூற்றுத் துறைவகுப்புத் தொல்காப்பியத்தை ஒட்டியதன்று என்பது கண்கூடு. எனவே, பாக்களுக்கு அமைந்துள்ள திணை, துறை, கருத்து ஆகியவை தொகுத் தோரான் அமைக்கப்பட்டனவே என்பதும் பதிற்றுப் பதிகங்களும் அவராற் செவிவழிச் செய்தியாகக் கேட்டு அமைக்கப் பெற்றவை என்பதும் விளங்கும். அதனான் பல பாக்களின் கைகோளைப் பற்றி உறுதி செய்வது எளிதாக இல்லை. கூறுவோர் கேட்போர் பற்றிய நிலையும் அவ்வாறே உளது. எனவே எடுத்துக்காட்டுக் களுள் சில அவ்விதிகளை உணர்ந்து கொள்ளும் அளவில் அமைவனவாயின. சங்க இலக்கியம் பற்றிய விரிவான கருத்துக் களை எனது ஆராய்ச்சிக்கட்டுரையில் காணலாம்.

ச. பாலசுந்தரம்

குறிப்பு : பிழைகளை திருத்திக்கொண்டு பயில்க,

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 7 | பாத்தியப் பண்பே (சூ) | பாத்திய பண்பே |
| 17 | 14 | தெய்வதமாகிய | தெய்வமாகிய |
| 22 | 23 | பகற்கபாழுதின் | பகற்பொழுதின் |
| 38 | 33 | நடுவனைந்திணை | நடுவணைந்திணை |
| 41 | 25 | சூத்திரங்காளனும் | சூத்திரங்களானும் |
| 46 | 31 | இல்பாதலின் | இயல்பாதலின் |
| 57 | 4 | கணிவர் | அறிவர் |
| 59 | 13 | ஏனோர் மருங்கினும் (சூ) | ஏனோர் பாங்கினும் |
| 65 | 8 | மண்ணிசை | மண்ணசை |
| 65 | 9 | முல்லைத்திணையின் | முல்லை, மருதத்திணைகளின் |
| 70 | 9 | அந்நிமிந்தகளான் | அந்நிமத்தங்களான் |
| 72 | 27 | சார்ந்தலென்று (சூ) | சார்தலென்று |
| 79 | 10 | தலைவியைத்டேிதத் | தலைவியைத் தேடித் |
| 81 | 25 | தவைவியொடு | தலைவியொடு |
| 81 | 31 | போகக்ற்ண்ணும் | போக்கற் கண்ணும் |
| 86 | 34 | இடித்துறைத்தலின் | இடித்துரைத்தலின் |
| 114 | 27 | உவமும் | உவமமும் |
| 131 | 27 | உணர்த்தோர் | உணர்ந்தோர் |
| 132 | 6 | கூற்றுகளகாக் | கூற்றுக்களாகக் |
| 133 | 23 | ஆனிறை | ஆனிரை |
| 136 | 6 | இறைபோற் | இறையோற் |
| 136 | 21 | பகைப் புலந்து | பகைப் புலத்து |
| 136 | 24 | வெய் போய் | வெய்யோய் |
| 136 | 30 | இன்றியமைக் | இன்றியமையாக் |
| 137 | 23 | புக்கணனே | புக்கனனே |
| 146 | 10 | மறவாரற் | மறவராற் |
| 156 | 1 | பதிப்பறுபத் | பதிற்றுப்பத்து |
| 160 | 1 | பொருளின்றுய்த | பொருளின்றுய்த்த |
| 163 | 7 | குன்றாரச்சிறப்பின் (சூ) | குன்றாச்சிறப்பின் |
| 183 | 20 | களிறெறிந் தெரிந்திதோர் | (சூ) தெதிர்ந்தோர் |
| 190 | 13 | துப்பை | தும்பை |
| 193 | 8 | உறழ்ந்த | உறழாத |
| 214 | 12 | தோரேரர் | தேரோர் |
| 220 | 16 | எண்வகை அவையத்தார் | 'எண்வகை' என்பதனை நீக்கு |
| 230 | 14 | புதல்வர்ப் பயந்த (சூ) | புதல்வற் பயந்த |

தமிழ் வாழ்க

# தொல்காப்பியம்

## பொருளதிகாரம்

### பாயிரவுரை :-

நிறுத்த முறையானே எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமும் கூறி இனிப்பொருளிலக்கணங்கூறுகின்றார்.

பொருள் என்பது எழுத்தானாகிய சொல்லானும், சொற்றொடர்களானும் உணரவும் உணர்த்தவும் படுவனவாம். நிலைத்திணையும் இயங்குதிணையுமாகிய பொருளும் அவற்றின் நிகழ்ச்சியுமேயன்றிப் பொருளெனப் பிறிது யாதுமின்மையான் மன்பதையின் இயல்பும் இயக்கமுமே பொருளாதல் தெளியப் பெறும்.

மன்பதையுள் சொற்களைக் கருவியாகக் கொண்டு பொருள்களை உணரவும் உணர்த்தவும் ஆற்றல் வாய்ந்தோர் மக்களேயாதலின் நூலோர் சிறப்பித்துக் கூறும் பொருள் என்பது இலக்கியம் படைத்தற்கு வேண்டும் மக்களது ஒழுகலாறும் அதற்குச் சார்பாவனவுமேயாம். அம்முறைமையான் எழுவகைச் செய்யுளிலக்கியம் செய்தற்குரியவையே ஈண்டுப்பொருள் எனப் பெறும்.

இயற்சொல் முதலாய நால்வகைச் சொற்களான் ஈட்டப் பெறும் தொடர்களான் மக்கள் ஒழுகலாறாகிய பொருளை நாடகவழக்கும் உலகியல் வழக்கும் பற்றி நல்லிசைப்புலவோரான் செய்யப்பெறும் செய்யுட்குரியவாகத் தொன்னூலோர் ஓதிய முப்பத்து நான்கு உறுப்புக்களுள் மாத்திரை, எழுத்து, அசை, சீர், அடி, தொடை முதலியவை வடிவமைப்புறுப்பாகவும் திணை, கைகோள், கூற்று, கேட்போர், மெய்ப்பாடு முதலியவை பொருளமைப்புறுப்பாகவும் இருத்தலின் அவைபற்றிய இலக்கண மரபுகளைக் கூறும் இவ்வதிகாரம் பொருளதிகாரம் எனப்பட்டது.

ஒழுகலாறு என்பதற்கு இலக்கணக்குறியீடு திணை என்பதாகும். அது தலைவனும் தலைவியும் இல்லறநெறி பற்றி இணைந்துபுரியும் இன்ப ஒழுக்கமாகிய அகவாழ்வும், அகவாழ்விற்கு ஆக்கமும் துணையுமாவனகருதி நல்லனபுரிந்து அல்லன கடிந்தொழுகல், விடுபேறுகருதித்துறவு பூண்டொழுகல் ஆகிய

புறவாழ்வும் என இருதிறப்படுதலான் அதனை அகத்திணை என்றும் புறத்திணை என்றும், நூலோர் புலனெறி வழக்கஞ் செய்தனர். இடைக்காலநூலோர் அவற்றை அகப்பொருள், புறப்பொருள் என வழங்குவர் அகத்திணையாகியபொருள் புறத்திணையாகிய பொருள் என்பது அவற்றின்கருத்தாகும்.

மனையறவாழ்வாகிய அக ஒழுக்கமின்றிச் சமுதாய, அரசியல் வாழ்வென்னும் புறவொழுக்கம் தோன்றாதாகலின் அகத்திணைக் குரிய அடிப்படைப்பொருள்களைக் கொண்டே புறத்திணைக் குரிய மரபுகளை நூலோர் வகுத்து அமைத்துள்ளனர்.

மாந்தர்தம் அடிப்படை ஒழுக்கமாகிய அகத்திணையைக் கைக்கிளை முதலாகப் பெருந்திணை ஈறாக ஏழாக வகுத்து அவற்றின் அடிப்படையில் புறத்திணைகளையும் ஏழாக வகுத்துக் குறியீடு செய்துள்ளனர். அகத்திணைகளாகிய கைக்கிளை முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை பெருந்திணை என்னும் ஏழனையும் முத்திறமாகப் பகுத்துக் கூறுதல் தொன்னூலோர் மரபாகும். கைக்கிளையும் பெருந்திணையும் நடுவணைந் திணையின் குறைவும் பெருக்கமுமாகிய விகாரங்களேயாதலின் அவை அகனைந்திணைக்குள் அடங்கி நிகழும். அவ்வாற்றான் அகத்திணை எனச்சிறப்பித்துக் கூறப்பெறுவன நடுவண் ஐந்திணைகளேயாகும். இதனை;

"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக்கிளந்த எழுதிணை என்ப" எனவும்
"மக்கள் நுதலிய அகனைந்திணையும்" எனவும்
"வெட்சிதானே குறிஞ்சியதுபுறனே" எனவும்
"வஞ்சிதானே முல்லையது புறனே" எனவும்
"உழிஞைதானே மருதத்துப் புறனே" எனவும்
"தும்பைதானே நெய்தலது புறனே" எனவும்
"வாகைதானே பாலையது புறனே" எனவும்
"காஞ்சிதானே பெருந்திணைப் புறனே" எனவும்
"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே" எனவும்

இவ்வாசிரியர் கூறுமாற்றான் அறியலாம்.

இவ்வதிகாரத்துக் கூறப்பெறும் இலக்கணங்களை ஏனைய அதிகாரங்களைப் போன்றே ஒன்பது இயல்களாகப் பகுத்துக் கொண்டுணர்த்துகின்றார் ஆசிரியர்.

அகத்திணை முதலாய ஏழும் செய்யுள் செய்தற்குக் கருவிகளாதலின் அவற்றை முறையாக முன்வைத்துணர்த்தி எட்டாவதாகச் செய்யுளியலை அமைத்துப் பின்னர் நூலாக்கம் பற்றியமரபுகளையும், மக்கள், மா, புள், மரம், புல் ஆகியவை பற்றியமரபுகளையும் உணர்த்தும் மரபியலை ஒன்பதாக வைத்துக் காரணகாரிய முறையானே ஓதுகின்றார். பிற விளக்கங்கள் அவ்வவ்வியலின் பாயிர உரையுட்கண்டுகொள்க.

இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் பொருள் என்பதற்கு அறம் முதலாய நான்கும் எனக்கூறிப் பலபடவிளக்கிச் சென்றனர் 'அந்நிலைமருங்கின் அறமுதலாகிய மும்முதற் பொருட்கும் உரிய என்ப'' (செய்-105) என அவற்றைச் செய்யுட்குரிய பொருளாக ஆசிரியர் ஓதினமையன்றி அச் செய்யுளையாத்தற்குரிய கருவிகளாக ஓதாமையான் அவர் தம் விளக்கம் மற்றொன்று விரித்தலாயும் மயங்கவைத்தலாயும் அமைந்தன.

சோமசுந்தரபாரதியார் "பொருள் ஒன்றே மக்கள் குறிக் கோளாதலானும் அப்பொருள்பற்றியும் அப்பொருளுரைக்கும் கருவியாம் செய்யுள்பற்றியும் அவற்றிற்கு உறுப்பும் துணையு மாவனபற்றியும் கூறுவனவற்றின் தொகுதி தொல்காப்பியரின் பொருட்படலமாகும்'' என்பார். பொருள் இன்னது என்பதனை அவர் விளக்கினாரில்லை. துணையாவன இவை என்பதையும் புலப்படுத்தாமையின் அவர் விளக்கம் கவர்படு பொருளாக உள்ளது.

## முதலாவது

# அகத்திணையியல்

தலைவன்-தலைவியர் புணர்ந்தும் பிரிந்தும் ஒழுகும் அக ஒழுக்கத்திற்குரிய அடிப்படை இலக்கண மரபுகளை நாடக வழக்கும் உலகியல் வழக்கும் பற்றிக் கூறும் இயல் என்பது இதன்பொருள்.

அகமாவது இல்லறவாழ்விற்குரியராக உயர்ந்த பால தாணையான் இணையும் தலைவனும் தலைவியும் ஒருவரான்

ஒருவரது உள்ளத்தெழும் இன்பமும் துன்பமுமாகிய உணர்வுகளாம். அகம் என்றது உள்ளத்தையும் இல்லத்தையும் ஒருங்குணர்த்தி நின்றது. அங்ஙனம் அகத்தே நிகழும் நிகழ்வுகளை அகம் என்றது பிறந்தவழிக்கூறல் என்னும் ஆகுபெயராம். ஈண்டுத்துன்பம் என்றது காமஒழுக்கத்திற்கு இடையூறாகக்கருதிக் கொள்ளும் உணர்வை.

"இனி ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடிப் பெறும் இன்பம்-யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்புறுவதோர் பொருளாகலின் அதனை அகம் என்றார்" என்பர் நச்சினார்க்கினியர். அவ்வுரை ஈண்டுக்கூறும் புணர்வும் பிரிவும் கூடலும் ஊடலுமாகிய கைகோட்பொருளையெல்லாம் அகப்படுத்தாமையின் தன்னான் ஒரு பொருள்கருதிக் கூறலாய் முடியும் என்க.

இன்பமும் பொருளும் அறனுமென்றாங்கு அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின் நிகழும் அக ஒழுக்கம் களவு கற்பு என்னும் இருவகைக் கைகோளாக நிகழும். அவற்றுள் களவென்பது காமப்புணர்ச்சியும் இடந்தலைப்படலும் பாங்கொடுதழாஅலும் தோழியிற்புணர்வும் என்று ஆங்கந் நான்கும், அவற்றின் சார்புமாகவும்; கற்பென்பது மறைவெளிப் படுத்தலும் தமரிற்பெறுதலுமாகிய இயல் நெறிதிரியாமல் மலிவும் புலவியும் ஊடலும் உணர்வுமாகப் பிரிவொடு புணர்ந்ததாகவும் அமைந்து வரும். அவ் இருவகைக்கைகோளினும் தலைவனும் தலைவியும் உடனுறைதலாகிய புணர்ச்சியும் தலைவனது பரத்தைமைகாரணமாகத் தோன்றும் ஊடலும் ஓதல் முதலாய கடமைகள்காரணமாகத் தலைவன் பிரியும் பிரிவும் அப்பிரிவினைத்தலைவி பொறுத்தாற்றியிருத்தலும், ஆற்றாது இனைந்து இரங்கலும் ஆகிய ஒழுகலாறுகள் நடுவணைந்திணைக்குரியனவாக வரும். இவ்வொழுக்கங்கள் யாவும் உரிப்பொருள் என்னும் குறியீடு பெறும்.

உரிப்பொருள் எனப்படும் உணர்வுகள் இயற்கையும் செயற்கையுமாகிய பொருள்கள் காரணமாகக் கிளர்ந்தெழுதலின் அப்பொருள்களை முதற்பொருள் எனவும் கருப்பொருள் எனவும் வகுத்து இம்மூன்றையும் தொன்னூலார் திணையுணர் கருவிகளாகக் கொண்டனர்.

அவற்றுள் காடுறையுலக முதலாயநானிலங்களையும் கார் முதலாய அறுவகைப் பெரும் பொழுதுகளையும், மாலை முதலாய

அறுவகைச் சிறு பொழுதுகளையும் முதற் பொருளாகவும் நிலமும் பொழுதும் காரணமாகத் தோன்றும் மா, மரம், புள் முதலாய இயற்கைப் பொருள்களையும் தெய்வம், யாழ், செய்தி முதலாய செயற்கைப் பொருள்களையும் கருப்பொருளாகவும் கொண்டு அவற்றைத் திணையுணர்தற்குக் கருவிகளாக்கினர்.

அவ்வாற்றான் அகத்திணை ஏழற்கும் உரிய முதல், கரு உரி என்னும் பொருட் பாகுபாடுகளையும், இருவகைக் கை கோளுக்கும் உரிய மாந்தரையும், அவருள் தலைமைத் தன்மை உடையவர் அஃதில்லார் ஆகிய இருவகையாரின் பண்பியல் களையும் அவர்பற்றிய பிற மரபுகளையும், அம் மாந்தர்தம் கூற்றுகளையும், அக் கூற்றுக்கள் வெளிப்படையாயும் உள்ளுறை யாயும் நாடக வழக்கும் உலகியல் வழக்கும் பற்றி நிகழ்தலான் அவைபற்றி முந்துநூலோர் நவின்ற இலக்கண மரபுகளையும் தொகுத்துக் கூறலின் இவ்வியல் அகத்திணையியல் என்னும் பெயர்த்தாயிற்று.

அகத்திணையியல் என்னும் குறியீடு ஆசிரியரிட்டது என்பது "அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர் புறத்திணை இலக்கணம் திறப்படக்கிளப்பின்" எனத் தொடங்கும் புறத்திணை யியல் முதற் சூத்திரத்தான் அறியலாம்.

மற்று, புறத்திணை இலக்கணங்களை ஓரியலாக வைத்துக் கூறுமாறு போல. இருவகைக் கைகோளுக்கும் உரிய இலக்கணங்களை வகுத்துக்கூறும் இவ்வியலுள் களவியல் கற்பியல்களை அடக்கி ஒன்றாகக் கூறாமல் அவற்றைப் பிரித்து வேறாகக் கூறியது என்னையெனின்? புறத்திணை ஏழும் அகத்திணை ஏழன்புறமாக அமைந்து வருதலான் புறத்திணைக் குரிய முதற்பொருள் கருப்பொருள் பற்றிய இலக்கணங்களை அகத்திணையொடு பொருந்தப்பெறப்பட வைத்தல் வேண்டியும், கைக்கிளையும் பெருந்திணையும் இருவகைக் கைகோளினும் அடங்காமல் அகஒழுக்கமாக நிகழ்தலான் அவற்றை உணர்த்தல் வேண்டியும் பிரித்துக் கூறினார் என்க. பிறவிளக்கங்களை அவ்வச் சூத்திர உரைகளான் அறிந்து கொள்க.

## நூல்

**சூ. 1 : கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப. (1)**

**க-து :** செய்யுளியலின்கண் செய்யுளுறுப்பாகக் ''கைக்கிளை முதலா ஏழ் பெருந்திணையும் முற்கிளந்தனவே முறையினான'' என ஓதப் பெறும் தலைமைத்திணைகளாவன இவையென அவற்றின் பெயரும், வகையும் தொகையும் கூறுகின்றது.

**பொருள் :** தொன்னூலோரான் முதன்மைபெறக்கிளக்கப் பெற்ற திணைகள் கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுதியாகிய ஏழும் எனக் கூறுவர் புலவர்.

இக்குறியீடுகளும், தொகையும் தொன்னூன் மரபு என்பது விளங்க 'என்ப' என வழிநூல் வாய்பாடு தந்து கூறினார். 'ஏழ்' என்பது வினைப்படுதொகுதியன்மையான் முற்றும்மை பெறாதாயிற்று. முதன்மையாவது-தலைமை. அதனான் இவற்றின் புறமாக ஏழுதிணைகள் விரியும் என்பதும் கொள்ள வைத்தார்.

முதலும் இறுதியும் கூறி ஏழு எனத் தொகை கூறினமையான் இடைநிற்பவை ஐந்தென்பதுதானே போதரும். அதனான் அவை நடுவணைந்திணை எனக்குறியீடு பெறும் என்பதும் உணரப்படும். திணை என்பதனைக் கைக்கிளையொடுங் கூட்டிக்கொள்க.

**கைக்கிளையாவது :** ஒருமருங்குகிளர்ந்த கேண்மை. கை என்னும் பல பொருளொருசொல் ஈண்டுச்சிறுமை (ஒரு கூறினை) உணர்த்தி நின்றது. அஃதாவது தலைமக்களுள் ஒருவர் மாட்டுக் கிளர்ந்த முற்றுப்பெறாத காதல் வேட்கை என்பதிதன் பொருள். கிளைத்தல் கிளையாயினாற்போல ஈண்டு அஃது கிளர்த்தெழுந்த காமவேட்கையைச் சுட்டிநின்றது.

**பெருந்திணையாவது :** பெருகியதாகிய ஒழுக்கம் : அஃதாவது அளவிறந்த வேட்கை. பெருமை என்னும் உரிச்சொல் ஈண்டுப் பெருக்கமாகிய குறிப்புணர்த்தி நின்றது. எனவே அளவின் இகந்தநிலை பெருந்திணை என்பது புலப்படும். புதுமை பெருமை சிறுமை யாக்கம் [மெய்-7] என்புழிப் பெருமை பெருக்கத்தை உணர்த்தி நிற்றலைக் கண்டு கொள்க. அளவாவது : அகத்திணைத் தலைவற்கும் தலைவிக்கும் வகுத்து ஓதப்பெற்ற இலக்கணமாம் அவையாவன, தலைவற்குப்

பெருமையும் உரனும், தலைவிக்கு அச்சமும் மடனும் நாணுமாம். இகத்தலாவது, அவற்றைத் தலைமக்கள் போற்றிக் கொள்ளா நிலைமை. பிறவிளக்கங்கள் அவற்றின் இலக்கணங்கூறுமிடத்துக் கண்டுகொள்க.

### சூ. 2 : அவற்றுள்
### நடுவ ணைந்திணை நடுவணது ஒழியப்
### படுதிரை வையம் பாத்தியப் பண்பே. (2)

க-து : நடுவணைந்திணைகளுள் நான்கற்குரிய பெயர்க் குறியீடு அமைந்துள்ள முறைமை கூறுகின்றது. [குறியீடு " மாயோன் " மேய என்னும் சூத்திரத்துக் கூறுப]

**பொருள் :** கைக்கிளை முதலாக மேற்கூறிய ஏழு திணைக்கண் இடைநின்ற ஐந்தனுள் நடுவணதாகிய ஒருதிணை தவிர்ந்த ஏனைய நான்கின் பெயர்க்குறியீடுகள் கடல்சூழ்ந்த இவ்வையத்தைப் பகுத்துக்கொண்ட பண்பானே அமைந்தனவாம்.

ஏனையநான்கென்பது பொருட்பேற்றானும் பெயர்க்குறியீடு என்பது அவாய்நிலையானும் கொள்ளப்பட்டன.

கடலாற்சூழப்பெற்ற இவ் வையமானது காடுறையுலகம், மைவரையுலகம், தீம்புனலுலகம்,பெருமணலுலகம் என அதன் இயற்கை அமைவினான் பகுப்புற்று நானிலம் எனவழங்கப் படுதலின், நூலோர் பகுத்துக்கொண்டமுறை அந்நான் கென்பது தெளியப்படும். அந்நெறிபற்றி ஆசிரியர் " மாயோன்மேய " என்னும் சூத்திரத்தான் நடுவணது ஒழிய நின்ற நான்குதிணைகளின் பெயர்கள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனக்கூறுவார் அதனை ஈண்டு எதிரது போற்றல் என்னும் உத்தியாற் கொள்ள வைத்தார். இவை தொன்னூலோர் அமைத்துணர்த்திய குறியீடுகளாதலின் ஈண்டுவிதந்து கூறாமல் முல்லைமுதலாய பெயர்களானும் காடுறையுலகம் முதலாய நிலங்கள் வழங்கப்பெறும் என்னும் மரபினை உணர்த்தும் " மாயோன் மேய " என்னும் சூத்திரத்திரத்தான் விளங்க வைப்பாராயினர்.

அகத்திணைகள் ஏழு எனக் கூறிய முதற் சூத்திரத்துள் கைக்கிளை - பெருந்திணை என்னும் பெயர்கள் அவற்றின் ஒழுக்கமாகிய பண்பியல்புகளைப் புலப்படுத்திப் பெயர்க்காரணம் தோன்ற நின்றன. இடையமைந்த ஐந்திணைகளுள் நடுவண

தாகிய ஒருதிணை ஒழிய ஏனை நான்கற்கும் வழங்கும் பெயர்க் குறியீடுகட்குக் காரணம் உணர்த்துவாராய் அவை நிலப்பகுப்பின் அடிப்படையிற் பெற்ற மரபுக்குறியீடுகள் என இச்சூத்திரத்தாற் புலப்படுத்தினார் என்க.

"நடுவணது ஒழிய' என்றதனான் அஃது (பாலை) அவ் ஒழுக்கமாகிய பண்பியல்பின் அடிப்படையிற் பெற்ற காரணக் குறியீடு என்பதும் புலனாகும். நடுவணது என்றது பாலைத் திணையை. இதனை

"வாகைதானே பாலையது புறனே" என்பதனான் அறிக. 'பாலை' என்னும் பெயர், நிகர் - நேர். அகழி - ஆழி என்பவற்றைப் போலப் பகல் என்னும் சொல் பால் என நேரசை யாக மருவி அது மால் - மாலை. சீர் - சீரை என்பவற்றைப் போலச் செயற்பாடு உணர்த்தும் ஐகார இடைச்சொல் பெற்று நின்றதோர் ஆக்கப் பெயர் [பால் → பகுப்பு = பிரிவு] எனவே பாலை என்பது பிரிதலாகிய ஒழுக்கம் பற்றியும், நடுவணது என்பது இடமும் தன்மையும் பற்றியும் அமைந்த காரணக் குறியீடுகளாகும்.

தொன்னூலோர் பாலையை இயற்கை நிலப்பகுப்பாகக் கொள்ளாமை அவர் வையத்தை ஐந்நில மென்னாது நானிலம் எனக்கொண்டமையான் அறியலாம். நானிலங்கள் தத்தம் வளங்குன்றி வேறுபடும் நிலையையே அவர் பாலை எனச் சுட்டி வழங்கினர் என்பதை

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற்றிரிந்து
நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும்"

எனவரும் இளங்கோவடிகளின் வாயுரையான் அறியலாகும். அதனான் நானிலத்தின் கண்ணும் இப்பாலை ஒழுக்கம் நிகழ்தற் குரித்து என்பதுபோதரும். மற்று நடுவு என்பதற்குப் பொதுமை என்பதும் பொருளாகலின் அது நானில ஒழுக்கத்திற்கும் பொதுவாதலும் தெளியப்படும்.

இச்சூத்திரத்திற்கும் ஐந்திணைகட்கும் உரையாசிரியன்மார் கூறியுள்ள பொருள் விளக்கங்கள் அவரவர்தம் அறிவார்ந்த கற்பனைத் திறத்தைத் தெரிவிப்பனவாக அமைந்துள்ளனவே யன்றி இந்நூலின் அடிப்படையில் அமையாமையை ஓர்ந்தறிக

இங்ஙனம் நாலிலத்தை அடிப்படையாக வைத்து இத் திணைகட்குக் குறியீடு செய்தமைக்குக் காரணம் மக்களின் ஒழுகலாறுபற்றி நல்லிசைப் புலவோரான் யாத்தளிக்கப் பெறும் செய்யுட்பொருளை உணரவும் உணர்ந்து உணர்த்தவும் புலனெறி வழக்காக வகுத்துக்கொள்ளப்பெற்ற முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் ஆகியமூன்றனுள் இயற்கைப் பொருளாகிய நிலம் பொழுது இரண்டனையும் முதற்பொருளாக அமைத்துக் கொண்டமையேயாம்.

அஃதாவது மக்களென்போர் நிலத்தின்கண் பிறந்த இயங்கு திணையாகிய கருப்பொருள்களேயாவர் ஆதலின் அவ்வந் நிலத்திற்குரிய பண்புகள் அந்நில மக்களுக்குரியவாக அமையும் என்னும் உயிரியல் நூற்கொள்கையை ஆழ்ந்துணர்ந்து அவ்வடிப்படையில் இவ்விலக்கணத்தை வகுத்தோதினர். தமிழிலக்கணநூலாரின் இவ் அறிவியல் நுட்பத்தைத் தேர்ந்து அகப்பொருளிலக்கண மரபுகளை அறிந்து கோடல் வேண்டும்.

நிலமும் பொழுதுகளும் உரிப்பொருளாகிய உணர்வுகள் கிளர்ந்து எழுதற்கு அடிப்படையாகத் திகழ்தலை மேல் வரும் சூத்திரங்களானும் உரைக்குறிப்புக்களானும் தேர்ந்து கொள்க.

நடுவணைந்திணைகளை ஆசிரியர் அகனைந்திணை என்றும் ஆளுவர், அதனான் அதுவும் ஒரு தொகுதிக் குறியீடாகும். நடுவணந்திணையை அன்பொடுபுணர்ந்த ஐந்திணை எனக்களவியலுள் சிறப்பித்துக்கூறுதலான் அகனைந்திணைக்கு அன்பு அடிப்படையானது என்பதும் ஏனைக் கைக்கிளை பெருந்திணைகட்கு அன்பு இன்றியமையாது வேண்டப் படுவதின்று என்பதும் அதனான் அவை இரண்டும் காமத்தை அடிப்படையாகக் கொண்டவை என்பதும் புலனாகும்.

**சூ. 3 : முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறைசிறந் தனவே**
**பாடலுட் பயின்றவை நாடுங் காலை (3)**

**க-து :** அகத்திணைச் செய்யுட்களை உணர்ந்துரைக்கும் முறைமை கூறுகின்றது.

**பொருள் :** நூல் நெறியான் ஆராயுமிடத்து ஏழுவகைச் செய்யுளுள் பாட்டென்னும் சிறப்புடையவாய் நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் அமைந்து நிகழும் அகத்திணைப் பாடல்களுள் பயின்று வருபவை, முதற்பொருள் கருப்பொருள்

உரிப்பொருள் என முந்து நூலோரான் கூறப்பெற்ற மூன்றுமேயாம்; அவற்றான் மேற்கூறிய திணைகளைக் கூறுங்கால் அவை ஒன்றினொன்று முறையே சிறந்தனவாம்.

எனவே, அம்முறையானே திணை கூறுக என்றவாறு. பொருள் என்பதனை முதலொடும் கருவொடும் கூட்டிக் கொள்க. நாடுதற்குக் கருவி [நூல்] வ்ருவிக்கப்பட்டது. முற்றும்மை செய்யுள் விகாரத்தான் தொக்கது. ஏகாரம் ஈற்றசை.

கைக்கிளையும் பெருந்திணையும் ஐந்திணைமருங்காகி நிகழுமாதலின் ஐந்திணைகட்கு ஓதப்பெறும் முதற்பொருளும் கருப்பொருளுமே அவற்றிற்கும் உரியவாக அமையும் என்பதும், பாலைக்குத்தனியே நிலப்பிரிவு இன்றேனும் காலப்பகுதிகள் உள்ளமையான் அவ்வாற்றான் காலமுதற்பொருளும் கருப் பொருளும் பற்றி உணரவரும் என்பதும், உய்த்துணர்ந்து கொள்க. இச்சூத்திரம் முடித்துக்காட்டல் என்னும் உத்தியின் பாற்படும்.

அங்ஙனம் திணைகூறும் முறைமையாவது ஒரு செய்யுட்குத் திணை கூறுங்கால் முதற்பொருளுக்கு முன்னுரிமைதரல் வேண்டும். அஃதின்றேல் கருப்பொருட்கும் அதுவுமின்றேல் உரிப்பொருட்கும் உரிமை தந்து கூறல் வேண்டும்.

அம்முறையான் அவை சிறத்தற்குக்காரணம் ஒருநிலத்தின் கண் ஏனை நிலத்திற்குச் சிறந்த உரிப்பொருள் நிகழ்தலும் கூடுமாதலின் உரிப்பொருளான் திணை கூறுதல் ஓரோவழிப்பிறழு மென்க. என்னை ?

திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குதல் இல்லெனமொழிப
புலன் நன்குணர்ந்த புலமையோரே [அகத் 14]

என்பதனான் மயக்கம் நிகழாத நிலத்திற்கு முன்னுரிமை தந்தனர் தொன்னூலோர் என்க.

எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்தவாகும் [அகத் — 21]

என்பதனான் முதற்பொருளுள் நிலமும் கருப்பொருளுள் பூவும் புள்ளுமல்லாத ஏனைப்பொருளும் திணையுணர்தற்குச் சிறந் தனவாம். இவை இல்லாதவிடத்து உரிப்பொருளான் உணர்ந்து கூறப்படுமென்க.

எ-டு : மாசறக் கழீஇய யானை போலப்
பெரும் பெயல் உழந்த இரும்பிணர்த்துறுகல்
பைதல் ஒருதலைச் சேக்கும் நாடன்
நோய்தந்தனனே தோழி
பசலை யார்ந்தநம் குவளையங் கண்ணே [குறுந்-13]

இதன்கண் தலைவி பிரிவாற்றாது வருந்தும் உரிப்பொருளான் இது நெய்தற்குரியதாயினும் முதற் பொருளான் குறிஞ்சியாகக் கொண்டவாறு காண்க.

இவளே நின்சொற்கொண்ட என்சொற்றேறி
பசுநனை ஞாழற் பல்சினை ஒருசிறைப்
புதுநலன் இழந்த புலம்பு மாருடையள்
உதுக்காண் தெய்ய உள்ளல் வேண்டும்
நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்
கடலும் கானலும் தோன்றும்
மடல்தாழ் பெண்ணையெம் சிறுநல்லூரே [குறு - 81]

இது தோழியிற் கூட்டம் கூடிப் பிரியும் தலைமகற்குத் தோழி கூறுவது. உரிப்பொருள் குறிஞ்சிக்குரியதாயினும் முதற்பொருள் கருப்பொருள்களான் நெய்தல் திணையாகக் கொண்டவாறு காண்க.

யானே ஈண்டை யேனே என் நலனே
ஏனல் காவலர் கவண் ஒலி வெரீஇக்
கானயானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலின் நிவக்கும்
கானகநாடனொடு ஆண்டொழிந்தன்றே (குறு-54)

இஃது உரிப்பொருளான் நெய்தற்குரியதாயினும் கருப்பொருளான் குறிஞ்சியாக அமைந்தவாறு கண்டுகொள்க.

யாயும் யாயும் யாராகியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழியறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே [குறு - 40]

இது முதலும் கருவுமின்றி அமைந்து உரிப்பொருளான் குறிஞ்சியா யினவாறு கண்டுகொள்க.

அரும்பெற லமிழ்தம் ஆர்பத மாகப்
பெரும் பெயர் உலகம் பெறீஇயரோ அன்னை
தம்மில் தமது உண்டன்ன சினைதொறும்
தீம்பழந் தூங்கும் பலவின்
ஓங்குமலை நாடனை வரும் என்றோளே [குறு-23]

இது முதல் கரு உரி மூன்றானும் ஒத்துக் குறிஞ்சித்திணையாயிற்று. மணிமிடை பவளத்துள்ளும் பிறதொகை நூலுள்ளும் உரிப்பொருள் வேறுபட்டு முதற்பொருளானும் கருப்பொருளானும் திணையமைந்துள்ளமையைக் கண்டுகொள்க.

சூ. 4 : [அவற்றுள்]
**முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே** (4)

**க - து :** முதற்பொருளின் பாகுபாடு கூறுகின்றது.

**பொருள் :** மேற்கூறிய மூன்றனுள் திணையுணர்தற்கண் முதற்பொருள் எனச்சிறப்பித்துக் கூறப்படுவது நிலமும் பொழுதும் என்னும் அவ் இரண்டனது இயற்கையாம் எனக்கூறுவர் பொருளிலக்கண முணர்ந்தோர்.

இவை கருப்பொருள் தோன்றுதற்குக் காரண மாதலும் திணைகூறுதற்கண் தலைமையாதலும் பற்றி முதற்பொருள் எனப்பட்டன.

காடுறைவுலகம் முதலாக நிலம் நான்குவகைப் படுதலானும் காலம் பெரும்பொழுது சிறுபொழுது எனவகைப் படுதலானும் நிலமும் பொழுதுமாகிய அவ்விரண்டும் என்னாது " அவற்றின் இயல்பென மொழிப " என்றார்,

இயல்பாவது இயற்கை ; கருப்பொருளுள் சிலவும், உரிப்பொருளும் மக்கள்தம் செயற்கையானும் உணர்வானும் ஆக்கிக் கொள்ளப்படுதல் போலல்லாமல் நிலமும் பொழுதும் இயற்கை நியதியாக அமைந்திருத்தல்.

உரையாசிரியருள் ஒரு சாரார் இயற்கையெனவே செயற்கை நிலமும் செயற்கைப் பொழுதும் உளவென்பது பெற்றாம், என உரைகொண்டு பாலையையும் திணை மயக்கத்தையும் செயற்கை நிலமெனவும் காலமயக்கத்தைச் செயற்கைப்பொழுது

எனவும் விளக்குவர். பாலை என்பது நானிலங்களின் வளங் குன்றிய வழி அமையும் இயற்கைத் திரிபேயன்றிச் செயற்கை யாகாதென்பதையும் மயக்கம் வேறு மக்களான் ஆக்கிக்கொள்ளப் பெறும் செயற்கைவேறு என்பதையும் அவர் எண்ணிலர், இங்ஙனம் இந்நூல்நெறிக்கொவ்வாமல் அவர் கூறுவனவற்றை மாணாக்கர் ஓர்ந்து தெளிக

சூ. 5 : **மாயோன் மேய காடுறை யுலகமும்**
**சேயோன்மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புன லுலகமும்**
**வருணன் மேய பெருமண லுலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையான் சொல்லவும் படுமே (5)**

க - து : மேல் " நிலம் பொழுதிரண்டின் இயல்பு " என்ற முதற் பொருளுள் நிலத்தின் வகை இவை என்பதும் " படுதிரைவையம் பாத்தியப் பண்பே " எனத்திணைக்குரிமை செய்து கூறிய வாற்றான் அமையும் குறியீடுகள் இவை யென்பதும் உணர்த்துகின்றது.

**பொருள் :** மாயோனாகிய தெய்வம் மேவியுறையும் காடமைந்த நிலனும், சேயோனாகிய தெய்வம் மேவியுறையும் முகில்தவழும் மலையமைந்த நிலனும், வேந்தனாகிய தெய்வம் மேவியுறையும் தீம்புனல் (யாறும் குளமும்) பரவி நிறையும் வயல் அமைந்த நிலனும் வருணனாகிய தெய்வம் மேவியுறையும் பெருகிய மணலமைந்த நிலனும் முன்னர் நடுவணதொழிந்த ஏனைய நான்கு திணைகட்கும் உரிமை செய்து கூறப்பட்ட நெறியான் முறையே அந்நானிலங்கள் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் பெயரானும் சொல்லப்படும்.

எனவே முல்லை முதலாகிய திணைக் (ஒழுகலாற்று) குறியீடுகள் நிலப் பெயராகவும் வழங்கப்படும் என்றவாறு அஃதாவது காடுறையுலகமெனினும் முல்லைநிலமெனினும் ஒக்கும், மைவரையுலகமெனினும் குறிஞ்சி நிலமெனினும் ஒக்கும், தீம்புனலுலகமெனினும் மருதநிலமெனினும் ஒக்கும், பெருமணலுலகமெனினும் நெய்தல் நிலமெனினும் ஒக்கும். மற்று, நிலம் என்னும் சொல்லைத் தொகுத்து, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனக் கூறினும் ஒக்கும் என்றவாறு.

அவ்வாற்றான் முல்லைத் திணை என்புழி ஒழுகலாற்றையும் முல்லை நிலம் என்புழிக் காடுறையுலகையும் உணர்த்தும்

முல்லை என வாளாநிற்புழி முன்னும் பின்னும் வரும் பொருளமைதியான் திணை அல்லது நிலம் என்பது தெளியப் படும். ஏனையவும் அவ்வாறே உணரப்படும்.

"சொல்லிய" என்றது "படுதிரைவையம் பாத்தியப் பண்பே" என முன்னர்க்கூறியதனை. சொல்லவும் என்னும் உம்மையைப் பிரித்து முறையென்பதனொடு கூட்டி அம் முறையானும் சொல்லப்படும் எனப்பொருள் கொள்க.

முல்லை முதலாய இக் குறியீடுகள் நிலத்தையுணர்த்துங்கால் அந்நிலத்துக்கருப்பொருள்களுட்சிறந்த பூக்களையும் திணையை (ஒழுகலாற்றினை) உணர்துங்கால் உரிப் பொருளையும் அடிப்படையாகக் கொண்டு பொருள் தரும். அவ்வாற்றான் அகனைந்திணையும் அமையுமாறு :-

| குறியீடு | நிலப்பெயர்க் காரணம் | திணைப்பெயர் காரணம் | |
|---|---|---|---|
| முல்லை | முல்லை மலர் | இருத்தல் | (முல்→முல்லை - கற்பு) ஆற்றுதல் |
| குறிஞ்சி | குறிஞ்சி மலர் | புணர்தல் | குறுகுதல் - நெருங்குதல் - புணர்ச்சி |
| மருதம் | மருதமரம் | மருவுதல் | அயன்மை தழுவுதல் - (பரத்தமை) |
| நெய்தல் | நெய்தல் மலர் | இரங்குதல் | நைதல் = நெய்வு - மெலிதல் |
| பாலை | பாலை மரம் | பிரிதல் | பகல் = பகவு - பிரிவு பால் - பாலை |

கைக்கிளையும் பெருந்திணையும் ஒழுக்கத்தான் அமைந்த காரணப்பெயர்கள் என்பது மேல் விளக்கப்பட்டது.

காடுறையுலகம் முதலாய நிலங்களுள் வேறுபல பூக்களும் மரங்களும் இருப்ப முல்லை முதலியவற்றைத் தேர்ந்து அவற்றான் குறியீடு செய்தமைக்குக் காரணம் என்னை எனின்? அப்பெயர்கள் ஒழுக்கத்தைக் குறிப்பதற்கும் ஏற்புடையவாக அமைந்திருத்தலே யாம். அங்ஙனம் இருதிறனும் உணர்த்தும் வகையில் தேர்ந்தமைக்குக் காரணம் புறத்திணைகளையும் இருதிறமும் அமையப் பூக்களாற் குறியீடுசெய்து கொள்ளுதற் பொருட்டேயாம்.

அம்முறைமையான் வெட்சி முதலிய பூப்பெயர்கள் அவ்வவ் ஒழுகலாறுகளையும் உணர்த்தி நிற்பனவாயின. அவை உணர்த்தி நிற்குமாறு :-

வெட்சி : [வெள் + சி] வெள்—வேள்—வேட்கை - வேட்டம் என அச்சொல்லின் உரிப்பகுதி நிரைகவர்தலும்-ஓம்பலும் ஆகிய வேட்கையை, விருப்பத்தைப் புலப்படுத்தி நிற்றலையறிக. கரந்தை = கரவு — கரத்தல் மீட்டலை உணர்த்தி நின்றது. வஞ்சி : இது வன்செயல் என்பதன் மரூஉ [வன் + சி = வஞ்சி] இதன்பொருட்குறிப்பு அஞ்சுதகத்தலைச் சென்று அடல் குறித்தற்கொப்ப அமைந்துள்ளமை கண்டுகொள்க. உழிஞை : உழி — உழை — ஊழ்த்தல் = முற்றுதல் சூழ்தல் வளைத்தல் இதன் பொருட்குறிப்பு முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும் என்னும் திணை ஒழுக்கத்தைக் கொண்டு நிற்றலைக்காண்க. நொச்சி = நொசி — வளைவு கோட்டம், கோட்டை = மதில் நொசிவு = இளைத்தல். இதுவும் அத்திணை நிகழ்ச்சிக்கு ஏற்ப அமைந்துள்ளமைகாண்க. தும்பை : துன்பு = துன், துனி — என்பது சென்று தலையழிக்கும் திணைப் பொருளுக்கு ஏற்ப அமைந்துள்ளமை காண்க. வாகை = வாகு = வகை — வகு என்னும் பொருட்குறிப்பு தத்தங் கூற்றைப் பாகுபட மிகுதிப் படுத்தல் என்பதற்கு ஏற்ப நிற்குமாறறிக.

'காஞ்சி' என்பது பூப்பெயரன்று அது பெருந்திணைக்குப் புறனாகலின் திணையின் தன்மையைக் குறிக்கும் பெயராக அமைந்தது. காய்தல் = காஞ்சி = காய்தல் வற்றல் முறுகுதல், அழிதல் என்னும் குறிப்புக்களான் நிலையாமையை உணர்த்தி நின்றது.

பாடாண் என்பதும் திணைத்தன்மை உணர்த்தும் பெயராகும். பாடு = பெருமை. ஆண் = ஆண்மை = ஆளுமை என்பது பரவலும் புகழ்ச்சியுமாகிய கருத்தொடு பொருந்தி நிற்குமாறு கண்டுகொள்க.

எனவே முல்லை முதலிய அகத்திணைக் குறியீடுகளும் வெட்சி முதலிய புறத்திணைக் குறியீடுகளும் அவ்வவ் ஒழுகலாறுகளைச் சுட்டியமைந்த காரணப் பெயர்களாக நிற்றலை அறியலாம்.

இக்குறியீட்டுப் பெயர்களின் உரியடியையும், அவை விரிந்து பல கோணத்திற் பொருள் பயத்தலையும் காணாமல் திணைப்பெயர்கள் ஆகுபெயராய் நிலத்தை உணர்த்தின

எனவும் நிலப்பெயர்கள் ஆகுபெயராய்த் திணையை உணர்த்தின எனவும் கூறுதல் இந்நூல் நெறிக்கு ஒவ்வாமை தெரியலாம்.

மாயோன் என்றது முல்லை நிலத்து ஆயர் சிறப்பாகக் கொண்டு வழிபடும் நெடியோனாகிய பூவைப் பூவண்ணனையாம். சேயோன் என்றது குறிஞ்சி நிலத்து வேட்டுவர் சிறப்பாகக்கொண்டு வழிபடும் வேலோனாகிய முருகவேளையாம். வேந்தன் என்றது மருத நிலத்து உழவர் சிறப்பாக ஏற்று வழிபடும் புத்தேளிர் தலைவனாகிய இந்திரனையாம். இந்திரன் என்னும் வடசொல் வேந்தன் என்னும் தமிழ்ச்சொல்லின் திரிபாகும். புத்தேளிர் என்பது புத்தொளியர் (தேசுடையார்) என்பதன் மரூஉவாகும். வருணன் என்பது நெய்தல் நிலத்துப் பரவர் சிறப்பாக அமைத்து வழிபடும் கடல்தெய்வமாகிய கடல் வாணனையாம். வருணன் என்பது வாரி என்னும் கடற்பெயரின் முதனிலையாகியவரு என்பதனடியாகப் பிறந்த தமிழ்ச்சொல்

ஏனைய கடவுளர்க்குக் கோட்டமும், படிவமும் அமைத்துக் கொண்டமை போல வருணற்குக் கோட்டம் அமைத்துக் கொள்ளாமல் சுறாமீனின் கோட்டினைப் படிவமாக அமைத்து வழிபட்டனர் என்பது

*சினைச்சுறவின் கோடுநட்டு*
*மனைச்சேர்த்திய வல்லணங்கினான்* (பட்டி—86)

என்பதனான் தெரிகிறது. காரணம் கடல் நீர் வற்றின் இடந் தோன்றியும் பெருகின் இடமழிந்தும் வேறு படுதலான் பெரு மணலுலகத்து நிலையான கோட்டமும் படிவமும் அமையவில்லை போலும்.

இனி, கருப்பொருளுள் ஒன்றாகப் பின்னர் ஓதப்பெறும் தெய்வத்தை முதற்பொருளுள் ஒன்றாகிய நிலத்தொடு கூட்டிக் கூறியது என்னையெனின்? படுதிரைவையத்தைப் பகுத்துக் கொண்ட முறைமையான் முல்லை முதலாய ஒழுகலாறு பற்றிய காரணத்தைப் புலப்படுத்தல் வேண்டியென்க.

தெய்வம் என்னும் கருப்பொருள் ஏனையவற்றைப்போல நிலமும் பொழுதும் காரணமாகத் தோன்றாமல் மக்கள் தாம் மெய்யறிவான் படைத்துக்கொண்டதாகலானும், தோற்றக் கேடுகளின்றி நிலைபேறுடையதாக இலங்குதலானும் இயற்கைப் பொருளாகிய நிலத்தொடு கூட்டிக் கூறப்பட்டது.

மற்று, முல்லை முதலாய ஒழுகலாறு அவற்றாற் புலப்படுமாறு என்னையெனின்? அவ்வவந் நிலத்து மக்களான் அவர்தம் காம ஒழுக்கத்தின் அறிவுணர்வுகட்கேற்ப அத்தெய்வக் கோட்பாடுகள் அமைத்துக் கொள்ளப் பெற்றுள்ளமையான் புலப்படுமென்க.

அஃதாவது, முல்லை நிலத்தெய்வமாகிய மாயோன் திருமகளொடு கூடித் திருநாட்டிலிருந்து காத்தற் கடவுளாய் நல்லோரைப் புரந்து பொல்லாரைக்கடிய நிலமிசைத் தோன்றி ஆயர் குடியினையும் ஆனிரைகளையும் புரந்து, ஏறுதழுவி, நப்பின்னையை மணந்து நல்லறம் புரிவோனாகவும் திருமகள் ஆற்றியிருப்பதாகவும் கொள்ளப்படுதலின் முல்லைக்குரிய கற்பொழுக்கமும் பிரிவாற்றியிருத்தலுமாகிய உரிப்பொருள்பெறப் படுமாறறிக.

குறிஞ்சிநிலத் தெய்தவமாகிய சேயோன் பனிமலைக் கடவுளின் மைந்தனாய் மலைமகளின் செல்வனாய் குன்றுதொறாடும் குமரனாய் கோலமயில் மீதமர்ந்து வேலேந்திப் பகைவரை வென்ற வீரனாகவும், குறமகள் வள்ளியைக் களவின் வழி மணந்து காதற் கேண்மை பூண்டவனாகவும் கொள்ளப் பட்டமையான் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய உரிப்பொருள் பெறப்படுதல் காண்க.

மருதநிலத் தெய்வமாகிய வேந்தன் வளிமுதலாய பூதக் கடவுளர்க்குத் தலைவனாய் வற்றாத செல்வமுடையவனாய் வியாழன் வெள்ளி முதலிய கணிவர் சூழச்சசியாகிய கிழத்தியொடு அரசுவீற்றிருப்போனாய் அரம்பை முதலிய காமக்கிழத்திய ரொடும் யாழோரொடும் ஆடல் பாடல் முதலியவற்றை நுகர்வோனாகவும் வேள்வித் தலைவனாகவும் கொள்ளப் பட்டமையான் ஊடலும் கூடலுமாகிய உரிப்பொருள் புலப்படுமா றறிக.

கடல்தெய்வமாகிய வருணன் ஆக்கலும் அழித்தலும் காத்தலுமாகிய நீர்மையுடையோனாய், மழையையும் வளியை யும் ஏவல்கொள்வோனாகவும், வேண்டி வழிபடுவார்க்கு அருள்வோனாகவும் கொள்ளப்பட்டமையான் இரங்கலும் இரங்கல் நிமித்தமுமாகிய உரிப்பொருள் பெறப்படுமாறறிக.

அங்ஙனம் அத்தெய்வக் கொள்கைகளான் அவ்வந்நிலத்து உரிப்பொருள்கள் புலப்பாடாதலொடு அத்தெய்வங்களைப் பிற நிலத்தும் எழுந்தருளச் செய்து வழிபட்டுப் பயன் பெறுதல் போல

ஒரு நிலத்திற்குரிய ஒழுகலாறு ஏனை நிலத்தும் விரவி நிகழினும் வழுவாகாதென்பதும் புலப்படுதல் காண்க.

பாலையென்பது நிலப்பெயரானன்றி ஒழுக்கத்தான் அமைந்த குறியீடாகலின் அது நானில ஒழுக்கத்தோடும் பொதுவாக (நடுவணதாக) அமைந்து நிகழும் என்க. கைக்கிளையும் பெருந்திணையும் அகனைந்திணைகளின் இரு புறத்தும் வைத்து ஓதப்பட்டமையான் அவை ஐந்திணைகளொடும் கலந்து தம் தன்மை புலப்பட வருமென்க. அவற்றுள் கைக்கிளை முல்லையினும் குறிஞ்சியினும், பெருந்திணை மருதத்தினும் நெய்தலினும் மிக்குவரும். அவ்வாறு வருதலைச் சான்றோர் செய்யுட்களுள் கண்டு கொள்க.

அகனைந்திணைகளை முல்லை முதலாக வைத்த முறைவைப்பிற்குக் காரணமும் பிறவும் காலம் பற்றி இனிக் கூறப்பெறும் சூத்திரங்களான் விளங்கும்.

## சூ. 6 : காரும் மாலையும் முல்லை (6)

**க - து :** முதற்பொருளின் பிறிதொரு கூறாகிய பொழுதியல்பும் அவை உரிமை பெறும் திணையும் பற்றிக்கூறத்தொடங்கி இச்சூத்திரத்தான் முல்லைத் திணைக்குரிய பெரும் பொழுதும் சிறுபொழுதும் இவையெனக் கூறுகின்றார்

**பொருள் :** கார்காலமாகிய பெரும் பொழுதும் மாலைக்காலமாகிய சிறுபொழுதும் முல்லைத்திணைக்குரியவை எனக் கூறுவர் புலவர்.

இது முட்டடி (முச்சீரடி) யான் அமைந்த நூற்பா. கார்-பெருமழைக்காலம் : அஃது ஆவணியும் புரட்டாசியுமாகிய இரு திங்களை எல்லையாகக் கொண்டது. மாலை—வெஞ்சுடர் மறைந்த பின்னர்த்தாகிய இரவினது முற்கூறு, அது பத்து நாழிகையை எல்லையாக உடையது.

காலமாவது புவியினது சுழற்சியானும் ஞாயிற்றினது இயக்கத்தானும் திங்களின் நிலைமையானும் அறியப்படும் அருவப் பொருளாகும். தொல்லாசிரியன்மார் பொருளிலக்கணத்தை வரையறை செய்தமைத்தற்கு முற்பட்ட அறப்பழங்காலத்து ஓர்யாண்டினது எல்லையை ஞாயிற்றுக்குரிய சிங்கவோரை (இராசி) தொடங்கித் தண்மதிக்குரிய கற்கடகவோரை இறுதியாக நிகழும் கால அளவாகக் கொண்டனர் எனத் தெரிகின்றது. அம்முறையான் ஆவணிமுதல் ஆடியீறாக உள்ள பன்னிரண்டு

திங்களுள் ஆவணிக்கும் புரட்டாசிக்கும் உரிய காலம் முதற் பருவமாக இருத்தலின் அதனை முல்லைத்திணைக்கு இயைபு பற்றி உரிமையாக்கியுள்ளனர். அதனான் முல்லைத்திணை முதலாவதாக வைக்கப்படலாயிற்று,

பின்னர் ஆரியரொடு இனக் கலப்பும் சமயக் கலப்பும் மொழிக் கலப்பும் நேர்ந்த காலத்துப் பாரதநாடு முழுமைக்கும் ஒப்ப அமையுமாறு கோள்நிலைக் கணிதமாகிய காலக்கணிதத்தை வகுத்துக்கொண்டகாலை ஆண்டினது தொடக்கத்தை மேட ஓரைக்குரிய சித்திரையை முதலாகக் கொண்டு கணித்தனர் எனத் தெரிகின்றது. எனினும் தொன்னூலோர் ஞாயிற்றை அடிப்படையாக வைத்துக் காலக்கணிதம் செய்து வந்தமையை இற்றைக்கும் கிழமைப் பெயர்கள் ஞாயிறு முதலாக எண்ணப் படுதலான் அறியலாம்.

பாரதநாடு முழுமைக்கும் கோள்கணிதம் பொதுப்பட அமைத்துக் கொண்டிருத்தல் வேண்டுமென்பதை இந்நூலாசிரியர் நாட்பெயர் (விண்மீன்) திங்கட்பெயர்கள் நிறுத்தசொல்லாக அமைந்து குறித்துவருகிளவியொடு புணரும் புணர்ச்சி விதி களைக் கூறுமிடத்து நாட்பெயர்ச் சொற்களுக்கு ஈற்றெழுத்தாக இகர ஐகார உயிர்களையும் மகரப்புள்ளியையும் திங்கட் பெயர் கட்கு ஈறுக இகர ஐகார உயிர்களையும் வரைந்து ஓதுதலான் அறியலாம்.

எனினும் பொருளிலக்கணத்தைத் தொன்னூலோர் வகுத்த முறைப்படியே கொண்டு பொழுது பற்றிய இலக்கணங்களைக் கூறமுற்பட்டு ஆவணிக்கும் புரட்டாசிக்கும் உரிய கார்காலத்தைப் பெறுங் முல்லைத்திணையை முதலாவதாக முன் வைத்தும் ஐப்பசிக்கும் கார்த்திகைக்குமுரிய கூதிர்காலத்தைப் பெறும் குறிஞ்சித்திணையை அதன் பின் வைத்தும் சிறப்புரிமையின்றி அறுவகைப் பெரும் பொழுதுகளையும் பெறும் மருதத்தையும் நெய்தலையும் அவற்றின் பின் வைத்தும் கூறியுள்ளார். அவற் றுள்ளும் மருதத்திணை புலவிக்கும் கலவிக்கும் உரியதாகலின் புணர்தல் ஒழுக்கமாகுய குறிஞ்சியைச் சாரவைத்து இறுதியாக நெய்தற்றிணையை அமைத்துள்ளனர். நில உரிமை பெறுத பாலைத்திணை மூவகைப் பெரும் பொழுதுகளைப் பெறுதலான் நடுவுநிலைத்திணையாய் அந்நால்வகை நிலத்திற்கும் உரித்தாய் அமைந்ததெனக் கொள்க.

இனி இருவகை வேனிற்கண் அறத்தாறுபற்றிப் பிரிந்த தலைவன் மீண்டுவரும் காலமாகலானும், வெப்பமும் தட்பமும்

மிகாது இடைநிகர்த்ததாகி நீரும் நிழலும் பயத்தலானும் மாவும் புள்ளும் தத்தம் துணையொடு மருவி மகிழும் கால மாகலானும் பந்தர் முல்லை தழைத்து மணம் பரப்பத் தலைவிக்குக் காமக் குறிப்பு மிகுமாதலானும் பெரும் பொழுதுகளுள் கார்காலமும், பகலெல்லாம் பொறுத்தாற்றிய தலைவி மனைவிளக்குறுத்து தலைவன் வரவெதிர்கொள்ள நினைந்துவக்கும் காலமாதலான் சிறுபொழுதுகளுள் மாலைக் காலமும் முல்லைத்திணைக்குச் சிறந்துரிமை பெற்றன என்க.

எ-டு : முகைமுற் றினவே முல்லை முல்லையொடு
தகைமுற் றினவே தண்கார் வியன்புனம்
வாலிழை நெகிழ்ந்தோர் வாரார்
மாலை வந்தன்று என் மாண்நலங்குறித்தே [குறு-188]

இதன்கண் காரும் மாலையும் ஒருங்கு வத்தன. இருவகைப் பொழுதுகளுள் யாதேனும் ஒன்று வரினும் திணையுணர்தற்கு ஏற்கும் என்பதைப் பின்னர் "இருவகைப்பிரிவும்" என்னும் சூத்திரத்தாற் கூறுவர் ஆதலின் ஒன்றே வரினும் கொள்க.

கருவி வானம் பெயல்தொடங் கின்றே
பெருவிறற் காதலி கருதும் பொழுதே
விரியுளை நன்மாப் பூட்டி
பருவரல் தீரக்கடவுமதி தேரே [ஐங் - 488]

இதன்கண் பெரும் பொழுது மட்டும் வந்தது.

அஞ்சிறை வண்டின் அரியினம் மொய்ப்ப
மென்புல முல்லை மலரும் மாலை
பையுள் நெஞ்சின் தையல் உவப்ப
நுண்புரி வண்கயி றியக்கிநின்
வண்பரி நெடுந்தேர் கடவுமதி விரைந்தே [ஐங் - 489]

இதன்கண் சிறுபொழுது மட்டுமே வந்தது.

சூ. 7 : குறிஞ்சி ;
கூதிர் யாமம் என்மனார் புலவர் (7)

க - து : குறிஞ்சித் திணைக்குரிய இரு வகைப் பொழுதுகள் இவை என்கின்றது.

பொருள் : குறிஞ்சித் திணைக்குக் கூதிராகிய பெரும் பொழுதும் யாமமாகிய சிறுபொழுதும் உரிய எனக் கூறுவர் புலவர்.

இதனை மேலைச்சூத்திரத்தொடு கூட்டி இரண்டையும் ஒருசூத்திரமாகக் கொள்வார் நச்சினார்க்கினியர். விதிப்பதும் விதிக்கப்படுவதும் வேறு வேறு பொருளின வாதலின் இரண்டாகக் கொள்வதே சூத்திர யாப்பு நெறிக் கொத்ததாகும்.

கூதிர் = குறுமழைக்காலம். அஃது ஐப்பசியையும் கார்த்திகையையும் எல்லையாக உடையது. யாமம் என்பது இரவுப் பொழுதின் இடைப்பகுதி அது பத்து நாழிகை கொண்டதாகும். யாமம் எனினும் நள்ளிரவு எனினும் ஒக்கும். வடமொழிச் சொல்லாகிய ஜாமம் வேறு இத்தமிழ்ச் சொல்வேறு.

## சூ. 8 : பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப (8)

**க - து :** குறிஞ்சித்திணைக்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி கூறுகிறது.

**பொருள் :** குறிஞ்சித் திணைக்குக் கூதிர்ப் பருவமேயன்றி முன்பனிப் பருவமும் உரியதாகும் எனக்கூறுவர் புலவர்.

பருவம் = பெரும்பொழுது. — பரப்புடையகால எல்லை என்பது இதன்கருத்து. உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை கூதிர்போல அத்துணைச் சிறவாமையின் பிரித்தோதப்பட்டது. முன்பனியாவது இரவின் முற்பகுதிக்கண் பனிபெய்யும் காலம் அஃது மார்கழி, தை ஆகிய இருதிங்களை எல்லையாகக் கொண்டது

பெருமழை குறைந்து துளி சொரியும் காலமாகலானும் புல்லும் மரனும் தழைத்து உள்ளத்திற்கு இன்பஞ் செய்தலானும் மனையகத்தோர் புறம்போதலைத் "தவிர்த்துறைவராகலானும் முன்பனியும் யாமமும் புறத்தியகத்திற்கு ஏலாதவையாகலானும் பாலது ஆணையான் இயற்கைப் புணர்ச்சி எய்தப்பெற்ற தலைமக்கள் அயலோரறியாமல் இடந்தலைப் படற்கு அவை ஏற்புடைய காலங்களாகலானும், அல்ல குறிப்பட்டு ஏங்கியிருக்கும் தலைவி காவற்கடுமையை கருதாது வரும் தலைவனை எதிர்ப் பட்டுக் கூடுங்கால் காதலின்பஞ் சிறத்தலானும் கூதிரும் முன் பனியும் யாமமும் குறிஞ்சிக்குச் சிறந்துரிமை பெற்றன என்க.

எ-டு : மன்றுபாடவிந்து மனைமடிந்தன்றே
... ... ... ... ... ... ... ... நெஞ்சு
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கயிற்றுப் புறந்தன்ன கன் மிகைச் சிறுநெறி
மாரி வானந் தலைஇ நீர் வார்பு
இட்டருங்கண்ண படுகுழி இயவின்

இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்றதின்றே (அகம்-128)

இதன்கண் கூதிரும் யாமமும் ஒருங்கு வந்தன.

உள்ளார் கொல்லோ தோழி ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ...
மழைகழி விசும்பின் மாரி ஞாயிறு
விழித்திமைப் பதுபோல் விளங்குபு மறைய
எல்லை போகிய பொழுதின் எல்லுறப்
பனிக்கால் கொண்ட பையுள் யாமத்துப்
பல்லிதழ் உண்கண் கலுழ
நில்லாப் பொருட்பிணி பிரிந்திசினோரே (நற்-241)

இதன்கண் முன்பனியும் யாமமும் ஒருங்கு வந்தன. சிறுபான்மை ஒரோவொன்றும் வரும் என்பது மேற்கூறப்பட்டது.

## சூ. 9 : வைகுறு விடியல் மருதம் (9)

**க - து :** மருதத்திணைக்குரிய பொழுது கூறுகின்றது.

**பொருள் :** வைகறையும், விடியலுமாகிய சிறுபொழுது இரண்டும் மருதத்திணைக்குரியவை எனக் கூறுவர் புலவர்.

வைகுறு விடியல் என்பவற்றின்கண் எண்ணும்மை தொக்கது. வைகுறுவாவது - இராப்பொழுதின் பிற்கூறு அது பத்து நாழிகை கொண்டது. இருள் குலைந்து மெலிந்து குறைதலான் வைகுறு எனப்பட்டது. குறு + வை என்பவை முன்பின்னாகக் கூடி ஒரு சொல்லாக மருவியதொரு குறியீடு. இது வைகறை எனவும் வழங்கப்பெறும்.

விடியலாவது, பகற்பொழுதின் முற்கூறு. அது பத்து நாழிகை யளவினது எழுஞாயிற்றின் தாக்கத்தான் வைகிய மெல்லிருள் வீடுற்றுக்கழிதலான் விடியல் எனப்பட்டது. கதிர் காலூன்றி எழும்பொழுதாகலின் இதனைக்காலை எனவும் வழங்குவர்.

பெரும் பொழுது விதந்து கூறப்படாமையான் மருதத்திற்கு அறுவகைப் பெரும் பொழுதுகளும் உரிமையுடையன என்பது உய்த்துணரப்படும்.

சோமசுந்தரபாரதியார் உரையுள் 'வைகுறிளவேனில் மருதம்' எனப்பாட வேறுபாடாக உள்ள சூத்திரம் ஒன்று உள்ளதாகக் கூறியுள்ளார். அது காணப்படும் இடம் கூறினாரில்லை.

அப்பாடத்தை ஏற்பின் 'விடியல்' என்னும் சிறுபொழுது கூறப்படாததாகிச் சிறுபொழுது ஐந்து எனக் கொள்ள நேரும்.

நாற்கவிராசநம்பி சிறுபொழுது ஐந்தே எனக் கொண்டுள்ளார். சிவஞானமுனிவரும் ஐந்தென்பதை உடன் பட்டு வைகுறுவிடியல் என்பதை ஒன்றாகக் கொண்டு அது வினைத்தொகை மொழி என விளக்குவார். எற்பாடு என்னும் பொழுதினை கதிர் எழும் காலைப் பொழுதென்பார் அதற்கு அவர் கூறும் காரணங்களைத் தக்க மேற்கோள் காட்டிச் சிறு பொழுது ஆறே என நிறுவுவார் பாரதியார்.

பெரும் பொழுதுகளை ஆறாகக் கொண்டமைக்கேற்பச் சிறு பொழுதுகளையும் ஆறு எனக் கொள்ளலே நேரிது. ஒருநாள் பொழுதைப் பகல் இரவு என வகுத்து ஒவ்வொன்றையும் முதல் இடை கடை எனப்பகுத்துக் கொண்டனர் நூலோர் எனலே ஏரணமுறைக்கு ஒத்ததாகும்.

அகநானூற்றுள்ளும் கலித்தொகையுள்ளும் நெய்தற்றிணைப் பாக்களில் சிறுபொழுதாகிய மாலைக்காலம் பயின்று வருதலையும் அஃது எற்பாடு என்னும் பொழுதொடு தொடர்புடையதாக அமைந்திருத்தலையும் காணலாம். எனவே நண்பகலுக்கும் முன்னிரவாகிய மாலைக்கும் இடைப்பட்டதாகிய கதிர் சாயும் பொழுதே எற்பாடாதல் புலனாகும்.

ஒருசார் ஆய்வாளர் 'தும்பைதானே நெய்தலது புறனே' என்பதனான் போர் தொடங்குங்காலம் பகலின் முற்கூறாதலின் எற்பாடு என்பது பகலின் பிற்கூறாதல் பொருந்தாதென்பார். நெய்தலுக்குரிய உரிப்பொருள் இரங்கல் என்பதையும் மைந்து பொருளாக நிகழும் தும்பைப் போர் முடிந்த வழியல்லது வென்றோர் வாகை சூடி மகிழ்தலும் தோற்றோரைக் கருதி இரங்குதலும் நிகழா என்பதை அவர் ஓர்ந்திலர். எனவே அச் சூத்திரத்தானும் எற்பாடு என்பது பகலின் பிற்கூறே என்பது தெளிவாம். முதனிலை நீண்ட 'பாடு' என்னும் வினைப்பெயர் தோன்றல், மறைதல், கெடுதல், துன்புறல் ஆற்றுதல் என்னும் பல்வேறு பொருள்கட்குரியதாகலின் இடம் நோக்கிப் பொருள் கோடல் வேண்டுமென்க. ஈண்டு எற்பாடு என்பது ஒடுங்குதல் என்னும் பொருள் குறித்து நின்றது,

'வைகுறு விடியல் மருதம்' என்னும் இச்சூத்திரமும் முட்டடியான் அமைந்ததாகும். இதனையும் அடுத்துவரும் நூற்பாவையும் இணைத்து ஒரு சூத்திரமாகக் கொள்வார்

நச்சினார்க்கினியர், பாரதியாரும் அவ்வாறே கொள்வார் அங்ஙனம் இணைத்துக்கூறல் ஒவ்வாதென்பதுமேல் விளக்கப் பட்டது. ஒருசூத்திரம் ஒருபொருளையே கருதி நிற்றல் வேண்டும் என்பதை உரியியலுள் ஆசிரியர் சூத்திரங்களை அமைத்துக் கூறுமாற்றான் அறிக.

காவற்கடம் பூண்ட தலைவன் கலைவளம் பேணற்கும் கலைநலன் துய்த்தற்கும், விழா நிகழ்த்தற்கும் காணற்கும் கலைஞர் ஆயினாரை மகிழ்வித்தற்கும் கடப்பாடுடையனாதலின் அவை காரணமாகப் பிரிந்திருந்து மனையகம் புகுதற்குரியவை வைகுறுவும் விடியலு மாகலானும், பரத்தையிற் பிரிந்தோனும் பிறரறியாவண்ணம் மனைபுகும் காலமும் அவையாகலானும் தலைவனை எதிர்நோக்கியிருந்த தலைவி மாலையும் யாமமும் கழிய நெஞ்சழிந்து புலவியுறுதற்கும் அவள் வாயிலை அடைத்து ஊடலை நீட்டியவழி வாயில் வேண்டியும் வாயில் விடுத்தும் தலைவன் ஊடலுணர்த்தற்கு உரிய காலங்கள் அவையே யாகலானும் வைகுறுவும் விடியலும் மருதத்திணைக்குச் சிறந்துரிமை பெற்றன என்க.

எ-டு : "வீங்குநீர்" என்னும் மருதக்கலியுள்
அணைமென்றோள் யாம் வாட அமர்துணைப்புணர்ந்துநீ
மணமனையா யெனவந்த மல்லலின் மாண்பன்றோ
பொதுக்கொண்ட கௌவையிற்பூவணைப் பொலிந்தநின்
வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை
[கலி-66]

இதன்கண் வைகுறு என்னும் சிறுபொழுது வந்தது.

"விரிகதிர்" என்னும் மருதக்கலியுள்
தணந்தனை எனக்கேட்டுத் தவறோரா தெமக்குநின்
குணங்களைப் பாராட்டும் தோழன் வந்தீயான் கொல்
கணங்குழை நல்லவர் கதுப்புற லணைதுஞ்சி
அணங்குபோற் கமழும்நின் அலர்மார்பு காணிய [கலி - 71]

இதன்கண் விடியல் குறிப்பாக வந்துள்ளமை காண்க.

**சூ. 10 : நெய்தல்,**
**ஏற்பா டாதல் மெய்பெறத் தோன்றும் (10)**

க - து : நெய்தற்றிணைக்குரிய பொழுதாமாறு கூறுகின்றது.

**பொருள் :** நெய்தற்றிணைக்குரிய பொழுது எற்பாடாகிய சிறுபொழுதாதல் பொருண்மைபெறத் தோன்றும்

எற்பாடாவது : ஞாயிறு சென்றுபடும்பொழுது. சாயுங்காலம் என்பது உலகவழக்கு. பகலின் பிற்கூறு என்பது மேல் விளக்கப் பட்டது. அது நண்பகற்கும் மாலைக்கும் இடைப்பட்ட பத்து நாழிகையைக் கொண்டது. இதனை அந்திப் பொழுதெனவும் வழங்குவர். அந்தி = அந்த முறுதல்.

பெரும் பொழுது விதந்து கூறாமையான் மருதத்தை ஒப்ப இதற்கும் அறுவகைப் பெரும்பொழுதும் உரிய எனக்கொள்க.

'மெய்பெறத்தோன்றும்' என்பதனை வைகுறு விடியல் மருதம் என்பதற்கும் கூட்டிக்கொள்க. இரண்டற்கும் பெரும் பொழுது சிறந்துரிமை பெற்றின்றேனும் இச்சிறு பொழுதுகளே திணையுணர்தற்கு உரியவாக நிற்கும் என்பார் "மெய்பெறத் தோன்றும்" என்றார்.

வெஞ்சுடர் வெப்பந்தீர்ந்து நிழல் கூரவும் தெண்கழி மேய்ந்த புட்கள் குடம்பை நோக்கிப்பெயரவும் புன்னை முதலிய பூக்களின் நாற்றம் விரிந்து பரவவும் நேரும் காலம் ஆதலின் அது காதல் கைம்மிக்கு நெஞ்சழிதலைச் செய்தலின் இரங்கலாகிய உரிப்பொருள் தோன்றுதற்கு எற்பாடு சிறந்து நெய்தற்கு உரிமையுடையதாயிற்றென்க.

**எ - து :** நெடுவேள் மார்பின் ஆரம் போலச்
செவ்வாய் வானம் தீண்டி மீனருந்து
பைங்காற் கொக்கின் நிரைபறை யுகப்ப
எல்லை பைபயக்கழிப்பிக் குடவயிற்
கல்சேர்ந்தன்றே பல்கதிர் ஞாயிறு
... ... ... ... ... ... ... ... ... ...
சிறுகுரல் நெய்தலெம் பெருங்கழிநாட்டே [அகம்-120]

இதன்கண் "கல்சேர்ந்தன்றே பல்கதிர் ஞாயிறு" என எற்பாடு வந்தவாறு காண்க.

## சூ. 11 : நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே (11)

**க - து :** பாலைத்திணைக்குரிய பொழுதுகளாமாறு கூறுகின்றது

**பொருள் :** தனக்கென நிலமின்றி நானிலங்களின் திரிபு களை நிலனாகக்கொண்டு பொதுவாக நிகழும் நடுவுநிலைத் திணை எனப்படும் பாலைத்திணை நண்பகலாகிய சிறு பொழுதும் இளவேனிலும் முதுவேனிலுமாகிய பெரும்பொழுது

களின் பாங்கினும் நிகழ்தலைக்கருதிய முறைமையுடைய தெனக் கூறுவர் நூலோர்.

முடிவுநிலை என்றது முதுவேனிலை. கார்முதலாக எண்ணுதற்கண் முதுவேனில் இறுதிப்பருவமாதலின் அதனை முடிவுநிலை என்றார். வேனிலின் முடிவாகிய பருவம் எனினுமாம்.

பரத்தையிற்பிரிவும் நாடுகாவல், அறங்காவற்பிரிவுகளும் பாலையாகாமையின் ஓதல் முதலிய ஏனைய பிரிவுகள் இம்மூன்று பொழுதுகளின் பாங்காக நிகழுமாதலின் "மருங்கின் முன்னிய நெறித்தே" என்றார் முன்னிய என்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. 'ஒடு' எண்ணுப் பொருட்டாய் நின்றது. அதனை முடிவுநிலை என்பதனொடுங் கூட்டிக்கொள்க. முடிவுநிலை எனப்பின் வந்தமையின் வேனில் என்றது இளவேனிலை என்பது பெறப்படும்.

பகைவயிற் பிரிவும் தூதிற் பிரிவும் எதிர்பாரா வகையானும் நிகழுமாதலின் ஏனைப் பருவங்களும் விலக்கற்குரியனவல்ல என்பது தோன்ற "மருங்கின் முன்னிய நெறித்தே" என்றார் அதனான் பெரும் பொழுதினை முற்கூறாது பாலைக்குச் சிறந்த சிறு பொழுதாகிய நண்பகலை முற்கூறினார் என்க.

வேனில் = வெம்மை நிலை பெறும்பொழுது [வேம் + நில் என்பவை மருவி ஒரு சொல்லாக நின்றது] இளவேனில் சித்திரைத் திங்களையும் வைகாசித் திங்களையும் — முதுவேனில் ஆனித் திங்களையும் ஆடித் திங்களையும் எல்லைகளாகக் கொண்ட பருவங்களாகும்.

நண்பகல் = செறிந்தபகல் — நடுப்பகல் = நள் + பகல் என்பவை ஒருமொழிப் புணர்ச்சியாய் வந்த பெயர்ச்சொல். அது காலை என்னும் விடியற்கும் ஏற்பாட்டிற்கும் இடைப்பட்ட பத்து நாழிகையைக் கொண்டது.

பகல் = பொழுது. [போழ் + து] ஒரு நாளின்கண் ஒளியையுடைய பக்கம். அதனால் கதிரவனுக்குப் பகலோன் என்பது காரணப் பெயராயிற்று.

**சூ. 12 : பின்பனி தானும் உரித்தென மொழிப. (12)**

க - து : பாலைத்திணைக்கு எய்தியதன் மேற்சிறப்பு விதி கூறுகின்றது.

**பொருள் :** பாலைத்திணைக்கு மேற்கூறிய இருவகை வேனிற் பருவங்களேயன்றி அவற்றின் முன்னர்த்தாகிய பின் பனிப் பருவமும் உரியதாகும் எனக் கூறுவர் புலவர்.

தான் என்பது சீர்நிறைக்கவந்த அசை, உம்மை இறந்தது தழுவிய எச்சவும்மை. இருவகை வேனிலை ஒப்ப இதுசிறவாமையின் பிரித்தோதப்பட்டது. பின்பனியாவது : இரவின் பிற்பகுதியில் பனிமிகும் பருவம் அது மாசியும் பங்குனியு மாகிய இருதிங்களை எல்லையாகக் கொண்டது.

காலையும் மாலையும் போலாமல் கடுங்கதிர் கூர்ந்து வெப்பம் மிகுதலானும் சோலையும் மரனும் வெம்பி நீர் நிலைகள் வறன்றுவற்றி நீரும் நிழலுமின்றி நிலவளந் திரிந்து காய்தலானும் மாவும் புள்ளும் புலம்புற்று மெலியத் துன்பு மிகும் காலமாதலானும் இவை பாலைத்திணைக்கு உரிமை பெற்றனவாயின என்க.

எ - டு : புன்காற் பாதிரி அரிநிறத் திரள்வீ
நுண்கொடி அதிரலொடு நுணங்கறல் விரிப்ப
அரவெயிற்றன்ன அரும்புமுதிர் குரவின்
தேனிமிர் நறுஞ்சினைத் தென்றல் போழ
குயில் குரல் கற்ற வேனிலும் துயில்துறந்து
இன்னா கழியும் கங்குல் என்றுநின்
நன்மாமேனி அணி நலம் புலம்ப
இனைதல் ஆன்றிசின் ஆயிழை ........ (அகம் - 237)

இதன்கண் இளவேனில் வந்தது.

எல்வளை நெகிழச் சாஅய் ஆயிழை
நல்லெழில் பணைத்தோள் இருங்கவி னழியப்
பெருங்கை யற்ற நெஞ்சமொடு நத்துறந்து
இரும்பின் இன்னுயிர் உடையோர் போல
வலித்து வல்லினர் காதலர் ; வாடல்
ஒலிகழை நிவந்த நெல்லுடை நெடுவெதிர்
கலிகொள் மல்லர்வில் விசையின் உடைய
பைதற வெம்பிய கல்பொரு பரப்பின்
வேனில் அத்தத் தாங்கண் வானுலந்து
அருவி யான்ற உயர்சிமை மருங்கிற்
பெருவிழா விளக்கம் போலப் பலவுடன்
இலையில மலர்ந்த இலவமொடு
நிலையுயர் பிறங்கல் மலையிறந்தோரே [அகம்-185]

இதன்கண் முதுவேனில் வந்தது.

''வண்டுபடத்துதைந்த'' என்னும் அகப்பாட்டினுள்

வேய்மருள் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டுப்
பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக
அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின் [அகம்-1]

என, நண்பகற் பொழுது வந்தது,

அம்ம வாழி தோழி முன்னின்று
பனிக்கடுங் குரையம் செல்லா தீமெனச்
சொல்லின மாயிற் செல்வர் கொல்லோ
ஆற்றயலிருந்த இருந்தோட்டஞ்சிறை
நெடுங்காற் கணந்துள் ஆளறி வுறீஇ
ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்
மலையுடைக் கானம் நீந்தி
நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசினோரே [குறுந்-350]

இதன்கண் பின்பனி வந்தது.

இருவகை வேனிலும் பாலைக்குச் சிறந்தன என்றார், எனினும் பின்பனியிற் பிரிந்தோர் மீண்டவழி இளவேனிற் பருவம் புணர்தற்குச் சிறந்ததாகலின் ''முன்னிய நெறித்தே'' என்றார் என்க.

பாலை நடுவுநிலைத்திணையாய் பொது ஒழுக்கமாதலின் மருதம் ஒழிந்த ஏனை நிலத்தும் பிரிவு நிகழ்தற்கு ஒக்குமென்க.

கார்செய் காலையொடு கையறப்பிரிந்தோர்
தேர்தரு விருந்திற் றவிர்குதல் யாவது
மாற்றருந் தானை நோக்கி
ஆற்றவுமிருத்தல் வேந்தனது தொழிலே [ஐங்-451]

இது முல்லைக்கண் நிகழ்ந்த பாலை.

கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ
இருங்கல் வியலறை விரிப்பத்தாஅம்
நன்மலை நாடன் பிரிந்தென
ஒண்ணுதல் பசப்பது எவன்கொல் அன்னாய் [ஐங்-219]

இது குறிஞ்சிக்கண் வந்த பாலை.

எக்கர் ஞாழற் செருந்தியொடு கமழத்
துவலை தண்டுளி வீசிப்
பயலை செய்தன பனிபடுதுறையே [ஐங்-141]

இது நெய்தலுள் வந்த பாலை.
பிறவும் சான்றோர் செய்யுட்களுள் கண்டு கொள்க.

நடுவணைந் திணைகளுள் முல்லைக்கும், குறிஞ்சிக்கும், பாலைக்கும் பெரும்பொழுதுகள் விதந்து கூறப்பட்டமையான் அவ்வவ்வொழுக்கங்களின் உணர்வு நிலைகளின் எல்லை ஒரு பருவகால அளவிற் பரப்புடையதென்பதும் மருதத்திற்கும் நெய்தற்கும் பெரும்பொழுது விதந்து கூறாமையான் அவற்றிற்குரிய உரிப்பொருளாகிய ஊடலும் இரங்கலுமாகிய உணர்வுகள் சிறுபொழுதளவில் நிகழும் குறுகிய கால எல்லையை உடையவை என்பதும் ஊடலும் இரங்கலும் நீட்டிக்குமாயின் அவை அகனைந்திணைக்கண் நிகழும் பெருந்திணைப் பகுதியாம் என்பதும் நுணுகி நோக்கின் புலனாகும். அங்ஙனமாதலைக் கலியினுள்ளும் பிற சான்றோர் செய்யுளுள்ளும் கண்டு கொள்க.

## சூ. 13 : இருவகைப் பிரிவும் நிலைபெறத் தோன்றலும் உரிய தாகும் என்மனார் புலவர் (13)

**க-து :** *திணை நுவலுதற்கண் மேற்கூறிய காலப்பிரிவுகள் பற்றியதொரு மரபு கூறுமுகத்தான் ஆண்டு நிகழ்வதோர் ஐயமகற்றுகின்றது.*

**பொருள் :** கார் முதலாகக் கூறப்பெற்ற அறுவகைப் பெரும்பொழுதும் மாலை முதலாகக் கூறப்பெற்ற அறுவகைச் சிறுபொழுதுமாகிய அவ் இருவகைக் காலக் கூறுகளும் நிலைபெற ஒருங்கு தோன்றலும் திணைக்கு உரியதாகும் என்று கூறுவர் புலவர்.

*தோன்றலும் என்னும் எதிர்மறை உம்மையான் அவற்றுள் ஒருவகை தோன்றலும் உரியதாகும் எனக்கொள்க. பிரிவு என்றது உட்கூறாகிய பகுப்பினை. பகுத்தலைப் பிரிவெனக் கூறுதலை "உருபென மொழியினும் அஃறிணைப் பிரிப்பினும்" [கிளவி-24] என்பதனான் அறிக. உரியது என்பதற்கு வினை முதல் வருவிக்கப்பட்டது.*

*அஃதாவது முதற்பொருளுள் காலத்தைத் திணைகட்கு உரிமை செய்து கூறியவழிக் "காரும் மாலையும் முல்லை குறிஞ்சி கூதிர் யாமம்" என்றாங்குப் பெரும் பொழுதினையும் சிறு பொழுதினையும் இணைத்து ஒருங்கு கூறி வந்தமையானே திணை கூறுமிடத்து அதற்கு அவ் இரு காலக் கூறுகளும் ஒருங்கு வரும் எனக் கொள்ளக் கிடந்தமை நோக்கி அங்ஙனம் அவை ஒருங்கே நிலைபெறாமல் ஒருவகைக் கூறு நிலைபெற்று வரினும் இழுக்காதென்றவாறு.*

இருவகையும் ஒருங்கு தோன்றாவழி வழுவாங்கொல் என நிகழும் ஐயத்தை நீக்குதலின் ஐயமகற்றியவாறாயிற்று.

எ - டு : சிறை பனியுழந்த சேயரி மழைக்கண்
பொறையரு நோயொடு புலம்பலைக் கலங்கி
பிறருங்கேட்குநர் உளர்கொல் உறைசிறந்து
ஊதை தூற்றுங் கூதிர் யாமத்து
ஆனுளம்பு உலம்பு தொறுளம்பும்
நாநவில் கொடுமணி நல்கூர்குரலே [குறு-86]

இக்குறிஞ்சித் திணைச் செய்யுட்கண் இருவகைப்பொழுதும் நிலைபெற்று வந்தன.

நெடுவரை மருங்கின் பாம்புபட இடிக்கும்
கடுவிசை யுருமின் கழறுகுரல் அளைஇக்
காலொடு வந்த கமஞ்சூல் மாமழை
ஆரளிஇலையோ நீயே பேரிசை
இமயமும் துளக்கும் பண்பினை
துணையிலர் அளியர் பெண்டிரி ஃதெவனோ [குறு – 158]

இக் குறிஞ்சித்திணைப் பாடலுள் பெரும்பொழுது மட்டும் வந்தது.

ஒலிவெள்ளருவி ஓங்குமலை நாடன்
சிறுகட் பெரும்புலி வயக்களிறு தாக்கித்
தொன்முரண் சொல்லும் துன்னருஞ் சாரல்
நடுநாள் வருதலும் வரூஉம்
வடுநா ணலமே தோழி நாமே [குறு - 88]

இதன்கண் ‘ நடுநாள் ’ எனச் சிறுபொழுது மட்டுமே வந்தது. பிறவும் இவ்வாறே வருமாறு சான்றோர் செய்யுட்களுள் கண்டு கொள்க.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூறிய உரையும் விளக்கமும் பொருந்தாமையை பாரதியார் நுண்ணிதின் ஆய்ந்து மறுத்துள்ள மறுப்புரை ஏற்புடைத்தாகும். ஆயினும் அவர் இளம்பூரணர் கொண்ட பாடத்தை ஏலாமல் நச்சர் கொண்ட பாடத்தை ஏற்று இருவகைப் பிரிவென்பதற்கு ‘ வேனிற் பிரிவும் பின்பனிப் பிரிவும் ’ எனப்பொருள் கூறி அதுபாலைக்குரியதாகும் என்பார். இருவகைப் பிரிவுகளை அதுவெனச் சுட்டுதலும் உரியது எனமுடித்தலும் வழுவாதலை நோக்கிற்றிலர் அவர். மற்று அவ்இருவகைப் பிரிவும் பாலையோ அன்றோ என ஐயந் தோன்றுமாயினன்றே அங்ஙனம்

விதந்து வலியுறுத்தல் வேண்டும்? காரணமின்றி வலியுறுத்தல் பயனில் கூற்றாய் முடியும். அன்றி, விளங்குதற் பொருட்டுக் கூறினார் எனின்? குறிஞ்சி கூதிர்யாமம், எனக்கூறிய பின்னர்ப் பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப என்றவிடத்து அவ் இருவகைப் புணர்வும் குறிஞ்சிக்குரிய வாகும் என்றொரு சூத்திரம் கூறியிருத்தல் வேண்டும். அங்ஙனம் கூறாமையான் அஃது ஆசிரியர் கருத்தன்று என்பது புலப்படும். எனவே பாரதியார் உரையும் நூல் நெறிக்கு ஒவ்வாமை அறிக. விரிக்கின் பெருகுமாதலின் அவரவர் உரைகளைநோக்கி ஒவ்வாமை கண்டு கொள்க.

**சூ. 14 : திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப
புலன்நன் குணர்ந்த புலமை யோரே. (14)**

க - து : முதற்பொருளுள் நிலம்பற்றி எழுவதோர் ஐயமகற்று முகத்தான் அதனொடு இயைபுடைய உரிப்பொருள்கட்காவதொரு மரபு கூறுகின்றது.

அஃதாவது "முதலெனப் படுவது நிலம் பொழுதிரண்டின் இயல்பென மொழிப" எனமுதற் பொருளின் இலக்கணத்தை அதிகாரப்படுத்தி அவ்இரண்டனுள் நிலம்பற்றிய இலக்கணத்தை "மாயோன் மேய காடுறையுலகமும்" என்னும் சூத்திரத்தான் கூறி அச்சூத்திரத்தான் காடுறையுலகம் முதலாய நிலங்கள் ஒழுக்கத்திற்குரிய குறியீடுகளாகிய முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் பெயரானும் வழங்கப்படும் என்றமையான் அவ்வாற்றான் திணைக்கு ஓதப்படும் இலக்கணங்கள் நிலத்திற்கும் செல்லுமாறு நிற்றலை விலக்கல் வேண்டித் திணைக்குரிய இலக்கணத்தை எடுத்துக்கூறிப் பின்னர் நிலத்திற்குரிய இயல்பினைப் புலப்படுத்துகின்றது இது.

எனவே இச்சூத்திரம் அதிகரிக்கப்பட்ட முதற்பொருள்பற்றிய இலக்கணமே கூறுகின்றதென்பது புலனாகும்.

பொருள் : பொருளிலக்கணக் கோட்பாடுகளை நன்குணர்ந்த அறிவினையுடையார் நிலத்தொடு சார்த்தி முல்லை முதலாகக் கூறப்பட்ட உரிப்பொருளாகிய ஒழுக்கங்கள் அவ்வந் நிலங்கட்கு உரியவாக நிகழ்தலேயன்றிப் பிற நிலங்களில் மயங்கி நிகழ்வுறுதலும் கடியப்படும்நிலை யில்லனவாகும். அங்ஙனம் அவ்வொழுக்கங்கள் மயங்கி நிகழினும் காடுறையுலகம் முதலாய நிலங்கள் தம்முள் ஒருங்கு மயங்குதல் இல்லை எனக் கூறுவர்.

என்றது, காடுறையுலகம் முதலியவை முல்லை, குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் பெயர்களானும் கூறப்படு மென்றமையான் ஒழுக்கமாகிய திணையையும் நிலமாகிய திணையையும் ஒன்றாகக் கருதற்க, திணைமயக்கம் என்னு மிடத்து மயங்குதல் ஒழுக்கமாகிய திணையேயன்றி நிலமன்று என்றவாறாம்.

அஃதாவது, முல்லையுட் குறிஞ்சி மயங்கிற்று என்றவழி முன்னது நிலமென்றும் பின்னது ஒழுக்க மென்றும் அறிதல் வேண்டும். அவ்வாறன்றி முல்லை நிலத்துள் குறிஞ்சி நிலம் மயங்கிற்று எனல் கூடாது என்றவாறு.

ஒரு நிலத்துடன் பிறிதொரு நிலத்திற்குரிய ஒழுக்கம் மயங்கும் ஒரு நிலத்துள் பிறதொரு நிலன் மயங்காது என்பது நன்கு விளங்க "நிலன் ஒருங்கு மயங்குதல்இல" என்றார்.

அக ஒழுக்கங்களாக வகுத்தோதப் பெற்றவை கைக்கிளை முதலாக ஏழாகும். ஆயினும் உரிப்பொருள் என வகுத்துக் கூறப்பெறுபவை ஐந்தாகும். அவை நடுவணைந்திணைகட் குரியவை. அம்முறைமையான் கைக்கிளை பெருந்திணைகள் விலக்குறுமன்றே அதனான் அவையும் அடங்க உரிப்பொருள் மயக்குறுதலும் என்னாது திணைமயக்குறுதலும் என்றார் என்க.

முதற் பொருள் இரண்டனுள் நிலன் ஒருங்குமயங்கா என்ற பொருட்பேற்றானும் (அருத்தாபத்தியானும்) 'மயக்குறுதலும்' என்ற எச்ச உம்மையானும் 'இலவே' என்ற பன்மை முடிபானும் காலம் ஒருங்கு மயங்குமென்பதுதானே போதரும்.

அவ்வாற்றான் நிலம் வகுக்கப்பெறாத கைக்கிளையும் பெருந் திணையும் முல்லை முதலாய நிலங்களில் விரவி நிகழும் என்பதும் அங்ஙனம் நிகழ்வதே அவற்றின் மயக்கம் என்பதும் புலப்படவைத்தார் என்க.

இனிப் பாலைக்கு நிலம் பிரித்து ஓதப்பெறவில்லையா யினும் காலம் வகுத்தோதப் பெற்றமையான் அக்காலங்களின் கடுமையான் வளந்திரிந்த நானிலப் பகுதிகளே பாலையாக அமைந்து வரும் என்பதும் அந்நிலமும் பொழுதும் பற்றித் தோன்றும் கருப்பொருள்கள் பாலைக்குரிய கருப்பொருளாக அமைந்து வரும் என்பதும் அம்முறைமையானமைந்த பாலை நிலத்து ஏனைய ஒழுக்கங்கள் மயங்கும் என்பதும் தெளியப் படும். பிறவும் ஓர்ந்துணர்ந்து கொள்க.

எ - டு : புலிகொல்பெண்பால் பூவரிக்குருளை
வளைவெண் மருப்பிற் கேழற்புரக்கும்
குன்றுகெழு நாடன் மன்றதன்
பொன்போற்புதல்வனொடுஎன் நீத்தோனே [ஐங்-265]

இது குறிஞ்சி நிலத்து மருதவொழுக்கம் மயங்கியது

அன்னாய் வாழிவேண்டன்னை என்றோழி
பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை
கொன்னே கடவுதியாயின் என்னதூஉம்
அறிய வாகுமோ மற்றே
முறியிணர்க் கோங்கம் பயந்தமாறே [ஐங்-366]

இது பாலையுள் குறிஞ்சியொழுக்கம் மயங்கியது

வண்சினைக் கோங்கின் தண்கமழ் படலை
இருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப
நீநயந் துறையப் பட்டோள்
யாரளோ வெம் மறையா தீமே [ஐங்-370]

இதுபாலைநிலத்துள் மருதம் நிகழ்ந்தது.

அன்னை வாழிவேண்டன்னை உதுக்காண்
நேர்கொடிப் பாசடும்பு பரியவூர்பிழிபு
நெய்தல் மயங்கி வந்தன்று நின்மகள்
பூப்போ லுண்கண் மரீஇய
நோய்க்கு மருந்தாகிய கொண்கண்தேரே [ஐங்-101]

இது நெய்தலுள் குறிஞ்சிமயங்கியது.

கண்டிகுமல்லமோ கொண்கநின் கேளே
ஒள்ளிழை உயர்மழை வீழ்ந்தென
வெள்ளாங்குருகை வினவுவோளே [ஐங்-122]

இது நெய்தற்கண் மருதஒழுக்கம் மயங்கியது.

கருங்கோட்டெருமைச் செங்கண் புனிற்றாக்
காதற்குழவிக் கூறுமுலை மடுக்கும்
நுந்தை நும்மூர் வருதும்
ஒண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே [ஐங்-92]

இது மருதநிலத்துக் குறிஞ்சியொழுக்கம் மயங்கியது. பிறவும் சான்றோர் செய்யுட்களுள் மயங்கி வந்துள்ளமை கண்டு கொள்க.

"மழையில் வானம்" என்னும் மணிமிடை பவளத்துள்

தேர்தருகடுநீர் தெருவுதோ றொழுகப்
பேரிசை முழக்கமொடு சிறந்து நனிமயங்கிக்
கூதிர் நின்றன் றாற் பொழுதே ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...
வெஞ்சின வேந்தன் பாசறையோரே [அகம்-264]

இது முல்லைத்திணையின்கண் கூதிர்ப்பொழுது மயங்கியது.

கருங்கால் வேங்கை வீயுகுதுறுகல்
இரும்புலிக் குருளையிற்றோன்றும் காட்டிடை
எல்லிவருநர் களவிற்கு
நல்லையல்லை நெடுவெண்ணிலவே [குறு-47]

இதன்கண் குறிஞ்சியில் வேனிற்பொழுது மயங்கிற்று. பிறவும் சான்றோர் செய்யுட்களுள் கண்டுகொள்க.

'ஊர்க்கால்நிவந்த' என்னும் குறிஞ்சிக்கலியுள் மாதர் கொல் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப் பேதுறூஉம் என்பதை அறிதியோ அறியாயோ [கலி-56] எனக் குறிஞ்சியுள் கைக்களை ஒழுக்கம் மயங்கிற்று. முல்லைக்கலி பலவற்றுள் கைக்கிளை மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

"எழில்மருப் பெழில்வேழம்" என்னும் நெய்தற்கலியுள்
மாமேலேன் என்று மடல்புணையா நீந்துவேன்
தேமொழி மாதர் உறாஅது உறீஇய
காமக் கடலகப் பட்டு [கலி-139]

என, நெய்தலுள் பெருந்திணைப்பகுதி மயங்கி வந்தது. "புரிவுண்ட புணர்ச்சியுள்" என்னும் நெய்தற்கலி முதலாய ஆறுபாக்களுள்ளும் பெருந்திணைப்பகுதி மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

வானமூர்ந்த வயங்கொளிமண்டிலம்
நெருப்பெனச் சிவந்த உருப்பவிரங்காட்டு [அகம்-11]

என முல்லையுள் பாலை மயங்கிற்று

"தொடங்கற்கட்டோன்றிய முதியவன் முதலாக" என்னும் பாலைக்கலியுள் குறிஞ்சி வந்தது. "மறந்தவணமையாராயினும்" என்னும் அகப்பாட்டினுள் [அகம்-37] பாலையுள் மருதம் வந்தது. பிறவும் இவ்வாறு வருவனவற்றையெல்லாம் இதனான் அமைத்துக்கொள்க.

## சூ. 15 : உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே (15)

க - து : மேலைச்சூத்திரத்து நிலம் பற்றியதொரு மரபு கூறும் வழி இயையு பற்றிவந்த திணைமயக்கம் அதிகாரப்பட்டமையான் புணர்தல் முதலிய ஐவகை உரிப்பொருளல்லாத ஒரு சார் ஒழுக்கமாகிய பொருள் வகையும் முல்லை முதலிய திணைகளுள் மயங்கி வருமென்கின்றது.

ஒருசார் "பொருள்வகை" என்றது செய்யுளியலுள்

"இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்
ஒழுக்கமும் என்றிவை இழுக்கு நெறியின்றி
இதுவா கித்திணைக்குரிப்பொரு ளென்னாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை என்ப". [செய்-208]

எனச் செய்யுளுறுப்பாக ஓதப்பெறும் பொருள்வகையாம்.

**பொருள் :** உரிப்பொருளல்லாதனவாகிய பிற பொருள் வகையும் மேற்கூறிய திணைமயக்கம் போல மயங்கிவரப் பெறும்.

செய்யுளியற் சூத்திரத்து அவை பொதுவாய் நிற்குமென்றமையான், மயங்கவும் என்னும் உம்மையைப் பிரித்து அல்லன என்பதனொடு கூட்டி உரிப்பொருளல்லனவும் மயங்கப்பெறும் என அமைத்துப் பொருள் கொள்க.

ஆண்டு இன்பம் இடும்மை முதலியவற்றை "உரிப்பொருள் என்னாது பொதுவாய் நிற்றல்பொருள் வகை" என்றதனான் அவற்றையே ஈண்டு "உரிப்பொருளல்லன" எனவிதந்து அவற்றிற்கு இலக்கணங் கூறினார் என்க. இது மொழிவாம் என்னும் உத்திவகை.

அவை பொதுவாக நின்று அகனைந்திணைக்கண் விரவிவருதலின் அங்ஙனம் விராய் வருதலும் மயக்கமே என உணர்த்தியவாறு.

'பொருள்வகை' என்னும் செய்யுளுறுப்பு அகத்திற்கும் புறத்திற்கும் உரிமையுடைய இலக்கணமாதலின் அதனை ஈண்டுக் கூறாமல் செய்யுளுறுப்பாக ஆண்டுக்கூறி அதன்கண் உள்ள புணர்வும் பிரிவும் என்பவை அகத்திணைக்குச் சிறப்புரிமை பெறுபவையாதலின் அவற்றையே ஈண்டு உரிப் பொருளல்லன எனச் சுட்டிக் கூறினார் என்க.

தலைவியும் தோழியும் தலைவனது கொடுமை கூறுமிடத்து அன்பிலை கொடியை (நற்-17) அறனிலை, என்றாற்போலச் சினந்து ஒழுகும் பொருண்மை உரிப்பொருள் நோக்கில் ஊடலைச் சார்ந்த பொருண்மை எனத்தகும் அவ்வகை ஒழுகலாறு பொதுவாய் நின்று அகனைந்திணைக்கண் விரவி வருதலைச் சான்றோர் செய்யுட்கண் கண்டு கொள்க.

எ.டு: ஈரமிலாத இவன் தந்தை பெண்டிருள்
பாரில் தவிர்ந்தனை கூறு [மருதக்கலி - 19]

குன்ற இறுவரை கோண்மா இவர்ந்தாங்குத்
தந்தை வியன்மார்பிற் பாய்ந்தான்
அறனில்லா அன்பிலி பெற்ற மகன். [மருதக்கலி-21]

நோயட வருந்தியும் நீ செய்த அருளின்மை
ஆயமும் மறைந்தாள் என் தோழி அதுகேட்டு
மாயநின்பண்பின்மை பிறல் கூறல்தான் நாணி (கலி-44)

இன்னும் வருமே தோழி வாரா
வன்கணாளரொடியைந்த
புன்கண் மாலையும் புலம்புமுத்துறுத்தே [நற்-89]

இலங்கேர் எல்வளை ஏர்தழைதைஇ
நலஞ்செல நல்கிய தொடர்பவள் சாஅய்ப்
புலந்தழப் புல்லாது விடுவாய்
இலங்குநீர்ச் சேர்ப்ப கொடியைகாண்நீ [நெய்தற்கலி-8]

இங்ஙனம் ஏனைய பண்பும் செயலுமாகிய பொருள் வகையும் அகனைந்திணையுள் மயங்கி வருமாறு கண்டு கொள்க.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் உரிப்பொருளல்லாத கருப்பொருளும் முதற்பொருளும் மயங்கும் என உரை கூறுவார் முதற்பொருளுள் நிலம் மயங்காது என்பதும் காலம் மயங்கும் என்பதும் "திணைமயக்குறுதலும்" என்னும் சூத்திரத்தாற் பெறப்பட்டமையானும் கருப்பொருள் மயக்கம் பற்றி "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" என்னும் சூத்திரத்தாற் கூறுப்

ஆகலானும் "திணைமயக் குறுதலும்" என்னும் சூத்திர விளக்கத்துள் காலம் மயங்குமெனக் கூறியவர் ஈண்டும் காலம் மயங்குமெனல் கூறியதுகூறலா மாகலானும் அவர் கருத்து ஒவ்வாமை அறியலாகும்.

இனி நச்சினார்க்கினியர் உரிப்பொருளென்று ஓதப்படும் ஐந்திணையுமல்லாத கைக்கிளையும் பெருந்திணையும் நால்வகை நிலத்தும் மயங்கவும் பெறும் என்பார். உம்மையாற் பாலையும் அவ்வாறு மயங்குமெனக் கொள்க என்பார். தமக்கென நிலமிருப்பின் பிற நிலத்துச் செல்லுதல் மயக்கமாம். நிலமில்லாத கைக்கிளையும் பெருந்திணையும் சென்று மயங்குமெனல் பொருளில் கூற்றாகும். அன்றியும் உரிப்பொருள் என்பது திணையின் ஒரு கூறாதலன்றி அதுவே திணையெனக் கூறல் மயங்க வைத்தலாகும். அன்றியும் "திணைமயக்குறுதலும்" என்னும் சூத்திரவுரையுள் பாலை பிற நிலத்துள் மயங்குமெனவும் பாலையுள் பிற ஒழுக்கங்கள் மயங்குமெனவும் எடுத்துக் கூறி விளக்கியவர் ஈண்டும் பாலை பிற நிலத்துள் மயங்குமெனல் கூறியது கூறலாகுமாதலின் அவர்கருத்து ஏலாமை அறியலாம்.

இனி அகனைந்திணைகட்கு உரிப்பொருள் கூறியாங்குக் கைக்கிளை பெருந்திணைகட்கு வேறு விதந்து கூறாமையான் அதுகருதிக்கூறினார் ஆசிரியர் எனக்கொள்ளலாகாதோ எனின்? ஆசிரியர் உரிப்பொருளல்லன என்றாரன்றி 'இல்லன' என்னாமையான் ஆகாதென்க.

இனி, பாரதியார் ஐந்திணைகளைப் போல அகத்திணையின் சார்பான பிறஉரிப்பொருளும் பலநிலங்களினின்றும் ஏற்ற பெற்றி வந்து மயங்கும் எனக்கருத்துரை கூறி ஐந்திணையல்லாத உரிப்பொருளான தலைமக்கள் ஒழுக்கம் பிற எந்நிலத்தும் வந்து கலத்தலும் உண்டு. அவையாவன் கொண்டுதலைக் கழிதலும், பிரிந்தவண் இரங்கலும் கலந்தபொழுதும் காட்சியும் என விளக்க உரை கூறுவார். மேலும் உரிப்பொருள் அல்லன என்பதை அல்லன உரிப்பொருளும் என மாற்றிப்பொருள்கொள்க என்பார். அஃது ஆசிரியர் கருத்தாயின், புணர்தல் பிரிதல் என்னும் சூத்திரத்தின் பின்னர் இச்சூத்திரத்தை வைத்துக் கூறியிருப்பார். மற்று கொண்டுதலைக் கழிதல் முதலிய நான்கும் அவர் கருத்துப்படி குறிஞ்சித்திணையிலன்றிப் பிற நிலங்களில் மயங்குதற்கு இயையாமையான் அவர் உரை இந்நூல் நெறிக்கு இயையாமையை அறியலாம்.

**சூ. 16 : புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
**ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
**தேருங் காலை திணைக்குரிப் பொருளே (16)**

**க - து :** உரிப்பொருளல்லாதனவாகிய பொருள் வகையினைக் கூறுமுகத்தான் அதிகாரப்பட்ட உரிப்பொருள் இவையென அவற்றின் பெயரும் தொகையும் கூறுகின்றது.

நிலமும் காலமுமாகிய முதற்பொருளும் அவைகாரணமாகத் தோன்றும் கருப்பொருளும் மக்களின்பால் எழுப்பும் உணர்வுகளான் நிகழும் ஒழுகலாறாகிய திணைகள் காமப் பொருள் பற்றியவை யாயின் அகம் என்றும் அஃதல்லாத அறமும் பொருளும் பற்றியவையாயின் புறம் என்றும் வகுத்து அவற்றைப்பற்றி இலக்கியம் படைத்தற்குரிய நெறிமுறைகளைக் கூறுதலே பொருளதிகார இலக்கணமாதலின் அவ்இருதிணை யாகிய ஒழுகலாறு பற்றிய நிகழ்ச்சிகட்குரிய பெயர்க் குறியீடே உரிப்பொருள் என்பதாகும். எனவே திணையின்கண் நிகழ் தற்குரிய பொருள் உரிப்பொருள் எனலாயிற்று. ஏனைய முதற்பொளும் கருப்பொருளும் மக்களால் நிகழ்வனவாகாமல் இயற்கை நியதிபற்றி அமைந்தனவாகலின் புணர்தல் முதாலய நிகழ்வுகள் உரிப்பொருள் எனப்பெற்றன. இவ்வுரிப்பொருள், முதற்பொருள் கருப்பொருள்களை இடமாகவும் பற்றுக் கோடாகவும் கொண்டு நிகழும். அவ்வாற்றான் முன்னர்த் திணைமயக்குறும் என்றும் நிலன் ஒருங்கு மயங்கா என்றும் கூறுயமைக்குக் காரணம் புலனாகும்.

இனிப் புறத்திணைபற்றிய இலக்கணங் கூறுமிடத்து அகத்திணைக் கோதிய முதற்பொருள் கருப்பொருள் களோடு இணைத்து உணரு மாற்றான் "வெட்சிதானே குறிஞ்சியது புறனே", "வஞ்சிதானே முல்லையது புறனே" என்றாங்கு மாட்டெறிந்து, ஒழுகலாறுகளைக் கூறுங்கால் "வேற்றுப்புலக் களவின் ஆதந்தோம்பல் மேவற்றாகும்" என்றும் "மண்ணசைவேந்தனை வேந்தன் அஞ்சுதகத் தலைச்சென் றடல் குறித்தன்றே" என்றும் வேறாகக் கூறுதலின் ஈண்டு உரிப்பொருள் என்றவை அகத்திணைகட்கே உரியவை என்பதும் பெறப்படும்.

அகத்திணை என்புழி நடுவணைந்திணைகளையே சிறப் பாகக் குறிக்கும் என்பது" மக்கள் நுதலிய அகனைந்திணையும் சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅ" (அகத் - 56)

என்பதனான் விளங்கும். கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் மருங்காக நிகழும். இதனை

அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்
கடிவரை யிலபுறத் தென்மனார் புலவர் [அகத்-25]

என்பதனான் அறியலாம்.

அவ்வாற்றான் அவை ஐந்திணைக்குரிய நிலங்களில் அவற்றொடு கூடிநிகழும் என்பதும் நிகழுங்கால் கைக்கிளைக்குப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் பெருந்திணைக்கு இரங்கலும், ஊடலும் அவற்றின் நிமித்தங்களும் உரிப்பொருளாக அமையு மெனக் கொள்க. அவ்வாறமைதலை அவற்றிற்குக் கூறியுள்ள இலக்கணங்களான் அறிந்து கொள்க,

பொருள் : காமம் பற்றிய ஒழுகலாறுகளை ஆராயுமிடத்து புணர்தலும் புணர்தல் நிமித்தமும் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் இருத்தலும் இருத்தல் நிமித்தமும் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஊடலும் ஊடல் நிமித்தமும் என்று சொல்லப்படும் இவை அகத்திணைகட்குரிய உரிப் பொருளாகும்.

நிமித்தமாவது, புணர்தல் முதலிய காரியங்கள் நிகழ்தற்கு ஏதுவாக அவற்றைச் சார்ந்து நிகழும் நிகழ்ச்சிகளாகும். அதனான் அவற்றைப் பிரித்தோதினார் என்க.

'மாயோன்மேய' என்னும் சூத்திரத்து நிறுத்தமுறையாற் கூறாமல் இங்ஙனம் தலைதடுமாற்றமாகக் கூறியது என்னை யெனின்? அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு திணைக்குச் சிறந்துரிமை பெற்று வருதலேயன்றி மயங்கி வருதலும் மரபாகும் என உணர்ந்துகோடற்கென்க,

புணர்தலாவது : கூடுதலுறுதலும் பிரிவின்றி உடனுறைதலு மாம். இஃது தலைவன் தலைவி இருவர்க்கும் உரித்தாகும்.

பிரிதலாவது : களவின்கண் ஒருவழித்தணத்தல் - வரை விடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் காரணமாகவும், கற்பின் கண் ஓதல், பகை, தூது, காவல், பொருள், பரத்தை ஆயவை காரணமாகவும் தலைவன் தலைவியைப் பிரிந்து சேயனாதலும் அயலுறைதலுமாம். இது தலைவிக்குரியதாகும்.

கற்பிற்குரிய பிரிவுகளுள் ஓதலும் பரத்தையும் தவிர்ந்த ஏனையவை சிறுபான்மை களவின் கண்ணும் நிகழ்தலுண்டு. இருத்தல், இரங்கல், ஊடல் என்பவையும் தலைவன் பிரிந்த

வழி நிகழும் பொருளாதலின் ஓராற்றான் அவை பிரிதலுள் அடங்குமென்பது தோன்றப் பிரிதலை இரண்டாவதாக வைத்தோதினார் என அறிக. அவ்வாற்றான் அக ஒழுகலாறுகள் புணர்வு — பிரிவு என்னும் இரு வகையுள் அடங்குமாறறிக. இதனைப் பொருள்வகைக் கோதிய சூத்திரத்தானும் தெரிக.

இருத்தலாவது : கடமை காரணமாக அறத்தாற்றின் தலைவன் பிரிந்து சென்றுழி அவன் குறித்த பருவம் வருந்துணையும் தலைவி அப் பிரிவினைப் பொறுத்து ஆற்றி இல்லத்துறைதலாம். இது தலைவிக்குரித்து. தலைவன் பாசறைக் கண் ஆற்றியிருத்தல் இருத்தலின் பாற்படும்.

இரங்கலாவது : ஒரு வழித்தணத்தல் நீட்டிக்குமிடத்தும் தலைவன் குறித்த பருவம் கழியுமிடத்தும் பிரிவாற்றாத தலைவி இனைந்து வருந்துதலாம். இது தலைவிக்கே உரித்து.

ஊடலாவது : தலைவன் பரத்தைமை கருதினானக நினைந்தும் பரத்தைமையுற்றானாகத் தெரிந்தும் தலைவி சினந்தும் முனிந்தும் நொந்தும் தலைவனது கூட்டத்தை மறுத்தலும் பழித்தலுமாம். இது தலைவிக்குரித்து. உணர்ப்புவயின் தலைவி ஊடல் தவிராத வழிச் சிறுபான்மை தலைவன் நொந்து கூறுதல் இதன்பாற்படும்.

இவற்றின் நிமித்தம் வருமாறு :- புணர்தல் நிமித்தம் : ஒன்றியுயர்ந்த பாலதாணையான் தலைவனும் தலைவியும் காணும் காட்சிக்கண் குறிப்பறிந்த பின்னர் நிகழும் மெய்தொட்டுப் பயிறல் முதலிய கிளவிகள் ஐந்தும் தலைவன் தோழியைக் குறையுறும் பகுதியும் தோழி குறை நேர்தலும் கையுறை தருதலும், ஏற்றலும் பாங்கிமதியுடம்பாடும் குறியிடங் கூறலும் பிறவும் களவின் கண் புணர்தல் நிமித்தமாம். வரைவு கடாதலும், வரைவுடம்படுதலும் வரைதலும், பிரிந்து மீளும் தலைவன் இடைச்சுரத்துக் காணும் இறைச்சியும், பாகனொடு கூறுதலும் வாயில் வேண்டலும் வாயில் நேர்தலும் பிறவும் கற்பின் கண் புணர்தல் நிமித்தமாம்.

பிரிதல் நிமித்தம் : அலரச்சமும் வரைபொருள் கருதலும் களவின்கண் பிரிதல் நிமித்தமாம். ஓதல், பகை, தூது முதலிய நேர்தலும் காவற்கடமையைக் கருதலும், விழா நேர்தலும் கலை நலம் பேணக் கருதலும் மாண்பொருள் ஈட்ட நினைதலும் பிறவும் கற்பின் கண் பிரிதல் நிமித்தமாம்.

இருத்தல் நிமித்தம் : தலைவன் தலைவியைத் தேற்றிக் கூறும் வன்புறையும் தலைவன் தணந்தவிடத்துத் தோழி கூறும் அன்புதலையடுத்த வன்புறையும் களவின்கண் இருத்தல் நிமித்தமாம். தலைவன் அறத்தாற்றிற் பிரிந்தவழி குறித்த பருவமல்லாத பொய்ப்பருவத் தோற்றமும் பிறவும் கற்பின்கண் இருத்தல் நிமித்தமாம்.

இரங்கல்நிமித்தம் தலைவன் வருந்தொழிற்கருமையைத் தலைவி கருதுதலும் பகற்குறி இரவுக்குறி இடையீடுபடுதலும் இற்செறிப்புறுதலும் வரைவு நீட்டித்தலும் வேற்றுவரைவு நேருங்கொல்? என்னும் அச்சமும் களவின்கண் இரங்கல் நிமித்தமாம், ஓதல் முதலாய தலைவன் பிரிவின்கண் தலைவன் குறித்த பருவம் வந்து கழிதலும் பிறவும் கற்பின்கண் இரங்கல் நிமித்தமாம்.

ஊடல் நிமித்தம் : அறப்புறங்காவலெனவும், புதுநீர் வரவெனவும், கூறி விழாத்தொடங்கலும், காதற்பரத்தை காமக்கிழத்தியரைத் தலைவி காண நேர்தலும், நல்லணிப் புதல்வனை மாயப்பரத்தை உள்ளுதலும் காமக்கிழத்தி தன் மகத்தழீஇ விளையாடலும் பிறவும் கற்பின்கண் ஊடல் நிமித்தமாம். களவின்கண் ஊடல் பண்பாடாகாமையான் ஊடல் நிமித்தம் அமைந்திலது என்க.

புணர்தல் முதலாய ஒழுகலாற்றிற்குரிய பிறசெய்திகளும் அவற்றிற்குரிய நிமித்தமாக நிகழும் செய்திகளும் களவியல், கற்பியல், பொருளியலாகிய ஓத்துக்களுள் தலைமக்கட்கு ஓதிய கிளவிகளானும் தலைமக்கள் இயல்பு பற்றிய சூத்திரங்காளனும் அறிந்துகொள்க.

எ - டு : கோடல் எதிர்முகை பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையொடு இடையிடுபு விரைஇ
ஐதுதொடை மாண்டகோதை போல
நறிய நல்லோள் மேனி
முறியினும் வாய்வது முயங்கற்குமினிதே [குறு - 62]

இதுபுணர்தல்

முலையே முகிழ்முகிழ்த் தனவே தலையே
கிளைஇய குரலே கிழக்கு வீழ்ந்தனவே
செறிமுறை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்கும் சிலதோன்றினவே அணங்கென

6

யாஅன் அறிவல் தானறி யலளே
யாங்காகுவள் கொல் தானே
பெருமுது செல்வர் ஒருமடமகளே [குறு - 337]

இதுபுணர்தல் நிமித்தம்

கண்பொர விளங்கிய கதிர்தெறு வைப்பின்
மண்புரை பெருகிய மரம்முளி கானம்
இறந்தன ரோநம் காதலர்
மறந்தன ரோதில் மறவா நம்மே [ஐங் - 319]

இது பிரிதல்.

மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கின் அம்பகட் டிளமுலை
பெருந்தோள் நுணுகிய நுசுப்பின்
கல்கெழுகானவர் நல்குறுமகளே [குறு-71]

இது பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் கூறிய தாகலின் பிரிதல் நிமித்தம்.

வண்டுபடத் ததைந்த கொடியிணரிடையிடுபு
பொன்செய்புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற்றோன்றும் புதுப்பூங் கொன்றைக்
கானங் காரெனக் கூறினும்
யானோ தேறேன் அவர் பொய்வழங்கலரே [குறு-21]

இஃது இருத்தல்

மடவமன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங்கத்தம் சென்றோர் கூறிய
பருவம் வாரா அளவை நெரிதரக்
கொம்பு சேர் கொடியிணர் ஊழ்த்த
வம்பமாரியைக் காரென மதித்தே [குறு-66]

இது பருவமன்று என வற்புறுத்தலின் இருத்தல் நிமித்தம்.

கானலுங் கழறாது கழியுங்கூறாது
தேனிமிர் நறுமலர் புன்னையும் மொழியாது
ஒருநின் னல்லது பிறிதுயாது மிலனே
இருங்கழி மலர்ந்த கண் போல் நெய்தல்
கமழிதழ் நாற்றம் அமிழ்தென நசைஇத்
தண்டா தூதிய வண்டினம் களி சிறந்து

பறவைகிளருந் துறைவனை நீயே
சொல்லல் வேண்டுமால் அலவ ! பல்காற்
கைதையம் படுசினை நம்மோ டசாஅம்
கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்
வெள்ளிறாக் கனவும் நள்ளென் யாமத்து
நின்னுறு விழுமங் களைந்தோள்
தன்னுறு விழுமம் நீந்துமோ எனவே [அகம்-170]

இஃது இரங்கல்

ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து
அளியதாமே கொடுஞ்சிறைப் பறவை
இறையுற வோங்கிய நெறியயல் மராஅத்த
பிள்ளை யுள்வாய்ச் செரீஇய
இரைகொண் டமையும் விரையுமாற் செலவே [குறு-92]

இஃது இரங்கல் நிமித்தம்

தருக்கேம் பெருமநின் நல்கல் விருப்புற்றுத்
தாழ்ந்தாய்போல் வந்து தகவில செய்யாது
சூழ்ந்தவை செய்துமற் றெம்மையும் உள்ளுவாய்
வீழ்ந்தார் விருப்பற்றக்கால் [கலி-60]

இஃது ஊடல்

பரியுடை நன்மான் பொங்குளை யன்ன
அடைகரை வேழம் வெண்பூப் பகரும்
தண்டுறை யூரன் பெண்டிர்
துஞ்சூர் யாமத்தும் துயிலறியலரே [ஐங்-13]

இஃது ஊடல் நிமித்தம்

பிறவும் இவ்வாறு வருவனவற்றையெல்லாந் தேர்ந்துணர்ந்து கொள்க.

**சூ. 17 : கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவணிரங்கலும்**
**உண்டென மொழிப ஓரிடத் தான. (17)**

க - து : மேற்கூறிய உரிப்பொருள்களைச் சார்ந்து ஓரோவிடத்துவரும் பிற உரிப்பொருள்களாமாறு கூறுகின்றது. உரிப்பொருள் பற்றிய புறனடை எனினுமாம்.

**பொருள்:** தமர் வரைவு நேராத வழித் தலைவன் தலைவியை உடன்கொண்டு செல்லுதலும், இடைச்சுரமருங்கின் அவள்தமர் எய்திக் கடைக்கொண்டு பெயர்வுழி ஒருவர் ஒருவரைப்பிரிதலான் அவ்விடத்துக் கலங்கலும் ஒரோவழி உண்டென்று கூறுவர் புலவர்.

எனவே, இவையும் மேலனவற்றைச் சார்ந்த உரிப்பொருளாம் என்றவாறு.

உண்டென்பது பொதுவினை. ஓரிடத்து என்றது களவின்கண் தலைவியின்தமர் வரைவு நேராதவிடத்து என்றவாறு. ஈறுதிரிந்த ஆன் என்னும் சொல்லுருபு இடப்பொருள் குறித்து நின்றது.

தலைவனும் தலைவியும் தமரைப் பிரிந்தமையன்றித்தாம் பிரியாமையான் பிரிதலுமாகாமல், உடன் போக்காதலின் புணர்தலுமாகாமல் நிற்றலான் மேற்கூறியவற்றுள் அடங்காதாயிற்று.

களவின்கண் உடன்போக்கு நிகழாமல் வரைவு நிகழ்தலே பெரும்பான்மையாகலான் ஓரிடத்தென்றார். தாம் பிரியாது தமராற் பிரிக்கப்படுதலானும் கலங்கல் இருவர் மாட்டும் நிகழ்தலானும் பொருள் முதலிய காரணங்களான் தலைவன் காலம் நீட்டித்துழித்தலைவி மாட்டு நிகழும் இரங்கலாகாமையின் பிரிந்தவண் இரங்கல் வேறாக ஓதப்பட்டதென்க. 'அவண்' என்றது தலைவி தமர் தலைவியைக் கடைக் கொண்டு பெயர்வுழி என்றவாறாம்.

இவை புணர்தல், பிரிதல் இரங்கல் என்னும் உரிப்பொருள்களைச் சார்ந்து அவற்றிற்குப் புறனடையாக அமைதலான் திணை கூறுங்காற் சான்றோர் இவற்றைப் பாலையுள் அடக்கிக் கூறுவாயினர்.

எ - டு : அழிவில முயலும் ஆர்வ மாக்கள்
வழிபடு தெய்வம் கட்கண் டாஅங்கு
அலமரல் வருத்தந் தீர யாழ நின்
நலமென் பணைத்தோள் எய்தினம் ஆகலின்
பொரிப்பூம் புன்கின் அழற்றகை ஒண்முறி
சுணங்கணி வனமுலை அணங்குகொளத் திமிரி
நிழல் காண்டோறும் நெடிய வைகி
மணல் காண்டோறும் வண்டல் தைஇ
வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே

மா நனை தொழுதி மயில் குயில் ஆலும்
நறுந்தண் பொழில கானம்
குறும்பல் லூரயாம் செல்லு மாறே [நற்-9]

இது கொண்டுதலைக்கழிதல்

"நுமர்வரின் ஓர்ப்பின் அல்லது அமர்வரின்
முந்நீர் மண்டிலும் முழுது மாற்றாது
தெரிகணை விடுத்தல் ஓவிலனே
அரிமதர் மழைக்கண் கலுழ்வதை எவனோ"
[நச்சர் மேற் கோள்]

இது தமர்வருவர் எனவும் தலைவனைப் பிரிய நேருங்கொல் எனவும் தலைவி கலுழ்ந்தவழித் தலைவன் கூறியதாகலின் பிரிந்தவண் கலங்கல் நிகழ்ந்தவாறு கண்டுகொள்க. தலைவன் கலங்கியது வந்தவழிக் கண்டு கொள்க.

## சூ. 18 கலந்த பொழுதும் காட்சியும் அன்ன (18)

க - து : இதுவும் ஒரு சார் உரிப்பொருள் வருமாறு கூறுகின்றது.

**பொருள் :** தலைமக்கள் ஒருவர் ஒருவரை எதிர்ப்பட்ட பொழுதினும், காட்சியினும் தலைவன் மாட்டுத் தோன்றும் ஐயமும், தெளிவும், தலைவி மாட்டுத் தோன்றும் அச்சமும் நாணும் பற்றிய செயற்பாடுகளும் மேலனபோல் ஒருசார் உரிப் பொருளாம் எனக்கூறுவர் புலவர்.

பொழுதின் கண்ணும் காட்சியின் கண்ணும் நிகழும் செயல் களை பொழுதும் காட்சியும் என்றார்.

இருவர்தம் காட்சியின்கண் நாட்டமிரண்டும் கூட்டியுரைக்கும் குறிப்புரையாகாமல் அத் தலைமக்களின் பார்வை பொதுப்பட நிகழ்ந்தவழிக் காமக்குறிப்புத் தோன்றாமையான் அவை புணர்தல் 'நிமித்தம்' என்னும் உரிப்பொருளாகாமையானும் பாலதாணையாற் தலை மக்கள் காணும் காட்சியின் கண்ணும் கலந்தபொழுதும், காட்சியும் ஒரு தலையாகப் புணர்ச்சி நிமித்த மாகாமையானும் குறிப்பறிந்து தலைவன் நிகழ்த்தும் மெய்தொட்டுப் பயிறல் முதலியவையே புணர்தல் நிமித்த மாதற்கு ஏற்புடையவையாகலானும் இவையும் வேறாக ஓதப்பட்டன என்க.

இவ் இரண்டு சூத்திரங்களானும் ஓதப்பட்டவை புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய உரிப்பொருளைச் சார்ந்து அவற்றிற்குப் புறனடையாக அமைந்தன. இவற்றை நல்லிசைப் புலவோர் குறிஞ்சித் திணையுள் அடக்கிக் கூறுமாறு தொகையுள்ளும் பிற செய்யுளுள்ளும் கண்டு கொள்க.

எ. டு. : ஐவகை வகுத்த கூந்தல் ஆய்நுதல்
மையீரோதி மடவீர் நும்வாய்ப்
பொய்யும் உளவோ என்றனன், பையெனப்
பரிமுடுகுதவிர்த்த தேரன் எதிர் மறுத்து
நின்மகள் உண்கண் பன்மாண் நோக்கிச்
சென்றோன் மன்றவக் குன்று கிழவோனே
பகல்மா யந்திப் படுசுடரமையத்து
அவன்மறை தேஎம் நோக்கி மற்றிவன்
மகனே தோழி என்றனள்
அதனள வுண்டுகோள் மதிவல் லோர்க்கே
[அகம்-48]

இதன்கண் கலந்த பொழுதும் காட்சியும் புணர்ச்சி நிமித்தமாகாமல் காதல் உரிப்பொருளாய்க் குறிஞ்சித்திணை ஒழுகலாறாக அமைந்துள்ளமை கண்டுகொள்க.

## சூ. 19 : முதலெனப் படுவது ஆயிரு வகைத்தே (19)

க - து : மாயோன் மேய என்னும் சூத்திரத்தான் முதற்பொருளுள் ஒரு கூறாகிய நிலத்தைக் கூறினார், கூறுமிடத்து அவை திணையாகிய ஒழுக்கத்தின் பெயரானும் வழங்கப் படுமென்பதை உணர்த்த முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச் சொல்லிய முறையான் சொல்லவும் படுமே எனக்கூறி அதனான் நிலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் உள்ள தொடர்பினைப் புலப்படுத்திப் பின்னர் முதற்பொருளின் பிறிதொரு கூறாகிய காலம் பற்றிய இலக்கணத்தைத் தொடர்ந்து கூறி அவைமயங்கியும் வரும் என்பதை உணர்த்தவேண்டித் " திணைமயக்குறுதலும் கடிநிலையிலவே நிலனொருங்கு மயங்குத லில்லென மொழிப " எனப் பின்னும் நிலத்தின் இலக்கணங் கூறினார். அதன்கண் கூறிய திணை மயக்குறுதல் என்பது உரிப்பொருள் பற்றிய இல்பாதலின் அவ்இயைபற்றி உரிப்பொருள்கள் இவையென அவற்றைத் தொகுத்துக் கூறினார். அங்ஙனம் கூறியதனான் நிலமும் பொழுதும் ஆகிய இரண்டொடு உரிப்பொருளும் கூடி முதற்பொருள் மூன்று கூறுபடும் கொல்? என எழும் ஐயத்தைக் களைவான் வேண்டி முதற்பொருள் நிலமும் பொழுதும் என ஆயிருவகைத்தே என இச்சூத்திரத்தான் வலியுறுத்துகின்றார்.

பொருள் : திணையுணர்தற்குக் கருவியாகிய முதல் கரு உரி என்னும் பொருள் மூன்றனுள் முதற்பொருள் எனச்

சிறப்பித்துக் கூறப்படுவது காடுறையுலக முதலாய நிலனும் காரும் மாலையும் முதலாய பொழுதும் எனப் பகுத்துக் கூறப்பெற்ற அவ்விரு கூறுகளையுடையதேயாம்.

முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணித் தமிழ் இலக்கணக் கோட்பாடுகளைத் தொகுத்துக் கூறும் இவ்வாசிரியர் முதற் பொருளின் இயல்புகளை விரித்துக் கூறும் வழி உரிப்பொருளையும் இயைபடுத்திக் கூறியது தொன்னூலார் நெறியென உணர்க. அவ்வாறே உரிப்பொருள்களின் நிமித்தமாக நிகழும் ஒழுகலாறு களையெல்லாம் கருப்பொருள் கூறும் அதிகாரத்தே இயைத்து கூறுவார். அங்ஙனம் இயைத்துக் கூறுவனவற்றையும் அதிகரிக் கப்பட்ட வற்றையும் பகுத்துணர்ந்துகொள்ளல் மாணாக்கர் கடனாகும்.

மற்று முதல் கரு உரி எனப்பகுத்துக்கொண்ட முறைப்படி அவற்றைத் தனித்தனியே விதந்து கூறாமல் இங்ஙனம் இயைத்துக் கூறுதல் ஒவ்வுமோ எனின்? ஒவ்வும். ‘அதுவே தமிழிலக்கணத்தின் அறிவியற் செம்மையாகும். என்னை ?

உரிப்பொருள் என்பது மக்களின் ஒழுகலாறன்றிப் பிறிதில்லை, மக்களோ கருப்பொருளின் ஒரு கூறாவார். கருப் பொருள் என்பது நிலமும் பொழுதுமாகிய முதற்பொருளின் கலப்பினால் தோன்றி அவ்வந் நிலவியல்புகளைக் கொண்டிலங்கு வதாகும். எனவே மக்களும் அவர் தம் ஒழுகலாறும் முதற் பொருளொடும் கருப்பொருளொடும் இயைபட்டுள்ளமை விளங்கத் தொன்னூலோர் அங்ஙனம் இயைத்துக் கூறிச் சென்றனர்.

இருவகைக் கைகோளினும் நிகழும் ஒழுகலாறுகளெல்லாம் கருப்பொருளின் கூறாகிய மக்களின் பண்பும் செயலுமே யாதலின் அவற்றை இவ்வாசிரியர்

“பெயரும் வினையுமென் றாயிரு வகைய
திணை தொறும் மரீஇய திணைநிலைப் பெயரே”

என்னும் சூத்திர முதலாக விரித் தோதுவாராயினார். இனிப் புறத்திணையியல் முதலாய நான்கியல்களுள் கூறப் பெறுவனவும் மக்களின் ஒழுகலாறு (உரிப்பொருள்) பற்றியனவேயாகும். அவ்வாற்றான் அடிப்படையாகிய புணர்தல் பிரிதல் முதலிய உரிப்பொருள்களை முதற்பொருளின் அதிகாரத்தே இணைத்துக் கூறி அவற்றின் நிமித்தமாகிய செயற்பாடுகளைக் கருப்பொரு ளதிகாரத்தே இணைத்துக் கூறுவாராயினார்.

அம் மரபு காரணமாகவே கருப்பொருள் பற்றிய இலக்கணங் களைக் கூறிய பின்னர் ஆசிரியர் உரிப்பொருள் இலக்கணம் மேற் கூறப் பெற்ற தென்றோ இனிக் கூறப் பெறுமன்றோ இயம்பாமல் மக்களின் ஒழுகலாறு பற்றிய இலக்கண மரபுகளைத் தொடர்ந்து கூறிச் செல்வாராயினர். அம் மரபு பற்றியே கருப் பொருளுள் மக்களைச் சேர்க்காமல் தெய்வம் உணாவே மா மரம் புள், பறை ஆகியவற்றையே கூறினார். இவ் அறிவியற் கோட் பாட்டினை ஓராத இடைக்கால நூலோர் ஆரணங்கு உயர்ந் தோர் அல்லோர் எனக் கருப்பொருளுள் மக்களைக் கூட்டிக் கூறிச் சென்றனர்.

**சூ. 20 : தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப (20)**

**க - து :** திணையுணர்தற்குரிய பொருள் மூன்றனுள் முதற்பொருள் கூறியவழி இயைபடுத்தி உரிப்பொருளின் தொகை ஓதப்பெற்றமையான் எஞ்சி நின்ற கருப்பொருள் ஆமாறு கூறுகின்றது.

**பொருள் :** நிலத்தொடு நிலைபேறுடைய தெய்வமும் அவ்வந்நிலத்து விளைவனவும் பெறுவனவுமாகிய உணவும் வாழும் விலங்கும் வளரும் மரனும் புல்லும், உறையும் புள்ளினங்களும். தோற்கருவியாகிய பறையும் அந்நில மக்கள் மேற்கொள்ளும் தொழிலும் என்னும் இவற்றை நரப்புக் கருவியாகிய யாழின் பகுப்புக்களொடு கூட்டி அவற்றின் வகையும் அவற்றொடு தொடர்புடைய பிறவுமாகிய வற்றைக் கருப்பொருள் எனக் கூறுவர் நூலோர்.

ஏகாரம் எண்ணுப் பொருட்டு, உம்மையை வகை என்பதனொடும் கூட்டிக் கொள்க. யாழின் பகுதி என்றது பண்ணிசைகளை. யாழும் பண்ணும் மயக்கமின்றி அவ்வந் நிலத்தாற் பெயர் பெறுதலின் பிரித்தோதினார்.

கூறப்பெற்ற கருப்பொருள்களுள் தெய்வம் நிலப்பெயர் கூறிய வழி ஓதப்பெற்றமையான் ஏனையவற்றைச் சான்றோர் வழக்கும் செய்யுளும் நோக்கிக் கொள்ளப்பெறும், அவற்றின் வகைகளும் அந்நெறியே கொள்ளப்பெறும்.

இனி, பிறஎன்றதனான் ஊர், நீர், பூ முதலியனகொள்க. ஊரும் நீரும் நிலத்தொடு தொடர்புடையவாய் இயற்கையும் செயற்கையுமாக அமைதலானும் பூ மரத்தொடு தொடர்புடைய தாகலானும் விதந்து கூறாமல் பிற என்றதனுள் அடக்கினார் என்க.

தமிழ் மொழி மரபினை ஓராத இடைக்கால நூல்கள் மாந்தரைக் கருப்பொருளொடு கூட்டி எண்ணினாற் போல இவ்வாசிரியர் கூறாமைக்குக் காரணம் "பெயரும் வினையுமென் றாயிருவகைய" என்னும் சூத்திரவுரையுள் கண்டுகொள்க.

அகனைந் திணைக்கண் மரபுபற்றிச் சிறந்துரிமை பெற்று வரும் கருப்பொருள்களுள் முறையே சிறப்புடையன வருமாறு :-

முல்லைக்கருப்பொருள் :- மாயோன் - வரகு, சாமை, மான், முயல் - தோன்றி, காயா பிடவம், குருந்தம் - காட்டுக்கோழி, சிவல் - ஏறு கோட்பறை - வரகு முதலியன விதைத்தல், ஆனிரை மேய்த்தல், ஏறுதழுவுதல் — முல்லையாழ், முல்லைப் பண் - பாடி, சேரி - குறுஞ்சுனை கான்யாறு - குல்லை முல்லை, தோன்றி, பிடவம் என்பன.

குறிஞ்சிக்கருப்பொருள் :- சேயோன் - ஐவன நெல், தினை மூங்கிலரிசி கிழங்கு - புலி, யானை, கரடி, பன்றி - அகில், ஆரம், தேக்கு, திமிசு, வேங்கைமரம், மூங்கில் - கிளி, மயில் - முருகியம் தொண்டகப் பறை - தேன் அழித்தல், கிழங்ககழ்தல், தினை முதலிய விளைத்தல் வேட்டம் புரிதல் கிளிகடிதல் — குறிஞ்சியாழ், குறிஞ்சிப்பண் - சிறுகுடி, குறிச்சி, அருவி சுனைநீர் - காந்தள், வேங்கை, சுனைக்குவளை குறிஞ்சிப்பூ என்பன.

மருதக்கருப்பொருள் : வேந்தன்-செந்நெல், வெண்ணெல், கரும்பு, எருமை, நீர்நாய் — வஞ்சி, காஞ்சி, மருதம் — தாரா, நீர்க்கோழி — மணமுழவு, நெல்லரிகிணை — வித்தல், விளைத்தல், கடாவிடல் — மருதயாழ், மருதப்பண் — ஊர்கள் — யாற்றுநீர், பொய்கை — தாமரை, கழுநீர்ப்பூ என்பன.

நெய்தற்கருப்பொருள் : வருணன் — மீன், உப்பு — உமண் பகடு சுறா போல்வன, — புன்னை ஞாழல், கண்டல் — அன்றில், அன்னம் — மீன் கோட்பறை — மீன்படுத்தல், உணக்கல், உப்பு விளைத்தல், நாவாய் செலுத்தல் — நெய்தல் யாழ் நெய்தற்பண் — பட்டினம், பாக்கம் — உவர்க்குழி மணற்கிணறு — கைதை, நெய்தற்பூ என்பன.

பாலைக்கருப்பொருள் : கனலியையும் கொற்றவையையும் தெய்வமாகக் கொள்வர் — ஆறலைத்த பொருள், சூறை கொள் பொருள் — வலியிழந்த யானை, புலி, செந்நாய் — வற்றின இருப்பை, ஓமை, உழிஞை — எருமை — கழுகு, பருந்து, புறா — சூறை கோட்பறை — ஆறலைத்தல், சூறையிடுதல் — பாலை யாழ், பாலைப்பண் — பறந்தலை — அறுநீர்க்கூவல் — மரா, குராம்பூ என்பன.

இனி, வகையென்றதனாற் கொள்ளப் பெறுவன. தெய்வம்: காமன், கொற்றவை, ஞாயிறு, அணங்கு, மன்றுறை கடவுள் அவை போல்வனபிற. இவற்றுள் கொற்றவை புறத்திணைக்குச் சிறந்து வரும். முதற்பொருளும் கருப்பொருளும் "வெட்சிதானே குறிஞ்சியது புறனே" என்றாற்போல மாட்டெறிந்து கூறப் படுதலின் இவை அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாம்.

உணா: எண்வகைக்கூலமல்லாத பிறவும், காயும், கனியும், கிழங்கும், தேனும் மீனும் பிறவுமாம்.

மா: நீர்வாழ் சுறவும் முதலையும் நீர்நாயும் பிறவுமாம்

மரம்: மரத்தின் இனமாகிய புல்லும் செடியும் கொடியும் பிறவுமாம்.

புள்: குருகுமுதலாய பறவைகளும், வாவலும், வண்டும் தும்பியும் பிறவுமாம்.

பறை: தட்டையும், குளிரும், துடியும் தண்ணுமையும் பிறதோற்கருவிகளுமாம்.

செய்தி: இயற்றலும், ஈட்டலும், காத்தலுமல்லாதனவாய் நிகழும், வகுத்தலும், பொருதலும், பயிறலும் பயிற்றலும் விழா வயர்தலும் பிறவுமாம்.

யாழின் பகுதி: யாழின் இனம்பற்றிய பிறவும் குழற் கருவிகளும், வளையும் (சங்கு) கொம்பும் பிறவுமாம், இவற்றை அவ்வத்திணைக்கு ஏற்பக் கூட்டிக் கொள்க.

**சூ. 21: எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்**
**அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்**
**வந்த நிலத்தின் பயத்த வாகும் (21)**

**க - து:** திணைக்குரிய ஒழுக்கமும் பொழுதும் மயங்குமாறு போலக் கருப்பொருள்களுள் சில மயங்கா எனக்கூறு முகத்தான் ஒருசார் கருப்பொருள் பற்றிய மரபு கூறுகின்றது.

அஃதாவது கருப்பொருள்கள் நிலமும் பொழுதும் காரண மாகத் தோன்றுவனவாதலின் அவை அந்நிலத்திற்குரியவாகக் கொள்ளப் பெற்றன. அவற்றுள் ஒரு நிலத்திற்குரியவை இவை எனச் சிறப்புரிமை செய்யப்பெற்ற பூவும், புள்ளும் ஏனை நிலத்துள்ளும் தோன்றுதல் இயற்கையாதலின் அங்ஙனம் தோன்றுதல் மயக்கமெனப்படாது என்றவாறு.

**பொருள் :** காடுறையுலகம் முதலாயவற்றுள் பூவும் புள்ளுமாகிய கருப்பொருள்கள் எந் நிலப்பகுதிக்குரியவை எனப் பெற்றனவோ அவை அந்நிலத்தொடும் பொழுதொடுமே வாராமல் பிறநிலத்தொடும் பொழுதொடும் வந்தனவாயினும் அவை வந்த அந் நிலத்தின் கருப்பொருளாகக் கொள்ளப்பெறும்.

பயத்த என்றது பொருள என்றவாறு. பொருள் = விளை பொருள். இ த னை, பயவாக்களரனையர் (குறள் 406...) என்பதனானறிக.

என்றது : ஒரு நிலத்திற்குரிமை செய்து ஓதப்பெற்ற பூவும் புள்ளும் பிற நிலத்துவரின் மயக்கமெனப் படாது அந்நிலத்திற்கும் அவை உரிய பொருளாகக் கொள்ளப்பெறும் என்றவாறு

பூ என்றதனான் அதற்கு முதலாகிய மரனும் புல்லும் செடியும் கொடியும் ஆயவற்றுள் ஏற்பனவற்றை வந்த நிலத்தின் பயத்தவாகக் கொள்க.

இவற்றை விதந்தோதிய அதனான் ஏனைய கருப்பொருள்கள் அவ்வந்நிலங்கட்கே உரிமையுடையவை என்பதும் அவை ஏனை நிலத்துவரின் மயக்கமாகக் கொள்ளப்படும் என்பதும், யாழின் பகுதி அவ்வந்நிலப்பெயரானே அமைந்து கிடத்தலின் அவை மயங்கிவாரா என்பதும் உய்த்துணரப்படும். இங்ஙனம் வந்த நிலத்தின் பயத்தவாயும், மயங்கியும், மயங்காமலும் வருமாறு சான்றோர் செய்யுட்களுள் கண்டு கொள்க.

எ - டு : யார் இவன் என்னை விலக்குவான் நீருளர்
பூந்தா மரைப்போது தந்த விரவுத்தார்க்
கல்லாப் பொதுவனை நீமாறு ... [கலி — 112]

இது முல்லைத் திணைக்கண் தாமரை வந்தது.

"தளை நெகிழ் பிணி நிவந்த பாசடைத்தாமரை
முளை நிரைந்தவை போலும் முத்துக்கோல் அவிர்கொடி"
[கலி—59]

இது குறிஞ்சித் திணைக்கண் தாமரை வந்தது.

நீரார் செருவில் நெய்தலொடு நீடிய
நேரிதழ் ஆம்பல் நிரையிதழ் கொண்மார் [கலி - 75]

இது மருதத்திணைக்கண் நெய்தற்பூ வந்தது.

உடையிவள் உயிர் வாழாள் நீநீப்பின் எனப்பல
விடைகொண்டியா மிரப்பவும் எமகொள்ளாயாயினை
கடைஇய ஆற்றிடை நீர் நீத்த வறுஞ்சுனை
அடையொடுவாடிய அணிமலர் தகைப்பன [கலி - 3]

இது பாலைத்திணைக்கண் தாமரை வந்தது.

குறிஞ்சிப் பாட்டுள் பலபூக்கள் வந்துள்ளமைகண்டு கொள்க.

கன்மிசை மயிலாலக் கறங்கியூர் அலர்தூற்றத்
தொன்னலம் நனிசாய ... ... ... [கலி - 27]

பாலைத்திணைக்கண் மயில் வந்தது.

எரிமருள் வேங்கை கடவுள் காக்கும்
குருகார் துழனியின் இதணத்தாங்கண் [நற் - 216]

மருதத்திணைக்கண் குருகு வந்தது. பிறவும் இங்ஙனம் பூவும் புள்ளும் வந்த நிலத்தின் பயத்தவாய் உரிமையுற்று அமைந் துள்ளமையைச் சான்றோர் செய்யுளுள் கண்டுகொள்க.

**சூ. 22 : பெயரும் வினையுமென் றாயிரு வகைய**
**திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே**

**க - து :** நானிலத்தின்கண் தோன்றிக் கருப்பொருளின் வேறாய்ச் சிறந்து வரும் மக்கள், திணைக்குரியராய்ப் பாகுபடுமாறு கூறுகின்றது.

**பொருள் :** முல்லை முதலாய நிலங்கள் தொறும் மருவிய [மாந்தர்தம்] திணைநிலைப் பெயர்கள் அவ்வத்திணைக்கு (ஒழுக்கத்திற்கு) உரியவாக மரபு பற்றி வரும் பெயரும், அவ்வந் நிலவியல்பானே மேற்கொண்ட வினை (தொழில்) பற்றி வரும் பெயருமென்று சொல்லப் பெறும் அவ்விரு வகையினவாம்.

பெயர் என்றது, பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின் ஆண்மை திரிந்த பெயர் நிலைக்கிளவி (கிளவி - 4) என்புழிப் போலப் பொருளைச் சுட்டி நின்றது. வழக்கின் கண்ணும் நாலு பேர் ஐந்து பேர் எனப் பொருளைச் சுட்டி வருதல் காண்க. மாந்தராவார் மன்பதையுள் ஓரினம், அவ்இனம், ஆடூ, மகடூ என்னும் இருபாலாக அமையும். மாந்தருள் ஒருவரைப் பிரித்துச் சுட்டியுணர்த்த வேண்டின் பெயர்க்குறியீடுகளானன்றிப் பிரித்துணர்த்தற்கு ஏலாமையான் நூலோர் அவரைத் தனி யாகவோ தொகுதியாகவோ உணர்த்தப் பல்வேறு குறியீடுகளை அமைத்தோதுவாராயினர்.

திணைதொறும் மரீஇய பெயர் என்றதனான் பெயராற் சுட்டப்பெறும் மக்களும் கருப்பொருளே என்பது உய்த்துணரப் படும். எனினும் இவ் ஆசிரியர் மக்களைக் கருப்பொருள் என விதந்து கூறாமலும். கருப்பொருட்டொகுதியுடன் கூட்டிக் கூறாமலும் இங்ஙனம் உய்த்துணர வைத்தவாறு என்னை எனின் ; இப்பொருளதிகாரத்துக் கூறப்படும் அகமும் புறமுமாகிய ஒழுகலாறுகள் யாவும் மாந்தர்க்கே உரியவாய் அவரான் நிகழ்த்தப் பெறுவன வாதலின் திணைக்குரிய உரிப்பொருளை விளைத்தற்குக் காரணமாகிய மக்களைத் திணை யறிதற்குரிய கருப்பொருளொடு ஒப்பக் கூறுதல் தகவன்மையானும் திணை யுணர்தற்குக் கருவியாகிய உள்ளுறை உவமம் தெய்வம் ஒழிந்த கருப்பொருள்களை இடமாகக் கொண்டு வரும் என்னும் இலக்கணம் மக்களைக் கருப்பொருளொடு சேர்த்துக் கூறின் சிதையுமாகலானும் அங்ஙனம் உய்த்துணரவைத்தார் என்க.

இனி அகத்திற்கும் புறத்திற்கும் உரியராகிய மக்களை நாடக வழக்கும் உலகியல் வழக்கும் பற்றிப் பெயர்க்குறியீடு களாற் பாகுபாடு செய்து கூறுவார். அப்பாகுபாடு பற்றியதொரு சிறுவிளக்கம் இந்நூல்நெறி விளங்குதற் பொருட்டுக் கூறுதும்.

மக்கள் யாவரும் பிறப்பானும் இறப்பானும் விருப்பு, வெறுப்பு நுகர்வு முதலிய பண்பானும் செயலானும் ஒப்பவராயினும், சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான், என்றும், மக்களே போல்வர் கயவர் என்றும், விலங்கொடு மக்களனையர் இலங்கு நூல் கற்றாரொ டேனையவர் என்றும், வாழ்வாங்கு வாழ்பவன் தெய்வத்துள் வைக்கப்படும் என்றும் மேல் என்றும் கீழ் என்றும் பிறவாறும் தெய்வப் புலவர் கூறுமாற்றான், 'உயர்திணை எனப் படும் மக்கள் குலமும் குடியுமாகிய மரபானும் அறிவாற்றல் களானும் பண்பானும் தொழிலானும் உடைமையானும், இன்மை யானும், பகையும் நட்புமாகிய இயல்புகளானும் ஆள்வோர் ஆளப்படுவோர் என்னும் செயற்கையானும் பலதிறத்தாராயினர்.

மக்களின் பண்பாட்டு நாகரிகங்களுக்கேற்ப அவர்தம் ஆட்சி யும் அரசியலும் அமையும். அரசும், அரச உறுப்புக்களும், அரசச் சுற்றங்களும் மக்கள் குழுவேயாம். அரசான் ஆளப்படும் குடி களும் மக்கள் குழுவேயாம். அக்குடிமக்கள் அறவோர் அந்தணர், மறையோர் ஐயர், துறவோர், நீத்தார் சான்றோர் பார்ப்பார் நூலோர் புலவர், கலைஞர், மறவர், வீரர், உழவர், வணிகர், தொழிலர் என்றும் புரவலர் இரவலர் உடையார், இல்லார்

என்றும் அடியார், ஏவலர் என்றும் பல திறப்படுவர். அவரன்றியும் சூதர், களியர், கயவர், கள்வர், வரைவின் மகளிர், பரத்தையர் இழிசினர் என்போரும் குடிமக்களேயாவர்.

இங்ஙனம் பண்பாட்டானும் நாகரிகத்தானும் அறிவானும் ஆற்றலானும், தொழிலானும் பலத்திறத்தினராய் விளங்கும் மக்களை தன்மை வகையாற்பாகுபாடு செய்யின் அவர்தாம் உயர்ந்தோர் – அல்லோர் – மேலோர், கீழோர், தாழ்ந்தோர், இழிந்தோர் என வகைப்படுவர். இவர் யாவர்க்கும் அகத்திணையாகிய காமஒழுக்கமும், புறத்திணையாகிய பொருளொழுக்கமும் பொதுவாயினும் எழுத்தானியன்ற சொற்களைப் பொருண்மை கருதிப் பெயர் வினை இடை உரிஎன இலக்கண முறையாற் பாகுபாடு செய்துரைப்பதைப் போல மக்களையும் அவரவர் பண்பும் தொழிலும் பற்றி இலக்கணத்தான் வகுத்துக் கூறினர் தொன்னூலோர்.

அவர் தம் நூல்நெறிபற்றி யமைந்த தொல்காப்பியக் கோட்பாட்டினையும் புலனெறி வழக்கினையும் ஊன்றி நோக்காமல் எழுந்த உரைகளும். இக்கால நோக்கிற் கிளைத்த ஆய்வுரைகளும் மாணாக்கர்க்கு ஐயமும் திரிபும் விளைவிப்பனவாயின. ஆசிரியர் மக்களை உயர்ந்தோர் அல்லோர் அந்தணர் அரசர் வணிகர் வேளாண்மாந்தர், அடியோர், வினைவலர் எனக் குறியீடு செய்துணர்த்தும் இலக்கணம் யாவும் தமிழ் நெறியே என்பதைப் பின்வரும் சான்றுகளான் மாணுக்கர் தெளிந்துணர்வரராக.

பைந்தமிழ்ச் சான்றோர் குடிமைப் பண்பும் வினையாற்றலும் காரணமாகச் சமுதாய நோக்கில் வகுத்துக்கொண்ட நாற்பாலினை இடைக்காலத்துப் புகுந்து கலந்த ஆரியர் தம் இனப் பாதுகாப்பையும் மேனிலை வாழ்வையும் கருதிப் பிறப் படிப்படையிற்கரவாக மாற்றி வருணக்கோட்பாடாக வழங்கிப் பழந்தமிழ்ச் செந்நெறிப் பகுப்பினை மறைத்துவிட்டமையே நாற்பாற்பகுப்பும் தெய்வக்கொள்கையும் ஆரியர் வகுத்தமைத்தவை என்னும் கருத்து வளர்ந்தமைக்குக் காரணமாகும். அவை ஆரியக்கோட்பாடன்மையைப் பாரதநாடு தவிர்ந்த ஏனைய நாட்டினும் மேலையாரிய இனத்தினும் அவை காணப்படாமையான் அறியலாம்.

இனி இந்நூலுள் ;

‘‘தெய்வஞ் சுட்டிய பெயர்நிலைக் கிளவி’’ (கிளவி-4)

‘‘பால் வரை தெய்வம் வினையே பூதம்
ஞாயிறு திங்கள் சொல்லென வரூஉம்’’ (கிளவி-58)

"தெய்வம் உணாவே மாமரம்" (அகத்-20)
"மன்னு நிமித்தம் மொழிப் பொருள் தெய்வம்" (அகத்-39)
"கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே" (புறத்-4)
"காமப் பகுதி கடவுளும் வரையார்" (புறத்-28)
"கடவுள் வாழ்த் தொடுகண்ணிய வருமே" (புறத்.27)
ஏமுறு கடவுள்ஏத்திய மருங்கினும் (கற்-5)
தெய்வமஞ்சல் புரையறந்தெளிதல் (மெய்-24)
"வினையின் நீங்கிய விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது" (மர-96)

எனவருவனவற்றான் இப்பொருளதிகாரத்துக் கூறப்படும் தமிழ் மக்களின் தெய்வக்கோட்பாடும் வழிபாடும் பிறவும் தெளியப்படும்.

அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் (புறத் - 16)
மறையோர் தேஎத்துமன்றல் (களஂ - 1)
ஐயர் யாத்தனர் கரணம் என்ப (கற் - 4)
ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் (கற் - 5)
அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும் (கற்-5)
அன்னவை பிறவும் பார்ப்பார்க்குரிய (கற்-36)
நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க்குரிய (மரபி - 71)
அந்தணாளர்க்கு அரசு வரைவின்றே ( ,, 83)

எனவருவனவற்றான் அந்தணர், மறையோர் ஐயர், பார்ப்பார் எனச் சுட்டப்படுவோரும் அவர்தம் சிறப்பும் தெளியப்படும்.

சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்துரைத்தலும் (புறத் - 5)
எஞ்சாமண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல் குறித்தன்றே (புறத்-6)
ஐவகை மரபின் அரசர் பக்கமும் (புறத்—16)
வேந்துறு தொழிலே யாண்டினதகமே (கற் - 48)
படையும் குடையும் கொடியும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோ லரசர்க்குரிய (மரபி - 72)

நெடுந்தகை செம்மல் என்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித்தன்றே (மரபி-74)

என்பனவற்றான் வேந்தர், மன்னர் அரசர், மன்னராகிய நிலைமை எய்தினோர் பற்றிய மரபுகளும் பிறவும் தெளிவாம்.

இரு மூன்று மரபின் ஏனோர் பக்கமும் (புறத் - 16)
வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை (மரபி - 78)
மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பாலான (மரபி - 78)
கண்ணியும் தாரும் எண்ணினராண்டே ( ,, - 80)

என்பவற்றான் வணிகர் பற்றிய கொள்கையும் பிறவும் புலனாகும்.

வேளாண் மாந்தர்க்கு உழுதூணல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி (மரபி - 81)
வேந்துவிடு தொழிலிற் படையும் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர் பெறும் பொருளே (மரபி - 82)

என்பனவற்றான் வேளாண் மாந்தர் இலக்கணமும் மரபும் பிறவும் தெளிவாம்.

இம்மரபியற் சூத்திரங்கட்கும் பிறவற்றிற்கும் உரையாசிரியன்மார் மனுமுதலிய ஆரியநூற் கோட்பாடுகளின் அடிப்படையிற் கூறிச்சென்ற உரைகளானும் பண்டைத்தமிழ் நெறியை அறிதற்குரிய தொன்னூல்கள் மறைந்தமையானும் இத்தகு சூத்திரங்களையெல்லாம் இடைச்செருகல் எனக் கருதுவார் சிலர். தமிழ் நூலார் கூறும் நாற்பால் வேறு ஆரியர் கூறும் நால்வருணம் வேறு என்பதையும் சூத்திரத்திற்குரிய செம்பொருளையும் தேர்ந்துணர்ந்து கொள்க.

இனி, வேந்துவிடுமுனைஞர் வேற்றுப்புலக்களவின்
ஆதந்தோம்பல் மேவற்றாகும் (புறத்-2)
மாவருந்தானையர் மலைந்தபூவும் (புறத்-5)
காவலர்க்குரைத் கடைநிலையானும் (புறத்-29)

என்பனவற்றான் நிலையாய வினைவலரும் அவர் மரபும்

மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும் (புற - 16)
நாலிருவழக்கிற்றாபதப் பக்கமும் ( ,, )

என்பனவற்றான் கணிவர். இருடியர் பற்றிய மரபுகளும்

குடையும் வாளும் நாள்கோள் விடுதல் (புற-11)

என்பதனான் பார்ப்பார் கடனும் மரபும் பிறவும் புலனாகும்

கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தலும் (புற-29)

என்பதனான் புரவலர் இரவலர் பற்றிய நிலைமைகளும்

தாவின் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் (புற - 30)
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்

என்பவற்றான் பல்வேறு கலைஞர் பற்றிய நடைமுறையும்

மாலை ஏந்திய பெண்டிரும் மக்களும் (கற்-15)

என்பதனான் குற்றேவல் புரிவோர் நிலையும்

தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை
மாயப் பரத்தை உள்ளிய வழியும் (கற்-6)
காமக் கிழத்தியர் நலம் பாராட்டிய
தீமையின் முடிக்கும் பொருளின் கண்ணும் (கற் - 6)

என்பவற்றான் வரைவின் மகளிர், பரத்தையர் பற்றிய சமுதாய நிலையும்

ஆற்றதுபண்பும் கருமத்து விளைவும்
ஏவல் முடிபும் வினாவும் செப்பும்
... ... ... ... ... ... ... ... ... ... ...
இளையோர்க்குரிய கிளவிளன்ப (கற்-29)
உழைக்குறுந் தொழிலும் காப்பும் உயர்ந்தோர்
நடக்கையெல்லாம் அவர்கட்படுமே (கற்-30)

என்பவற்றான் குற்றேவல் புரிவாரும் பிறரும் பற்றிய மரபுகளும் சமுதாய அமைப்பும் புலனாகும்.

மேற்கூறப்பெற்ற மாந்தர் யாவரும் அகத்திணையாகிய காம ஒழுக்கத்திற்குரியராகலின் அவருள் உயர்ந்தோர், அல்லோர் என்போர் கிளவித்தலைவராக அமையுமிடத்துத் திணைப் பெயர்களாற் சுட்டப்பெறுவர் என்பது விளங்கும். யாவரையும் மேல்வரும் சூத்திரத்துள் அடக்கி ஓதுவார் ஆசிரியர்.

முல்லை முதலிய நிலத்துவாழும் மக்களே அகனைந்திணைக் குரியராய்த் திணைநிலைப்பெயர் பெறுவர். அவர் தலை மக்களாகக் கிழமை செய்யப்பெறுங்கால் அவ்வத்திணைகட்குரிய மரபுப் பெயர்களைப் பெறுவர். அகத்திணைக்கண் இங்ஙனம் மரபுப்பெயர்களைப்பெறும் மக்களே புறத்திணைக்கண் அந்தணர், அரசர், வணிகர், வேளாண்மாந்தர், மறவர், பாணர் கூத்தர் என்னும் சமுதாயப் பெயர்களைப் பெறுவர் புறத்திணை மாந்தரை ஈண்டு ஆசிரியர் "ஏனோர்" எனக் குறிப்பிடுவார். அந்தணர் முதலானோர் அகத்திணைமாந்தராக வருமிடத்து ஈண்டுக் கூறப்படும் திணைநிலைப் பெயர்களையே பெறுவர் என்க.

இத் தொன்னெறிமரபினை ஓராத உரையாசிரியன்மார் புறத்திணை மாந்தரை வேறாகக்கொண்டு அவரையெல்லாம் இச்சூத்திரங்களில் அடக்கக் கருதிச் சூத்திரங்களைச் சிதைத்தும் நலிந்தும் வல்லுரை கூறிச்சென்றனர்.

திணைக்கிழமைப் பெயர்கள் வருமாறு :-

முல்லை :- குறும்பொறைநாடன் தோன்றல். குறிஞ்சி :- பொருப்பன், வெற்பன். மருதம் :- மகிழ்நன், ஊரன். நெய்தல் :- கொண்கன், துறைவன். பாலை :- காளை, மிளி என்பனவும் பிறவுமாம்.

**சூ. 23 : ஆயர் வேட்டுவர் ஆடூஉத்திணைப் பெயர்**
**ஆவயின் வரூஉம் கிழவரும் உளரே (23)**

க - து : மேற்கூறிய திணைநிலைப் பெயர் இவ்வாறு வருமெனச் சில எடுத்துக் காட்டுக் கூறுகின்றது.

பொருள் : ஆயர் வேட்டுவர் என்றாங்கு வருவன அவர்க் குரிய திணைநிலைப்பெயர்களாம். அவருள் அவ்வந்நிலத்தின் கண் அகத்திணைத் தலைவராக வரும் கிழமையுடையோரும் உளர்.

என்றது ; ஆயர் வேட்டுவர் என்பன அந்நில மக்களின் வினைபற்றிய பெயர்களாம் அவர் தலைமக்களாகக் கிழமை யுறுங்கால் பொதுவன், வெற்பன் என்றாங்கு அவ் ஒழுகலாறு பற்றிய மரபுப் பெயர்களைப் பெறுவர் என்றவாறு.

ஆயர் - ஆனிரையை உடையவர். (ஆ + அர் = ஆயர்)

எதிர்மறை யும்மையான் அவர் தலைமக்களாகக் கிழமையுறாவழி வினைப்பெயரானும் நிலப்பெயரானும் வழங்கப் பெறுவர் எனக்கொள்க.

நிலப்பெயராவன :- இடையர், குன்றவர், பள்ளர், பரவர் என்றாற்போல்வனவாம்.

உம்மையை எச்சமாக்கிக் கிழத்தியரும் உளர் என்பார் உரையாசிரியன்மார் : தலைவன் பெயர்கூறவே தலைவி பெயர் தானே வந்தியையு மாதலானும் இவ்இலக்கணம் பெரும்பான்மை ஆடவரை அடிப்படையாக வைத்துக் கூறப் படுதலானும் "மிக்கோனாயினும் கடிவரையின்றே" என்ற தனான் தலைவி எவ்வகையினளாயினும் ஒக்குமென்பது பெறுதலானும் அவர்கருத்துச் சிறவாமையறிக.

**சூ. 24 : ஏனோர் மருங்கினும் எண்ணுங் காலை**
**ஆனா வகைய திணைநிலைப் பெயரே (24)**

க - து : அவ்வந்நிலத்திற்குரிய தொழிலை மேற்கொள்ளாது அவ்வந்நிலத்து வாழ்வோர்க்கும் திணைநிலைப்பெயர் அவையேயாம் என்கின்றது.

**பொருள் :** முல்லை முதலாகிய நிலத்தின்கண் அவ்வந் நிலத்திற்குரிய வினைகளை மேற்கொள்ளாத நாற்பாலராகிய ஏனோர்பாங்கினும் அவர் தலை மக்களாகக் கிழமையுறுங்கால் திணைநிலைப்பெயர் அவ் ஒழுகலாற்றிற்குரிய அவ் வகை யினவேயாம்.

என்றது; புறத்திணைக்கண் பண்பும் செயலுமாகிய ஒழுகலாறுபற்றி வகுக்கப்பெற்ற அந்தணர் அரசர் முதலானோர் அகத்திணைக்கிழமை யுற்றவிடத்துத் திணைதொறும் மரீஇய பெயராகிய பொதுவன், வெற்பன், ஊரன், நாடன், சேர்ப்பன், மீளி, விடலை என்னும் அவ்வகைப் பெயராற் சுட்டப்பெறுவர் அந்தணர் அரசர் என்பன முதலாகிய புறத்திணைப் பெயர்களாற் சுட்டப்பெறார் என்றவாறு.

'ஏனோர்' என்றது நிரைமேய்த்தல், பேணல் முதலிய நிலத்திற்குரிய தொழிலை மேற்கொள்ளாமல், ஓதல் ஓதுவித்தல் ஆளுதல் முதலிய வினைகளை மேற்கொண்டொழுகுவோரை, அவர் புறத்திணை ஒழுகலாற்றின்கண் வேறு வேறு பெயர் பெறுதலான் ஆயர் வேட்டுவர் என்பாரை நோக்க, அவர் ஏனோர் ஆயினர் அம்முறைமையான் அவரை உயர்ந்தோர் எனச் சுட்டிக் கூறுதல் நூல்வழக்காயிற்றென்க.

அந்தணர் முதலிய நாற்பாலார் (உயர்ந்தோர்) அல்லாத அடியோர், வினைவலர், ஏவலர் முதலானோர் அகனைந் திணைக்கண் கிழமை பெறாராய்க் கைக்கிளை பெருந்திணைகட் குரியராய்ச் சுட்டப்பெறுவார் என்பது வரும் சூத்திரத்தாற் பெறப்படும்.

எ-டு : 'படைபண்ணிப் புனையவும்' என்னும் பாலைக் கலியுள்வரும் தலைவன் அரசனாக உள்ளமையும் பெரும் பெயர் மீளி பெயர்ந்தனன் செலவே, என அவன் திணைப்பெயராற் சுட்டப் பெற்றுள்ளமையையும் கண்டுகொள்க. பிறவும் அன்ன.

**சூ. 25 : அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**
**கடிவரை யில புறத் தென்மனார் புலவர் (25)**

**க - து :** ஏனோர் எனப்பட்டாருள் தன்னுரிமையில்லாத ஒரு சாராரின் காம ஒழுக்கம் கைக்கிளை, பொருந்திணைகட்கு உரியதாகும் என்கின்றது.

**பொருள் :** தமக்குத் தலைமைப்பாடின்றி அரசர் முதலானோர்க்குத் தொண்டூழியம் புரியும் அடியோர் பாங்கினும் பிறவாறு குற்றேவல்புரியும் வினைவலர் பாங்கினும் அகம்பற்றிய ஒழுகலாறுகள் கடியப்படுவன அல்ல, அகனைந்திணையின் புறத்தனவாக அமையும் எனக்கூறுவர் புலவர்

அடியோரும் வினைவலரும், பிறப்பே குடிமை ஆண்மை (மெய் - 25) என்பனவற்றான் ஒத்துக் கிழவனும் கிழத்தியுமாக இருவகைக் கைகோளும் புரிதற்கு ஏலாதவராதலின் அவர்தம் காம ஒழுக்கம் கைக்கிளை, பெருந்திணைகளின் பாற்படும் என்றார்.

அகத்திணை ஏழனுள் முல்லை முதலாயவற்றை அகனைந் திணை எனக்கொண்டமையான் அவற்றின் இருமருங்கும் நிற்கும் கைக்கிளையும் பெருந்திணையும் அவற்றின் புறமாயின. புறம் என்றது, பக்கத்தை உணர்த்தி நின்றது.

காம ஒழுக்கம் யாவர்க்கும் உரியது என்பதும் அது தலைமைப் பாடும் தன்னுரிமையும் இல்லாதார்க்குக் கடைபோகாமையானும் களவு, கற்பாகிய நெறிகளுள் அடங்காமையானும் அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும் நிகழ்பவை கைக்கிளை பெருந்திணைக்கண் அடங்கும் என்பதும் உணர்த்தியவாறு.

எ-டு : "ஏஎ இஃதொத்தன்" என்னும் குறிஞ்சிக்கலியுள் வரும்நிகழ்ச்சி வினை வலபாங்கினர் ஒழுக்கமாய் பெருந்திணைப் பாற்படுமாறு கண்டுகொள்க.

"எந்நோற்றனை கொல்லோ" என்னும் மருதக்கலி அடியோர் பாங்கினது ஒழுக்கமாய் பெருந்திணையின் பாற்படுமாறு கண்டுகொள்க.

"காராரப் பெய்த" என்னும் முல்லைக்கலி வினைவலபாங்கினான்றன் கைக்கிளை ஒழுக்கமாயவாறு கண்டுகொள்க.

அகனைந்திணைக்கண் ஒத்த கிழவனும் கிழத்தியுமாயவர்க்குள் நிகழும் கைக்கிளை பெருந்திணை அகனைந்திணையின் உறுப்பாக நிகழுமாதலின் அவை வேறு இவை வேறென அறிக.

**சூ. 26 : ஏவல் மரபின் ஏனோரும் உரியர்**
**ஆகிய நிலைமையவரும் அன்னர் (26)**

**க - து :** நாற்பாலாரேயன்றிக் குறுநில மன்னர் தண்டத்தலைவர் தானைத் தலைவர் முதலானோரும் அகத்திணைத் தலைவராதற்குரியர் என்கின்றது.

**பொருள் :** பிறரை ஏவிப் பணிகொள்ளும் மரபின்ராகிய குறுநில மன்னர், வேளிர், தண்டத் தலைவர் முதலானோரும் அகத்திணைக் கிழவராதற்குரியர். வேந்தரான் ஆட்சியுரிமை அளிக்கப்பெற்று ஆளும் உரிமை எய்திய பிறரும் அகத்திணைக் கிழவராதற்குரியராவர்.

என்றது ; முடியுடைவேந்தரின் கீழ் அவராணைக்குட்பட்டுத் திறை செலுத்தி ஆட்சி புரியும் குறுநில மன்னரும், வேளிரும் வேந்தர் பாங்கினராயமர்ந்து ஆட்சிப் பணிபுரிவோரும் தலைமைப் பாடும் தன்னுரிமையும் இலராயினும் வேந்தரின் சார்பாக நின்று பிறரை ஏவிப் பணிகொள்ளுமாற்றான் தலைமையும் உரிமையும் பெற்று ஒழுகுதலின் அகத்திணைத் தலைமக்களாதற்குரியராவார் என்றவாறு.

இன்னோர் தலைமைப் பாடுடைமையும் இன்மையும் ஆகிய இரு நிலைமையும் உடையராய்த் தன்னுரிமையுடைய நாற்பாலாரினும் தன்னுரிமையில்லா அடியோர் வினைவலரினும் அடங்காமையான் மேற்கூறிய ஏனோரினின்று இவரை வேறு படுத்துணர்த்து வாராய் "ஏவல் மரபின் ஏனோர்" என்றும், "ஆகிய நிலைமையவர்" என்றும் விளங்கக் கூறினார்.

ஆகியநிலைமையவர் = ஆக்கம் பெற்று அந்நிலைமை எய்தியவர்.

எ - டு : “மலைமிசைக் குலைஇய”

என்னும் களிற்று யானை நிரையுள்

புறவடைந்திருந்த அருமுனை இயவிற்
சீறூரோளே நன்னுதல்; யாமே
... ... ... ... ... ... ... ... ... ...
அருந்திறை கொடுப்பவும் கொள்ளான் சினஞ்சிறந்து
வினைவயிற் பெயர்க்குந் தானை
புனைதார் வேந்தன் பாசறை யோமே (அகம்-84)

தலைவன் தன் ஊர் அருமுனையியவிற் சீறூர் என்றலின் இவன் குறுநில மன்னன் என்பது விளங்கும்.

“நரைவிராவுற்ற” என்னும் அகப்பாட்டினுள்
நம்வயின் நினையும் நன்னுதலரிவை
புலம்பொடு வதியும் கலங்கஞர் அகல
வேந்துறு தொழிலொடு வேறுபுலத்தல்கி
வந்துவினை முடித்தன மாயின் நீயும்
... ... ... ... ... ... ...
ஊர்நனித் தந்தனை உவகையாம் பெறவே (அகம்-254)

இதன்கண் வரும் தலைவன் “வேந்து வினை முடித்தனம்” என்று கூறுதலான் ஆகிய நிலைமை பெற்ற தலைவன் என்பது புலனாகும்.

இதுகாறும் நானில மக்களை நிலம் பற்றியும் அகத்திணைக் கிழமை பற்றியும், வகைப்படுத்துக் கைக்கிளை முதலாய ஏழ் திணை கட்கும் இவரிவர் இன்னவாற்றான் உரியர்எனத் தொகுத் தோதினார். அவருள் தன்னுரிமையுடைய அந்தணர் முதலிய நாற்பாலாரும் தன்னுரிமை இல்லாத அடியோர் வினைவல பாங்கினோரும் இருநிலைமையுமுடைய குறுநில மன்னர் தானைத் தலைவர் முதலானோரும் ஒழுகும் ஒழுகலாற்றிற்குரிய உரிப்பொருள் நிமித்தங்களை இலக்கண நெறியான் இனி ஓதுவார்.

புணர்தல் முதலாய உரிப்பொருளுள் புணர்தலும் ஊடலும் தலைவனும் தலைவியும் பிரிவிலராய் இல்லத் திருப்புழி நிகழ்வன. இருத்தலும் இரங்கலும் தலைவன் தலைவியைப் பிரிந்தவழி நிகழ்வன. பிரிதல் என்னும் பாலைக்குரிய உரிப்பொருள் பிரிவு நீட்டித்த வழி நிகழ்வது.

தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லுதற்குக் காரணம் வெட்சி முதலாகப் புறத்திணையுள் ஓதப்பெறும் தலைமகற்குரிய கடமைகளாகும். அக்கடமைகள் யாவும் பிரிதல் முதலிய உரிப் பொருட்கு நிமித்தங்களாகும். அக்கடமைகள் பலவாயினும் அவற்றை நாடக வழக்கும் உலகியல் வழக்கும் பற்றி ஓதல், பகை, தூது, காவல், துணை, பொருள், பரத்தைமை என வகுத்தமைத் தனர் முன்னூலார்.

அவற்றுள் பரத்தைமயிற் பிரிவு நாடிடையிட்டும் காடிடை யிட்டும் பிரிதலன்மையானும் அதற்குப் புறத்திணை ஒழுகலாறு பெரிதும் காரணமாகாமையானும் தலைவன் மாட்டுப் பரத்தைமை இல்வழியும் கற்பித்துக் கொண்டு தலைவி ஊடுதல் காமத்திற்குச் சிறந்ததொன் றாகலானும் அதனைத் தவிர்த்து ஏனைய பற்றிய பிரிவுகளையே பிரிதல் நிமித்தமாகக் கொண்டனர் நூலோர்.

அம் மரபுபற்றி இவ்வாசிரியர் ஓதல் முதலாய வினை மேற் கொண்டு பிரிதற்குரியார் இவரிவர் என ''ஓதல் பகையே தூதிவை பிரிவே'' என்னும் சூத்திரம் முதலாக உயர்ந்தோர் பொருள்வ யின் ஒழுக்கத்தான என்பதீறாகப் பிரிதல்நிமிர்த்தம் பற்றிய இலக்கணங்களை விரித்தோதுகின்றார்.

சூ. 27 : **ஓதல் பகையே தூதிவை பிரிவே** (27)

க - து : பாலைத்திணைக்குரிய பிரிதல் நிமித்தங்களுள் சிறப்புடையவை இவை என்கின்றது.

**பொருள் :** ஓதற்குப்பிரிதலும் பகைவயிற்பிரிதலும் தூதிற்குப் பிரிதலும் ஆகிய இவை சிறப்புடைய பிரிவாம். பகையே என்னும் ஏகாரம் எண்ணேகாரம் இறுதி ஏகாரம் அசை.

ஆகிய மூன்றும் எனத்தொகை கூறாமையானும் பின்னர்க், காவல், பொருள் முதலிய பிரிவுகள் கூறலானும் இவை சிறப்புடையவை என்பது கருத்தாதல் பெறப்படும். பிரிவுகளுள் பகைவயிற் பிரிவு முல்லையின் புறத்தொழுக்கமாகவும் ஏனைய பாலையின் புறத்தொழுக்கமாகவும் அமையுமாற்றைப் புறத்திணை யுரையுள் கண்டு கொள்க.

சூ. 28 ; **அவற்றுள்**
**ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன** (28)

க - து ; ஓதற்பிரிவிற்கும் தூதிற் பிரிவிற்கும் உரிய தலைமக்களாவார் இவர் என்கின்றது.

**பொருள் :** மேற்கூறிய மூன்றனுள் ஓதற்பிரிவும் தூதிற் பிரிவும் அருள் அறநெறிகளான் செந்தண்மை பூண்டொழுகு வாரும் ஆளுமையுடையாருமாகிய உயர்ந்தோர்கண்ணவாம்.

ஈண்டு, உயர்ந்தோர் என்றது நாற்பாலாருள் அந்தணரும், அரசரும், அரசராற் சிறப்புப் பெற்று ஆகிய நிலைமையவருமாம் என்பது "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் ஐவகை மரபின் அரசர்பக்கமும்" என்னும் புறத்திணைச் சூத்திரத்தான் அறிக.

ஓதற்குரியவை பலதிறப்படும், அவற்றுள் அந்தணர்க்குச் சிறப்பாக உரியவை அறம் பொருள் இன்பம் வீடு என்னும் பொருள் பற்றிய உண்மைகளை விளக்கும் அடிப்படை ஓத்துக் களாகிய நான்மறைகளாம்: இவைபற்றிய விளக்கம் பாயிர உரையுள் கூறப்பட்டது. நான்மறையின் அங்கமாக விரிந்த வற்றை "ஓத்தின் ஆன" என்று கூறுப. ஓத்தின் ஆன நூல்கள் ஏனையோர்க்கும் உரியவையாம்.

**எ-து :** பொய்யற் கேள்வியாற் புரையோரைப் படர்ந்து நீ
மையற்றபடிவத்தான் மறுத்தரல் ஒல்வதோ (கலி—15)

இஃது அந்தணர் ஓதற்குப் பிரிந்தமை கூறிற்று. பிறவும் சான்றோர் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

வயலைக் கொடியின் வாடிய மருங்குல் (புறம்—305)

என்னும் புறப்பாட்டு அந்தணர் தூது சென்றமை கூறிற்று

படர்ந்தாரணம் முழங்கப் பஞ்சவர்க்குத்தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
[சிலம்பு—ஆய்ச்சியர்குரவை]

இஃது அரசன்தூது சென்றமை கூறிற்று.

## சூ: 29 : தானே சேறலும் தன்னொடு சிவணிய ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே (29)

**க - து :** மேற்கூறிய மூன்றனுள் எஞ்சி நின்ற பகைவயிற் பிரிவிற்குரிய தலைமக்களாவார் இவர் என்கின்றது.

**பொருள் :** வேந்தன் தானே படையொடு செல்லுதலும் அவனொடு பொருந்தியவராகி அவனது ஆணையைப் பெற்ற தானைத் தலைவர் செல்லுதலுமாகிய பகைவயிற் பிரிவு வேந்தன் கண்ணதாகும்.

தானே சேறலும் வேந்தன் மேற்று, சிவணியஏனோர் சேறலும் வேந்தன் மேற்று, எனக் கூட்டிக் கொள்க. இப்பிரிவினை வேந்து வினை இயற்கை என்றும் வழங்குப.

" தன்னொடு சிவணிய " என்றதனான் குறுநில மன்னர்க் கேயன்றி உடன்செல்லும் தானைத் தலைவர்க்கும் தண்டத் தலைவர்க்கும் பகைவயிற் பிரிவுஉரித்தென்பது புலப்படும். பகைவயிற் பிரிவு வெட்சிப் போர்க்கருதியதாயின் குறிஞ்சியின் புறத்தொழுக்கமாம். மண்ணிசை வேந்தனை அடல் குறித்த வஞ்சிப்போரையும், மதிலரணை முற்றுதலாகிய உழிஞைப் போரையும் கருதியதாயின் முல்லைத் திணையின் புறத்தொழுக்க மாகவும், மைந்து பொருளாகச் செல்லும் தும்பைப்போர்க்கருதிய தாயின் நெய்தற்றிணையின் புறத்தொழுக்கமாகவும் அமையும். விளக்கம் புறத்திணையுரையுள் கண்டு கொள்க.

எ - டு : " கடும்புனல் கால்பட்டு " என்னும் பாலைக்கலியுள்

மயங்கமர் மாறட்டு மண்வௌவி வருபவர்
தயங்கிய களிற்றின் மேல் தகை காண விடுவதோ. (கலி-31)

எனவும்

பகைவென்று திறைகொண்ட பாய்திண்டேர் மிசையவர்
நீளுயர் கூடல் நெடுங்கொடி எழவே (கலி-31)

எனவும் வருவனவற்றான் வேந்தன் பகைவயிற் சென்றமை கண்டு கொள்க.

"மங்குல் மாமழை " என்னும் அகப்பாட்டினுள்

... ... ... அற்சிர அரை நாள்
காய்சின வேந்தன் பாசறை நீடி
நந்நோயறியா அறனிலாளர்
இந்நிலை களைய வருவர்கொல் (அகம்-294)

என வருமாற்றான் தன்னொடு சிவணிய ஏனோர் பகைவயிற் சென்றமை கண்டுகொள்க.

கொற்றச் சோழர் கொங்கர்ப்பணீஇயர்
வெண் கோட்டியானைப் போர்ஓர் கிழவோன்
பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய இவட்கே (குறு-10)

என்பது மது.

சூ. 30 : மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையான்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே. (30)

க - து : காவற்பிரிவும் ஒருசார்பொருள்வயிற்பிரிவும் அவற்றிற்குரியாராவாரும் பற்றிக்கூறுகின்றது. இவை ஓதல் முதலிய மூன்றனை ஒப்பப் பிரிதல் நிமித்தமாதற்கு அத்துணைச் சிறப்புடையவையன்மையின் பிரித்துக் கூறப்பெற்றன என்க.

பொருள் : முல்லைநில முதலாகச்சொல்லிய தேயங்கள் பால் பிழையுற்றது இனி முறையாற் பிழையாதாதலை வேண்டியும் இறையாகவும் திறையாகவும் விதிக்கப்பெற்ற ஒள்ளிய பொருளை ஈட்டுதல் வேண்டியும் பிரியும் பிரிவுகள், வேந்தனாற் சிறப்புரிமை பெற்ற மேலோரும், ஆட்சித்தலைவரும் தண்டத்தலைவருமான ஏனோரின் தன்மைகளாம்.

வேண்டியும் முடியவும் பிரியும் பிரிவு ஏனோர் படிமையவாம் எனக் கூட்டி முடித்துக் கொள்க.

சொல்லிய (சொல்லப்பட்டவை) என்பது வினையாலணையும் பெயர். ஈண்டு அது தேயங்களைக் குறித்துநின்றது. தேயங்கள் என்பது ஆகுபெயரான் அவ்வந்நிலத்து வாழும் மக்களை உணர்த்தி நின்றது. பிழைத்தது என்பது திண்ணை மெழுகிற்று என்றாற்போலச் செயப்படுபொருளைச் செய்தது போலக் கிளந்ததாம். படிமை = தன்மை. அஃது ஈண்டுப் பிரிதல் ஒழுக்கத்தைக் குறித்து நின்றது. படிமைய என்றது குறிப்பு வினைமுற்று. படிமை ஒழுக்கமாதலை "கூறினை பெருமநின்படிமையானே" (பதிற் - 74) என்பதனானறிக.

பிழைத்தது பிழையாதாதல் வேண்டிப்பிரியும் பிரிவு காவற் பிரிவாம்.

நாடு, அறப்புறம், தேவர்கோட்டம், கல்விநிலையம் முதலிய யாவும் அடங்கப் பிழைத்தது பிழையாதா கல்வேண்டியும் எனப் பொதுப்படக் கூறினார் என்க. அங்ஙனம் பொதுப்படக் கூறியதனான், மழைவளந்தப்பியும் பிறவாறும் நேரும் பிழைகளும் கொள்க. அவ்வழி அப்பிழைகள் நீங்க வேள்வி முதலியவை செய்து தீர்த்தலும் காவலேயாம். இவ்வகைக் காவல் அந்தணர்க்குச் சிறந்ததாகும்.

உழுவிப்போர்பாலும் குறுநிலமன்னர்பாலும் முன்பே வரைவு செய்யப்பட்ட இறை (வரி)ப்பொருளும் திறைப்பொருளும் அடங்க 'இழைத்த' என்றும் அதனான் அரசுப்பணி நிகழவேண்டுதலில் ஒண்பொருள் என்றும் விளங்கக் கூறினார் என்க.

வாணிகம் முதலியவற்றான் ஈட்டுதற்கும், வரைதல், முதலிய கடப்பாட்டிற்காக ஈட்டுதற்கும் பிரியும் பொருள்வயிற் பிரிவு வணிகர்க்கும் ஏனையோர்க்கும் உரியதாகலின் அதனைப் ''பொருள்வயிற்பிரிதல்'' எனப் பின்னர் விதந்து கூறுவார்.

எ-டு : ''அறம்போழ் அவ்வளை'' என்னும் அகப்பாட்டினுள்,

கைதொழு மரபிற் கடவுட்சான்ற
செய்வினை மருங்கிற் சென்றோர் வல்வரின்
... ... ... ... ... ... ... ... ... ... ...

ஓடுவை மன்னால் வாடைநீ யெமக்கே (அகம்-125)
என, இதன்கண் தேவர்கோட்டம் பற்றிய காவற்பிரிவு வந்தது.

''ஒருகுழையொருவன் போல்'' என்னும் பாலைக்கலியுள்,

அறல்சாஅய்ப் பொழுதொடெம் அணிநுதல் வேறாகித்
திறல்சான்ற பெருவனப் பிழப்பதை அருளுவார்
ஊறஞ்சி நிழல்சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி

ஆறின்றிப் பொருள் வெஃஇ அகன்ற நாட்டுறைபவர்
(கலி—26)

என, இதன்கண் காவற் பிரிவும், இழைத்த ஒண்பொருட் பிரிவும் வந்தவாறு கண்டு கொள்க.

## சூ. 31 : மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே (31)

க – து : காவற் பிரிவு அந்தணர் முதலிய நாற்பாலார்க்கும் உரித்தென்கின்றது'

பொருள் : வேந்தரான், மேவிய சிறப்புடைய மேற்கூறிய ஏனோர் படிமையுள் முறைமையாற் பிழைத்தது பிழையாதாகல் வேண்டிப் பிரியும் காவற் பிரிவு, அந்தணர் முதலிய நாற்பாலார்க்கும் உரியதாகும்.

மேலோர், என்றது மேற்கூறிய மேவிய சிறப்பின் ஏனோரை. முறைமை, என்றது முறையாற் பிழைத்தது பிழையாதாகல் வேண்டியும் என்ற காவற் பிரிவினை. அதனான் உரித்தே என ஒருமையாற் கூறினார் என்க.

வேந்தனது ஆணையை நோக்கி இராமல் பொதுநலங் கருதித் தேவர் கோட்டம், அறப்புறம் முதலியவற்றின்கண் பிழை நேராமற் காத்தல் அறநெறி பற்றி ஒழுகும் மாந்தர் யாவர்க்கும் உரித்தென்பது விளங்கத் தன்னுரிமை சான்றவராகிய அந்தணர் முதலிய நால்வர்க்கும் உரித்தென்றார்.

எ - டு : சான்றோர் செய்யுள் வந்துழிக் கண்டுகொள்க.

**சூ. 32 : மன்னர் பாங்கிற் பின்னோ ராகுப (32)**

**க - து :** அடியோர் வினைவல பாங்கினோர் ஆகியோர்க்கும் ஓராற்றான் மேற் கூறிய பிரிவுகள் எய்துமாறு கூறுகின்றது.

**பொருள் :** "கடிவரையில புறத்து என்மனார்" என்ற அடியோரும் வினைவல பாங்கினோரும் மன்னர் பக்கத்தவராய் மன்னர் பகை முதலாயவைபற்றிப் பிரிவுழி அவரொடு உடன் செல்லும் நிலைமைக்கண் அவரும் அப்பிரிவுகட்கு உரியராவார்.

பின்னோர் என்றது தன்னுரிமையில்லாத அடியோர் வினைவல பாங்கினோர் ஆகியோரை. அம்முறைமையான் அவரை உயர்ந்தோரல்லோர் எனவும் தாழ்ந்தோரெனவும் நூலோர் வழங்குவர். பின்னோர் என ஈண்டுக்கூறிய மாந்தர்வேறு. இழிசினராகிய தாழ்ந்தோர் வேறெண அறிக.

எ - டு : சான்றோர் செய்யுள் வந்தவழிக் கண்டு கொள்க.

**சூ. 33 : உயர்ந் தோர்க் குரிய ஓத்தி னான,**
**வேந்துவினை யியற்கை, வேந்தனின் ஒரீஇய**
**ஏனோர் மருங்கினும் எய்திடனுடைய (33)**

**க - து :** ஒருசார் கல்வியிற் பிரிவும் பகைவயிற்பிரிவும் அந்தணரும் அரசருமல்லாத ஏனோர்க்கும் எய்துமிடம் உண்டென்கின்றது.

**பொருள் :** அந்தணர்க்குரியதாக மேல் ஓதப்பெற்ற நான்மறையாகிய ஓத்துக்களின் வழிவந்தனவாகிய பிற கல்வியிற் பிரிவும், "வேந்தன்மேற்றே" என மேல் ஓதப்பெற்ற பகைவயிற் பிரிவும், வேந்தனின் நீங்கிய சிற்றரசர், வேளிர், வணிகர், வேளாண் மாந்தர் மண்டிலமாக்கள் முதலிய ஏனோர் பக்கத்தும் வந்து பொருந்துமிடனுண்டு.

'ஓத்தின் ஆன' என்றது நான் மறைகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்த சமயநூல், ஏரணநூல், வானியல் நூல், கோளியல் நூல், எண்ணியல் நூல், மருத்துவநூல், பொருளியல்

நூல், அரசியல் நூல்களும், படைக்கலப் பயிற்சிக்குரிய நூல்களும், சிற்பம் ஓவியம் முதலிய கலை நூல்களும் இலக்கண நூல்களும் பிறவுமாம்.

எல்லாக்கலைகளும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் ஆண்மைப் பேற்றிற்குரிய நான்மறைகளை மூலமாகக்கொண்டு விரிந்தவையாகலின் அவற்றை ஒத்தின்ஆன(வை) என்றார் ஆன என்பது வினையாலணையும் பெயர். வேந்தனின் ஒரீஇய என்றதனான் சிறுபான்மை தூதிற் பிரிவும் ஏனோர்க்குக் கொள்க.

ஏனோர் எனப் பொதுப்படக் கூறியதனான், அறிவர் புலவர் வணிகர், வேளாண்மாந்தர் ஆகியோர்க்குக் கல்வியிற்பிரிவும் வெட்சி மறவர் முதலானோர்க்குப் பகைவயிற்பிரிவும் சிறப்பாக எய்துமெனக்கொள்க.

இப்பிரிவுகள் அவர்க்கு இயல்பாக உரியவையல்ல,வேந்தனது ஆணையும், விருப்பமும் காரணமாக அவர் மாட்டு நிகழ்தலின் "எய்திடனுடைய" என்றார்.

இச்சூத்திரத்தின் முதலடியைப் பிரித்து அதனை ஒரு சூத்திரமாகக் கூறுவர் உரையாசிரியன்மார். அங்ஙனம்பிரிப்பின் அது கூறியது கூறலாயும் உயர்ந்தோர் என்பதற்குப் பிறிது பொருள் கூறின் அது மயங்கவைத்தலாயும் முடியுமென்க. அங்ஙனம் அவர் இரண்டாகக் கொண்டமையான் 'உடைய' என்னும் பாடத்தை உடைத்தே எனக்கொண்டமையும் தெரியலாம்.

எ - டு : சான்றோர் செய்யுள் வந்தவழிக்கண்டு கொள்க.

## சூ. 34 : பொருள்வயிற் பிரிதலும் அவர்வயின் உரித்தே

**க - து :** மேற்கூறிய ஏனோர்க்கு இழைத்த ஒண்பொருளல்லாத பொருள்வயிற் பிரிவும் உரித்தென்கின்றது

**பொருள் :** மேற்கூறிய ஏனோர்க்குக் கல்வியிற்பிரிவு பகை வயிற்பிரிவுகளே யன்றிப் பொருள்வயிற் பிரிவும் அவரிடத்து நிகழ்தற்குரியதாகும்.

எ - டு : சான்றோர் செய்யுள் வந்துழிக் கண்டு கொள்க.

## சூ. 35 : உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத் தான (35)

**க - து :** அந்தணர்க்குப் பொருள்வயிற்பிரிவு இன்னவாறு நிகழும் என்கின்றது.

**பொருள் :** உயர்ந்தோராகிய அந்தணர் தம் ஒழுக்கத்தின் கண் ஆனபொருள்வயின் பிரிவர். பிரிவர் என்னும் பயனிலை அவாய்நிலையான் வந்தது.

அந்தணர் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அறவோராதலின், பகைவயிற்சேறல், வாணிகம் புரிதல் முதலியவை அவர்க்கின்மையான் அவர்தம் ஒழுகலாறாகிய ஓதல் ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் வழிவருதலே அவர்க்கு ஈட்டமாம். அவ்வழிவருதலே அவர் பொருளாதலின் அந்நிமிந்தங்களான் அவர் பிரிவர் என்றவாறு.

இச்சூத்திரத்தானும் தமிழ் நூலார் கூறும் அந்தணர் வேறு ஆரிய நூலார் கூறும் பிராமணர் வேறு என்பது தெளிவாம்.

ஆகித்தோன்றும் பாங்கோர் பாங்கினும் [அகத்-43] என ஓதப்படும் துணைவயிற் பிரிவு என்பது ஒருவரைச் சார்ந்து நிகழ்வதொன்றாகலின் அது தன்னொடுசிவணிய ஏனோர் சேறலும் எனப் பகைவயிற் பிரிவின்கண் அடக்கி ஓதப் பட்டதென்க.

**சூ. 36 : முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை (36)**

**க - து :** இதுகாறும் ஐவகை உரிப்பொருள்கட்குரிய நிமித்தங்களாமாறு கூறி உரிப்பொருளொழிபாகக் கூறப்பெற்ற கொண்டுதலைக் கழிதல் என்னும் பிரிவிற்காவதோர் சிறப்புவிதி இச்சூத்திரத்தாற் கூறுகின்றார்.

**பொருள் :** தமரைப் பிரிந்து தலைவியை உடன் கொண்டு செல்லுதலாகிய பிரிவொழுக்கத்தின்கண் தலைவன் தலைவியொடு கடல் கடந்து சேறல் புலனெறி வழக்கமில்லை. கலத்திற் பிரிவு இல்லையெனவே காலிற் பிரிவே உண்டென்பது பெறப்படும்.

எ - டு : கடுங்கட் காளையொடு நெடுந்தேரேறிக்
கோள்வல் வேங்கைய மலை பிறக் கொழிய
வேறுபல் அருஞ்சுரம் இறந்தனன் அவன் எனக்
கூறு மின் வாழியோ ஆறு சென் மாக்கள் !
நற்றோள் நயந்து பாராட்டி
எற்கெடுந்திருந்த அறனில்யாய்க்கே (ஐங்-385)

இவ்விதி கொண்டுதலைக் கழிதலாகிய உடன்போக்கிற்குரிய தாகலின் ஏனைய பிரிவின்கண் தலைவன் பிறரொடு செல்வுழிக் காலிற்பிரிவு கலத்திற் பிரிவு என்னும் வரையுறை யில்லை யென்பதுதானே பெறப்படும்.

இச்சூத்திரம் கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவண் இரங்கலும் என்னும் சூத்திரம் பற்றியதொரு சிறப்புவிதி என்பதை ஓராமல் தமிழ் மக்கள் மனைவியரொடு கடல் கடந்து பிறநாடுசேறல் இல்லை என இயைபற்றவிளக்கங் கூறுதல் சாலாமையறிக.

சூ. 37 : **எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்**
**பொற்புடை நெறிமை இன்மை யான** (37)

க - து : உரிப்பொருளொழிபாகக் கூறியவற்றுள் எஞ்சிநின்ற கலந்தபொழுதும் காட்சியும், பிரிந்தவணிரங்கல் ஆயவற்றின் தொடர்பாக அகப்பொருள் தலைவி பற்றியதொரு மரபு கூறுகின்றது.

பொருள் : கைக்கிளை முதலாய எழுதிணையுள்ளும் தலைவி மடலூர்தலைமேவினாளாகப் புலனெறி வழக்கம் செய்தல் இல்லை. அது பொற்புடைய நெறி இல்லை யாதலான்

'மேவல்' என்பது அகரம் தொக்குமேல் எனச்செய்யுள் விகாரமாய் நின்றது. பொற்பாவது பெண்மைக்குரிய தெய்வத்தன்மை. இதனைத் 'திரு' என்பர். இல்லை என்னும் பயனிலை மேலைச் சூத்திரத்தினின்று அதிகரித்தது.

கடலன்னகாமம் உழப்பினும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில் (குறள்)

என்னும் மறைமொழியான் இம்மரபறியலாம்.

மற்று மடல்மேவல் என்பது பெருந்திணைக்குரிய தென்பது நூல் வழக்கன்றே ? அற்றாக எத்திணை மருங்கினும் என்றது என்னையெனின் ? இவ் ஆசிரியர் ஏறிய மடற்றிறமாதலையே பெருந்திணைக் குறிப்பென்றும், ஏறுவல் என்னும் மடற் கூற்றினை,

தோழி, நீக்கலின் ஆகிய நிலைமையும் நோக்கி
மடன்மா கூறும் இடறுமாருண்டே (களவி - 11)

என்றும் விதந்து கூறுதலான் மடல் மேவலாகிய கூற்று அகனைந்திணையுள் அவற்றின் பகுதியாக நிகழும் என்க.

அடன்மாமேல் ஆற்றுவேன் என்னை மடன்மாமேல்
மன்றம் படர்வித் தவள் (நெய்தற்கலி-5)

என்பது ஏறிய மடற்றிற மாமாறும்

மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப (குறு - 17)

என்பது மடற் கூற்றாமாறும்.

ஆடெனின் ஆடலும் ஆற்றுகேன் பாடுகோ
என்னுள் இடும்பைத் தணிக்கும் மருந்தாக
நன்னுதல் ஈத்தஇம் மா (நெய்தற்கலி-24)

என்பது மடல் மேவலாமாறும் கண்டு கொள்க.

கைக்கிளை பெருந்திணைகட்கு நிலம் வேறின்மையான் அவற்றை ஐந்திணைப்பகுதியாகக் கொண்டு கூறுதல் தொன்னூல் நெறியன்பது தோன்றப் பெருந்திணை பற்றிய தலைவன் தலைவியர் கூற்றுக்களை நெய்தற்கலியுள் ஆசிரியர் நல்லந்துவனார் அமைத்துக்கூறியுள்ளமையான் அறிக.

அந்நெறிபற்றித் தலைவன் ஐந்திணைக்கண்ணும் மடல் மேவுதல் புலனெறி வழக்கமென்பதும் தலைவியாயின் கூறவும் செய்யாள், மேவலும் புரியாள் என்பதும் விளங்க எத்திணை மருங்கினும் என்றார்.

கலந்த பொழுதும் காட்சியும் ஒருதலையாகப் புணர்தல் நிமித்தமாகாவெனினும் அவ்வழி இருவருள்ளத்தும் தோன்றிய உணர்வு பின்னர் வேட்கையாக முகிழ்த்து இடந்தலைப்பாடு நிகழ்தற்குத் தடையின்மையான் அவ் இடந்தலைப்பாடே நிமித்தமாகக் களவுப்புணர்ச்சி நிகழுமன்றே? அவ்வழி வரைவு நேராத தமர் தலைவியை இற்செறித்த காலை உடன் போக்கும் வாயாமல் அறத்தொடு நிற்றற்கும் இயலாமல் நாணினும் சிறந்த தன் கற்பினைப் போற்றல் வேண்டித் தலைவியும் மடற்கூற்று நிகழ்த்துங்கொல் எனத்தோன்றும் ஐயத்தைக் களைதல் வேண்டி இதனைப் பொருளியலுட் கூறாது இயைபு பற்றி ஈண்டுக் கூறினார் என்க.

**சூ. 38 : தன்னும் அவளும் அவனும் சுட்டி**
**மன்னு நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்**
**நன்மை தீமை அச்சஞ் சார்ந்தலென்று**
**அன்னபிறவும் அவற்றொடு தொகைஇ**
**முன்னிய காலம் மூன்றுடன் விளக்கித்**
**தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும்**
**போகிய திறத்து நற்றாய் புலம்பலும்**
**ஆகிய கிளவியும் அவ்வழி யுரிய (38)**

**க - து :** இது காறும் உரிப்பொருள் பற்றிய நிமித்தங்களை அடைவுபட விளக்கி இனி அப்பிரிவுகள் பற்றி அகத்திணை மாந்தர்பால் நிகழும் ஒழுகலாறுகளை மேல்வரும் இருவகைக்கை கோளுக்கும் பொதுப்படக் கிளவிகளாக வகுத்து இச்சூத்திர முதலாக ஓதுவார். அவற்றுள் இது நற்றாய்க்குரிய கிளவிகள் நிகழுமாறு கூறுகின்றது.

தலைவன் முதலாய ஏனையோர்க்குரிய கிளவிகள் ஒன்றற்கு மேற்பட்ட உரிப்பொருளையும் நிமித்தங்களையும் கொண் டுள்ளமையானும் நற்றாய்க்குரிய கிளவிகள் இரங்கலும் இரங்கல் நிமித்தமுமாகிய ஒருகூறே பற்றி நிகழ்தலானும் கொண்டுதலைக் கழிதல் அதிகாரப்பட்டுள்ளமையானும் நற்றாய்க்குரிய கிளவி களை முதற்கண் எடுத்தோதினார் என்க.

**பொருள் :** அவ்வழி, போகியதிறத்து நற்றாய் = கொண்டு தலைக் கழிதல் என்னும் உரிப்பொருள் பற்றித் தலைவனும் தலைவியும் உடன் போகிய அவ் வொழுக்கத்தின்கண் தலைவியை பயந்த தாய்

தன்னும் அவளும் அவனும் சுட்டி = தனது நிலைமையை யும் தலைவியது நிலையையும், தலைவனது நிலையையும் குறித்து. மன்னும் நிமித்தம் மொழிப் பொருள் தெய்வம் நன்மை தீமை அச்சஞ் சார்தலென்று அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇப் புலம்பலும் = வழக்காற்றின்கண் நிலைபெறும் புள்ளு முதலாகிய நிமித்தமும் விரிச்சியாக நிகழும் மொழிப் பொருளும், தெய்வமும், சென்ற சுரத்தின்கண் நேரும் நன்மையும் தீமையும் அச்சமும் சார்பும் அவை போல்வன பிறவுமாயவற்றை அவற்றொடு கூட்டித் தான் தனித்து வருந்தலும்

முன்னியகாலம் மூன்றுடன் விளக்கித் தோழிதேஎத்தும் கண்டோர் பாங்கினும் ஆகிய கிளவியும் = உயிரோரன்ன நட்பின ளாகிய தோழியிடத்தும் தான் தேடிச் செல்லுங்கால் எதிர்வரக் கண்டோர் பக்கத்தும் உடன் போக்கு நேர்ந்த இரு வகை வேனிலும் பின்பனியுமாகிய காலம் மூன்றனது நிலை யொடு விளக்கி நிகழ்த்துவனவாகிய கிளவிகளும். உரிய = அவட்கு உரியவாகும்.

இவை அகத்திணைக்கண் தலைவனும் தலைவியும் உடன் போகியவழி நற்றாயின் ஒழுகலாறுகளாகப் புலனெறி வழக்கம் செய்தற்கு உரியவாகும் என்றவாறு. 'என்று' என்பது எண்ணி டைச்சொல்.

அவ்வழி நற்றாய், சுட்டி, தொகைஇப் புலம்பலும் விளக்கித் தோழிதேஎத்தும் கண்டோர் பாங்கினும் ஆகிய கிளவியும் அவட்குரிய எனக் கூட்டிப் பொருள் கொள்க.

நற்றாய் என்றது செவிலியையும் அகப்படுத்தி நின்றது என்னை?

ஆய்பெருஞ்சிறப்பின் அருமறை கிளத்தலின்
தாயெனப்படுவோள் செவிலியாகும் (கள - 34)

என்பதனானும் நல்லிசைப் புலவோர் இக்கிளவிகளை செவிலிக் குரியவாகக் கொண்டு கூறுதலானும் என்க.

உயிரொப்பப் பேணி ஊட்டி வளர்ப்பினும் தன்மகள் உற்றாற்குரியளென்பதைக் கருதாத பேதைமையையும் தலைவியைப்புனையுங்காலும் முயங்குங்காலும் அவள் அவற்றை விரும்பாமையையும் உண்டியும் உறக்கமும் தவிர்த்துப் பல்காலும் தன் கற்பின் பொற்பையே கருதித் தமரைப் பிரிந்து சென்ற முதுக்குறையையும், வரைதற்கு முயலாமல் உடன் கொண்டு சென்ற தலைவனது நெஞ்சத்தையும் நினைந்து நினைந்து புலம்பி வருந்துதல் தோன்ற "தன்னும் அவளும் அவனும் சுட்டி" என்றும் சுரத்திடைச் செல்லும் தலைவிக்கும் தலைவற்கும் நேரும் நிலையைத்தான் அறிதற்கு இயலாமையான் அலமந்து அவர்க்கு நலமே விளைதல் வேண்டுமென்னும் ஆர்வத்தான் அவர் மாட்டமைந்த பண்பும் செயலுமாயவற்றையும் விலங்குகளானும் ஆறலைப் போரானும் வேனிலும் பின்பனியுமாகிய காலங்களின் கொடுமையானும் எய்தும் நிலைமைகளையும் பிற சூழல்களையும் எண்ணிக் கலங்குதல் தோன்ற

மன்னுநிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
நன்மைதீமை அச்சஞ் சார்தலென்று
அன்னபிறவும் அவற்றொடு தொகைஇக் கலங்கலும் என்றும்

பின்பனியும் இருவகை வேனிலுமாகிய பருவத்து நிலம் வறங்கூர்ந்து நீரும் நிழலும் அஃகி அருகி வெப்பம் மிகுதலான் அக்காலங்களின் கொடுமை கருதி வருந்துதல் தோன்ற

முன்னிய காலம் மூன்றொடு விளக்கித்
தோழிதேஎத்தும் கண்டோர் பாங்கினும் என்றும், தாயின்

உளவியல்பு புலப்பட விரித்துக் கூறினார்.

பாலைக்குரிய பருவம் மூன்றும் மேல் ஓதப்பட்டமையான் முன்னியகாலம் மூன்று எனத் தொகையாற் கூறினார். இதற்கு இந்நூல்நெறிகாணாது ஒவ்வாவுரை கூறினர் உரையாசிரியன்மார்.

எ - டு : நீர்நசைக் கூக்கிய உயவல்யானை
இயம்புணர் தூம்பின் உயிர்க்கும் அத்தம்
சென்றனள் மன்றஎன் மகளே
பந்தும் பாவையும் கழங்குமெமக் கொழித்தே (ஐங்-377)

இது, நற்றாய் தன்னைச்சுட்டிக் கலங்கியது.

"இரும்புனிற்றெருமை" என்னும் நற்றிணையும்(271)
"கிளியும் பந்தும் கழங்கும்" என்னும் அகப்பாட்டும்(49) அது.

பெயர்த்தனன்முயங்க யான்வியர்த்தனன் என்றனள்
இனியறிந்தேனது துனியாகுதலே
கழல்தொடி ஆஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையும் காந்தளும் நாறி
ஆம்பல் மலரினும்தான் தண்ணியளே (குறு - 84)

இது தலைவியைச் சுட்டிக் கலங்கிக் கூறியது.

என்னும் உள்ளினள் கொல்லோ தன்னை
நெஞ்சுணத் தேற்றிய வஞ்சினக்காளையொடு
அழுங்கல் மூதூர் அலரெழச்
செழும்பல் குன்றம் இறந்த என்மகளே (குறு - 372)

இது தலைவனைச் சுட்டிக் கலங்கிச் சொல்லியது.

மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை
அன்புடைமரபினின் கிளையொ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி
பொலம்புனைகலத்தின் தருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொடு
அஞ்சில் ஓதியை வரக்கரைந் தீமே (ஐங் - 391)

இது புள் நிமித்தமாக எண்ணிப் புலம்பியது. மொழிப்பொருள் நிமித்தம் கருதிப் புலம்பியதற்குச் சான்றோர் செய்யுள் வந்த வழிக் கண்டுகொள்க.

"ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள்" என்னும் அகப் பாட்டினுள்

ஆர்வநெஞ்சமொடு ஆய்நலனளைஇத் தன்
மார்புதுணையாகத் துயிற்றுகதில்ல
... ... ... ... ... ... ... ... ... ...

நெறியிருங் கதுப்பின்என் பேதைக்கு
அறியாத் தேஎத்து ஆற்றிய துணையே (அகம் - 35)

இது தெய்வத்தை எண்ணிப்புலம்பிக் கூறியது.

மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலும்
உயர்நெடுங்குன்றம் படுமழை தலைஇச்
சுரம் நனி இனிய ஆகுக தில்ல
அற நெறி இதுவெனத் தெளிந்தவென்
பிறை நுதற் குறுமகள் போகிய சுரனே (ஐங்-371)

என்பது நன்மை பயக்க எண்ணிப் புலம்பியது.

நிழலான் றவிந்த நீரில் லாரிடை
கழலோன் காப்பக் கடுகுபு போகி
அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
வெவ்வெங் கலுழி தவ்வெனக் குடிக்கிய
யாங்குவல்லுநள்கொல் தானே ஏந்திய
செம்பொற் புனைகலத் தம்பொரிக் கலந்த
பாலும் பலஎன உண்ணாள்
கோலமை குறுந்தொடித்தளிரன்னோளே (குறு - 356)

இது சுரத்துத் தீமையை எண்ணிக் கலங்கியது

"கேளாய் வாழியோ மகளே" என்னும் அகப்பாட்டினுள்

மடமயில் அன்னவென் நடைமெலிபேதை
தோள்துணையாகத் துயிற்றத் துஞ்சாள்
வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கண்
சேக்கோள் அறையும் தண்ணுமை
கேட்குநன்கொல் எனக்கலுழுமென் நெஞ்சே (அகம்-63)

இதன்கண் நற்றாய் அஞ்சிப்புலம்பியவாறு கண்டுகொள்க.

"எம்வெங் காமமியைவதாயினும்" என்னும் அகப்பாட்டினுள்,

தோகைக்காவின் துளுநாட்டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பின்
செறிந்த சேரிச் செம்மல் மூதூர்
அறிந்துமாக்கட் டாகுகதில்ல (அகம் - 15)

என, நற்றாய் சார்பு வேண்டிப் புலம்பிக் கூறியவாறு கண்டு கொள்க.

இனி "அன்னபிற" என்றதனான் தன்னை நோதலும் தலைவன் தாயை வைதலும் [வைதல் = சபித்தல்] ஊழினை எண்ணிப் புலம்பலும் பிறவும் கொள்க.

"உவக்குநளாயினும் உடலுநளாயினும்" என்னும் அகப்பாட்டு (203) செவிலி தன்னை நொந்து கூறியது.

நினைத்தொறுங்கலிழும் இடும்பை யெய்துக
புலிக்கோட் பிழைத்த கவைக்கோட்டு முதுகலை
மான்பிணை அணைதர ஆண்குரல் விளிக்கும்
வெஞ்சுரம் என்மகள் உய்த்த
அம்பமை வல்வில் விடலை தாயே [ஐங்-373]

இது தலைவன் தாயை வைது புலம்பியது.

நாள் தொறுங் கலிழும் என்னினும் இடைநின்று
காடுபடுதீயின் கனலியர் மாதோ
நல்வினை நெடுநகர் கல்லெனக் கலங்க
பூப்புரை உண்கண் மடவரற்
போக்கிய புணர்த்த அறனில் பாலே (ஐங்-376)

இஃது ஊழினை நொந்து வைது கூறியது.

வேம்பின் ஒண்பழம் முனைஇ இருப்பைத்
தேம்பால் செற்ற தீம்பழம் நசைஇ
வைகுபனி யுழந்த வாவல் சினைதொறும்
நெய்தோய்திரியின் தண்சிதர் உறைப்ப
நாட்சுரம் உழந்த வாள்கேழ் ஏற்றையொடு
பொருத யானை புட்டாள் ஏய்ப்பப்
பசிப்பிடி யுதைத்த ஓமைச் செவ்வரை
வெயில்கா யமையத்து இமைக்கும் அத்தத்து
அதருழந்தசையின கொல்லோ ததர்வாய்ச்
சிலம்பு கழீஇய செல்வம்
பிறருழைக் கழிந்தவென் ஆயிழையடியே (நற்-279)

இது பின் பனிக் காலத்தின் கொடுமையை விளக்கித் தோழியொடு கூறியது.

"ஓங்குநிலைத்தாழி" என்னும் அகப்பாட்டினுள் (275)
வெம்மலை இருஞ்சுரம் நம்மிவண் ஒழிய
இருநிலம் உயிர்க்கும் இன்னாக் கானம்
நெருநை போகிய பெருமடத் தகுவி

ஐதகலல்குல் தழையணிக் கூட்டும்
கூழைநொச்சிக் கீழது என்மகள்
செம்புடைச் சிறுவிரல் விரித்த
வண்டலுங் காண்டிரோ கண்ணுடையீரே.

இது காலக் கொடுமையை விளக்கிக் கண்டோரிடத்துக் கூறி வருந்தியது.

'ஆகியகிளவி' என்றதனான், வேலனொடு கூறலும் குரவொடு கூறலும், நவ்விப்பிணவொடு கூறலும் அவ்வாறு வருவன பிறவும் கொள்க.

"அருஞ்சுர மிறந்தவென் பெருந்தோட்குறுமகள்" என்னும் அகப்பாட்டினுள் (195)

ஆகுவதறியும் முதுவாய் வேல
கூறுக மாதோநின் கழங்கின் திட்பம்
மாறாது வருபனி கலுழுங் கங்குலின்
ஆனாது துயருமென் கண்ணினிது படீஇயர்
எம்மனை முந்துறத் தருமோ
தன்மனை உய்க்குமோ யாதவன் குறிப்பே ?

இது வேலனொடு கூறியது.

தான்றாயாக் கோங்கந் தளரா முலைகொடுப்ப
ஈன்றாய் நீ பாவை இருங்குரவே — ஈன்றாள்
மொழிகாட்டாயாயினும் முள்ளெயிற்றாள் சென்ற
வழிகாட்டாய் நீயெனக்கு வந்து (திணைமாலை-95)

இது குரவொடு கூறியது.

"முலைமுகம் செய்தன முள்ளெயிறிலங்கின" என்னும் அகப்பாட்டினுள் (7)

... ... ... ... ... ... ...இன்சிலை
ஏறுடை யினத்த நாறுயிர்நவ்வி,
வலைகாண்பிணையின் போகி ஈங்கோர்
தொலைவில் வெல்வேள் விடலையொடு என்மகள்
இச்சுரம் படர்தந்தோளே"

என நவ்விப் பிணவொடு புலம்பிக் கூறியவாறு காண்க. பிறவும் சான்றோர் செய்யுட்கண் கண்டுகொள்க.

சூ. 39. ஏமப் பேரூர் சேரியும் சுரத்தும்
தாமே செல்லுந் தாயரு முளரே (39)

க - து : நற்றாய் கூற்றுக் கண்டோர்பாங்கினும் நிகழும் என்றமையான், கண்டோர் எனப்படுவோர் சேரியினும் சுரத்தினும் எதிர்ப்படும் அயலோர் என்பது தேற்றமாம். நற்றாய் அவர்பாற் சென்றன்றி உரை நிகழ்த்தல் இயையாதாகலின் உடன் போக்கிற் சென்ற தலைவியைத்தேடிப் பின்செல்லுதலும் தாயர்க்கு உரித்தென்கின்றது.

**பொருள் :** காவலமைந்த நகர்ப்புறத்துச்சேரியின் கண்ணும் அச்சேரியின் புறத்ததாகிய ஏமமுடைய சுரத்தின் கண்ணும் உடன்போகிய தலைவியைத்டேிதத் தாமே செல்லும் தாயரும் உளர்.

ஏமத்தைச் சுரத்தொடுங்கூட்டிக் கொள்க. பொருளீட்டல் முதலியகாரணங்களாற் பிரிந்து தலைவன் செல்லும் பாலையாகிய சுரம் ஏமமுடையதன்று என்பது இதனான் உணரப்படும். எனவே அதுவேறு சுரம் தாயர் தேடிச்செல்லும் சுரம் என்றது வேறு என்க.

கலந்துடன் வருவோரையும் முக்கோற் பகவரையும் அன்பொடு உறையும் எயிற்றியரையும் பிறரையும் தாயர் எதிர்ப் பட்டு உசாவுவர் என்பதனான் தாயர் தேடிச் செல்லும் சுரம் ஏமப் பேரூர்க்கு அணித்தாயது என்பதும் அஃது ஏமத்தொடு பொருந்தியது என்பதும் நனி விளங்கும். அன்றி ஆள்வழக்கற்ற அருஞ்சுரமாயின் தாயர் செல்லுதற்கும் உசாதற்கும் கூற்று நிகழ்த்தற்கும் வாயா தென்றறிக.

உம்மையான் தாமே செல்லாது தம் ஐயர்பாங்கிற் கூறி மீட்டுவரச்செய்யும் தாயரே பலர் என்பதுபோதரும்.

காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே (குறு-44)

என்னும், வெள்ளி வீதியார் செய்யுள்,தேடிச் சென்றதாயொருத்தி சுரத்தின்கண் உடன்போக்கு நேர்ந்து சென்ற தலைவன் தலைவியர் பலரைக் கண்டு வியப்பதையும் ஆண்டு அவரைத் தேடிப் பின்வந்ததாயர் பலரின்மையும் புலப்படுத்து நிற்றல் கண்டுகொள்க.

நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும் பாடல் சான்ற புலனெறி வழக்கம் என ஆசிரியர் கூறிய அடிப்படையை

ஓராமல் யாவற்றையும் நாடக வழக்காகவே கருதித் தாயர் என்பதற்கு நற்றாய், செவிலித்தாய், ஊட்டுத்தாய் கைத்தாய் எனவும் பிறவாறும் உரையாசிரியன்மார் பொருள் கூறித் தம்முள் முரணினர்.

எ - டு : "ஓங்குநிலைத்தாழி" என்னும் அகப்பாட்டினுள்

"நம்மிவண் ஒழிய" என முன்னின்றாரையும் அகப்படுத்திக் கூறியதனான் இது தலைவியை நன்கறிந்த ஏமப்பேரூர்ச் சேரியின்கண் தேடிச் சென்ற நற்றாய் கூற்றாதலறிக.

எறித்தரு கதிர்தாங்கி ஏந்திய குடை நீழல்
உறித்தாழ்ந்த கரகமும் உரைசான்ற முக்கோலும்
நெறிப்படச் சுவலசைஇ வேறோரா நெஞ்சத்துக்
குறிப்பேவல்செயன்மாலை கொளைநடையந்தணீர்
வெவ்விடைச் செலன்மாலை ஒழுக்கத்தீர் இவ்விடை
என் மகள் ஒருத்தியும் பிறள் மகன் ஒருவனும்
தம்முளே புணர்ந்த தாமறி புணர்ச்சியர்
அன்னா ரிருவரைக் காணிரோ பெரும! (கலி-8)

என்பது, ஏமமார் சுரத்திடை முக்கோற்பகவரை உசாவியது.

செய்வினைப் பொலிந்த செறிகழல் நோன்றாள்
மையணற் காளையொடு பைய இயலிப்
பாவை யன்னவென் ஆய்தொடி மடந்தை
சென்றனள் என்றீர் ஐய
ஒன்றின வோ அவள் அஞ்சிலம்படியே (ஐங்-389)

என்பது, கண்டோர் கூறிய மொழி கேட்டுச் சுரத்திடைத் தாய் வருந்திக் கூறியது. பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

**சூ. 40 : அயலோ ராயினும் அகற்சி மேற்றே (40)**

க - து : ஏமப்பேரூர் சேரியினும் சென்று உசாவுவர் என்றதனான் அது கொண்டுதலைக் கழிதலாமோ? என நிகழ்வதோரைய மகற்று கின்றது.

**பொருள் :** உடன் போக்கிற்கு ஒருப்பட்ட தலைமக்கள், சேரியினும் சுரத்தினுமேயன்றித் தமரின் நீங்கி அயலோ ர் இல்லத்துச் சேரினும், தாயர் தேடிச் செல்லுதலானும் தன்னையர் மீட்டுக் கொணரலானும் அதுவும் கொண்டுதலைக் கழிதலாகிய பிரிவின் பாலதேயாம்.

ஏ - டு : நும்மனைச் சிலம்பு கழீஇ அயரினும்
எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச்
சொல்லின் எவனோ மற்றே வென்வேல்
மையற விளங்கிய கழலடிப்
பொய்வல் காளையை ஈன்ற தாய்க்கே (ஐங்-399)

இதன்கண் நும்மனை, எம்மனை என்றதனான் இருவர்தம் மனைகளும் ஓரூர்க்கண்ண வாதலும் அவை ஒன்றற்கொன்று அண்மையவாதலும் புலப்படும்.

இச்சூத்திரத்தின் பயனை ஓராமல் உரையாசிரியன்மார் ஒவ்வாவிளக்கம் கூறிச்சென்றனர்.

சூ. 41 : **தலைவரு விழும நிலையெடுத் துரைப்பினும்**
**போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்**
**நீக்கலின் வந்த தம்முறு விழுமமும்**
**வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர்ச்சுட்டித்**
**தாய்நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக்**
**கொளினும்**
**நோய்மிகப் பெருகித்தன் நெஞ்சுகலுழ்ந் தோளை**
**அழிந்தது களையென மொழிந்தது கூறி**
**வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தொடு**
**என்றிவை யெல்லாம் இயல்புற நாடின்**
**ஒன்றித் தோன்றும் தோழி மேன. (41)**

க - து : மேற்சூத்திரத்துத் தோழி தேஎத்தும் கண்டோர் பாங்கினும் எனத் தோழியும் கண்டோரும் அதிகாரப்பட்டமையான் முறையே அவ்விருவர்க்கும் உரிய கிளவிகள் ஆமாறு கூறத்தொடங்கித் தோழி இருவகைக் கைகோளினும் தலைவியொடு ஒன்றித்தோன்றுபவளாகலின் கொண்டுதலைக் கழிதற்கண்ணும் ஓதல் முதலாய பிரிவின் கண்ணும் தோழிக்குரிய பொதுவாகிய கிளவிகளை இச்சூத்திரத்தான் தொகுத்தோதுகின்றார்.

**பொருள் :** (1) தலைவரு விழுமநிலை எடுத்துரைப்பினும் = தலைவியிடத்து எய்தும் துன்பநிலையைப் புலப்படக் கூறுமிடத்தும். (2) போக்கற்கண்ணும் = தமரின் நீக்கித் தலைவியைத் தலைவனொடு உடன் போக்குமிடத்தும் (3) விடுத்தற் கண்ணும் = வரைபொருள் முதலாய கடமையின்கண் தலைவன் பிரிந்து செல்லுதலை அவாவிய வழி உடன்பட்டு அவனைப் போக விடுதற்கண்ணும். (4) நீக்கலின் வந்த தம்முறு விழுமமும் = அங்ஙனம் தலைமக்களைப் போகச் செய்த வழி

இடைச்சுரத்து அவர்க்கு உறும் துன்பங்களைக் கருதியவிடத்தும் (5) வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர்ச் சுட்டித் தாய் நிலை நோக்கித் தலைப் பெயர்த்துக் கொளினும் = போகிய திறத்து நற்றாய் சேரியும் சுரத்தும் தேடிச் சென்ற வழி எதிர் கண்டோர் வாய்மையும் பொய்ம்மையுமாகக்கூறியவற்றை எண்ணி அலமந்திருக்கும் நிலையை நோக்கி அவளது துயரை ஆற்றும் வகையை மேற்கொள்ளுமிடத்தும் (6) நோய் மிகப் பெருகித் தன் நெஞ்சுகலுழ்ந்தோளை அழிந்தது களை என மொழிந்தது கூறி வன்புறை நெருங்கி வந்ததன் திறத்தொடு = தலைவனது பிரிவை எண்ணித் துயர்நனி கூர்ந்து நெஞ்சு கலுழ்ந்த தலைவியை நெருங்கித் தலைவன் நேயமும் நயமும் தோன்றக் கூறிய மொழிகளை எடுத்துக் கூறி இனி உளமழிந்து துன்புற் றிருத்தலை நீக்குவாயாக என வற்புறுத்த வந்த அதன் கூறுபாடும். என்றிவையெல்லாம் இயல்புற நாடின் = என்று சொல்லப்பட்ட கிளவிகள் எல்லாவற்றையும் அகத்திணை இலக்கண மரபொடு பொருந்த ஆராயின். ஒன்றித் தோன்றும் தோழிமேன = அவை தலைவியொடு உணர்வானும் உளத்தானும் ஒற்றுமைப்பட்டுத் திகழும் தோழியின் கண்ணவாம்.

(1) தமர் வரைவு நேராவிடத்தும் பிறர் வரைவு அஞ்சு மிடத்தும் தலைவன் உடன்போக்கு நிகழ்த்தாவிடின் வரும் ஏதத்தையும், வரைபொருள் முதலியவற்றைக் கருதித் தலைவன் பிரிய எண்ணியவழி அவன் பிரியின் தலைவி எய்தும் துயரையும் அவ்வந் நிலைமைக்கேற்பத் தலைவியிடத்தும் தலைவனிடத்தும் எடுத்துரைத்தலான் பொதுப்படத் “தலைவரு விழுமநிலை” என்றார்.

எ-டு: உன்னங் கொள்கையொடு உளங்கரந்துறையும்
அன்னை சொல்லும் உய்கம் என்னதூஉம்
ஈரஞ்சேரா இயல்பிற் பொய்ம் மொழிச்
சேரியம் பெண்டிர் கௌவையும் ஒழிகம்
நாடுகண் அகற்றிய உதியஞ் சேரற்
பாடிச் சென்ற பரிசிலர் போல
உவவின வாழிய தோழி, அவரே
பொம்மல் ஓதி நும்மொ டொராங்குச்
செலவயர்ந்தனரால் இன்றே, மலைதொறும்
மால்கழைப் பிசைந்த கால்வாய்க் கூரெரி
மீன்கொள் பரதவர் கொடுந்திமில் நளிசுடர்
வான்தோய் புணரி மிசைக்கண் டாஅங்கு
மேவரத் தோன்றும் யாஅவுயர் நனந்தலை

உயவல் யானை வெரிநுச் சென்றன்ன
கல்லூர் பிழிதரும் புல்சாய் சிறுநெறி
காடுமீக்கூறும் கோடேந் தொருத்தல்
ஆறுகடி கொள்ளும் அருஞ்சுரம் பணைத்தோள்
நாறைங் கூந்தல் கொம்மை வரிமுலை
நிரையிதழ் உண்கண் மகளிர்க்கு
அரிய வாலென அழுங்கிய செலவே. (அகம் - 65)

இது தாயானும் சேரிப்பெண்டிரானும் எய்தும் வீழுமங்கூறி உடன்போக்கிற்குத் தலைவியை உடன்பட வைத்தது.

களிறுபிடிதழீஇப் பிறபுலம்படராது
பசிதின வருந்தும் பைதறு குன்றத்துச்
சுடர்த் தொடிக் குறுமகள் இனைய
எனைப்பயன் செய்யுமோ விடலை நின்செலவே (ஐங்-305)

இது தோழி தலைவியை உடன் கொண்டு செல்லாவழி அவட்கு எய்தும் துயர் கூறித் தலைவனை உடன்பட வைத்தது.

அறனின்றி அலர் தூற்றும் அம்பலை நாணியும்
வறன் நீத்தி நீ செல்லும் நீளிடைநினைப்பவும்
இறைநில்லா வளையோட இதழ்சேர்பு பனிமல்க
பொறைநில்லா நோயொடு புல்லென்ற நுதலிவள்
விறல்நல னிழப்பவும் வினைவேட்டாய் கேளினி (கலி - 3

இது தலைவன் சுரத்தருமை கூறியவழித் தலைவிக்கு எய்தும் விழுமங் கூறித்தலைவனைச் செலவு தகைத்தது.

பாஅலஞ்செவி பணைத்தாள் மாநிரை
மாஅல் யானையொடு மறவர் மயங்கித்
தூறதர்ப்பட்ட ஆறுமயங் கருஞ்சுரம்
இறந்து நீர் செய்யும் பொருளினும் யாம்நுமக்குச்
சிறந்தனம் ஆதல் அறிந்தனிர் ஆயின்
நளியிரு முந்நீர் வளிகலன்வௌவலின்
ஆள்வினைக் கழிந்தோர் போறலல்லதை
கேள்பெருந்தகை யொடு எவன்பலமொழிகுவம் (கலி - 5)

இது பொருள்வயிற் பிரியக்கருதிய தலைவனை நெருங்கித் தலைவிக்கு எய்தும் விழுமங் கூறியது. பிறவும் இவ்வாறு வருவன வற்றை ஓர்ந்து கொள்க.

(2) போதல் தலைவன் செயலாகலின் போக்கற் கண்ணும் என்றது, ஊரலரஞ்சி நாணு நெஞ்சலைப்ப நின்ற தலைவியை உடன்போக்கிற்கு உடன்படச் செய்து தலைவனொடுபோகச் செய்தலையாம்.

எ-டு : நனிவிளை நறவின் தேறல் மாந்தி
புனைவினை நல்லில் தருமணல் குவைஇ
பொம்மல்ஓதி எம்மகள் மணனென
வதுவை யயர்ந்தனர் நமரே அதனால்
புதுவது புனைந்த சேயிலை வெள்வேல்
மதியுடம் பட்ட மையணற்காளை
வாங்குசினை மலிந்த திரளரை மாஅத்துத்
தேம்பாய் மெல்லிணர்தளிரொடு கொண்டுநின்
தண்ணறு முச்சி புனைய அவனொடு
கழைகவின் போகிய மழையுயர் நனந்தலை
களிற்றிரை பிழைத்தலின் கயவாய் வேங்கை
காய்சினஞ் சிறந்து குழுமலின் வெரீஇ
இரும்பிடி இரியும் சோலை
அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனன் யானே (அகம்-221)

இது தலைவியை போதற்கு உடன் படச்செய்து தலைவனொடு போக்கியது.

(3) விடுத்தல் என்பது விடை கொடுத்தல் என்னும் பொருளினதாகலின் தலைவன் தன் கடமையை உணர்த்திப் பிரிதலை வேண்டிய வழித்தோழி அவனைப்போக விடுத்தலாகும்.

எ - டு : சேறும்சேறும் என்றலிற் பலபுலந்து
சென்மின் என்றல் யானஞ் சுவலே
செல்லாதீம் எனச் செப்பின் பல்லோர்
நிறத்தெறி புன்சொலின் திறத்தஞ்சுவலே
அதனான்,
சென்மின் சென்றுவினை முடிமின் ; சென்றாங்கு
அவண் நீடாதல் ஓம்புமின், யாமத்து
இழையணியாகம் வடுக்கொள முயங்கி
உழையீராகவும் பனிப்போள், தமியே
குழைவான் கண்ணிடத்து ஈண்டித்தண்ணென்று
ஆடிய இளமழை பின்றை
வாடையுங் காண்டிரோ வந்துநின்றதுவே. (நற் - 229)

இது தலைவன் பிரிவை உடன்பட்டு விடைகொடுத்து விடுத்தது. விடுதலெனப் பொதுப்படக் கூறியதனான் தலைவனிடம்

ஓம்படை கூறித் தலைவியை அவனொடு போக விடுத்தலும் பிரிவாற்றாத தலைவியை முயங்கித் தலைவனொடு செல்ல விடுத்தலும் பிறவும் கொள்க.

எ - டு : அண்ணாந் தேந்திய வனமுலை தளரினும்
பொன்னேர் மேனி நெறியிற்றாழ்ந்த
நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஓம்புமதி பூக்கேழூர !
இன்கடுங்கள்ளின் இழையணி நெடுந்தேர்
கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயர்
வெண்கோட்டியானை போஒர் கிழவோன்
பழையன் வேல் வாய்த் தன்ன நின்
பிழையா நன்மொழி தேறிய இவட்கே (நற்-10)

இஃது ஓம்படை கூறி விடுத்தது.

'வேலும் விளங்கின' என்னும் அகப்பாட்டினுள் (அகம்-259)
... ... ... ... "நீயும்
கலங்கா மனத்தையாகி என் சொல்
நயந்தனை கொண்மோ" என உடன் படுவித்து
"அன்னை அல்லல் தாங்கி நின்னையர்
புலிமருள் செம்மல் நோக்கி
அலமரல், இன்னுந் தோய்கநின் முலையே"

எனத் தலைவியை முயங்கிப் போக விடுத்தமை கண்டுகொள்க.

(4) தலைமக்களை உடன்போக்கியவழிச் சுரத்தினது வெப்பத்தையும் ஆண்டு அவர் உறும் பிற வருத்தங்களையும் கருதித் தோழி துன்புறுதல் இயல்பாதலின் நீக்கலின் வந்ததுயரம் என்றார். தம், என்றது தலைவனையும் தலைவியையும்.

எ - டு : ஞெலிகழை முழங்கழல் வயமா வெரூஉம்
குன்றுடை யருஞ்சுரம் (ஐங்-307)
களிறு பிடிதழீஇப் பிறபுலம் படராது
பசிதின வருந்தும் பைதறு குன்றம் (ஐங்-305)
ஆள் வழக்கற்ற பாழ்படு நனந்தலை
வெம்முனை யருஞ்சுரம் (ஐங்-329)

என்பனவற்றான் தோழி சுரத்தினது கொடுமை தெரிந்தனளாதல் தெளியப்படும். இத்துறையமைந்த சான்றோர் செய்யுட்கள் வந்தவழிக் கண்டுகொள்க.

(5) தாய் தேடிச்சென்ற காலை “பெயர்ந்து போகுதி பெரு மூதாட்டி” என்றும். சீர்கெழுவெண்முத்தம் ..........
நுமக்குமாங்கனையளே (கலி - 9) என்றும். சிறுவரையிறப்பிற் காண்டி (ஐங் - 308) என்றும், வாய்மையும் பொய்மையும் சுட்டிக் கண்டோர் கூறியவற்றையெல்லாம் கருதி வருந்தியிருக்கும் தாயினது நிலைமையைத் தோழி உணர்ந்து ஒழுகுதல் தோன்ற “வாய்மையும் பொய்ம்மையும் கண்டோர்ச்சுட்டி தாய்நிலை நோக்கி” என்றார். ‘தாய்நிலை’ என்றது. தாய் கலங்கி யிருக்கும் நிலையை

போக்குட னறிந்தபின் தோழியொடு கெழீஇக்
கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும் (களவி - 25)

எனக்களவியலுள் வருதலான் தாய்நிலை நோக்கித் தலைப் பெயர்த்துக் கொள்ளுதல் தோழியின் ஒழுகலாறாதல் தெளியப் படும்.

எ - டு : அன்னை வாழியோ அன்னை நின்மகள்
என்னினும் யாயினும் நின்னினும் சிறந்து
தன்னம ரிளந்துணை மருட்டலின் முனாது
வென்வேற் புல்லி வேங்கட நெடுவரை
மழையொடு மிடைந்த வயக்களிற் றருஞ்சுரம்
விழைவுடை உள்ளமொடு உழையிற் பிரியாது
வன்கண் செய்து சென்றனள்
புன்கண் செய்தல் புரைவதோ வன்றே (நச். மேற்)

இது தாய்நிலை நோக்கி அவள் துயரத்தைத் தலைப்பெயர்த்துக் கொண்டமை புலப்படுத்துமாறு காண்க.

(6) பிரிவிடைத் தலைவன் காலம் நீட்டித்த வழியும் குறித்த பருவம் முகிழ்த்தவிடத்தும், சுரத்தினது இடையூறுகளை எண்ணிய வழியும் ஒருகாலைக்கொருகால் தலைவிக்குத் துயர் மிகுதலின் நோய் மிகப் பெருகி என்றும், அன்னையின் கடுஞ் சொற்கும் ஊரலருக்கும் அஞ்சித் தலைவி வெளிப்படக்கலுழாள் என்பது விளங்க, “நெஞ்சுகலுழ்ந்தோள்” என்றும் உண்டியும் உறக்கமும் நீத்தலான் புறம் மெலிந்து பொலிவுகுன்றியுள்ள நிலையை நோக்கி இடித்துரைத்தலின் “அழிந்தது களைஇ” என்றும் தலைவன் பிரிவுழிக் கூறியவை யெல்லாம் அன்புசான்ற

பண்புரையாதலின் ' மொழிந்தது ' என்றும் தலைவி ஆற்றும் நெறியறிந்து கூறலின் திறத்தொடு என்றும் கூறினார். களவியலுள் இக்கிளவியை "அன்பு தலையடுத்த வன்புறை" (கள-23) என்பார்.

எ - டு : "அரிதாய அறனெய்தி" என்னும் பாலைக்கலியுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறெனவும் உரைத்தனரே

எனவும் மென்சிறகாலாற்றும் எனவும் தன்னிழலைக் கொடுத்தளிக்கும் எனவும் தலைவன் மொழிந்தது கூறி

இனைநல முடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுநர் அல்லர் மனைவயின்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழில் உண்கணும் ஆடுமா லிடனே

(கலி-11)

எனத் திறத்தொடு வற்புறுத்தியமை கண்டு கொள்க. [இதனைத் தலைவி கூற்றாகக் கொள்வார் நச்சினார்க்கினியர் அது பொருந்தாது. விரிக்கின் பெருகும். ஓர்ந்து கொள்க]

இலங்கு வளைநெகிழச் சாஅய் அல்கலும்
கலங்கஞர் உழந்து நாமிவண் ஒழிய
வலம் படுமுரசிற் சேரலாதன்
முந்நீர் ஓட்டிக் கடம்பறுத் திமயத்து
முன்னோர் மருள வணங்குவிற் பொறித்து
நன்னகர் மாந்தை முற்றத்து ஒன்னார்
பணி திறை தந்த பாடுசால் நன்கலம்
பொன்செய் பாவை வயிரமொடு ஆம்பல்
ஒன்றுவாய் நிறையக் குவைஇ அன்றவன்
நிலந்தினத் துறந்த நிதியத்தன்ன
ஒருநாள் ஒருபகல் பெறினும், வழிநாள்
தங்கலர் வாழி தோழி செங்கோற்
கருங்கால் மராத்து வாஅல் மெல்லிணர்
சுரிந்து வணர் பித்தை பொலியச் சூடி
கல்லா மழவர் வில்லிடந்தழீஇ
வருநர்ப் பார்க்கும் வெருவரு கவலை
மொழிபெயர் தேஎத்தர் ஆயினும்
பழிதீர் காதலர் சென்ற நாட்டே (அகம்-127)

இஃது அழிந்தது களைஎன வன்புறை நெருங்கிக் கூறியது.

களவியலுள் வேண்டாப் பிரிவினும் எனவும், ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும் எனவும் கற்பியலுள்: பிரியுங்காலை எதிர் நின்று சாற்றிய மரபுடையெதிரும் எனவும், பிரிவொழுக்கம் பற்றிய கிளவிகளைச் சார்ந்து வருவன வெல்லாம் இவற்றுள் அடங்கும் என்பார், "என்றிவை யெல்லாம்" எனக்கூறினார்,

ஆயத்தார் பலராயினும் அவர் யாவர்க்கும் இவை உரியவாகா ஒன்றித் தோன்றும் செவிலி மகளாகிய தோழிக்கே உரிய என்பது தோன்ற " இயல்புற நாடின் ஒன்றித் தோன்றும் தோழிமேன " என்றார் என்க.

இயல்புற என்றதனுன் இருவகைக் கைகோளிற்கும் பொது வாய்ப் பிறவாறு வரும் தோழிக்குரிய கிளவியெல்லாம் ஓர்ந் தமைத்துக் கொள்க.

**சூ. 42 :** பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி
வழுவின் ஆகிய குற்றங் காட்டலும்
ஊரது சார்வும் செல்லுந் தேயமும்
ஆர்வ நெஞ்சமொடு செப்பிய வழியினும்
புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு
அழிந்தெதிர் கூறி விடுப்பினும் ஆங்கத்
தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்
சேய்நிலைக் ககன்றோர் செலவினும் வரவினும்
கண்டோர் மொழிதல் கண்டது என்ப. (42)

**க - து :** கொண்டுதலைக்கழியும் பிரிவின்கண் தலைமக்களையும் தாயரையும் கண்டோர் கூறும் கூற்றுப்பற்றிய கிளவிகள் ஆமாறு கூறுகின்றது.

**பொருள் :** 1. பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி விழுவின் ஆகிய குற்றங்காட்டலும் = தலைமக்கள் உடன் போகுழி நேர்ந்துள்ள பொழுதும் செல்லும் வழித்தடமும் அஞ்சு தக்கனவாய்த் தோன்றி வழுவினையுடையவாகியுள்ள ஏதங் களைக் காட்டி நிற்றற் கண்ணும்,

பொழுதென்றது ஈண்டுச் சிறுபொழுதினை. முற்பகலாயின் செங்கதிர் வெப்பம் படிப்படியாக முதிர்ந்தும் பிற்பகலாயின் இருள் சூழ்ந்தும் ஏதம் பயத்தலின் பொதுவாகப் பொழுது என்றார். சுரநெறி கல்லும் முள்ளும் நிறைந்து கானுறை விலங்கும் ஆறலைப்போரும் சூழ்ந்து ஏதம் பயத்தலைத் தெளிந்துள்ளமை யான் " வழுவினாகிய குற்றம் " என்றார்.

வழுவாவது, கலந்துடன் போவார்க்கு நலம்பயவாது தீமை யுற்றிருத்தலை. பொழுதும் ஆறுமாகிய அவைதாமே ஏதத்திற்குக் காரணமாகி நிற்றலின் 'குற்றங்காட்டலும்' என்றார். காட்டற் கண்ணும் என ஏழாவது விரிக்க.

எ - டு : எல்லும் எல்லின்று பாடுங் கேளாய்
செல்லாதீமோ சிறுபிடி துணையே
வேற்றுமுனை வெம்மையின் சாத்துவந்திருத்தலின்
வளையணி நெடுவே லேந்தி
மிளைவந்து பெயரும் தண்ணுமைக்குரலே (குறு-390)

எனவரும்.

(2) ஊரது சார்வும் செல்லுந்தேயமும் ஆர்வநெஞ்சமொடு செப்பியவழியும் = இடைச்சுரத்துக் கண்டோர் தம் ஊரின் அணிமையையும் தலை மக்கள் கருதிச் செல்லும் ஊரின் சேய்மையையும் அன்புடைய நெஞ்சத்தாற் செப்பக் கருதிய இடத்தும், செப்பிய = செப்பக்கருதிய என்றவாறு

எ - டு : எம்மூரல்லது ஊர் நணித்தில்லை
வெம்முரட்செல்வன் கதிரும் ஊழ்த்தனன்
சேந்தனை சென்மோ பூந்தார் மார்ப
இளையள் மெல்லியள் மடந்தை
அரிய சேய பெருங்கல் லாறே (சிற்றெட்டகம்)

இதன்கண் எம்மூரல்லது ஊர் நணித்தில்லை என்றதனான் நீவிர் செல்லக்கருதும் தேயம் சேய்த்து என்பது உணர்த்தி னாராவர்.

நல்லோள் மெல்லடி நடையு மாற்றாள்
பல்கதிர்ச் செல்வன் கதிரும் ஊழ்த்தனன்
அணித்தாத் தோன்றுவதெம்மூர்
மணித்தார் மார்ப சேந்தனை சென்மோ (நச்-மேற்)

மகட்பயந்து வாழ்வார்க்குத் தலைவியது நிலைகண்டு அருள் பிறந்தமை இதனாற்புலனாகும்.

(3) புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு அழிந் தெதிர்கூறி விடுப்பினும் = காதலான் ஒருங்கிணைந்து கற்புக் கடன் தோன்றச் செல்லுந் தலைமக்கள்பால் அவர்தம் உணர்வொடு கலந்த நெஞ்சத்தான் அவர்தம் நிலைமைக்கு வருந்தி அவர் செலவினை மறுத்துக்கூறித் தம்மகத்துத் தங்கச் செய்து பின்னர்ப் போகவிடுக்குமிடத்தும்

எ - டு : இது நும்ஊரே யாவரும் கேளிர்
பொதுவறு சிறப்பின் வதுவையுங் காண்டும்
ஈன்றோர் எய்தாச் செய்தவம்
யாம்பெற் றனமால் மீண்டனிர் சென்றே (நச்-மேற்)

எனவரும். இன்னும் வேறுபட வருவனவும் பிறவும் இதனான் அமைத்துக் கொள்க.

(4) ஆங்கு அத் தாய்நிலை கண்டு தடுப்பினும் (5) விடுப்பினும் = அவ்வாறே அவ்விடத்துத் தேடிச் செல்லும் தாயினது நிலைமையைக் கண்டு அவள் செலவினைத் தடுத்தற்கண்ணும் தலைமக்கள் இன்னுழி இவ்வாறு செல்லாநின்றனர் எனப்போக விடுத்தற்கண்ணும்

ஆங்கு என்பது உவமச்சொல். அஃது புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சத்தை உணர்த்தி நின்றது.

எ – டு ; பெயர்ந்து போகுதி பெருமூதாட்டி
சிலம்புகெழு சீறடி சிவப்ப
இலங்குவேற் காளையொடு இறந்தனள் சுரனே
[இளம்-மேற்]

இது வெளிப்படையாகத் தடுத்துரைத்தது.

"எறித்தரு கதிர்த்தாங்கி" என்னும் பாலைக் கலியுள் (9)
பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்கு மாங்கனையளே

எனவிளக்கி

இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலைப் பிரியா ஆறுமற்றதுவே"

என்றது, குறிப்பினால் தடுத்துக்கூறியது.

நெருப்பவிர் கனலி உருப்புச் சினந் தணியக்
கருங்கால் யாஅத்து வரிநிழல் இரீஇச்
சிறுவரை இறப்பிற் காண்குவை செறிதொடிப்
பொன்னேர் மேனி மடந்தையொடு
வென்வேல்விடலை முன்னிய சுரனே (ஐங் - 388)

இது, செல்கென விடுத்தது.

அறம்புரி அருமறை நவின்ற நாவின்
திறம்புரி கொள்கை அந்தணிர் தொழுவலென்று

ஒண்டொடி வினவும் பேதையம் பெண்டே
கண்டனெம் அம்ம சுரத்திடை அவளை
இன்றுணை இனிது பாராட்டக்
குன்றுயர் பிறங்கல் மலையிறந்தோளே (ஐங் - 387)

இது குறிப்பினாற் செல்கென விடுத்தது. பிறவும் இவ்வாறு வருவனவற்றை ஓர்ந்தமைத்துக் கொள்க.

(6) சேய்நிலைக்ககன்றோர் செலவினும் வரவினும் = சேய்மைத்தாகிய ஊரிடத்திற்கு அகன்று செல்வோர் செலவின் கண்ணும், அங்ஙனம் சென்ற தலைமக்கள் மீண்டுவரும் வரவின் கண்ணும்.

இவை மேற்கூறிய கிளவிகள் போலக் கலந்துடன்வருவோர் பாலும் செவிலிபாலும் நிகழ்த்துதலின்றித் தம் முள் கிளத்துவன வாகலின் கூறியது கூறலன்மை தெரிக. அயல்மனைக் கொண்டு கழிந்தவிடத்து இக்கூற்று நிகழ்த்துதற்கு இயைபின்மையான் “சேய்நிலைக்கன்றோர்” என்றார்.

எ - டு : அழுந்துபட வீழ்ந்த நெடுந்தண் குன்றத்து
ஒலிவல்லீந்தின் உலவையங் காட்டு
ஆறுசெல் மாக்கள் சென்னி எறிந்த
செம்மறுத் தலைய நெய்த்தோர் வாய
வல்லியம் பெருந்தலைக் குருளை, மாலை
மான்நோக் கிண்டிவர் ஈங்கைய சுரனே
வையெயிற் றையள் மடந்தை முன்னுற்று
எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கும் உருமினுங் கொடிதே (நற் - 2)

இஃது உடன் போகா நின்ற தலைமக்களைக் கண்டு சுரத் துறைவோர் தம்முள் கூறிப் பரிவுற்றது.

“வில்லோன் காலனகழலே” என்பதுமது. (குறு-7)

அஞ்சுடர்நீள் வாண்முகத் தாயிழையும் மாறிலா
வெஞ்சுடர்நீள் வேலானும் போதரக்கண் — டஞ்சி
ஒருசுடரு மின்றி யுலகுபா ழாக
இருசுடரும் போந்தனவென் றார் (திணைமாலை.71)

இஃது உடன் போகிய தலைமக்கள் மீண்டுவருகாலை அவரைக் கண்டு தம்முள் வியந்து கூறியது.

பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து
செங்கால் மராஅத்த வரிநிழல் இருந்தோர்
யார்கொல் அளியர் தாமே வார்சிறைக்
குறுங்கால் மகன்றில் அன்ன
உடன்புணர் கொள்கைக் காத லோரே (ஐங்.381)

**என்பதுமது.** பிறவும் இவ்வாறே ஓர்ந்து கொள்க.

**சூ. 42 :** **ஒன்றாத் தமரினும் பருவத்தும் சுரத்தும்
ஒன்றிய தோழியொடு வலிப்பினும் விடுப்பினும்
இடைச்சுர மருங்கின் அவள்தமர் எய்திக்
கடைக்கொண்டு பெயர்தலின் கலங்கஞர் எய்திக்
கற்பொடு புணர்ந்த கௌவை யுளப்பட
அப்பாற் பட்ட ஒருதிறத் தானும்
நாளது சின்மையும் இளமைய தருமையும்
தாளாண் பக்கமும் தகுதிய தமைதியும்
இன்மைய திளிவும் உடைமைய துயர்ச்சியும்
அன்பின தகலமும் அகற்சிய தருமையும்
ஒன்றாப் பொருள்வயின் ஊக்கிய பாலினும்
வாயினும் கையினும் வகுத்த பக்கமொடு
ஊதியங் கருதிய ஒருதிறத் தானும்
புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலும்
தூதிடை யிட்ட வகையி னானும்
ஆகித் தோன்றும் பாங்கோர் பாங்கினும்
மூன்றன் பகுதியும் மண்டிலத் தருமையும்
தோன்றல் சான்ற மாற்றோர் மேன்மையும்
பாசறைப் புலம்பலும் முடிந்த காலத்துப்
பாகனொடு விரும்பிய வினைத்திற வகையினும்
காவற் பாங்கின் ஆங்கோர் பக்கமும்
பரத்தையின் அகற்சியின் பரிந்தோட் குறுகி
இரத்தலும் தெளித்தலும் எனஇரு வகையொடு
உரைத்திற நாட்டங் கிழவோன் மேன.** (42)

**க - து :** கொண்டுதலைக் கழிதற்கண்ணும் ஓதல் முதலாய பிரிவின் கண்ணும் நிகழும் தலைவனுக்குரிய கிளவிகளைத் தொகுத்து இருவகைக் கைகோளிற்கும் பொதுப்படத் தலைவன் உரை நிகழ்தற்குரிய இடம் இவை எனக் கூறுகின்றது.

**பொருள் 1.** ஒன்றாத்தமரினும் பருவத்தும் சுரத்தும்........ ... ... ... ... ஒருதிறத்தானும் = தமர்வரைவு உடன்படாத விடத்தும் உடன் போக்கிற்குப் பருவம் ஒன்றாத இடத்தும். சுரத்திடத்தும் தலைவியினது உணர்வொடு ஒன்றித்திகழ்பவளாகிய தோழியின் கருத்தொடுபொருந்தி உடன்போக்கினைத் துணியுமிடத்தும், தோழி ஓம்படை கூறிவிடுக்குமிடத்தும், கொண்டுதலைக் கழிந்தவழி இடைச்சுரத்தின்கண் தலைவியின் தமர் எய்தி வந்து தலைவியைத் தம்முடன் கொண்டு பெயர்தலான் தலைவி கலங்குதலாகிய துன்பத்தையுற்றுத்தன் தமர்பாற் சாராமல் தலைவன் வழிநிற்றலை அச் சுரத்து உறைவோரும் தலைவியின் தமரும் உணர்ந்து உரை எழுப்புதலான் நிகழும் கௌவையுளப்பட, அப்பகுதிப்பட்ட ஒரு கூற்றின் கண்ணும் உரைத்திறநாட்டங் கிழவோன்மேன.

'கடைக்கொண்டு' என்பது ஒருசொல் நீர்மைத்தாய் மீட்டுக்கொள்ளுதலை உணர்த்தி நின்றது. கௌவை = ஆரவாரம். அஃதாவது தலைவி குடிமைப் பண்பான் கற்பின் ஆக்கத்துக்கண் ஊன்றி நிற்பதனைக் கண்டோர் தம்முள்ளும் தலைவி தமரொடும் கிளக்கும் உரைகளான் எழும் ஆரவாரம்.

'ஒன்றித்தோன்றும் தோழி' என மேற்கூறியதனைச் சுட்டி 'ஒன்றியதோழி' என்றார். ஒன்றியமொழியொடு' என்னும் பாடத்திற்குப் பொருள் நோக்கின்மையறிக. அப்பாற் பட்ட ஒருதிறம் என்றது "கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவண் இரங்கலும் உண்டெனமொழிப ஓரிடத்தான" (அகத்-16) எனமேற்கூறிய ஒரு சார் உரிப்பொருளை என்க.

உளப்பட என்றதனான் சுரத்தின்கண் தலைவியொடு கூறுவனவும் இயைபுடையபிறவும் கொள்க.

எ - டு : அம்ம வாழி தோழி நம்மூர்
நிரந்திலங் கருவிய நெடுமலைநாடன்
இரந்து குறையுறாஅன் பெயரின்
என்னாவது கொல்நம் இன்னுயிர்நிலையே (ஐங்-228)

இதன்கண் தலைவி தமர் வரைவு மறுத்தமை தோழி கூற்றான் புலனாதல் காண்க தலைவனது நேர்க் கூற்று வந்தவழிக் கண்டுகொள்க.

கிளிபுரை கிளவியாய் எம்மொடு நீவரின்
தளிபொழி தளிரன்ன எழில்மேனி தகைவாட

முளியரில் பொத்திய முழங்கழல் இடை போழ்ந்த
வளியுறின் அவ்வெழில் வாடுவையல்லையே (கலி-13)

இதன்கண் பருவம் ஒன்றாமையைத் தலைவன் கூறியதைத் தோழி கொண்டு கூறியவாறு காண்க.

உமணர்ச் சேர்ந்து கழித்த மருங்கி னகன்றலை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்காடு
இன்னா என்றி ராயின்
இனியவோ பெரும தமியேற்கு மனையே (குறு - 124)

இதன்கண் தலைவன் சுரத்தருமை கூறியதைத் தலைவி கொண்டு கூறியவாறு கண்டு கொள்க.

வினையமை பாவையின் இயலி நுந்தை
மனைவரை இறந்து வந்தனை, ஆயின்
தலைநாட்கு எதிரிய தண்பத எழிலி
அணிமிகு கானத்து அகன்புறம் பரந்த
கடுஞ்செம் மூதாய் கண்டும் கொண்டும்
நீவிளையாடுக சிறிதே யானே
மழகளிறு உரிஞ்சிய பராரை வேங்கை
மணலிடு மருங்கின் இரும்புறம் பொருந்தி
அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவென்
நுமர்வரின் மறைகுவென் மாஅ யோளே (நற்-362)

இஃது இடைச் சுரத்தின்கண் தலைவிதமர் எய்திய வழித் தலைவன் கூறியது.

வருமழை கரந்த வால்நிற விசும்பின்
நுண்டுளி மாறிய உலவை யங்காட்டு
ஆல நீழல் அசைவு நீக்கி
அஞ்சுவழி யஞ்சாது அசைவழி அசைஇ
வருந்தா தேகுமதி வாலிழைக் குறுமகள்
இம்மென் பேரலர் நும்மூர்ப் புன்னை
வீமலர் உதிர்த்த தேனுறு புலவின்
கானல் வார்மணல் மரீஇக்
கல்லுறச் சிவந்தநின் மெல்லடி யுயற்கே (நற்-76)

இது சுரத்திடைத் தலைவன் தலைவியை ஆற்றுவித்தற் பொருட்டுக் கூறியது. இன்னும் பிறவாறு வருவனவற்றை யெல்லாம் இதன்கண் அடக்கிக் கொள்க.

2. நாளது சின்மையும் ... ... ... ஊக்கிய பாலினும் = வாழும் நாள் சிலவாக உளவாதலையும், தனது தாளாண்மை யாகிய பகுதியையும், பொருளின்மையான் எய்தும் இழிவையும், தலைவியைப் பல்லாற்றானும் இன்புறுத்தற்கெண்ணும் தனது அன்பினது பெருக்கத்தையும் கருதிப் பொருளீட்டலை வலி யுறுத்தும் நெஞ்சும், இன்பநுகர்ச்சிக்குரிய இளமையது அருமைப் பாட்டையும் தலைவியைப் பேணும் கடமையாகிய தகவினையும், காதலுடைமையாகிய சிறப்பினையும், தலைவியைப் பிரிந் துறைதலாற்றாததன் நிலையையும் கருதிப்பொருள்வயிற்பிரிதலை மெலிவிக்கும் உணர்வும், தம்முள் ஒன்றாத நிலைமைக் குரிய பொருள்வயிற் பிரிதலை ஊக்குவிக்கும் பகுதியின் கண்ணும் உரைத்திற நாட்டங் கிழவோன்மேன.

பொருட்பயனைக் கருதியும் இன்ப நுகர்ச்சியை எண்ணியும் தடுமாறும் மாந்தர்தம் உளவியற் பண்பினைப் பொருளீட்டற்குரிய செயலுக்கு அடையாகக் கூறிய சொற்களான் பொருள் செய்வார்க்கும் இன்பம் நுகர்வார்க்கும் வேண்டும் இயல்புகளை ஆசிரியர் நயம்படப் புலப்படுத்தியுள்ள திறனை ஓர்ந்து தெளிக.

எ - டு : உண்ணாமையின் உயங்கிய மருங்கின்
ஆடாப் படிவத்து ஆன்றோர் போல
வரைசெறி சிறுநெறி நிரையுடன் செல்லும்
கானயானை கவினழி குன்றம்
இறந்து பொருள் தருதலும் ஆற்றாய் சிறந்த
சில்லைங் கூந்தல் நல்லகம் பொருந்தி
ஒழியின் வறுமை யஞ்சுதி அழிதகவு
உடைமதி வாழிய நெஞ்சே நிலவென
நெய்கனி நெடுவேல் எஃகின் இமைக்கும்
மழை மருள் பஃறோல் மாவண் சோழர்
கழைமாய் காவிரிக் கடல் மண்டு பெருந்துறை
இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கடல் ஓதம் போல
ஒன்றிற் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே.
(அக - 123)

பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவன் தன் நெஞ்சினது தடுமாற்றத்தைப் புலப்படுத்தியவாறு இதனுட் கண்டுகொள்க.

முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்
வாணாள் வகையளவும் அறிஞருமில்லை
மாரிப்பித்திகத்து ஈரிதழ் அலரி
நறுங்காழாரமொடு மிடைந்தமார்பில்

குறும் பொறிக்கொண்ட கொம்மையம் புகர்ப்பின்
கருங்கண் வெம் முலை ஞெமுங்கப் புல்லிக்
கழிவ தாகக் கங்குல் என்று
தாமொழி வன்மையின் பொய்த்தனர் வாழிய
நொடிவிடுவன்ன காய்விடு கள்ளி
அலங்கலம் பாவை ஏறிப் புலம்புகொள்
புன்புறா வீழ்பெடைப் பயிரும்
என்றூழ் நீளிடைச் சென்றிசினோரே (நற்-314)

இதன்கண் நாளதுசின்மையும் இளமையதருமையும் தம்முள் முரண்படுதலைக் கூறித் தலைவன் அழுங்கியமையைத் தலைவி கொண்டு கூறியவாறு கண்டுகொள்க.

வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென
நமக்குரைத் தோரும் தாமே
அழாஅல்தோழி அழுங்குவர் செலவே (குறு-135)

இதன்கண் தாளாண் பக்கமும் தகுதியதமைவும் தலைவன் எண்ணிக் கூறியமை வந்தவாறு காண்க.

ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கில்லென
செய்வினைக்கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ
எம்மை உய்த்தியோ உரைத்திசின் நெஞ்சே (குறு - 63)

இதன்கண் இன்மையது இளிவையும் தலைவியின் காதலுடைமையையும் எண்ணித்தலைவன் கூறியமைகாண்க.

மாரிப்பித்துகத்து நீர்வார் கொழுமுகை
இரும்பனம் பசுங்குடை பலவுடன் பொதிந்து
பெரும்பெயல் விடியல் விரித்து விட்டன்ன
நறுந்தண்ணியளே நன்மா மேனி
புனற்புணை யன்ன சாயிறைப் பணைத்தோள்
மணத்தலும் தணத்தலும் இலமே
பிரியின் வாழ்தல் அதனினு மிலமே (குறு - 168)

இதன்கண் அன்பினது அகலத்தையும் அகற்சியது அருமையையும் தலைவன் எடுத்துக் கூறி யழுங்கியமை காண்க.

இங்ஙனம் நெஞ்சு தடுமாற்றமுற்றானாயினும் கடமை உணர்வே மேலிட்டுப் பிரிதலைச் செய்தலின் 'ஊக்கியபாலினும்' என்றார்.

(3) வாயினும் கையினும்...... ஒரு திறத்தானும் = வாயானும் கையானும் எய்தும் ஊதியங் கருதி வகுக்கப்பட்ட பாங்கினதாகிய ஒரு திறத்தின்கண்ணும் உரைத்திற நாட்டங் கிழ வோன்மேன.

என்றது, நூற்கல்வியும் தொழிற்கல்வியும் பற்றிப்பிரிதலாகிய ஓதற்பிரிவின் கண்ணும் என்றவாறு.

வாயான் வகுத்த பக்கமாவது : எண்ணும் எழுத்துமாகிய இயற்றமிழ்க்கலைகளும் பிறமொழிக் கலைகளும், இசைக்கலை யும் கணித முதலாகிய கலைகளும் பிறவுமாம். கையான் வகுத்த பக்கமாவது, ஓவியமும், சிற்பமும் நாடகக் கலையும், படைக்கலக் கல்வியும் போர்முறைக் கல்வியும் பிறவுமாம். இவையாவும் ஓதலும் புரிதலும் என இரண்டாக அடங்கலின் வாயினும் கையினும் வகுத்தபக்கமென விளங்கக் கூறினார்.

கல்வி எழுமைக்கும் ஏமாப்புடைமை நோக்கி 'ஊதியம்' என்றார். உதவுதற் செயல் புரிவது ஊதியமாயிற்று. இன்ன கல்வி இவ்வகையான் இன்னார்க்குரியதென்பது மேல் விளக்கப் பட்டது.

எ - டு : பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்து நீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ (கலி-14)

எனவும்

பின்னிய தொடர்நீவிப் பிறர் நாட்டுப் படர்ந்து நீ
மன்னிய புணர்ச்சியான் மறுத்தர லொல்வதோ (கலி-14)

எனவும், தோழிகூற்றுள் வாயினும் கையினும் வகுத்தபங்கங்களில் தலைவன் பிரிவுறுதல் வந்தமை கண்டுகொள்க. இப்பிரிவு பற்றித் தலைவன் கூற்று வந்தவழிக்கண்டு கொள்க.

(4) புகழும் மானமும் ...... வகையினானும் = முரண்பட் டார் (மன்னர் முதலானோர்) இருவரிடையே சென்று இவ்வாறு புரியின் புகழ் எய்தும் எனவும், இவ்வாறு செய்யின் மானம் வருமெனவும் கிளந்து கூறிவற்புறுத்தலை இடையே கொண்ட தூதிற் பிரியும் வகையின் கண்ணும் உரைத்திற நாட்டங் கிழ வோன்மேன.

வற்புறுத்தலும் என்னும் உம்மை 'மாநிதிக்கிழவனும் போன்ம்' என்புழிப்போல வேற்றுமைகுறித்த பொருள் பற்றி நின்றது. [இவ்இலக்கண விதிபற்றி லனவென வரூஉம் புள்ளியிறுதிமுன் (எழுத் - 481) என்னும் சூத்திர உரையுள் விளக்கப்பட்டது]

முரணும் இகலும் பற்றிய பகைமை, புகழும் மானமுமாகிய இருபொருளைப் பற்றித் தோன்றுவன வாகலின் புகழும் மானமும் எடுத்து வற்புறுத்தலை இடையிட்ட தூது என்றார்.

இக்கிளவிக்கு உரையாசிரியன்மார் கூறும் கருத்துரைகள், எல்லாப் பிரிவுகட்கும் உரியவாய்ப் பொதுவாகத் தலைமகன் மாட்டமைந்த உணர்வுகளாதலின் அவை கூற்று நிகழ்த்து தற்குக்காரண மாதலன்றி இடமாகாமையின் அவற்றை வகை களுள் ஒன்றாக வைத்துக் கூறுதல் பொருந்தாதென்க.

எ - டு : தூதிற்பிரிவுபற்றித் தலைவன் கூற்று வந்துழிக் கண்டுகொள்க.

5. ஆகித்தோன்றும் பாங்கோர் பாங்கினும் = துணைவ ராகித் தோன்றும் நண்புபூண்டு தன் பக்கத்தவராயினார்க்கு உற்றுழி உதவுதற் பொருட்டுச் சேறலாகிய துணைவயிற் பிரிவின்கண்ணும், உரைத்திற நாட்டங்கிழவோன்மேன.

இது பகைவயிற் பிரிவின்கண் அடங்குமாயினும் பிறர்க்குற்ற பகையாதலின் பிரித்துக்கூறினார் என்க. தூது சென்று வற்புறுத்தியவழி அந் நயவுரைகளை ஏலாதவரைப் பகைவராக வும் ஏற்றாரை நட்டாராகவும் கொண்டு நட்டார்க்குத் துணைபுரிதல் அரசியலறமாகலின் ஆகித்தோன்றும் பாங்கோர் என்றார். அதனான் தூதிற் பிரிவை யடுத்து இத் துணைவயிற் பிரிவை அமைத்தோதினார் என்க.

எ - டு : பெருஞ்சினவேந்தன் அருந்தொழில் தணியின்
விருந்து நனிபெறுதலும் உரியன் மாதோ
இருண்டுதோன்று விசும்பின் உயர்நிலை யுலகத்து
அருந்ததி அனைய கற்பின்
குரும்பை மணிப்பூண் புதல்வன்தாயே (ஐங் - 442)

இதன்கண் வேந்தன் அருந்தொழில் தணியின் என்றதனான் இத்தலைவன் துணைவயிற்பிரிந்துள்ளமை தெளியப்படும். நனிசேய்த்து (443) என்னும் ஐங்குறு நூறும் அது.

6. மூன்றன் பகுதியும் மண்டிலத்தருமையும் ... மேன்மை யும் = தானை யானை குதிரை என்னும் முத்திறத்துப்படைப் பகுதியானும் தன் ஆட்சிக்கு உட்பட்ட அரணமைந்த நிலப் பரப்பின் பெருமையானும் விளக்கம் மிக்கவராய் உறையும், மாற்றாரின் செருக்கமைந்த மேன்மைக்கண்ணும், உரைத்திற நாட்டங்கிழவோன்மேன.

என்றது, தனக்குக் கேண்மையராகாத மாற்றார் தமது படைச்செருக்கானும் அரண் வலிமையானும் மேன்மைபுற்றாராகச் செருக்கிய வழிப் போகம் வேண்டிப் பொதுச் சொற் பொறாத தான் அவர்தம் செருக்கினை அடக்கப் போர்மேற் செல்லும் ஊக்கத் பகைவயிற் பிரிவின் கண்ணும் என்றவாறு.

இது தனக்குஉற்ற பகைமேற்செல்லும் பிரிவாகும். இதனை "எஞ்சாமண்ணசை வேந்தனை வேந்தன் அஞ்சுதகத் தலைச் சென்று அடல்குறித்தன்று" எனப் புறஒழுக்கமாக பின்னர்க் கூறுமாற்றானறிக.

மேன்மையும், என்றது, மேன்மையாற்கொண்ட செருக்கினை. அதனான் மேன்மையைப் பெறாதவழியும் எனப்பொருள் கொள்க. மாற்றாரது மேன்மையைப் பொறுத்தல் ஊக்கமுடைய வேந்தற்கு ஒவ்வாமை அரசியற்பண்பென அறிக.

எ - டு : பல்லிருங் கூந்தற் பசப்பு நீவிடின்
செல்வேம் தில்ல யாமே சென்றார்
வெல்கொடி அரணம் முருக்கிய
கல்லா யானை வேந்துபகை வெலற்கே (ஐங்-429)

இதன்கண் செற்றார் எனவும் கல்லாவேந்து எனவும் கூறுதலான் மாற்றார் மேன்மையின் செருக்குப்புலனாம், பகைவெல்லற்குச் செல்வேம் என்றதனான் இது பகைவயிற் பிரிவாதலும் புலப்படும். 'முல்லைப்பாட்டு' பகைவயிற்பிரிவாக அமைந் துள்ளமைகாண்க.

(7) பாசறைப்புலம்பலும் = போர் முடிவுற்ற வழியும் நீட்டித்த வழியும் தலைவியிடத்துத் தான்குறித்த பருவம் வந்தவிடத்துத் தலைவியை எண்ணிப் பாசறையின்கண் ஏக்க ெ◌ாடு வதியும் தனிமைக் கண்ணும் உரைத்திற நாட்டங் கிழ வோன்மேன.

எ - டு : புகழ்சால் சிறப்பின் காதலி புலம்பத்
துறந்துவந் தனையே அருந்தொழிற்கட்டூர்
நல்லேறுதழீஇ நாகுபெயர் காலை
உள்ளுதொறுங் கலிழும் நெஞ்சம்
வல்லே எம்மையும் வரஇழைத்தனையே (ஐங்-445)

எனவரும். பிறவாறு வருவனவற்றையும் இதன்கண் அடக்கிக் கொள்க.

(8) முடிந்த காலத்துப் பாகனொடு .......... வகையினும் = பகை தணிவினை முடிந்த காலத்து மீண்டுவருந்தலைவன்

செயற்பாலனவற்றைப் பாகனொடு விரும்பிப் புரியும் வகைமையின் கண்ணும் உரைத்திற நாட்டங்கிழவோன்மேன.

என்றது தலைவி நிலைமையையும் நேர்ந்துள்ள பொழுதினையும் கூறித் தேரினை விரைந்து செலுத்தச் செய்தலும் வழியிடைக்காணும் காட்சிகளைச் சுட்டிக் கூறுமுகத்தான் தன்மன நிலையைப் புலப்படுத்தலும், பாகனைப் பாராட்டலும் பிறவுமாகிய திறத்தின்கண். தலைவன் கூற்று நிகழ்த்தும் என்றவாறு.

எ - டு: வந்துவினை முடித்தனன் வேந்தனும், பகைவரும்
தம்மிறை கொடுத்துத் தமராயினரே
முரண் செறிந்திருந்த தானை இரண்டும்
ஒன்றென அறைந்தன பணையே நின்தேர்
முன்னிலங் கூர்தி பின்னிலை ஈயாது
ஊர்கபாக ............ ...... ..........
...... .................................... ........ ......
தண்குடவாயில் அன்னோள்
பண்புடையாகத்து இன்துயில் பெறவே (அகம் - 44)

இது, தேரை விரைந்து செலுத்துக எனப் பாகனொடு கூறியது.

"கொல்வினைப் பொலிந்த கூர்ங்குறும்புழுகின்" (அகம்-9) என்னும் அகப்பாட்டினுள் தலைவன் தன் மனநிலையைத் தேர்ப்பாகற்குக் கூறியமை கண்டுகொள்க.

"வானம் வாய்ப்பக்கவினி" (அகம் - 134) என்னும் அகப்பாட்டு வழிநிலைக் காட்சியைக் கூறுமுகத்தான் தலைவன் தன் மனநிலையைப் புலப்படுத்தியது.

"நரைவிராவுற்ற" (அகம் - 225) என்னும் அகப்பாட்டினுள்.

நெடியிடை பின்படக் கடவுமதி என்றியான்
சொல்லிய அளவை நீடாது வல்லெனத்
தார்மணி மாவறி வுறாஅ
ஊர்நனித் தந்தனை உவகையாம் பெறவே"

என்றது, பாகனைப் பாராட்டியது.

"வினைத்திறவகை" என்றதனான் பாணனைத் தூது விடுதலும் பிறவும் கொள்க.

பனிமலர் நெடுங்கண் பசலை பாய
துனிமலி துயரமொடு அரும்படர் உழப்போள்
கையறு நெஞ்சிற்கு உயவுத்துணை யாகச்
சிறுவரைத் தாங்குவை யாயின்
காண்குவை மன்னால் பாணஎம் தேரே (ஐங் - 477)

இது தலைவியிடத்துப் பாணனைத்தலைவன் தூதாக விடுத்தது.

நின்னே போலும் மஞ்ஞை யாலநின்
நன்னுதல் நாறும் முல்லை மலர
நின்னே போலமா மருண்டு நோக்க
நின்னே உள்ளி வந்தனென்
நன்னுதலரிவை காரினும் விரைந்தே (ஐங் - 493)

இது தலைவன்தான் விரைந்து வந்தமையைக் காரணத்தொடு தலைவியிடத்துக் கூறியது. பிறவும் இவ்வாறு வருவனவற்றை ஓர்ந்து கொள்க.

(9) காவற்பாங்கின் ஆங்கோர் பக்கமும் = தன்னாற்காக்கப் படுவனவற்றையும், காக்கப்படுவோரையும், காத்தற்குப் பிரியும் பிரிவின் கண்ணும், காவற்கடமைக் கொத்த பிறிதொரு பக்கத்தாற் பிரியும் பிரிவின்கண்ணும் உரைத்திற நாட்டங்கிழவோன்மேன.

என்றது, காவற்பிரிவின் கண்ணும் என்றவாறு. காக்கப் படுவன அறப்புறங்களும் தேவகோட்டங்களும் கலை நிலையங் களும் அவை போல்வனவுமாம். காக்கப்படுவோர் அந்தணரும், அருந்தவரும், ஆதுலரும் அவரொப்பாருமாவர்.

காவற் கடமைக்கு ஒத்தவை சாறயர்தலும் (சாறு = விழா) அவ்வழி ஆடலும் பாடலும் வல்லாரைப் பேணி அளித்தலும் தண்ணளி செய்தலுமாம்.

காவற்பாங்கின் பக்கமும் ஆங்கோர் பக்கமும் எனத் தனித் தனிக் கூட்டிப் பொருள்கொள்க. ஆங்கோர் பக்கம் என்பதனுள் ஆங்கு என்பது உவமச்சொல்.

எ - டு : உறைஞ்சி நிழல் சேர்ந்தார்க் குலையாது காத்தோம்பி
ஆறின்றிப் பொருள் வெஃகி அகன்ற நாட்டுறைபவர்(கலி-26)

எனவரும் தோழி கூற்றான் தலைவன் காவற் பொருட்டுப் பிரிந்துள்ளமை கண்டுகொள்க தலைவன் கூற்றாகிவந்தவை வந்துழிக் கண்டுகொள்க.

நன்றும், தடைஇய மென்றோளாய் கேட்டீவாயாயின்
உடனுறை வாழ்க்கைக்கு உலவி யுறையும்
கடவுளர், கட்டங்கினேன் (கலி - 92)

என்பதனான் தலைவன் தேவர் கோட்டங்காத்தற்குப் பிரிதலும் பெறப்படும் — பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

10. *பரத்தையினகற்சியின் ...... கிழவோன்மேன* = குடிமரபு காரணமாகவும் அரசியல்மரபு காரணமாகவும் உரிமை கொண்டுறையும் காமக்கிழத்தி - காதற்பரத்தை முதலாயினோரைப் பேணித் தண்ணளி செய்தற்கு மனையின் அகன்றமையான் ஐயமும் துனியும் எய்திப் புலந்த தலைவியை ஊடல் தீர இரத்தலும், கடமையிற் பிரிந்தமையல்லது தவறிலேன் எனத் தெளிவுறுத்தலும் ஆகிய இருவகையொடு மேற் கூறிய இடங்களிலெல்லாம் கூற்றுநிகழ்த்தும் நிலைமையாகிய குறிப்புத் தலைவன் கண்ணவாகும்.

இக்கிளவி பெரும் பான்மையும் கற்பொழுக்கத்தின் கண்ணே நிகழ்த்தற் குரியதாகும்.

எ - டு : ஒரூஉக் கொடியியல் நல்லார் குரல் நாற்றத்துற்ற
முடியுதிர் பூந்தாது மொய்ம்பினவாகத்
தொடிய எமக்குநீ யாரை? பெரியார்க்கு
அடியரோ ஆற்றாதவர் ;
கடியர் தமக்குயார் சொலத்தக்கரர் மாற்று ;
வினைக்கெட்டு
வாயல்லாவெண்மை உரையாது கூறுநின்
மாயம் மருள்வா ரகத்து ;
ஆயிழாய்
நின்கண் பெறினல்லால் இன்னுயிர் வாழ்கல்லா
என்கண் எவனோ தவறு ?
இஃதொத்தன்,
புள்ளிக் களவன் புனல்சேர் பொதுக்கம்போல்
வள்ளுகிர் போழ்ந்தனவும் வாளெயிறுற்றனவும்
ஒள்ளிதழ் சேர்ந்தநின் கண்ணியும், நல்லார்
சிரறுபு சீறச் சிவந்தநின் மார்பும்
தவறாதல் சாலாவோ கூறு.
அதுதக்கது ;
வேற்றுமை என்கண்ணோ ஓராதிதீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு.
இனி, த்தேற்றேம்யாம்

தேர்மயங்கிவந்த தெரிகோதை அந்நல்லார்
தார்மயங்கி வந்த தவறஞ்சிப் போர் மயங்கி
நீஉறும் பொய்ச்சூள் அணங்காகின் மற்றினி
யார்மேல் விளியுமோ கூறு (கலி - 88)

இதன்கண் தலைவி துனியுற்றுப் புலந்து கூறலும் தலைவன் இரத்தலும், தெளித்தலும் வந்தவாறு கண்டுகொள்க.
இன்னும் மருதத்திணைபற்றிச் சான்றோர் செய்த செய்யுட்களான் இதன் திறமெல்லாம் தேர்ந்து கொள்க.

[பரத்தைமை பற்றிய இலக்கணநோக்கும் இலக்கிய மரபும் பற்றிய விளக்கம் கற்பியலுரைப் பாயிரத்துள் கண்டு தெளிக.]

மேற்கூறிய இடங்களிலெல்லாம் தலைவன் வெளிப்படக் கிளந்து கூற்று நிகழ்த்தல்வேண்டு மென்பது ஒருவந்தமன்று. அவையெல்லாம் கூற்றுநிகழ்த்தற்குரிய இடங்கள் என்பது விளங்க உரைத்திறம்நாட்டல் என்னாது "உரைத்திறநாட்டம் கிழவோன்மேன" என்றார். அம்முறைமையான் நல்லிசைப் புலவோர் செய்யுட்களில் பெரும்பான்மையும் தலைவன்கூற்றுத் தலைவியும் தோழியும் கொண்டெடுத்து மொழிதலாகவே அமைந்துள்ளமை கண்டுகொள்க.

இனி, களவியலுள்ளும் கற்பியலுள்ளும் கூறப்படுவனவற்றின் ஒழிபாக வரும் தலைவன் கூற்றுக்களையெல்லாம் இதுவே ஒத்தாக அமைத்துக்கொள்க.

## சூ. 44 : எஞ்சி யோர்க்கும் எஞ்சுத லிலவே (44)

க - து : அகத்திணை மாந்தருள் மேற்கூறிய நற்றாய் முதலானோரை யன்றி எஞ்சிய பாங்கன் முதலானோரும் கூற்று நிகழ்த்தற்குரியார் என்கின்றது.

பொருள் : கிளந்து ஓதப்பெறாமல் எஞ்சிய அகத்திணை மாந்தர்க்கும் கூற்றுக்கள் ஒழிதல்இல. ஏகாரம் - இசைநிறை.

எஞ்சியோராவார் இருவகைக் கோளினுள்ளும் கூற்று நிகழ்த்துதற்குரியராகப் பின்னர் கூறப்பெறுவோருள் ஈண்டு விதந்தோதிய நற்றாய், கண்டோர், தோழி, தலைவன் ஆகியோர் தவிர்ந்த ஏனையோராகிய தலைவி, செவிலி, காமக்கிழத்தியர், பரத்தையர், பாங்கன், பாகன், பாணன், பாடினி, விறலி, இளையர், கூத்தர், பார்ப்பார் அறிவர் அயலோர் ஆயத்தார் ஆகியோர் ஆவர்.

களவியலுள்ளும் கற்பியலுள்ளும் விதந்தோதப் பெறும் கிளவி களல்லாத பிறகூற்றுக்களையும் அவற்றைக் கூறுதற்குரியாரையும் இச்சூத்திரத்தாற் கொள்ளவேண்டுமென்பது தோன்ற "எஞ்சி யோர்க்கும் என்றும் எஞ்சுதலில" என்றும் கூறினார்.

தலைவி கூற்றுப் பற்றியதொரு சூத்திரம் ஏடு எழுதி னோரால் விடப்பட்டுப் போயிருக்கும் என்பார் இளம்பூரணர். களவியலுள்ளும் கற்பியலுள்ளும் வரும் தலைவிக்குரிய கிளவி களன்றித் தலைவிக்குரியவாக வரும் பொதுக்கிளவிகள் அரிய வாகலின் விதந்தோதாமல் இப்பொதுச் சூத்திரத்துள் அடக்கிக் கூறினார் எனலாம்.

எஞ்சியோர் கூற்றாக வருவனவற்றிற்குச்சில எடுத்துக்காட்டுக்கள் வருமாறு :

சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை அலைப்ப
அலந்தனென் வாழி தோழி, கானல்
புதுமலர் தீண்டிய பூநாறு குரூஉச்சுவல்
கடுமான் பரிய கதழ்பரி கடைஇ
நடுநாள் வரூஉம் இயல்தேர்க் கொண்கனொடு
செலவயர்ந் திசினால் யானே
அலர்சுமந் தொழிகவிவ் வழுங்க லூரே (நற் - 149)

இது தலைவி உடன்போக்கிற்கு உடன்பட்டமையைத் தோழி யிடத்துக் கூறியது.

சேட்புலம் முன்னிய அசைநடையந்தணிர்
நும்மொன்று இரந்தனன் மொழிவல் எம்மூர்
யாய்நயந்தெடுத்த ஆய்நலங்கவின
ஆரிடை இறந்தனள் என்மின்
நேரிறை முன்கையென் ஆயத்தோர்க்கே (ஐங் - 384)

இது தலைவி ஆயத்தார்க்கு அறிவிக்குமாறு அந்தணாளரிடம் கூறியது.

கடுங்கட் காளையொடு நெடுந்தேர் ஏறி
கோள்வல் வேங்கைய மலைபிறக் கொழிய
வேறுபல் லருஞ்சுரம் இறந்தனள் அவள் எனக்

கூறுமின் வாழியோ ஆறுசெல் மாக்கள்
நற்றோள் நயந்து பாராட்டி
ஏற்கெடுத் திருந்த அறனில் யாய்க்கே (ஐங் - 385)

இது தலைவி நற்றாய்க்குச் சொல்லிவிட்டது.

அறஞ்சாலியரோ அறஞ்சாலியரோ
வறனுண் டாயினும் அறஞ்சா லியரோ
வாள் வனப்புற்ற அருவிக்
கோள்வல் என்னையைமறைத்த குன்றே (ஐங் - 312)

இது தலைவியின் தமர் துரந்து வந்தவிடத்துத் தலைவன் மறைந்துறைதற்கிடனாகிற குன்றினைத் தலைவி வாழ்த்திக் கூறியது.

அன்னாய் வாழிவேண் டன்னை நம் படப்பைத்
தேன்மயங்கு பாலினும் இனிய அவர் நாட்டு
உவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே (ஐங்-203)

இது உடன்போய் மீண்டுவந்த தலைவி தோழிக்கு தலைவன் நாட்டு உண்ணீரின் இனிமை கூறியது.

" அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே இனியே " (குறு - 149)

என்பது நாணினும் கற்புணர்வு சிறந்து நிற்குமாற்றினைத் தலைவி தோழிக்குக் கூறியது. பிறவும் இவ்வாறு வருவனவற்றை யெல்லாம் இதன்கண் அடக்கிக் கொள்க.

மானுதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி
தான்வரு மென்ப தடமென் றோளி
அஞ்சின ளஞ்சினள் ஒதுங்கி
பஞ்சின் மெல்லடிப் பரல்வடுக் கொளவே (இளம் - மேற்)

இஃது உடன் போகிய தலைமக்கள் மீண்டும் வருகின்றார் என ஆயத்தார் கூறியது.

துறந்ததற் கொண்டு துயரடச் சாஅய்
அறம்புலந்து பழிக்கும் அளைகண் ணாட்டி
எவ்வ நெஞ்சிற் கேம மாக
வந்தனளோ ! நின்மடமகள்
வெந்திறல் வெள்வேல் விடலை முந்துறவே (ஐங் - 393)

இது தலைவி மீண்டு வந்துழி அயலோர் அவள்தாய்க்குக் கூறியது.

அத்தம் நீளிடை அவனொடு போகிய
முத்தேர் வெண்பல் முகிழ்நகை மடவரல்
தாயர் என்னும் பெயரே வல்லாறு
எடுத்தேன் மன்ற யானே
கொடுத்தோர் மன்றஅவள் ஆயத்தோரே (ஐங் - 380)

இது தலைவி உடன்போயவழித் தன்னைத் தெருட்டுவார்க்குச் செவிலி கூறியது.

பாகன் முதலானோர் கூற்றுக்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

இனி உரையாசிரியன்மார் களவிற்கும் கற்பிற்கும் சிறப்பாக உரிய கிளவிகள் பற்றிவரும் கூற்றுக்களையெல்லாம் ஈண்டுக் காட்டுவர் அது நூல் நெறிக்கு ஒவ்வாமையறிக.

சூ. 45: நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவு மாகும் (45)

க - து: நிமித்தங்கள் உரிப்பொருள்கட்கு ஏதுவாதல்போல முன்னிகழ்ந்ததோரு நிகழ்ச்சியும் பிறிதோருரிப்பொருளைக் கருதுதற்கு நிமித்தமாதலும் உண்டு என்கின்றது.

**பொருள்:** இருவகைக் கைகோளினும் தலைமக்கள்பால் நிகழ்ந்த நிகழ்ச்சி இனி இது நிகழக்கூடும் எனப்பிறிதொன்றனை நினைத்தற்குக் காரணமாதலும் உண்டு.

அந்நினைவு பெரும்பான்மை பாலைக்குரிய உரிப்பொருளாகிய பிரிவச்சம் பற்றியதாக அமையும் என்பது அதிகாரத்தான் உணரப்படும்.

காதலர்பால் நிகழும் பல்வேறு நிகழ்ச்சிகளுள் சிலவே எதிர் விளைவு பற்றி எண்ணுதற்குரியவாக இருக்குமாதலின் உம்மை எதிர்மறை பற்றி நின்றது.

எ - டு: நுண்ணெழில் மாமைச் சுணங்கணியாகந்தங்
கண்ணொடு தொடுத்தென நோக்கியும் அமையார் என்
ஒண்ணுதல் நீவுவர் காதலர் மற்றவர்
எண்ணுதல் எவன்கொல் அறியேன் என்னும் (கலி. 4)

இதன்கண் தலைவன் நிகழ்த்திய தண்ணளியை அவன் காதன்மையாகக் கருதாமல் பின்னர் அவன் பிரியுங்கொல் எனத்தலைவி நினைந்து அதனைப் பிரிதல் நிமித்தமாக எண்ணுதலைக் கண்டுகொள்க.

இரண்டறி கள்வி நம் காத லோளே
முரண்கொள் துப்பின் செவ்வேல் மலையன்
முள்ளூர்க் கானம் நாற வந்து
நள்ளென் கங்குல் நம்மோரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே (குறு-312)

இதன்கண் தலைவி அமரா முகத்தளாகிய செயலை அவள் நாணுடைமையாகக் கருதாமல் வரைதற்குறிப்புணர்த்தினாளாக நினைந்து அதனை குறிஞ்சிக்குரிய நிமித்தமாகத் தலைவன் எண்ணுதலைக் கண்டுகொள்க.

இங்ஙனம் இருவகைக் கைகோளினும் முன் நிகழ்ந்தது ஒன்றைப் பிறிதொன்றற்கு ஏதுவாக நினைப்பதையெல்லாம் இதன்கண் அடக்கிக்கொள்க

## சூ. 46 : நிகழ்ந்தது கூறி நிலையலும் திணையே (46)

க - து : அகப்பொருட் செய்யுளிடத்துத் திணைகாணுதற்கண் எழுவதோ ரைய மகற்றுகின்றது.

**பொருள் :** நிகழ்ந்த ஒழுகலாறும் நிகழும் ஒழுகலாறும் உரிப்பொருளாக அமைந்து திணையாதலேயன்றி முன்னர் நிகழ்ந்ததொரு ஒழுகலாற்றினை நினைந்து அதனை எடுத்துக் கூறி நிற்றலும் திணையாக அமையும்

என்றது, அகப்பொருள் மாந்தரின் ஒழுகலாற்றினை ஒருவர் எடுத்துக்கூறியவழி அவ்வொழுகலாறு பற்றித் திணை கூறப்படும். அவ்வாறே முன்னர்த் தம்பால் நிகழ்ந்ததொரு நிகழ்ச்சியைப் பின்னர் அகத்திணை மாந்தர் தாமே கூறி நிற்குமிடத்து எடுத்துக் கூறப்பட்ட ஒழுகலாறு எதுவோ அதுவும் அச்செய்யுளின் திணையாக அமையும் என்றவாறு

எ - டு : அணங்குடை நெடுவரை உச்சியின் இழிதரும்
கணங்கொள் அருவிக் கான்கெழு நாடன்
மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்

இதுவென அறியா மறுவரற் பொழுதில்
படியோர்த் தேய்த்த பல்புகழ்த் தடக்கை
நெடுவேட் பேணத் தணிகுவள் இவள்என
முதுவாய்ப் பெண்டிர் அதுவாய்க் கூற
களம்நன் கிழைத்துக் கண்ணி சூட்டி
வளநகர் சிலம்பப் பாடிப்பலி கொடுத்து
உருவச் செந்தினை குருதியொடு தூஉய்
முருகாற்றுப் படுத்த உருகெழு நடுநாள்
ஆரம் நாற அருவிடர்த் ததைந்த
சாரற் பல்பூ வண்டுபடச் சூடிக்
களிற்றிரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்
ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல
நன்மனை நெடுநகர் காவலர் அறியாமை
தன்னசை உள்ளத்து நந்நசை வாய்ப்ப
இன்னுயிர் குழைய முயங்குதொறும் மெய்ம்மலிந்து
நக்கனென் அல்லனோ யானே எய்த்த
நோய்தணி காதலர் வரவீண்டு
ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே (அகம்-22)

இச்செய்யுள் தலைவன் வரைவிடைப் பிரிந்த காலத்துத் தோழி அவனை இயற்பழித் துரைத்தவழித் தலைவி இயற்பட மொழிந்தது. தலைவன் இப்பொழுது பிரிந்துள்ளமை பற்றி இச் செய்யுள் பாலைத்திணையாகாமல் தலைவி முன்னிகழ்ந்ததனை எடுத்துக்கூற, அந்நிகழ்ச்சியே பற்றி குறிஞ்சித்திணையாயவாறு கண்டுகொள்க.

அளிநிலை பொறாஅ தமரிய முகத்தள் (அகம்-5) என்னும் அகப்பாட்டுள் தலைவன்,

"மணியுரு விழந்த அணியழி தோற்றம்
கண்டே கடிந்தனம் செலவே ஒண்டொடி
உழைய மாகவும் இனைவோள்
பிழையலள் மாதோ பிரிதும் நாம் எனினே"

எனத் தான் செலவழுங்கியதாகக் கூறிப் பிரியாதுளனாயினும்

"பரல்முரம்பாகிய பயமில்கானம்
இறப்ப எண்ணுதிர் ஆயின் அறத்தாறு
அன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி
அன்னவாக எண்ணுநள் போல
முன்னங் காட்டி முகத்தின் உரையா

ஓவச் செய்தியின் ஒன்று நினைந்தொற்றி
பாவை மாய்ந்த பனிநீர் நோக்கமொடு
ஆகத்தொடுக்கிய புதல்வன் புன்றலைத்
தூநீர்பயந்த துணையமை பிணையல்
மோயினள் உயிர்த்தாள் ”

எனத் தலைவி பிரிவுத் துன்ப முற்றமையை எடுத்துக் கூறிய வதனான் அந்நிகழ்ச்சி பற்றி இது பாலைத் திணையாயினவாறு காண்க.

மேற்கூறிய சூத்திரம் நிகழ்ந்தது நினைத்தல் பிறிதோருரிப் பொருளைக் கருதுதற்கு ஏதுவாகும் என்றது. இச்சூத்திரம் முன்பு நிகழ்ந்ததொரு நிகழ்ச்சியை எடுத்துக்கூறின் அதுவே உரிப்பொருளாய்த் திணை உணர நிற்கும் என்பது.

இவ் இரண்டு சூத்திரங்களானும் அகத்திணை மாந்தர்தம் நினைவுகளும் திணையுணர்த்தி நிற்குமென உரிப்பொருள் பற்றியதோர் விளக்கம் உணர்த்தப்பட்டது.

**சூ. 47 : மரபுநிலை திரியா மாட்சிய வாகி**
**விரவும் பொருளும் விரவு மென்ப (47)**

**க - து :** உரிப்பொருள் நிமித்தங்கட்காவதொரு புறனடை கூறுகின்றது.

**பொருள் :** அகத்திணைக்குரிய மரபிலக்கணத்திற்றிரியாமல் அதற்கு மாண்பு தருவனவாய் உரிப்பொருள் நிமித்தமாக விரவி வரும் பொருள்களும் அகத்திணை மாந்தர் தம் கூற்றினுள் விரவி வரும் எனக் கூறுவர் புலவர்.

மரபுபற்றிவருவனவாவன : பிரிந்து சென்ற தலைமகன் மீண்டு வந்தமையைத் தோழி கூறலும், தலைவனது வரவு கூறிய அயலாரைத் தோழி வாழ்த்தலும், அயலிலாட்டியை வாழ்த்தலும், மீண்டுவந்த தலைவன் தலைவியைக் கூடி உறைதலைக் கண்டோர் கூறிஉவத்தலும், பாசறைக்கண் தலைவன் தூதுகண்டு கூறுதலும், தூது சொல்லி விடுத்தலும், தலைவி மடனழிந்து கூறலும், தலைவியின் இல்லற மாண்பினைச் செவிலி பாராட்டலும் தலைவனது காதற்சிறப்பைச் செவிலிநற்றாய்க்குக்கூறலும், பரத்தை தலைவிக்குப் பாங்காயினார் கேட்ப உரைத்தலும் பிறவும் எடுத்தோதாதன வாய்ச் சான்றோர் செய்யுட்கண் வருவனவற்றையெல்லாம் இதுவே ஓத்ததாக அடக்கிக் கொள்க.

எ - டு : குரவம் மலர மரவம் பூப்பச்
சுரநனி கொண்ட கானங் காணூஉ
அழுங்குக செய்பொருட் செலவென விரும்பிநின்
அம்கலிழ் மாமை கவின
வந்தனர் தோழிநம் காதலோரே (ஐங் - 357)

இது தலைவன் கடிதின் மீண்டு வந்தானெனத் தோழி தலைவிக்குக் கூறியது.

மன்னிய நோயொடு மருள்கொண்ட மனத்தவன்
பன்மலை யிறந்தவன் படிந்துவந் தடிசேரத்
தென்னவற் றெளித்த தேஎம் போல
இன்னகை எய்தினள் இழந்ததன் நகையே (கலி-143)

இது தலைவன் வந்து கூடினமையைக் கண்டோர் உவந்து கூறியது.

நீடினம் என்று கொடுமை தூற்றி
வாடிய நுதலள் ஆகிப் பிறிதுநினைந்து
யாம்வெங் காதலி நோய்மிகச் சாஅய்
சொல்லிய துரைமதி நீயே
முல்லை நல்யாழ்ப் பாணமற் றெமக்கே (ஐங்-478)

இது தூதுவந்த பாணனிடம் தலைவன் கூறியது.

பிரசங் கலந்த வெண்சுவைத் தீம்பால்
விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை யேந்திப்
புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்
உண்ணென் றோக்குபு பிழைப்பத் தெண்ணீர்
முத்தரிப் பொற்சிலம்பு ஒலிப்பத் தத்துற்று
அரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர்
பரிமெலிந் தொழியப் பந்த ரோடி
ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி
அறிவும் ஒழுக்கமும் யாண்டுணர்ந்தனள் கொல்
கொண்ட கொழுநன் குடிவற னுற்றெனக்
கொடுத்த தந்தை கொழுஞ்சோ றுள்ளாள்
ஒழுகுநீர் நுணங்கறல் போலப்
பொழுதுமறுத் துண்ணும் சிறுமதுகையளே (நற்-110)

இது தலைவியின் இல்லற மாண்பினைச் செவிலி நற்றாய்க்குக் கூறியது.

கணைக்கோட்டுவாளை கமஞ்சூல் மடநாகு
துணர்த்தேக் கொக்கின் தீம்பழங் கதூஉம்

தொன்று முதிர் வேளிர் குன்றூர்க் குணாது
தண்பெரும் பௌவம் அணங்குக தோழி
மனையோள் மடமையின் புலக்கும்
அனையேம் மகிழ்நர்க்குயாம் ஆயினமெனினே (குறு-164)

இது பரத்தைத் தலைவிக்குப் பாங்காயினார் கேட்பக் கூறியது. பிறவும் சான்றோர் செய்யுட்கண் கண்டுகொள்க.

சூ. 48 : உள்ளுறை யுவமம் ஏனை யுவமமெனத்
தள்ளா தாகும் திணையுணர் வகையே. (48)

க - து : இருவகை உவமமும் திணையுணர்தற்குக் கருவியாம் என்கின்றது.

பொருள் : உள்ளுறை உவமமும் அஃதல்லாத ஏனை உவமமும் ஆகிய இரண்டும் திணையுணரும் முறைமை தப்பாமல் கருவியாகி வரும் உவம வகைகளாம்.

'என' என்பது 'கண்ணிமைநொடியென' என்புழிப்போல எண்ணின்கண் வந்தது. 'தள்ளாது' என்பது எதிர்மறை வினையெச்சம். ஆகும் என்றது கருவியாகும் என்றவாறு.

அகத்திணையை உணர்தற்குச் சிறந்தது உள்ளுறை உவமமாதலின் அது முற்கூறப்பட்டது. அதனை நோக்க வெளிப்படையுவமம் ஏனையுவமமாயிற்று.

உவமம் திணையுணர்தற்குக் கருவியாகும் இயைபுபற்றி அவற்றின் பொதுவியல்புகளை இவ்வியலுள் கூறினார். பிறசிறப் பிலக்கணங்களை உவமவியலுள் கூறுவார். பிறவாறுவரும் உள்ளுறைகளைப் பொருளியலுட் கூறுவார்.

உரையாசிரியன்மார் என என்னும் இடைச்சொல்லை எனவென் எச்சமாகவும், உவமச்சொல்லாகவும் கொண்டு இந்நூல் நெறிக்கியையா விளக்கம் கூறிச்சென்றனர்.

சூ. 49 : உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலனெனக்
கொள்ளும் என்ப குறியறிந் தோரே (49)

க - து : உள்ளுறை உவமத்திற்கு அடிப்படையாகும் பொருள் ஆமாறு கூறுகின்றது.

பொருள் : உள்ளுறையுவமம் கருப்பொருளுள் தெய்வத்தை தவிர்த்த பிறபொருளை இடமாகக் கொண்டு வருமெனக் கூறுவர் இலக்கண நெறியினை அறிந்தோர்.

எனவே உள்ளுறையுவமம் கருப்பொருளை அடிப்படையாகக் கொண்டு வருமென்பதும் ஏனையுவமம் முதல்கரு உரிப்பொருள் மூன்றையும் அடிப்படையாகக் கொண்டு வருமென்பதும் புல்னாகும். 'உள்ளுறை' என்பது

> உட்னுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்
> கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே (பொரு-46)

என்பதனான் ஐவகைப்படுமென்பதும் அவற்றுள் ஒருவகையே இஃதென்பதும் அறியப்படும்.

அகத்திணை மாந்தரது காமங்கண்ணிய ஒழுகலாற்றினைக் கருப்பொருளுள் தெய்வம் ஒழிந்த ஏனைய பொருள்களின் பண்பும் செயலுமாகக் கூறப்பெறும் சொற்களுள் மறைத்து வைத்துக் குறிப்பாற் புலப்படச் செய்வது உள்ளுறை உவமமாம். அங்ஙனம் மறைத்துக் கூறப்படும் கருப்பொருள் உயர்திணை யாகிய மக்களாயின் உள்ளுறுத்துக் கூறப்பெறும் பண்பும் செய்லும் எடுத்துக்காட்டாக நின்று ஏனையுவமத்தின் பாற்படுவ தல்லது உள்ளுறையாக மறைந்து நிற்றற்காகாமையான் அஃறிணைப்பொருள்களே உள்ளுறை உவமத்திற்கு நில் மாயின என்க.

அஃறிணைப்பொருள்களுள் நிலமும் பொழுதுமல்லாதன வெல்லாம் கருப்பொருளாக வகுக்கப் பெற்றமையான் தெய்வமும் கருப்பொருளாக அமைவதாயிற்று. தத்துவங்களின் உருவகமாக அமைத்துக் கொண்ட தெய்வங்கள் இருவகைத் திணைகளுள் அடங்காமையான் அவற்றை "உயர்திணைமருங் கின் பால்பிரிந்திசைக்கும்" என ஆசிரியர் உயர்திணைக்கண் சார்த்திக் கூறினார். அம்முறைமையான் தெய்வத்திகு மக்களின் ஒழுகலாறுகளை ஏற்றிக் கூறலின் தெய்வமும் உள்ளுறை கோடற்கு நிலமாகாதாயிற்று.

தெய்வம் சுட்டிய பெயர்கள் உயர்திணை மருங்கின் பால் பிரிந்திசையாவழி அஃறிணையாய் அஃறிணை முடிபே கொள்ளும் என்பதைக் "காலம் உலகம்" என்னும் சூத்திரத்தாற் கூறினாராகலின் அவ்வழி அவை அஃறிணைப் பொருளாய்க் கருப்பொருளுள் அடங்கும். அடங்கி உள்ளுறை கூறற்கு நில மாக அமையும், மற்றும் முதற்பொருளுள் நிலப் பகுதிகள் முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை என ஒழுக்கம் பற்றிய குறியீடு களையும் பெற்று நிற்றலானும், காலம் என்பது கணித்துக் கொள்வதன்றிச் சுட்டிக் காட்டப்படுவதொரு பொருளன்மை யானும் அவை விலக்கப்பட்டன.

நிலப்பகுதிகளை முல்லை முதலாய குறியீடுகளாற் கூறாமல், காடு, மலை, வயல் கடல் எனவும் ஊர், நாடு தேயம் எனவும் பொருளாகக் கூறுமிடத்தும் மக்களைக் கருப்பொருளாகக் கருதிக் கூறுமிடத்தும் அவை உள்ளுறை உவமம் கூறற்கு நிலனாக அமையும்.

இங்ஙனம் அறிவியல் நுட்பமமையத் தமிழ் நூலார் வகுத்தோதிய இலக்கண மாண்பினை ஓராமல் ஞாயிறு திங்கள் என்றாற்போல வருவனவற்றைத் தெய்வப்பகுதியாகக் கொண்டு மயங்குவார் சிலர். அவைபற்றி நல்லிசைப்புலவோர் அமைத்துக் கூறிய உள்ளுறையுவமங்களை யெல்லாம் இறைச்சியிற் பிறக்கும் பொருளாகத் திரியக் கூறுவர் சிலர்.

**சூ. 50 : உள்ளுறுத் திதனொடு ஒத்துப்பொருள் முடிகென**
**உள்ளுறுத் துரைப்பதே உள்ளுறை யுவமம் (50)**

**க - து :** உள்ளுறை உவமத்தின் ஒருசாரிலக்கணமாமாறு கூறுகின்றது.

'உள்ளுறை' என்பது வேற்றுமைத் தொகைப் பொருள்பட ஒருமொழிப் புணர்ச்சிபோல அமைந்ததோ ரிலக்கணக் குறியீடாகும்.

**பொருள் :** உள்ளுறை யுவமமாவது தான் புலப்படுத்தக் கருதிய பொருளை (உவமேயத்தை) உவமமாகக் குறித்துக் கூறப் பட்டபொருளொடு ஒத்து முடிவதாகுக என உவமிக்கும் பொருளின்கண் அடக்கி உரைப்பதாகும்.

உள்ளுறை உவமம், உள்ளுறுத்த பொருள் இதனொடு ஒத்து முடிக என உள்ளுறுத்துரைப்பது. எனக்கூட்டிப் பொருள் கொள்க. [இறுவதை எனப்பாடங்கொள்வார் நச்சினார்க் கினியர்]

உள்ளுறுத்த இதனொடு எனவும், முடிக என எனவும் நின்ற அகரம் விகாரத்தாற் றொக்கன. 'உள்ளுறுத்து' எனப் பாடங் கொள்ளின் அது மிகைப்படக் கூறலாய் விடும் என்க.

உவமேயமாய பொருளைத் தன்னுள் அடக்கி நிற்றலின் "உள்ளுறை" உவமமெனப்பட்டது. கூறுவோன் தான் கருதிய பொருள் விரிந்தவிடத்து அஃது ஏனையுவம் போல விளங்கி நிற்றலின் அவ்வுள்ளுறையைத் தரும் சொற்றொடரை உவமப் போலி என வழங்குவர். பிற விளக்கங்களை உவமவியலுரையுட் கண்டு கொள்க. உள்ளுறை உவமத்திற்கு எடுத்துக்காட்டு :

கழுநீர் மேய்ந்த கருந்தா ளெருமை
பழனத் தாமரை பனிமலர் முனைஇத்
தண்டு சேர் மள்ளரின் இயலி யயலது
குன்று சேர் வெண்மணற் றுஞ்சும் ஊர !
வெய்யை போல முயங்குதி முனையெழத்
தெவ்வர்த் தேய்த்த செவ்வேல் வயவன்
மலிபுனல் வாயில் இருப்பை யன்னவென்
ஒலிபல் கூந்தல் நலம் பெறப் புனைந்த
முகையவிழ் கோதை வாட்டிய
பகைவன் மன்யான் மறந்தமைகலனே (நற்-290)

இஃது ஊடலுணர்ந்ததலைவி தலைவன் கூடுதலுறுதற்கண் அவனது பரத்தைமையைக்குறிப்பாற் சுட்டிக்கூறும் மருதத் திணைச் செய்யுளாகும்.

இதன்கண் கழுநீர் ......... ஊர ! என ஊரைச் சிறப்பித்து வந்துள்ள வருணனை உள்ளுறை பொருளைத்தரும் வினை யுவமப் போலியாக அமைந்ததாகும்.

அஃதாவது தாமரை மலரை வெறுத்துக் கழுநீர் மலரை மேய்ந்த எருமை வீரரைப் போலச் செருக்கி நடந்து சென்று பழனத்தின் அயலே குவிந்துள்ள வெள்ளிய மணற்குன்றில் துயிலும். என்றது குலமகளாகிய தலைவி நலனை வெறுத்துக் காதற்பரத்தையின் நலனையுண்டு அவளிடத்துந் தங்காமல் சேரிப்பரத்தைமனையின்கண் தங்குதலைச் செய்தவன் நீ என்னும் குறிப்பினையுடையதாகும். இதன்கண் தாமரை தலைவி யாகவும் எருமை தலைவனாகவும் கழுநீர் காதற்பரத்தையாகவும் வெண்மணல் சேரிப்பரத்தையாகவும் உணர்த்தக் கருதித் தலைவி இங்ஙனம் வருணித்த அவ்வருணனைக் கண் தலைவி உள்ளுறுத்த பொருள் ஒத்து உவமும் பொருளுமாக முடிந் துள்ளமை கண்டு கொள்க. பிறவிளக்கங்கள் உவமவியலுள் பெறப்படும்.

இச்செய்யுளுள் உள்ளுறையுவமம் மருதத்திணையையும் அதற்குரிய ஊடலாகிய உரிப்பொருளையும் உணர்த்தி நிற்பதையறிந்து கொள்க.

சூ. 51 : ஏனை யுவமம் தானுணர் வகைத்தே (51)

க - து : வெளிப்படையுவமத்தின் இயல்பாமாறு கூறுகின்றது.

**பொருள் :** உள்ளுறையல்லாத ஏனையுவமம் உய்த்துணர வேண்டாது இதுபொருள் இஃதுவமம் என வேறு வேறு உணர நிற்கும் முறைமையுடையதாகும்.

ஏ - டு : யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி யறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே (குறு-40)

இதன்கண் செம்புலப் பெயல்நீர்போல என்னும் வினைபற்றி வந்த ஏனை யுவமம் நெஞ்சக் கலப்பினை உணர்த்திக் களவின் கண் மெய்யுறுபுணர்ச்சியாய உரிப்பொருளை விளக்கித் திணை யுணர நிற்குமாற்றினையறிக.

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்

இதன்கண் பயன்பற்றி வந்த ஏனையுவமம் கற்பின்கண் கூடு தலுறுதலாகிய குறிஞ்சிக்குரிய உரிப்பொருளை விளக்கித் திணையுணர நிற்கு மாறறிக. பிறவும் அன்ன.

இனிக் களவினும் கற்பினும் அகனைந்திணையின் பாங்காக நிகழும் கைக்கிளை, பெருந்திணைகளின் இலக்கணம் கூறுவார்.

**சூ. 52 : காமஞ் சாலா இளமை யோள்வயின்**
**ஏமஞ் சாலா இடும்பை எய்தி**
**நன்மையும் தீமையும் என்றிரு திறத்தான்**
**தன்னொடும் அவளொடுந் தருக்கிய புணர்த்துச்**
**சொல்லெதிர் பெறுஅன் சொல்லி யின்புறல்**
**புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே. (52)**

க - து : அக ஒழுக்கத்தைக் கைக்கிளை முதலாப் பெருந்திணையிறுவாயக ஏழுதிணைகளாக வகுத்து அவற்றை உணரப் ''பாடலுட் பயின்றவை நாடுங்காலை முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே நுவலுங்காலை முறை சிறந்தனவே'' எனக் கூறிய ஆசிரியர் பின்னர் அம்மூன்றையும் நடுவணைந்திணைக்கு ஏற்பித்து ஓதிக் கைக்கிளையும் பெருந்திணையும் அகனைந்திணையுள் அடங்கி அவற்றைச் சார்ந்தும் அவற்றின் பாங்காகியும் நிகழும் என்பதை உய்த்துணர வைத்துள்ளமையான் ஐந்திணை ஒழுகலாற்றின்கண் கைக்கிளைப்பகுதி இது பெருந்திணைப் பகுதி இது வெனத் தெற்றென உணர்ந்து கொள்ளுமுகத்தான் அவற்றிற்குரிய பொருட் குறிப்புக்களை விதந்தோதத் தொடங்கி இச்சூத்திரத்தான் கைக்கிளைத் திணையை உணர்தற்குரிய பொருட்குறிப்பாமாறு கூறுகின்றார்.

பொருள் : காமுற்றான் ஒருவனது வேட்கை கடை போதற்கமையாத இளமைத் தன்மையாளிடத்தே, தன்னாற் காத்துக் கொள்ளுதற்கமையாத காதல் துயர் எய்தி அவளைக் கூடுதலுறும் வழி எய்தும் நன்மையும் கூடுதலுறாத வழி எய்தும் தீமையும் என்று சொல்லப்படும் இருதிறத்தான் தன் நிலைமை யொடும் அவள் நிலைமையொடும் பொருந்தும் முனைப்புடைய சொற்களைக் கூட்டிச் சொல்லி, அங்ஙனம் தான் சொல்லிய வற்றிற்கு எதிர் மாற்றம் பெறானாய்ப் பின்னும் அவ்வாறே சொல்லித் தானே இன்புறுதலைப் பொருளாகப் பொருந்தித் தோன்றுதல் கைக்கிளைக்குரிய குறிப்புக்களாம்.

முதல் கரு உரிப்பொருள் என்பவை முல்லை முதலாய திணைகளை உணர்தற்குப் பொருளாமாறு போல இது கைக் கிளைத்திணையை உணர்தற்குப் பொருளாம் என்க.

காமஞ்சாலா இளமையோள் என்றதனானும், சொல்லெதிர் பெறான் சொல்லி யின்புறல் என்றதனானும் இப்பொருட் குறிப்புப் புணர்தல் முதலாய உரிப்பொருளைச் சார்ந்து அவற்றின் மருங்காகி நிகழும் என்பது புலனாகும்.

இது புல்லித் தோன்றும் குறிப்பென்றதனான் பிறவாறு வருதல் அகத்திணையின் முரணி வரும் என்க. அவை வருமாறு "முன்னைய நான்கும் முன்னதற்கென்ப" என்னும் சூத்திரத்தாற் பெறப்படும்.

'காமஞ்சாலா இளமையோள்' என மகடூஉவை வரைந்து கூறலான் கைக்கிளையாகிய ஒழுகலாறு தலை வன் கண்ணன்றித் தலைவி கண் நிகழாதென்பது பெறப்படும். நிகழாமை புலனெறி வழக்கென அறிக.

உ - டு : ஊர்க்கால் நிவந்த பொதும்பருள் நீர்க்கால்
கொழுநிழல் ஞாழல் முதிர் இணர்கொண்டு
கழும முடித்த கண்கூடு கூழை
சுவல்மிசைத் தாதொடு தாழ அகல்மதி
தீங்கதிர் விட்டது போல முகனமர்ந்து
ஈங்கே வருவாள் இவள்யார்கொல்; ஆங்கோஒர்
வல்லவன் தைஇய பாவைகொல் நல்லார்
உறுப்பெல்லாம்கொண்டியற்றியாள்கொல்வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங்கொல் ஆண்டார்
கடிது இவளைக் காவார் விடுதல் கொடியியல்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்தாள் ஈங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள்

இவளைச் சொல்வாடிக் காண்பேன் தகைத்து

நல்லாய்கேள்,

ஆய்தூவி அனமென அணிமயிற் பெடையெனத்
தூதுணம் புறவெனத் துதைந்தநின் எழில்நலம்
மாதர் கொள் மானோக்கின் மடநல்லாய் நிற்கண்டார்ப்
பேதுறூஉம் என்பதை அறிதியோ அறியாயோ ?

நுணங்கமைத் திரள்என நுண்ணிழை அணையென
முழங்குநீர்ப் புணையென அமைந்தநின் தடமென்றோள்
வணங்கிறை வாலெயிற்று அம் நல்லாய் நிற்கண்டார்க்கு
அணங்காகும் என்பதை அறிதியோ அறியாயோ ?

முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையெனப்
பெயல்துளி முகிழ் எனப்பெருத்தநின் இளமுலை
மயிர் வார்ந்த வரி முன்கை மடநல்லாய் நிற்கண்டார்
உயிர் வாங்கும் என்பதை உணர்தியோ உணராயோ

எனவாங்கு

பேதுற்றாய் போலப் பிறர் எவ்வம் நீயறியாய்
யாதொன்றும் வாய்வாளாது இறந்தீவாய்கேளினி
நீயும் தவறிலை நின்னைப் புறங்கடைப்
போதரவிட்ட நுமருந் தவறிலர்
நிறையழி கொல்யானை நீர்க்கு விட்டாஅங்கு
பறையறைந் தல்லது செல்லற்க என்னா
இறையே தவறுடையான் (கலி-56)

இதன்கண் கழும முடித்த கண்கூடுகூழை சுவன் மிசைத் தாதொடுதாழ ” என்றதனானும், முதிர்கோங்கின் முகையென முகஞ்செய்த குரும்பையெனப் பெயல்துளி முகிழ் எனப் பெருத்த நின் இளமுலை என்றதனானும் தலைவி காமஞ்சாலா இளமை யோள் என்பதும்

மயிர் வார்ந்த வரிமுன்கை மடநல்லாய்நிற் கண்டார்
உயிர் வாங்கும்என்பதை உணர்தியோ உணராயோ ?

என்றதனான் தலைவன் ஏமஞ்சாலா இடும்பை எய்தினான் என்பதும்

பேதுற்றாய்போலப் பிறரெவ்வம் நீயறியாய்
யாதொன்றும் வாய்வாளா திறந்தீவாய், கேளினி !

என்றதனான் தலைவன் தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துங் சொல்லெதிர்பெருன் சொல்லியின்புற்ருன் என்பதும் விளங்குமாறு கண்டுகொள்க.

**சூ. 53 : ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்**
**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**
**மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்**
**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே (53)**

**க - து :** பெருந்திணையை அறிதற்குரிய பொருட் குறிப்பாமாறு கூறுகின்றது.

**பொருள் :** மடலூர்வென் எனக்கூறு மளவில் நில்லாமல் மடலேறியநிலையும் இளமைச்செல்வி நீங்கி முதிர்ந்த நிலையும் தலைவன் பெருமையும் உரனுமாகிய குணங்களையும் தலைவி அச்சமும் மடனும் நாணுமாகிய குணங்களையும் கருதுதலை நீங்கிய வேட்கைமிக்க நிலையும், வேட்கை மிகுதியானே வலிதிற் பற்றி நுகரக் கருதும் நிலையொடு கூட்டிச் சொல்லப்பெறும் நான்கு பொருளும் பெருந்திணையை உணர்தற்குரிய குறிப்புக் களாகும்.

தீர்திறம் வினைத்தொகைமொழி. காமம் = வேட்கைமிகுதி. மிடல் = வலிமை, ஈண்டஃது வலிதிற்பற்றி நுகர முயலும் நிலையை உணர்த்தி நின்றது.

இப்பொருட் குறிப்புக்கள் திரிபில்லாத வழியே பெருந் திணைக்குரியவாகும் என்பதைவலியுறுத்தச் செப்பிய நான்கும் என்றார். இவை திரிபுற்றவழிக் கைக்கிளைக்குரியவாகும் என்பது மேல்வரும் சூத்திரத்தாற் பெறப்படும்.

இந்நான்கு குறிப்புக்களையும் பொதுப்படக் கூறியமையான் இருபாற்கும் ஏற்குமெனினும் மடற்றிறம் மகளிர்க்கு விலக்கப் பட்டமையான் அஃதொழிய ஏனையவை இருபாற்கும் ஒக்கும் எனக் கொள்க.

எ - டு : சான்றவிர் வாழியோ சான்றவிர் என்றும்
பிறர் நோயும் தன் நோய்போல் போற்றி அறனறிதல்
சான்றவர்க்கெல்லாம் கடனானால் இவ்விருந்த
சான்றீர் உமக்கொன் றறிவுறுப்பேன், மான்ற
துளியிடை மின்னுப்போல் தோன்றி ஒருத்தி
ஒளியோ டுருவென்னைக் காட்டி அளியள் என்
நெஞ்சாறு கொண்டாள் அதற் கொண்டும் துஞ்சேன்
அணியலங் காவிரைப் பூவோடு எருக்கின்
பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப
ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து என் எவ்வநோய்
தாங்குதல் தேற்றா இடும்பைக் குயிர்ப்பாக்

வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது
பாடுவேன் பாய்மா நிறுத்து.

யாமத்தும் எல்லையும் எவ்வத்திரையலைப்ப
மாமேலேன் என்று மடல்புணையா நீந்துவேன்
தேமொழி மாதர் உறாஅ துறீஇய
காமக் கடலகப் பட்டு

உய்யா அருநோய்க் குயலாகும் மையல்
உறீஇயாள் ஈத்தவிம்மா

காணுநர் எள்ளக் கலங்கித் தலைவந்துஎன்
ஆணெழில் முற்றி உடைத்துள் அழித்தரும்
மாணிழை மாதராள் ஏஎர் எனக் காமனது
ஆணையால் வந்த படை

காமக் கடும்பகையின் தோன்றினேற் கேமம்
எழினுதல் ஈத்தவிம் மா.

அகையெரி யானாதென் ஆருயிர் எஞ்சும்
வகையினால் உள்ளம் சுடுதரும் மன்னோ
முகையே ரிலங்கெயிற் றின்னகைமாதர்
தகையால் தலைக் கொண்ட நெஞ்சு

அழல்மன்ற காம அருநோய் நிழல்மன்ற
நேரிழை ஈத்தவிம் மா

ஆங்கதை :

அறிந்தனி ராயின் சான்றவிர் தான்தவம்
ஒரீஇத் துறக்கத்தின் வழீஇ ஆன்றோர்
உள்ளிடப்பட்ட அரசனைப் பெயர்த்து அவர்
உயர்நிலை உலகம் உறீஇ யாங்குஎன்
துயர்நிலை தீர்த்தல் நும்தலைக் கடனே (கலி - 139)

இஃது ஏறிய மடற்றிறம்.

"திருந்திழாய் கேளாய்" என்னும் குறிஞ்சி கலியுள் (29)

தீரத்தறைத்த தலையுந்தன் கம்பலும்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்து நம்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
தோழி நீ போற்றுதி என்றி, அவனாங்கே
பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி
யாரிவண் நின்றீர் எனக்கூறிப் பையென

வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையால், தம்பலந்தின்றியோ என்றுதன்
பக்கழித்துக் கொண்டீ எனத்தரலும்''

எனவரும், முதிர்பார்ப்பான் கூற்று இளமை தீர்திறமாம்.

''என் நோற்றனை கொல்லோ'' என்னும் மருதக்கலியுள் (29)
கொக்குரித்தன்ன கொடுமடாய் நின்னையான்
புக்ககலம் புல்லின் நெஞ்சூன்றும் புறம்புல்லின்
அக்குளுத்துப் புல்லலு மாற்றேன் அருளீமோ
பக்கத்துப் புல்லச் சிறிது'' என்பது மது.

''புரிவுண்ட புணர்ச்சியுள் புல்லாரா மாத்திரை''
என்னும் நெய்தற் கலியுள் (25)

ஓஒ அழிதகப் பாராதே அல்லல் குறுகினம்
காண்பாம் கனங்குழை பண்பு

என்று,

எல்லீரும் என் செய்தீர் என்னை நகுதிரோ
நல்ல நகாலிர் மற்கொலோ யானுற்ற
அல்லல் உறீஇயான் மாய மலர்மார்பு
புல்லிப் புணரப் பெறின்'' எனவும்

மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்
......... எனப்பாடி, இனைந்து நொந்தழுதனள்''

எனவும் வருவன, தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறமாம்.

ஏஎ இஃதொத்தன் நாணிலன் தன்னொடு
மேவேம் என்பாரையும் மேவினன் கைப்பற்றும்
மேவினும் மேவாக் கடையும் அஃதெல்லாம்
நீயறிதி யானஃறிதகல்லேன், பூமன்ற
மெல்லிணர் செல்லாக் கொடியன்னாய் நின்னையான்
புல்லினிதாகலின் புல்லினென், எல்லா
தமக்கினிதென்று வலிதின் பிறர்க்கின்னா
செய்வது நன்றாமோ மற்று ?
சுடர்த்தொடீ,
போற்றாய்களைநின் முதுக் குறைமை போற்றிக்கேள்
வேட்டார்க் கினிதாயின் அல்லது நீர்க்கினிதென்று
உண்பவோ நீர்உண்பவர் (கலி-62)

என்பது மிக்க காமத்துமிடல்' பிறவும் பெருந்திணைப் பகுதியாகச் சான்றோர் கூறுவன வற்றைக் கலித்தொகையுள்ளும் பிற தொகையுள்ளும் கண்டுகொள்க.

கைக்கிளையும் பெருந்திணையும் முற்றமுற்ற அகத்திணை ஒழுக்கங்களே என்பதை ஓராத இடைக்காலத்து நூல்களும் அவர் கொள்கையினைச் சார்ந்துரைத்த உரையாசிரியன்மார் உரைகளும் தொல்காப்பிய நெறிக்கும் தமிழ் மரபிற்கும் ஏலாதனவாகும்.

**சூ. 54 : முன்னைய நான்கும் முன்னதற் கென்ப (54)**

**க — து :** இது கைக்கிளைத் திணைக்காவதோர் ஒழிபு கூறுகின்றது.

**பொருள் :** ஏறிய மடற்றிறம் முதலாக மேற்கூறப்பெற்ற பொருள்களின் முற்பட்ட நிலைமை நான்கும் கைக்கிளைக்குரிய பொருட்குறிப்பாகும் எனக் கூறுவர் புலவர்.

அவையாவன : மடலேறுவல் எனக்கூறும் நிலையும், இளமை தீராத காமஞ்சான்ற நிலையும், தேறுதலமைந்தகாம மிகுநிலையும், மிக்க காமத்து மிடலுறாத நிலையுமாம்.

பெருந்திணைக்குக் கூறிய பொருட்குறிப்புக்களை ஏறிய, தீர்ந்த, ஒழிந்த, மிக்க என இறந்த காலவாய்பாட்டாற் கூறினமையான் அவை முதிர்ந்து முற்றிய நிலைமையன என்பது போந்தமையின் அவற்றின் தொடக்கநிலைகள் கைக்கிளைப் பாலவாதற்கு ஏற்கும் என்பது நூலோர் கொள்கை என்பது விளங்க "முன்னதற்கு என்ப" என்றார். 'கைக்கிளை முதலாப் பெருந்திணையிறுவாய்' என வைத்த முறையான் "முன்னது" என்பது கைக்கிளைக்கு ஓர் குறியீடாயிற்று. இதனைப் பாலைத்திணையை நடுவு நிலைத்திணை என்றது போலக் கொள்க. அன்றி இப்பெருந் திணைக்கு முற் கூறப்பட்ட கைக்கிளை எனப்பொருள் கோடலுமாம்.

இவற்றுள் மடற்கூற்றொழிந்த மூன்றும் பெரும்பான்மையும் தலைமைக் குணங்களும், ஒப்பினது வகையும் நிரம்பாத அடியோர் பாங்கினும், வினைவலர் பாங்கினும் காமஞ்சான்ற இளையோளிடத்தும் ஐந்திணையொடு முரணிய பொருளாக நிகழ்தலானும், புணர்ச்சி நிமித்தமாதற்கும் ஏற்புடையவாக இருத்தலானும் இவற்றின் சிறப்பின்மை நோக்கி இவை பிரித்தோதப்பட்டன என்க.

இச் சூத்திரத்தைக் "கைக்கிளைக் குறிப்பே" என்றதன்பின் வையாது ஈண்டுவைத்தார் "முன்னைய நான்கும்" எனச் சுருங்கக் கூறலாம் பயன் நோக்கி என்க.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் கண்டசெம்மையான உரை அவர் பின்னர்க் கூறிய விளக்கங்களான் சிதைவுற்றுள்ளது. இனி, நச்சினார்க்கினியர், இயற்கைப்புணர்ச்சிக்கு முன்னர் நிகழும் ஒழுக்கத்தைக், "கலந்தபொழுதும் காட்சியுமன்ன" எனச் சார்புரிப்பொருளாக ஆசிரியர் கூறியதனைக் கருதாமல் இடைக்கால நூல்வழி நின்று முன்னைய நான்கும் என்பதற்குக் காட்சி ஐயம் தெரிதல் தேறல் எனப்பொருள் கூறினார்.

களவியலுள் 'தெரிதல்' என்றதொரு குறிப்புக் கூறப் படாமையானும் காட்சியும் தேறலும் குறிஞ்சி நிமித்தமாதலன்றிக் கைக்கிளை எனற்கியையாமையானும் அவர் கருத்துப் பொருந்தாமை யறியலாம். இந்நூற்பாவிற்குப் பாரதியார் கூறும் உரையும் விளக்கமும் திரிபுணர்ச்சியின் பாற்பட்டன வாகும்.

மடற்கூற்றுள் 'வரைதல் வேண்டித் தோழி செப்பியவழி'த் தலைவன் கூறும் மடற் கூற்றுப் புணர்ச்சி நிமித்தமாய்க் குறிஞ்சித் திணையின் பாற்படும் ஆதலின் உள்ளப்புணர்ச்சியளவானே பிரிந்து வருந்தும் தலைவன் தலைவியின் தமர் வரைவிற்கு உடன்படாதவழித் தன்னெஞ்சொடு கூறும் மடற்கூற்றே ஈண்டுக் கூறிய கைக்கிளைப் பகுதியாமென அறிக.

எ-டு: "வாருறு வணர் ஐம்பால்" (58) என்னும் குறிஞ்சிக் கலியுள்

"ஒறுப்பின்யான் ஒறுப்பதுநுமரை, யான்மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயின் பொலங்குழாய்
மறுத் திவ்வூர் மன்றத்து மடல்ஏறி
நிறுக்குவென் போல்வல்யான் நீபடு பழியே"

எனத் தலைவன் மடலேறுவல் எனக் கூறியமை காண்க.

(1) 'வேயெனத்திரண்டதோள்' என்னும் குறிஞ்சிக் கலியுள் வரும்தலைவனும் தலைவியும் இளமை தீராவளமுடைய ராதலும் ஆண்டுத் தலைவன் ஏமஞ்சாலா இடும்பை எய்திக் கூறலையும்.

இனையன கூற இறைஞ்சுபு நிலநோக்கி
நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போல் மற்றாங்கே
துணையமை தோழியர்க் கமர்த்த கண்ணள்
மனையாங்குப் பெயர்ந்தாளென் அறிவகப்படுத்தே

எனவரும் சுரிதகத்தானறிக.

(2) யாரிவனென்னை விலக்குவான் நீருளர்
பூந்தாமரைப் போது தந்த விரவுத்தார்க்

கல்லாப் பொதுவனை நீமாறு நின்னொடு
சொல்லலாம் பென்றார் எமர் (கலி—112)

எனத் தலைவி கூறிய வழி

எல்லா, கடாஅய கண்ணாற் கலைஇய நோய்செய்யும்
நடாஅக் கரும்பமன்ற தோளாரைக் காணின்
விடாஅலோம் பென்றார் எமர்

எனத்தலைவன் கூறிப் பின்னர் முயங்குநின் முள்ளெயிறுண்கும், என்றதனான் தேறுதலமைந்த காமத்துக்கைக்கிளையாகத் தலைவன் கூற்று நிகழ்ந்தமை காண்க.

(3) நலமிக நந்திய நயவரு தடமென்றோள்
அலமரல் அமருண்கண் அந்நல்லாய் நீயுறீஇ
உலமரல் உயவு நோய்க்கு உய்யுமாறுரைத்துச்செல்
(கலி-112)

எனத்தலைவன் காமமிக்க வழியும் மிடலுறாது தன்வேட்கையைக் கூறிநிற்றலின் இதுமிக்க காமத்து மிடலுறாதநிலையாம். பிறவும் சான்றோர் செய்யுளுள் இவ்வாறு வருவனவற்றையெல்லாம் ஓர்ந்தமைத்துக் கொள்க.

**சூ. 55 : நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**
**கலியே பரிபாட் டாவிரு பாவினும்**
**உரிய தாகும் என்மனார் புலவர் (55)**

**க - து :** *எழுதிணைகளாக வகுத்து ஓதப்பெறும் இவ் அக ஒழுகலாறு புலனெறி வழக்குப் பற்றியதென்பதும் அதற்கு நிலமாகிய செய்யுள் வகை இவை என்பதும் உணர்த்துகின்றது.*

**பொருள் :** புனைந்துரை வகையானும் உலகியல் வழக்கானும் நல்லிசைப் புலவோரான் பாடுதற்கமைந்த மேற்கூறிய இலக்கண மரபான் அமைந்த ஒழுகலாறு, கலிப்பா, பரிபாட்டு என்னும் அவ்விரு பாக்களானும் கூறற்குரியதாகும் எனக் கூறுவர் புலவர்.

இருபாவினும் என்னும் எச்சவும்மையான் ஏனைய பாக்களான் வருதல் வழக்கென்பது பெறப்படும். இதனைக் கைக்கிளை மருட்பாவான் வருமெனவும் அந்நிலை மருங்கின் அறமுதலாகிய மும்முதற்பொருட்கும் உரிய என்ப எனவும் செய்யுளியலுள் ஆசிரியர் ஓதுதலான் அறிக.

உரையாசிரியன்மார் உம்மையை எண்ணும்மையாகக் கொண்டு பிற பாக்களான் வருதலை இலேசினாற் கொள்வர்.

சங்கத்தொகைப் பாக்களை நோக்குமிடத்து அவர்கருத்துச் சிறவாமையறியலாம்.

கலிப்பா தொகையும் வகையுமாக விரிந்து பல்கித் தரவு முதலாகிய உறுப்புக்கள் அமைய வருதலானும் பரிபாட்டு இது பாவென்னும் இயல்நெறியின்றிப் பொதுவாய் நிற்றற்கும் உரித்தாய்ப் பண்ணொடு கூடி வருதலானும் அவற்றது யாப்பருமை நோக்கி விதந்தோதி ஏனைய பாக்களை உம்மையாற் கொள்ள வைத்தார் என்க.

நாடக வழக்காவது :- படுதிரை வையத்துப் பல்வேறு காலத்துப் பல்வேறிடங்களிற் பல்வேறு நிலையினராக வாழும் மாந்தரிடத்து நிகழும் காமங்கண்ணிய ஒழுகலாற்றினுள் சான்றோர் வேண்டாதனவற்றைக் களைந்து வேண்டுவன வற்றைத் தேர்ந்து கொண்டு அவற்றிற்கு இடமும் காலமும் வரையறைசெய்து கருப்பொருளை இணைத்து மெய்ப்பாடு தோன்றச் சுவைபட அமைத்துக்கூறுதலும் தலைமக்களைப் பிணி மூப்பு இறப்பு இல்லாத ஒத்தகிழவனும் கிழத்தியுமாகத் தோற்றுவித்து அவர்க்குப் பாங்கரும் பாகரும் இளையரும் ஆகிய சுற்றத்தை அமைத்துப் பரத்தையர் காமக்கிழத்தியர் என்பாரைப் புனைந்து, வாயிலாரைப் படைத்து, வனைந்து கூறுதலும் பிறவுமாம்.

உலகியல் வழக்காவது :- எல்லா உயிர்க்கும் இயற்கையான இன்பநாட்டமும் விருப்பும் வெறுப்பும் குலமும் குடியும் நாற்பாற்பகுதியும் ஏற்றத்தாழ்வும் உடையோராய் ஆள்வோரும் ஆளப்படுவோருமாய் இன்பமும் துன்புமாகிய இடையூறுகளும் பரத்தைமையும், புணர்தலும் பிரிதலும் இருத்தலும் இரங்கலுமாகிய பண்பும் செயலும் மேற்கொண்டு திகழும் மக்களின் ஒழுகலாற்றினை உள்ளவாறே அமைத்துக் கூறுதலாம்.

புலனெறி வழக்காவது : இலக்கண நெறியான் அமைந்து வரும் நல்லிசைப் புலவோர்தம் எழுவகைச் செய்யுள் மரபாகும். புலன் = இலக்கணம். வழக்கு = உலகநடக்கை. புலனெறி வழக்காகிய செய்யுளின்கண் அகப்பொருள் பற்றி வருவன இருவகை வழக்குங்கலந்தே வரும்

எ - டு 1 இன்னளாயினள் நன்னுதல் என்றவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழிநம் படப்பை
நீர்வார் பைம்புதற் கலித்த
மாரிப் பீரத் தலர்சில கொண்டே (குறு—98)

மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியும் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமங்காழ் கொளினே (குறு-17)

இவை நாடக வழக்குமிக்கு உலகியல் வழக்குக்குறைந்து வந்தன.

முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்
தான் துழந்தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே (குறு-167)

உள்ளிக் காண்பென் போல்வல் முள்ளெயிற்று
அமிழ்தம் ஊறும் செவ்வாய் காழகில்
ஆரம்நாறும் அறல் போற் கூந்தல்
பேரமர் மழைக்கண் கொடிச்சி
மூரல்முறுவலொடு மதைஇய நோக்கே (குறு...286)

இவை உலகியல் வழக்குமிக்கு நாடக வழக்கு அருகிவந்தன.

உரைத்திசின் தோழியது புரைத்தோவன்றே
அருந்துயர் உழத்தலும் ஆற்றாம் அதன்றலை
பெரும் பிறிதாகல் அதனினும் அஞ்சுதும்
அன்னோ இன்னும் நன்மலைநாடன்
பிரியா நண்பினர் இருவரும் என்னும்
அலரதற் கஞ்சினன் கொல்லோ பலருடன்
துஞ்சூர் யாமத்தானும் என்
நெஞ்சத்தல்லது வரவறி யானே (குறு-302)

இஃது இரண்டும் சமனாக அமைந்த செய்யுள். இங்ஙனம் வருதல் பெரும்பான்மையனவாம்.

செய்யுட்குச் சுவையூட்டிக் கலையுணர்வை அளிப்பதாகலின் நாடக வழக்கு முற்கூறப்பட்டது. "பாடல் சான்ற" என்றதனான் உள்ளோன் தலைவனாக இல்லது புணர்த்துக் கூறலும் இல்லோன் தலைவனாக உள்ளது புணர்த்துக் கூறலும் நாடக வழக்கின் பாற்படும்.

இனி, இல்லது இனியது நல்லது எனப் புலவோரான் நாட்டப் பட்டது இம்மரபு என்பாரும் உளர். இயற்கை உணர்வும் பண்பாட்டு நெறியும் பற்றி நிகழும் காமங்கண்ணிய மக்கள் ஒழுகலாற்றினை இல்லதென்பார், 'உலகத்தார் உண்டென் பதில்லென்பாரோடொப்பர்' என விடுக்க.

**சூ. 56 : மக்கள் நுதலிய அகனைந் திணையும்**
**சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅ (56)**

க - து : அகத்திணைச் செய்யுள் பற்றியதோ ரிலக்கண நியதி கூறுகின்றது.

**பொருள் :** உயர்திணையாகிய மக்களின் ஒழுகலாறு கருதிய முல்லை முதலாகிய ஐந்திணையும் (உம்மையான்) கைக்கிளை யும் பெருந்திணையும் புலனெறி வழக்காகி வருமிடத்து இவராவார் இவர் எனத் தெரிந்துணருமாறு தலை மக்களின் இயற் பெயர் கொள்ளுதலைப் பெறமாட்டா.

என்றது, அகத்திணைச் செய்யுட்கண் வரும் தலை மக்களைத் திணைப் பெயர் திணைநிலைப் பெயர் பண்புப் பெயர், சினைப்பெயர், வினைப்பெயர், சுட்டுப் பெயர் முதலிய வற்றானன்றி இட்டுவழங்கும் இயற்பெயரான் சுட்டிக் கூறுத லாகாது என்றவாறு.

பண்புப்பெயர் முதலியன ஓரோ வழி ஒருவரை வரைந் துணர்த்துமாயின் அவையும் இயற்பெயராக நிற்குமாதலின் இயற்பெயர் என்னாது "சுட்டி ஒருவர்ப் பெயர்" என்றார்.

கிழவன் கிழத்தி என்னும் இருபாலும் அடங்க 'ஒருவர்' என்றார். ஒருவர் எனப்பொதுப்படக் கூறியமையான் பாங்கன் தோழி செவிலி முதலியோர் இயற்பெயரும் சுட்டிக் கூறப்பெறா என்க.

அகனைந் திணையும் என்னும் முற்றும்மையை எச்சமாக்கிக் கைக்கிளையும் பெருந்திணையும் கொள்க. இங்ஙனம் அவற்றை உம்மையாற்றழுவிக்கொண்டமைக்குக் காரணம் வரும் சூத்திரத்தாற் பெறப்படும்.

இயற்பெயர் சுட்டிக் கூறின் அவர் வரலாற்று மாந்தராய்ப் பாடாண்டிணைக்குரிய தலைமக்களாகி விடுவர். அவ்வழி அவ்வொழுகலாறு புறத்திணைக்கண் வந்த காமப்பகுதி யாவதன்றி அகத்திணையாகா தென்க.

'பெறார்' எனப்பாடங்கொள்வர் உரையாசிரியன்மார். பெறார் என்னும் பயனிலை அகனைந்திணை என்னும் எழுவாயொடு இயையாமையின் பெறாஅ என்பதே பாடமாதல் தெளியப்படும்.

'மக்கள் நுதலிய' என்றதனான் மேற்கூறப்பட்டு வரும் இலக்கண மரபுகள்யாவும் புலனெறி வழக்கென்பதும் அவ்வழக்கு மக்கட்குரிய தென்பதும் விளங்கும். 'அகனைந்திணையும்' என்றதனான் ஏனைக் கைக்கிளையும் பெருந்திணையும் சுட்டி ஒருவர் பெயர் கொண்டும் கொள்ளாதும் வருமென மயங்கக் கூறுவார் நச்சினார்க்கினியர். பாரதியார் உரை இந்நூலொடும் நல்லிசைப் புலவோர் செய்யுட்களொடும் ஒவ்வாமையை ஓர்ந்தறிக.

**சூ. 57 : புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்லது அகத்திணை மருங்கின் அளவுத லிலவே (57)**

**க - து :** மேலதற்கொரு புறனடை கூறுகின்றது.

**பொருள் :** பெயர் சுட்டிக் கூறப்படும் காமம் பற்றிய நிகழ்ச்சி புறத்திணைப் பகுதியுள் அதற்குரிய துறையாகப் பொருந்திவரினல்லது ஒருவரை வரைந்துணர்த்தும் இயற் பெயர்கள் அகத்திணைப் பகுதிக்கண் அளவுதல் இலவாம்.

என்றது, காமப்பகுதி கடவுளும் வரையார் ஏனோர் மருங்கினும் எண்ணுங்காலை (புறத்-23) எனவும், ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும் கைக்கிளை வகையொடு உளப்படத் தொகைஇத் தொக்க நான்கும் உளவெனமொழிப ' (புறத்-29) எனவும் பின்னர்க் கூறப்படும் பாடாண்டிணைக்கண் காமப் பகுதியாகப் பரவலும் புகழ்ச்சியும் கருதி வருமிடத்து அகப் பொருள் நிகழ்வுகள் புறத்திணைப் பகுதியாக வருமென்றும், அவ் வழிச் சுட்டி ஒருவர் பெயர் கொள்ளப் பெறும் என்றும் கூறியவாறாம்.

அங்ஙனம் புறத்திணைக்கண் அகத்திணைப்பகுதி விரவி வந்த செய்யுட்கள் அருகின. அம்மரபு பற்றி இடைக்காலத் தெழுந்த செய்யுட்களை முத்தொள்ளாயிரம் முதலியவற்றுள் கண்டு கொள்க.

எ - டு : (1) புன்னாகச் சோலை புனல்தெங்கு சூழ்மாந்தை
நன்னாகம் நின்றலரும் நன்னாடன் — என்னாகும்
கங்குல் ஒருநாள் கனவினுள் தைவந்தான்
என்கொல் இவரறிந்த வாறு. (முத்தொள்-15)

இஃது இளமை தீராத்திறம் பற்றி வந்த பெண்பாற் கைக்கிளை. மாந்தை நன்னாடன் எனச் சேரன்பெயர் சுட்டி வந்தது.

(2) உருவாய் நிலத்த உயர்மணல்மேலேறி
நகுவாய்முத் தீன்றசைந்த சங்கம்—புகுவான்
திரைவரவு பார்த்திருக்கத் தென்கொற்கைக்கோமான்
உரைவரவு பார்த்திருக்கும் நெஞ்சு (முத்தொள்—90)

இது முதற் பொருளால் நெய்தலும் உரிப்பொருளால் முல்லை யுமாக அமைந்து பாண்டியன் பெயர் சுட்டிவந்தது.

(3) கொடிபாடித் தேர்பாடிக் கொய்தண்டார் மாறன்
முடிபாடி முத்தாரம் பாடித்-தொடியுலக்கை
கைம்மனையில் ஓச்சப் பெறுவனோ யானுமோர்
அம்மனைக் காவலுளேன் (முத்தொள்—84)

இது குறிஞ்சித்திணை நிகழ்வு பெற்றுப் பாண்டியன் பெயர் சுட்டி வந்தது:

(4) யானூடத் தானுணர்த்த யானுணரா விட்டதற்பின்
தானூட யானுணர்த்தத் தானுணரான் - தேனூறு
கொய்தார் வழுதி குளிர்சாந் தணியகலம்
எய்தா திராக்கழிந்த வாறு. (முத்தொள் — 97)

இதுமருதத்திணை - பாண்டியன் பெயர் சுட்டி வந்தது.

(5) பிணி கிடந்தார்க்கும் பிறந்த நாட்போல
அணியிழை அஞ்ச வருமால் - மணியானை
மாறன் வழுதி மணவா மருண்மாலைச்
சீறியோர் வாடை சினந்து (முத்தொள்—79)

இது நெய்தற்றிணை-பாண்டியன் பெயர் சுட்டிவந்தது.

(6) பேயோ பெருந்தண் பனிவாடாய் பெண்பிறந்தார்
ஏயோ உனக்கிங் கிறைக்குடிகள் - நீயோ
களிபடுமால் யானைக் கருமான்தேர்க் கிள்ளி
அளியிடை அற்றம்பார்ப்பாய். (முத்தொள்-50)

இதுபாலைத் திணையின் பாங்காயமைந்து சோழன் பெயர் சுட்டி வந்தது.

(7) என் நெஞ்சும் நாணும் நலனும் இவையெல்லாம்
மன்னன் புனல் நாடன் வௌவினான் - என்னே
அரவகல் அல்குலாய் ஆறிலொன் றன்றோ
புரவலர் கொள்ளும் பொருள் (முத்தொள்-37)

இது தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதியாய குறிப்புப் பற்றிவந்த பெருந்திணை, சோழன் பெயர் சுட்டிவந்தது.

முன்றில் வாய்மடற் பெண்ணைக்குரம்பை வாழ் முயங்குசிறை
அன்றில்காள் பிரிவுறும் நோய் அறியாதீர் மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவும் திருத்தோணி புரத்துறையும்
கொன்றைவார் சடையார்க்கென் கூர்பயலை கூறிரோ
(திருஞானசம்பந்தர்)

என்றாற்போல வருவனவும் பாடாண்டிணைக்கண் வந்த அகப்பொருட்பகுதியாம்.

நெடுநல் வாடையும், பட்டினப் பாலையும் சுட்டி யொருவர் பெயர் கூறலான் புறத்திணைப் பாடாணாய் அமைந்தவாறு கண்டுகொள்க.

அகத்திணையியலுரை முற்றியது.

## இரண்டாவது

# புறத்திணையியல்

*பாயிரம் :—*

அகத்திணையியலுட் கூறிய காமங்கண்ணிய ஒழுக்கத்திற்குத் தாமே காரணமாய் அதுபற்றி வரும் இன்பத்துன்ப உணர்வுகளைத்தம் அகத்தே நுகர்தலாகிய மேற்கூறிய மக்கள் ஒழுகலாறு, அறம் பொருள் இன்பம் வீடு என்பவற்றுள் இன்பத்தின் பகுதியாதலை " அன்பொடுபுணர்ந்த ஐந்திணை மருங்கின் காமக்கூட்டம் " என ஆசிரியர் உணர்த்தினார்.

அவ் இன்பத்தை ஆக்குதற்கும் நுகர்தற்கும் துணைக் காரணமாகிய அறமும் பொருளும் அதற்குப்புறனாதல் அதனாற் பெறப்படும். அறத்தைப் பேணலும் பொருளை யாக்கலும் மறுமைப்பயனாகிய வீடெய்துதற்குரிய நெறியறிதலுமாகிய ஒழுகலாறு அவ் இன்ப ஒழுக்கத்தின் மறுதலையாய் ஒத்த கிழவனும் கிழத்தியும் என்னுமளவில் நில்லாமல் தன்னலமும் பிறர் நலமும் கருதியபொது ஒழுக்கமாய் இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த வகுத்தலும்பற்றி நிகழ்தலானும் அகனைந்திணைக் கோதிய முதற்பொருளும் கருப்பொருளும் ஆகியவற்றையே கொண்டு நிகழ்தலானும் அவ்வொழுகலாறு புறத்திணை எனப்பட்டது.

அஃது அகத்திணைப்பகுதி ஏழற்கும் புறமாக நிகழ்தலான் அதுவும் ஏழுவகைப்படுவதாயிற்று. அவையாவன, வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், காஞ்சி என்பனவாம். இக்குறியீடுகள் பற்றிய விளக்கம் அகத்திணையியலுரையுட் கூறப்பட்டது.

பண்டைத் தமிழ்மரபும் தொல்காப்பிய நெறியும் பிறழ இடைக்காலத்தெழுந்து மறைந்த பன்னிருபடலமும் அதன்வழித் தோன்றித் தன் இலக்கிய வளத்தால் நிலவும் புறப்பொருள் வெண்பா மாலையும் பிறவும் புறத்திணையைப் பன்னிருபகுதி களாகப் பிரித்துக் கூறும். அங்ஙனம் பகுத்தல் வழூவும் திரிபுமாம் என்பதனை உரையாசிரியன்மார் மறுப்புரைகளான் அறியலாம்

மற்று, வெட்சி, வஞ்சி, உழிஞை ஆகியதிணைகளின் மறுதலையாகக் கரந்தை, வஞ்சி, நொச்சி என்பவற்றைத் திணைகளாகக் வகுத்துக் கூறிய அவர்தங் கொள்கைகளை அறிவியல் நோக்கின்றிச் சிலர்வளர்ச்சி என்றும் ஆக்கமென்றுங் கூறிமயங்குவர்

குறிஞ்சி முதலாய அக ஒழுக்கங்களின் இயல்பினையும் வெட்சிமுதலாய புற ஒழுக்கங்களின் முறைமையினையும் ஓர்ந்துணர வேண்டுமென்பதை ஆசிரியர்

"அகத்திணை மருங்கின் அரிதல்ப உணர்ந்தோர்
புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்"

என இசைப்பாராயினார்.

தனித்தனி இலக்கணமுடைய தலைவன் தலைவி என்னும் இருபாலாரும் இணைந்து நிகழ்த்தும் அகத்திணைக்கண் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சி என்புழி அஃது அவ்விருவர்க்கும் ஒத்த ஒருதிணை என்பது விளங்கும். அவ்வழித் தலைவன் ஒழுகலாற்றினை ஒருதிணையாகவும் தலைவி ஒழுகலாற்றினை பிறிது ஒருதிணையாகவும் பகுத்துக் கூறல் பொருந்தாமை வெளிப்படை.

எனவே ஒரு சாரார் ஆனிரையைக் கவராத வழி மற்றொரு சாரார் மீட்டலும், ஒருவர் அடல் குறித்துச் செல்லாத வழி ஒருவர் எதிருன்றலும், ஒருவர் முழுமுத லரணத்தை முற்றாத இடத்து ஒருவர் தடுத்தலும் எவ்வாறு நிகழும்? போர் என்பது மாறுபட்ட இருவர் ஒருங்கு எதிர் நின்று நிகழ்த்தும் ஒரு வினையன்றே? அதனை இரண்டு வகையாகக் கூறல் எவ்வாறு பொருந்தும்? அதனான் கரந்தை நொச்சி என்பவை மறுதலையாயவர் சூடும் அடையாளப் பூக்களன்றி அவை திணையாகாமை தெளியப்படும்.

எனவே கவர்தலும் மீட்டலும் ஆனிரை காரணமாக நிகழும் ஓரொழுக்கமே என்பதும், கவர்தல் நிகழாமல் மீட்டல் நிகழாதாகலின் கவர்தலை முன் வைத்து இலக்கணக் குறியீடு தரப்பட்டதென்பதும் விளங்கும். வஞ்சி உழிஞை என்பனவும் அவ்வாறமைந்தனவேயாம்.

அக ஒழுக்கத்திற்குத் துணையாய் அதன் மறுதலையாகப் புறத்தே நிகழும் ஒழுகலாறு பற்றிய இலக்கணங்களைக் கூறலின் இது புறத்திணை இயல் எனப்பட்டது.

இல்வாழ்க்கையொடு தொடர்புடையதாய் அதன் புறத்தே நிகழும் ஒழுக்கம் என்பது புலனாதலின் அது சொல்லின் முடியும் இலக்கணத்ததாய் நின்றது.

புறத்திணை மருங்கிற் பொருந்தினல்லது (அகத் 57) என அதிகாரப்பட்டமையானும் இருவகைக் கைகோளின் கண்ணும்

தலைவன் பொருள் முதலாய கடமைகள் பற்றிப் பிரிந்து செயலாற்றும் புற ஒழுக்க மரபுகளை இடையீடின்றிக் கூறுதல் முறைமையாகலானும் திணைப்பெயர் திணை நிலைப் பெயர் எனச் சுட்டப் பெற்ற தலைமக்கள் உரிப்பொருள் காரணமாக எய்தும் பெயர்களைப் புலப்படுத்தல் வேண்டுதலானும் அக ஒழுக்கமாகிய காரியத்திற்கு புறவொழுக்கம் காரணமாதலையும், புறத்திணை ஏழும் அகத்திணை ஏழின் பிறிதொரு கூறாதலையும் உணர்த்துதல் வேண்டுதலானும் இதனை இரண்டாவது இயலாக இயைபுட வைத்தார் ஆசிரியர்.

**சூ. 58 : அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்**
**புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்**
**வெட்சி தானே குறிஞ்சியது புறனே**
**உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே (1)**

**க - து :** அகத்திணை ஏழினையும் அடிப்படையாகக் கொண்டே புறத்திணை ஏழினது இலக்கணம் கிளக்கப்படும் என்றும் அவற்றுள் குறிஞ்சித் திணைக்குப் புறனாயது வெட்சித்திணை என்றும் அஃது இத்துணைத் துறைகளையுடையது என்றும் உணர்த்துகின்றது.

**பொருள் :** தலையாயதிணைகள் என வகுத்த கைக்கிளை முதலாய வற்றிற்குக் கூறிய இலக்கணங்களைக் குறைவுஅற உணர்ந்தோர் புறத்திணை இலக்கணத்தை அதன் திறப்பாடு தோன்ற வகுத்துரைப்பின், புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய குறிஞ்சியது புறத்திணைதான் தலைவனது வெட்சித்திணை யாகிய ஒழுகலாறு எனக்கூறுப. அவ்வெட்சித்திணை அச்சந் தோன்ற வரும் பதினான்கு துறைகளையுடையதாகும்.

''துறைத்தே'' என்பது வெட்சி என்பதன் பயனிலையாதலின் கிளப்பின் என்னும் எச்சத்திற்கு 'என்ப' என்பது முடிக்குஞ் சொல்லாய் உணர்ந்தோர் என்பதற்குப் பயனிலையாய் அவாய் நிலையான் வந்தது.

'தானே' என்பது புறத்திணைக்குழுவினின்று ஒன்றைப் பிரித்து எடுத்துக் கொண்டமையை உணர்த்தி நின்றது. ஏகாரம்தேற்றம். புறனே, துறைத்தே என்னும் ஏகாரங்கள் அசை இனிவருவனவற்றிற்கும் இஃதொக்கும். துறையாவது பிரிவு பிரிவெனினும் கூறு எனினும் பகுதி எனினும் ஒக்கும்.

பரந்துபட்டதொரு நீர்நிலையுள் எவ்வழிப்புகினும் நீரை யுடையலாம் எனினும் சில இடங்களை வகுத்துக் கொண்டு

அவற்றைத் துறை எனக்கூறி அவ்வழிப்புக்கு நீரைக் கொள்ளுதலைப்போலப் பரந்துபட்ட புறஒழுகலாற்றினைச் சில கூறுபடுத்து அவற்றின் வாயிலாகப் புலப்படச் செய்தலான் துறை என்றார். செய்யுளுறுப்பாகக் கூறப்படும் துறை என்பது வேறு இது வேறு என அறிக.

அகத்திணை ஒழுகலாறுகள் கூற்றுக்களாகக் கிளக்கப் படுதலின் 'கிளவி' என்றும் புறத்திணை ஒழுகலாறுகள் செயல் களாகக் கூறப்படுதலின் துறை என்றும் குறியீடு பெற்றன.

அகத்திணைகளை உணர்த்துங்கால் பெயரும் தொகையும் கூறித் தொடங்கியாங்குப் புறத்திணைகளைத் தொகுத்துப் பெயர் கூறித்தொடங்காமைக்கு ஏது என்னையெனின்? இவை அகத்திணையினின்று வேறுபட்டன வல்ல அவற்றின் மறுபக்க மாகிய புறக்கூறுகளே என்பதறிவித்தற்கென்க. இதனைச் செய்யுளியலுள் திணை என்னும் உறுப்பை விளக்குமிடத்துக்

கைக்கிளை முதலா ஏழ்பெருந் திணையும்
முற்கிளந் தனவே முறையினான (செய்—177)

எனப்புறத்திணை ஏழும் அவற்றுள் அடங்குமென அடக்கிக் கூறுமாற்றான் அறிக.

அங்ஙனம் அடங்கிநிற்றலை உணராதவழிப் புறத்திணை இலக்கணநெறி புலப்படாதென்பதும், உணர்ந்தோர்க்கே புலனா கும் என்பதும் விளங்க "அரில்தப உணர்ந்தோர்" என்றார். அங்ஙனம் அவ்வியல்பினை ஓர்ந்து உணர்த்தல் வேண்டு மென்பார் "திறப்படக்கிளப்பின்" என்றும் கூறினார்.

இவ்வியலுக்குத் தலைமை தரவேண்டி "வெட்சி தானே குறிஞ்சியது புறனே" என்றார். என்றாரேனும் குறிஞ்சியது புறன் வெட்சியாகும் என்பது கருத்தாகக் கொள்க. இவ்விளக்கம் ஏனையவற்றிற்கும் ஒக்கும்.

வஞ்சி முதலிய திணைகளுள் முரண்பட்ட இருசாரார் தம்முள் அறிந்து போர் நிகழ்த்துதலின் ஆண்டு வீறு தோன்றுதலன்றி உட்குத் தோன்றுதலில்லை. வெட்சி ஒழுக்கம் வேற்றுப்புலத்து ஆனிரைகளைக் களவிற் கோடலாகலானும், அவ்வழி நிகழும் புறத்திறை, ஊர்கொலை பூசன்மாற்று முதலியவை போர் மேற்கொள்ளாத ஏதிலர்க்கும் அச்சந்தருவன ஆகலானும் "உட்குவரத் தோன்றும்" என்றார். இவ் அச்சம் சூழ்நிலை பற்றியதாகலின் மறவர்தம் வீரத்திற்கு இழுக்காகாமை புலப்படும்.

இனி வெட்சி குறிஞ்சிக்குப் புறனாயவாறு யாங்ஙனம் எனின் ? கங்குலாய சிறுபொழுதும் ஆனிரைகளைக் களவிற் கோடலாகிய செயலும், ஊறஞ்சாது தாம் கருதியது முடித்தலும், சூளுரைத்தலும் ஆனிரையை நோயின்றுய்த் தலும் பிறவும், குறிஞ்சிக்குரிய முதற்பொருளொடும் உரிப் பொருளொடும் ஒத்தலானும், வரை பொருட்பிரிவு குறுகிய காலப் பிரிவாகலானும் அவ்வாறே இதுவும் குறுகிய காலத் தினதாகலானும் தந்துநிறை, பாதீடு முதலியவை பொருளீட்ட மாக அமைதலானும் நிரைமீட்டலாகிய வினை வேந்தன் பணிப் பின்றியும் நிகழுமாதலானும் நிரைகோடலும் மீட்டலுமாகிய வெட் சித்திணை குறிஞ்சித்திணைக்குப் புறனாயிற்றென்க. குறிஞ்சி அகத்திணைகட்கு அடிப்படையாயினாற் போல வெட்சி புறத் திணைகட்கு அடிப்படையாதலும் அதனானே கொள்ளப்படும்

இனி அகத்திணையியலுள் கைக்கிளை முதலாக நிறுத்தப் பெற்ற முறைமைபற்றியோ, முல்லை முதலாக ஓதப்பெற்ற முறைமைபற்றியோ புறத்திணைகளைக் கூறத்தொடங்காமல் குறிஞ்சித்திணையின் புறத்திணையை முதலாக வைத்துக் கூறியதென்னையெனின் ? அக ஒழுகலாறுகட்குச் சிறந்தவை காலமாதலின் காலத்தை அடிப்படையாகக் கொண்டு ஆண்டு முல்லையை முதலாக வைத்துத் தொடங்கினார். புறத்திணை ஒழுகலாறுகள் அறத்தின் வழி நிகழ்த்தும் போரினை அடிப்படை யாகக் கொண்டவையாதலின் போரின்கண் அழியாமற்காக்க வேண்டிய அந்தணர் சான்றோர், ஆனிறை முதலானோரை அறிவித்துப் புறப்படுத்த வேண்டிய அரசியலறங்கருதி முதற் கண் படை எடுத்துச் செல்வோர்.

“ ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புலவாழ்நர்க்கு அருங்கடனிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅதீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின் ” (புறம்-9)

என அறிவுறுத்துவர். அவ்வழி ஆவ் அறிவிப்பினைத்தாமே உணர மாட்டாத ஆனிரைகளைக் காத்தல் வேண்டி அவற்றை இரவிற் சென்று அகப்படுப்பர். அம்முறைமை பற்றி ஈண்டு வெட்சித்திணை முதலாவதாக ஓதப்பட்டதென்க.

அவ்வற்றான் ஆனிரைகவர்தலாகிய செயல் குறிஞ்சி ஒழுக்க மாகிய களவொடு ஒத்து அறத்தாறாகி நிற்றலும் தெளியப்படும்.

**சூ. 59 : வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்**
**ஆதந் தோம்பல் மேவற் றாகும் (2)**

**க - து :** வெட்சித்திணையின் பொதுவியல்பாமாறு கூறுகின்றது.

**பொருள் :** குறிஞ்சியின் புறனாகிய வெட்சியின் ஒழுகலாறாவது வேந்தன்தான் ஏவிவிடும் போர் மறவரான் பகைப் புலத்தாரது ஆனிரைகளைக் களவினாற் கொணரச் செய்து அவற்றை ஓம்புதலைப் பொருந்துதலுடையதாகும்.

வேந்து - ஓம்பல் மேவற்றாகும் என முடித்துக்கொள்க.

மறவர் தாமே சென்று கவர்தல் கொள்ளையின் பாற்படுதலன்றி அறத்தாறாகாமையான் வேந்துவிடு முனைஞர் என்றார்.

வேந்துவினை யியற்கை வேந்தனின் ஒரீஇய
ஏனோர் மருங்கினும் எய்திடனுடைத்தே (அகத்-34)

என்றதனான் குறுநில மன்னர் தண்டத் தலைவர் முதலானோர் ஏவலும் வேந்தன் ஏவலாயே அடங்குமென்க

பகைப்புலத்தார்க்கு அறிவித்துச்சேறல் பொருள் நசையாய் வஞ்சியின் பாற்படுமாகலானும், பகைப்புலத்தார் ஆனிரைகளை ஏமஞ்செய்து காக்க முற்படுவா ராகலானும் அதனான் அவற்றிற்குத் தீங்கு நேராமற்கவர்தல் அரிதாமாகலானும் 'களவின்' என்றும், ஆனிரையைப் பேணுதலே வெட்சியின் குறிக்கோளாதலின் 'ஆதந்து ஓம்பல்' என்றும் அஃது அறத்தாறே என்பது விளங்க மேவற்றாகும் என்றும் கூறினார்.

தோன்றல் சான்றமாற்றோர் மேன்மையைப் (அகத்-44) பொறாத வேந்தன் அவர்மேற் செல்லக்கருதிய வழி அவர்தம் ஆனிரையைக் காத்தல்வேண்டித் தம் மறவரை ஏவுதலன்றி அவற்றைத் தான் அகப்படுத்திக்கோடல் குறிக்கோளன்மையான் ஆனிரைகளைக் கவர்தலும் பேணலும் அடைதலும் மறவர்க்குரிய ஒழுக்கமாக அமையும் என்பது வரும் சூத்திரத்தான் உய்த்துணரப்படும்.

வெட்சிமறவரை வேற்றுப் புலத்தார் தடுத்து நெடுமொழி கூறி அவரொடு போரிடுதலைக் கருதிய வழி கரந்தையைத் தமக்கு அடையாளப் பூவாகச் சூடுதலும் அங்ஙனம் பெயர்த்துக் கொள்ளப் போரிடும் மறவரைக் கரந்தையார் எனலும்மரபாகும். இதனைப் புறத்திணைகட்கெல்லாம் பொதுவிலக்கணங்கூறும் " வெறியறிசிறப்பின் " என்னும் சூத்திரத்திரத்தான் அறிந்து கொள்க.

சூ. 60 : படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே, புடைகெட
ஒற்றின் ஆகிய வேயே, வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்திறை, முற்றிய
ஊர்கொலை ஆகோள் பூசல் மாற்றே
நோயின் றுய்த்தல் நுவலுழித் தோற்றம்
தந்துநிறை பாதீடு உண்டாட்டுக்கொடையென
வந்த ஈரேழ் வகையிற் றாகும். (3)

க - து : ஈரேழ் துறைத்தென மேற்கூறிய துறைகள் இவை என்றும் அவை வகை பெற்று வருமென்றும் கூறுகின்றது.

பொருள் : வெட்சித்திணை படையியங்கரவம் முதல் கொடையீறாக நூலோராற் சிறப்பித்துக் கூறப் பெற்று வந்த வகைமையுடைய பதினான்கு துறைகளையுடையதாகும்.

வெட்சித்திணை என்பதை அதிகாரத்தாற் கொள்க. வகை என்பது துறை என்னும் பொருட்டாய் நின்றது. துறை ஒவ்வொன்றும் வகைமை தோன்ற வருமென்பது அதனாற் பெறப்படும்.

1) படையியங்கரவமாவது : வேந்தன் ஏவியவழி நிரை கோடற்கு எழுந்த மறவர்தம் இயக்கத்தான் எழும்ஆரவாரம். பகைப்புலம் நோக்கிச் செல்லும் 'செலவு' பிற் கூறப்படுதலின் இஃது அரசன் ஆணை கேட்டுக்கலித்து எழுமிடத்துத் தோன்றும் ஆரவாரமென்பது விளங்கும்.

எ - டு : நெடிபடு கானத்து நீள்வேல் மறவர்
அடிபடுத்து ஆரதர் செல்வான் - துடிபடுத்து
வெட்சி மலைய விரவார் மணிநிரைக்
கட்சியுள் காரி கலுழும் (புறப்-வெ-மாலை)

இதற்கு நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டியவை 'செலவு' என்னும் துறைக்குப் பொருந்துதலன்றி அரவத்திற்கேலாமை யறிக.

2) பாக்கத்து விரிச்சியாவது : வெட்சிமறவர்தம் பாக்கத்தின்கண் குழூமியிருந்து மேற் செலவிற்கு நிமித்தமாகக் கேட்கும் நற்சொல். (விரிச்சி = நற்சொல்)

அஃதாவது தமக்குத்தொடர்பில்லாதார் தம்முள் பேசிச் செல்லும் சொற்களைக் கேட்போர் அவற்றைத் தமது செயலுக்கு ஆக்கமாகப் பொருள் விரித்துக்கொள்ளுதலான் விரிச்சி

எனலாயிற்று. இதனை வாய்ப்புள் என்றும் கூறுப. அம்முறையான் புள்ளரவவங்களை நன்னிமித்தமாக (விரிச்சியாக)க் கோடலும் இதன் பாற்படுமென்க.

எ - டு : திரைகவுள் வெள்வாய் திரிந்து வீழ்தாடி
நரை முதியோன் நின்றுரைத்த நற்சொல் - நிரையன்றி
எல்லைநீர் வையம் இறைபோற் களிக்குமால்
வல்லைநீர் சென்மின்வழி (பெரும்பொருள் விளக்கம்)

3) புடைகெடப் போகிய செலவாவது : பகைப் புலத்தவர் தம் ஒற்றரின் நோக்கழிய வெட்சி மறவர் நிரந்து செல்லும் செலவு. போகிய என்பது 'போகல்' என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த எச்சச்சொல். அஃது நிரந்து ஒழுங்குபடச் செல்லுதலை உணர்த்தி நின்றது. புடை = பக்கம். அஃது ஆகுபெயராய் பகைப்புலத்து வேந்தரின் ஒற்றரைச் சுட்டி நின்றது.

எ - டு : வெவ்வாள் மறவர் மிலைச்சிய வெட்சியாற்
செவ்வானம் செல்வது போற் செல்கின்றார் - எவ்வாயும்
ஆர்க்குங் கழலொலி ஆங்கட் படாலியரோ
போர்க்குந்துடியொடுபுக்கு. (பெரும்பொருள்விளக்கம்)

4) புடைகெட ஒன்றின் ஆகிய வேயாவது : பகைப் புலத்தவர் தம் ஒற்றரின் கோளழிய வெட்சியார்தம் ஒற்றரான் ஆராய்ந்து கூறப்பெற்ற பகைப்புலந்து நிலையாம்.

எ - டு : நிலையும் நிரையும் நிரைப்புறத்து நின்ற
சிலையும் செருமுனையுள் வைகி - இலைபுனைந்த
கள்ளவிழ் கண்ணிக் கழல் வெய்போய் சென்றறிந்து
நள்ளிருட்கண் வந்தார் நமர் [பு. வெ. மாலை]

ஒற்றரான் ஆய்ந்து வினை மேற்கொள்ளுதல் வேந்தர்க்குக் கடனாதலின் அஃது எல்லாத் திணைக்கும் பொதுவாயினும் ஈண்டு ஆனிரைகள் இருக்குமிடம், காவல் நிலை முதலியவற்றை அறிந்து செயலாற்றல் ஆதந்தோம்பும் வெட்சி மறவர்க்கு இன்றியமைக் கடன் என்பது பற்றி இதன்கண் அதனை விதந்தோதினார்.

5) வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத்திறையாவது = ஒற்றர் ஆராய்ந்து கூறிய ஆனிரைகள் இருக்குந் தொழுவங்களை முற்றுதற்பொருட்டு அவற்றின் புறத்தே சூழ்ந்து தங்குதல்.

முற்றுதற்குரிய அற்றம் நோக்கியிருக்கும் நிலை புறத்திறை எனப்பட்டது.

எ-டு : கரந்தியல் காட்டுத்தீப் போலப் பெரிதும்
பரந்துசெல் மள்ளர் பதிந்தார் — அரந்தை
விரிந்தவியு மாறுபோல் விண்டோயத் தோன்றி
எரிந்தவியும் போலுமிவ்வூர். (நச் - மேற்)

6) முற்றிய ஊர்கொலையாவது : முற்றிச்சென்ற வெட்சி மறவர், தொழுவங்களைக் காவல்புரிவார் எதிர்த்தவழி அவரை அழித்தலாம். ஊர் என்றது கரந்தை மறவரை. பகைப்புலத்து ஊரார் சூழ்ந்து நெருங்கிய வழி அவரைக் கோறல் எனினுமாம்,

எ-டு : அரவூர் மதியிற் கரிதூர, ஈம
இரவூர் எரிகொளீஇக் கொன்று — நிரைநின்ற
பல்லான் தொழுவும் பகற்காண்மார்
போர்க்கொண்டோர்
கொல்வார்ப் பெறாஅர் கொதித்து.

7) ஆகோளாவது : எதிர்த்த மறவரை வீழ்த்தியபின்னர்த் தொழுவின் கண் நிறைந்திருந்த ஆனிரைகளை அகப்படுத்திக் கொள்ளுதலாம்.

எ-டு : கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தால்
நெடுவரை நீள்வேய் நரலும் — நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிணநிரை வேலார் நிலை. [பு. வெ. மாலை]

எச்சில் ஈர்ங்கை விற்புறந் திமிரிப்
புலம்புக் கணனே புல்லணற் காளை
ஒரு முறை உண்ணா அளவைப் பெருநிரை
ஊர்ப்புறம் நிறையத் தருகுவன் ... (புற-258)

எனவரும் புறப்பாட்டுப் பகுதியும் அது.

8) பூசல் மாற்றாவது : அங்ஙனம் ஆனிரைகளைக் கவர்ந்து வருங்கால் அவற்றை மீட்கக் கருதிக் கரந்தைப் பூச்சூடிவரும் பகைப்புறத்து மறவரைத் தடுத்துமாறுதலாம்.

போர்புரியின் ஆனிரைகளுக்கு ஊறுநேரும் என எண்ணிக் கருவி ஏந்தாமல் மிகைத்தெழுதலின் 'பூசல்' என்றும், அவரைப் புறக்கிடச் செய்தலின் 'மாற்று' என்றும் கூறினார். மாற்று முதனிலைத் தொழிற்பெயர்.

எ-டு : ஒத்தவயவர் ஒருங்கவிய நாண்படரத்
தத்தும் ஒலியும் தவிர்ந்தன — வைத்தகன்றார்
தம்பூசல் மாற்றி நிரை கொள்வான் தாக்கினார்
வெம்பூசல் மாற்றிய வில் (நச் - மேற்)

9) நோயின்றுய்த்தலாவது : மறவருள்சிலர் பூசலை மாற்றுமிடத்துச் சிலர் ஆனிரைகளை ஊறின்றிக் கொண்டு செல்லுதலாம்.

புல்லார்த்தி நீருட்டி ஓம்பிச் செல்லுதல் தோன்ற நோயின்றி என்றும் 'உய்த்தல்' என்றும் கூறினார்.

எ-டு : கல்கெழு சீறூர் கடைகாண் விருப்பினான்
மெல்ல நடவா விரையும் இனநிரை — ஒல்லெனத்
தெள்ளறற் கான்யாற்றுத் தீநீர்ப் பருகவும்
மன்னர் நடவா வகை (பெரும் பொருள் விளக்கம்)

10) நுவலுழித் தோற்றமாவது : வெட்சி மறவர்தம்பாக்கத்தில் உள்ளோரும், இல்லத்தோரும் உவந்துரைத்தற்கு இடனாக அவர் காண நிரையொடு தோன்றுதலாம்.

எ - டு : ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வரூஉம் என்னைக்கு
உழையோர் தன்னினும் பெருஞ்சாயலரே (புறம் 262)

11) தந்துநிறையாவது : ஊர்புகல உய்த்து வந்த ஆனிரைகளை வேந்தற்குரிய தொழுவகத்துக் கொண்டு நிறுத்தலாம். ஊர் மன்றத்துக் கொண்டு வந்து நிறுத்துதல் எனினுமாம்.

எ - டு : குளிறு குரல்முரசம் கொட்டின் வெரூஉம்
களிறொடுதேர் காண்டலும் ஆற்றா — நளிமணி
நல்லான் இனநிரை நம்மூர்ப் புறங்காண
எல்லாம் பெறுக இடம் (நச்-மேற்)

12) பாதீடாவது : தந்து நிறுத்திய ஆனிரைகளை அவரவர் திறத்திற்கேற்ப வேந்தன் பகுத்தளித்தலாம். பகுத்து இடுதல் என்பது பாதீடு என ஒரு சொல்நீர்மைத்தாய் நின்றது.

எ - டு : ஒள்வாள் மலைந்தார்க்கும் ஒற்றாய்ந்துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் — விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தம் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை [பு. வெ. மா.]

வேந்தன் ஆணை வழிக் கூறிட்டார் என்க.

13) உண்டாட்டாவது: வெற்றியும் வேந்தனது வரிசையும் பெற்ற வெட்சி மறவர் உண்டு களித்தாடுதலாம்.

எ-டு: நறவுந் தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவ லிட்ட பைங்காற் பந்தர்ப்
புனல்தரும் இளமணல் நிறையப் பெய்ம்மின்
நண்ணார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வருஉம் என்னைக்கு
உழையோர் தன்னினும் பெருஞ்சாயலரே (புறம் 262)

இதன்கண் முதல் மூன்றடிகள் உண்டாட்டிற்கு ஆவன செய்தல் பற்றி வந்துள்ளமை கண்டு கொள்க. ஏனைய அடிகள் ‘ஆ பெயர்த்துத் தருதல்’ என்னும் துறைக்கு ஏற்பவை.

14) கொடையாவது: ஆ தந்து ஓம்புதலை மேவிய வேந்தன் அவற்றைத் தனக்குப் பொருளாகக் கொள்ளாமல் படைமறவர்க்குப் பாதீடு செய்தவைஒழிந்தவற்றைப் பாணர், கூத்தர் முதலாய இரவலர்க்கு வழங்குதலாம்.

எ-டு: இளமா எயிற்றி இவைகாண் நின்ஐயர்
தலை நாளை வேட்டத்துத் தந்த நிரைகள்
கொல்லன் துடியன் கொளை புணர் சீர்வல்ல
நல்லியாழ்ப் பாணர்தம் முன்றில் நிறைந்தன
(சிலம்பு - வேட்டுவவரி)

தந்துநிறை முதலிய நான்கு துறைகளைப் படைமறவர்க் குரியவைபோல உரையாசிரியன்மார் விளங்கக்கூறிச் சென்றனர். அங்ஙனம் கூறின் அவை தன்னுறு தொழிலாவதல்லது மன்னுறு தொழிலாகாமையறிக. அது வேந்தன் தலைமைப்பாட்டிற்கு இழுக்காதலையும் அறிக. இடைக்கால நூலோர் தன்னுறு தொழிலும் கொண்டமையின் இத்தடுமாற்றம் நேர்ந்ததாகலாம்

சிறப்பித்துச் சொல்லப் பெற்றவை இப்பதினான்கும் எனவே அத்துணைச் சிறப்பின்றி வகைப்பட்டு வருவனவுமுள எனக். கொள்க. அவற்றை இவற்றுள் அடங்குமாறு அறிந்து அடக்கிக் கொள்க.

எ-டு: கடிமனைச் சீறூர்க் கருங்கட் கறவை
வடிநவில் வேலோன் மறுத்தோம்பல் வேட்டான்
அடிபுனை தோலின் அரண்சேர்த்து மள்ளர்
வருகமன் வாயிற்படை.

இது படைத்தலைவன் மறவரை அழைத்தது. இது படையியங் கரவத்துள் அடங்கும், பிறவும் அன்ன

நச்சினார்க்கினியர் 'ஈரேழ் வகை' என்றதனான் இப் பதினான்கு துறைகளும் வெட்சிசூடி ஆனிரைகளைக் கவரும் மறவர்க்கும் கரந்தை சூடி அவற்றை மீட்கும் மறவர்க்கும் ஒப்ப உரியன எனக் கொண்டு ஒவ்வொன்றையும் இரண்டாக வைத்து வலிந்துரை கூறுவார். மீட்போர்க்குரிய துறைகளாக மேல்வரும் சூத்திரத்துள் ஆபெயர்த்துத்தருதலும் என்பவை முதலாகச் சில துறைகளை வகுத்து ஆசிரியர் கூறுதலானும், விரிச்சி கேட்டலும் ஒற்றியறிதலுப் புறத்திருத்தலும் மீட்போர்க்கு இயைவன அன்மையானும் அவர்கருத்து நூல் நெறிக்கு ஏலாமையறியலாம்.

சூ. 61 : **மறங்கடை கூட்டிய துடிநிலை சிறந்த**
**கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே** (4)

க - து : குறிஞ்சித்திணையின் புறனாகப் பொருப்பட அமைந்துவரும் துறைகள் இவை என்கின்றது.

**பொருள் :** போர் கருதி எழும் வயவர் தம் மறஉணர்வு ஒருங்கு முற்றக் கூட்டுதலையுடைய துடிநிலையும், மறத் துறைக்குத் தெய்வமாகச் சிறந்த கொற்றவை நிலையும் குறிஞ்சித்திணையின் புறவொழுக்கமேயாம்

'துடிநிலை' என்றாரேனும் அதற்கு இனமாகிய பறை முரசு முதலாயினவும் கொள்ளப்படும். தோற்கருவிகளின் முழக்கம் மறவுணர்வை ஒருங்கெழுப்பி ஓங்கச்செய்யும் இயல்பின தாகலின் "மறங்கடைக் கூட்டிய" என்றார்.

பரவுதலும் பழிச்சலும் பலி நேர்தலும் சூளுரைத்தலும் என வழிபாடு பல திறப்பட நிகழ்தலின் "கொற்றவை நிலை" என்றார்.

இவ் இருதுறைகளும் போரைக் கருதிய புறத்திணைகட் கெல்லாம் ஏற்புடையவை என்பது தோன்ற மேலனவற்றொடு ஒருங்குகூறாமல், புறத்திணைகட்குப் பொதுவாக வரும் துறைகளைக் கூறும் மேல்வரும் சூத்திரத்தொடு இயைய முன் வைத்தார் என்க.

எ - டு : துடிநிலை :

நித்திலஞ்செய் பட்டமும் நெற்றித் திலதமும்
ஒத்திலங்க மெய்பூசி ஓர்ந்துடீஇத் – தத்தம்
துடியரோ டூர்ப்புறஞ் சூழ்ந்தார் மறவர்
குடிநிலை பாராட்டக் கொண்டு (நச்-மேற்)

கொற்றவை நிலை :
ஆளிமணிக்கொடிப் பைங்கிளிப் பாய்கலை
கூளி மலிபடைக் கொற்றவை — மீளி
அரண்முருங்க ஆகோள் கருதின் அடையார்
முரண்முருங்கத் தான்முந் துறும். (பு. வெ. மா.)

துடிநிலை, கொற்றவைநிலை ஏனைத்திணைக்கண் வருமாறு :-

மண்கொள வரிந்த வைந்நுதி மருப்பின்
அண்ணல் நல்லேறு இரண்டுடன் மடுத்து
வென்றதன் பச்சை சீவாது போர்த்த
திண்டிணி முரசம் இடைப்புலத் திரங்க
ஆரமர் மயங்கிய ஞாட்பு.........(புறம்.288)

இது வஞ்சித்திணை. இதன்கண் முரசம் வந்தது.

அருமைத் தலைத்தகும் ஆனிரையுள் ஐயை
எருமைப் பலிகோள் இயைந்தாள் - அரசனும்
வேந்தன்மேற் செல்வான் விறல்வஞ்சி சூடானென்று
யாந்தன்மேற் சீறாம லின்று (நச்-மேற்)

இது வஞ்சிக் கொற்றவை நிலை.
ஏனையவற்றிற்கும் சான்றோர் செய்யுள் வந்த வழிக் கண்டு கொள்க.

துடிநிலை என்பதற்கு முரசத்தைப் பராவுதல் என்பார் பாரதியார், நச்சினார்க்கினியர் இச்சூத்திரத்திற்குக் கூறும் விளக்கம் பொருந்தாமையைப் பாரதியார் மறுப்புரையான் தெளிக. இளம்பூரணர் குடிநிலை எனப் பாடங்கொள்வார். குடிநிலை வாகையின் பாற்படுதற்கு ஏற்றலன்றி வெட்சிக்கு இயையாதென்க.

சூ. 62 : **வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**
**வெறியாட் டயர்ந்த காந்தளும் உறுபகை**
**வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்**
**போந்தை வேம்பே ஆரென வரூஉம்**
**மாவருந் தானையர் மலைந்த பூவும்,**
**வாடா வள்ளி வயவ ரேத்திய**
**ஓடாக் கழல்நிலை உளப்பட, ஓடா**
**உடல்வேந் தடுக்கிய உன்ன நிலையும்**
**மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின்**
**தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்**

**ஆரம ரோட்டலும் ஆபெயர்த்துத் தருதலும்**
**தலைத்தாள் நெடுமொழி தன்னொடு**
**புணர்த்தலும்**
**அனைக்குரி மரபினது கரந்தை ; அன்றியும்**
**வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தல் என்**
**றிருவகைப் பட்ட பிள்ளை நிலையும்**
**வாள்மலைந்தெழுந்தோனை மகிழ்ந்துபறைதூங்க**
**நாடவற் கருளிய பிள்ளை யாட்டும்**
**காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்**
**சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தலென்று**
**இருமூன்று வகையிற் கல்லொடு புணரச்**
**சொல்ல ப்பட்ட எழுமூன்று துறைத்தே. (5)**

க - து : புறத்திணையுள் போர் பற்றிய ஒழுகலாற்றிற்கெல்லாம் பொதுவாகத் தொடக்கத்தின்கண் நிகழும் சிலதுறைகளும் நிரைமீட் போர்க்குச் சிறப்பாக உரிய சிலதுறைகளும், போரிற் பட்டோரைத் தெய்வத்தொடு ஒப்பவழிபடும் மரபினைக் காட்டும் நடுகல் பற்றிய துறைகளும் இவை யெனப் புறத்திணை ஒழிபு கூறுகின்றது.

இதன்கண் "சொல்லப்பட்ட எழு மூன்றுதுறைத்தே" என இறுதிக்கண் நிற்கும் பயனிலைத்தொடரை நோக்கின்

"பொருதலைக் கருதிய புறத்திணை மருங்கின்
மரபொடு வரூஉம் துறையு மாருளவே"

என்றாங்கு ஒரு சூத்திரம் இருந்து மறைந்ததுபோலும் என ஐயுற வேண்டியுள்ளது.

மற்று இதனைக் குறிஞ்சிப் புறனாகிய வெட்சித்திணையின் பிறிதொரு கூறாகக் கொள்ளலாமெனின், அஃது ஆசிரியர் கருத்தாயின், 'அவ்வெழு மூன்றும் அத்திணைப் புறனே' என்றோ "அவ்வெழு மூன்றும் அதன்பால என்மனார்' என்றோ கூறியிருப்பார். அங்ஙனம் அவர் கூறாமையானும், வஞ்சிவேந்தனை எதிர்த்துப் போரிடும் பகை வேந்தனது ஒழுக்கத்தை வேறு திணையாக வகுத்துக் கூறாமையானும். அரணத்தை முற்றிப்பொரும் உழிஞை வேந்தனைத் தடுத்து மதிற்போரிடும் பகைவேந்தன் ஒழுக்கத்தை வேறொரு திணை யாக ஓதாமையானும் அங்ஙனம் கொள்ளுதற்கு ஏலாமையறிக.

இனி வெட்சி முதலிய மூன்று திணைகட்கு மறுதலையாகக் கரந்தை, காஞ்சி, நொச்சி என வகுத்தோதிய பன்னிரு படலத்தாரும் தும்பைசூடி மைந்து பொருளாக வந்த வேந்தனைச் சென்று தலையழிக்கும் பகை வேந்தனது ஒழுக்கத்தைப் பிறிதொரு திணையாக வகுத்தற்கியலாமல், ஒரு திணையாகவே கூறிச் சென்றமையறிக.

அகனைந்திணைக்குரிய உரிப்பொருள்களுள் குறிஞ்சித் திணைக்குச் சிறந்து வரும் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமே யன்றிக் கொண்டுதலைக் கழிதலும் பிரிந்தவணிரங்கலும், கலந்தபொழுதும் காட்சியும் ஆகிய சார்புரிப்பொருள்களும் அதற்கு ஓரிடத்தான் உண்டு எனக்கூறினார். அவ்வாறே வெறியாட் டயர்ந்த காந்தள் முதலியவை புறத்திணைகட்குப் பொதுவாகக் கொள்ளத்தக்கவையாயினும் அவை வெட்சித் திணையொடு பெரிதும் தொடர்புடையவையாய் அதனைச் சார்ந்து நிகழும் என்று அறிவித்தல் வேண்டிப் புறத்திணை ஒழிபாக வரும் இத்துறைகளை இவ்வியலின் இறுதிக்கண் வைத்தோதாமல் வெட்சியதிகாரத்தேவைத் தோதினார் என்க.

என்னை? முல்லை முதலிய ஏனைய ஒழுகலாறுகள் புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாகிய குறிஞ்சி ஒழுக்கத்திற்கு மறுதலையாய்ப் பிரிதல் என்னும் ஒழுக்கத்தின் வகையாகவே நிகழுமாறுபோலப் போரைக்கருதிய ஒழுகலாற்றிற்கெல்லாம் வெட்சி ஒழுக்கம் அடிப்படையாய்த் தொடக்கமாக அமைந்து இருதிறத்தாரின் இகலைப் பெருகச் செய்வதாகலின் அவ்வியல்பு புலப்பட, 'ஓடாக்கழனிலையுளப்பட' என்றும் அனைக்குரி மரபினது கரந்தையன்றியும்...... இருமூன்று வகையிற் கல்லொடு புணரச்சொல்லப்பட்ட எழுமூன்று துறைத்தே என்றும் கூறினார் என்க.

இங்ஙனம் முந்து நூல் கண்டு முறைப்பட எண்ணி ஆசிரியர் கூறும் நூல்நெறியினை ஓராமல், யாவும் வெட்சித்திணையின் பகுதியே என்றும், வெட்சியின் மறுதலையாய கரந்தைத் திணையே என்றும் ஆரமர் ஓட்டல்முதல் நாடவற்கருளிய பிள்ளை யாட்டுஈறாய நான்கு துறைகள் மட்டுமே கரந்தைக்குரியவை என்றும் ஏனைய, பொது வென்றும் உரையாளர் பலவாக விளக்கங் கூறிச்சென்றனர்.

நச்சினார்க்கினியர் இச்சூத்திரம் புறத்திணைக்கெல்லாம் பொதுவாகிய வழுஏழும்பற்றி உணர்த்துதல் நுதலிற்று என்றும் இவை வேத்தியலின் வழுவித் தன்னுறு தொழிலாக வருதலின்

வழுவாயின என்றும் கூறுவார். தன்னுறு தொழில் என்பதற்கு ஏற்பப் பிற திணைகளுள் பலதுறைகள் அமைந்திருத்தலின் அவர் கருத்து ஆராய்தற்குரியதாகும்.

**பொருள் :** (1) வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தளும் என்றது; தெய்வத்தின் கருத்தறிந்து உரைக்கும் சிறப்பான் குறிகேட்போர் விரும்புதலையுடைய வாயினனாகிய வேலன் தெய்வமுற்று ஆடுதலைச் செய்த மறநிலைக் கூத்தாகிய காந்தள் என்னும் துறையும், என்றவாறு.

வெறியாவது தெய்வத்தன்மையுறுதலான் அமையும் மயக்கம். அந்நிலைமைக்கண் வெறியாடுவோன் தெய்வமாகவே மதிக்கப்பட்டு அவன் கூறுவனவற்றைத் தெய்வத்தின் மொழியாகவே கொள்ளுதலான் "வெவ்வாய்வேலன்" எனப் பட்டான். வெம்மை (வேண்டல்) என்னும் உரிச்சொல் ஈறு கெட்டுப் பெயர்ப்போலியாய் வெவ்வாய் எனப்புணர்ந்து நின்றது.

வேலன் அகத்திற்கும் புறத்திற்கும் உரியனாகலின் வெறியறி சிறப்பின் வேலன் என்றார். அகத்திற்குக் குறிஞ்சிப்பூச் சூடியாடுதல் போலப் புறத்திற்குக் காந்தள் சூடி ஆடுதல் மரபு. காந்தள் என்பது அதனைச் சூடியாடும் கூத்திற்குப் பெயராயிற்று. அது போர் மேற்கொள்ளும் மறவர்க்கு வெற்றி வேண்டி முருகனைப் பரவி நிகழ்த்தும் பொதுவியற் கூத்தாகும்.

குருகுபெரிய குன்றெறிந்தானும்
உருகெழு காந்தாள் மலைந்தான் - பொருகழற்
கார்கருதி வார்முரசம் ஆர்க்குங் கடற்றானை
போர்கருதி யார் மலையார் பூ (பு. வெ. மா)

எனவரும் ஐயனாரிதனார் மேற்கோள், காந்தள் சூடுதலை உணர்த்தி நின்றது. காந்தள் சூடி வேலன் வெறியாடியதற்குச் செய்யுள் வந்த வழிக் கண்டு கொள்க.

(2, 3, 4,) உறுபகை வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்து புகழ்ப் போந்தை வேம்பே ஆர்எனவருஉம் மாவரும் தானையர் மலைந்த பூவும் என்றது =

[வேந்துறுபகை இடைதெரிதல் வேண்டி மாவரும் தானையர் மலைந்த ஏந்துபுகழ்ப் போந்தை வேம்பு ஆர் எனவரும் பூவும் எனக்கூட்டுக]

ஆனிரை கவர்தல் முதலாய போரின்கண் இஃது இவ்வேந்தர் படையொடு இவ்வேந்தர்படை யுற்ற இகல் என மறவரிடையே

வேறுபாடுதெரிந்துணர வேண்டிக் களிறும் மாவும் ஊர்ந்துவரும் தானைமறவர் சூடிய புகழ்தாங்கிய போந்தை (பனை) வேம்பு ஆர் (ஆத்தி) எனச்சிறப்பித்துக் சொல்லப்பட்டுவரும் பூக்கள் பற்றிய துறைகளும் என்றவாறு.

இவ்வொழுகலாறுகள் "வண்புகழ் மூவர் தண் பொழில் வரைப்பின் நாற்பெயரெல்லை யகத்தவர் வழங்கும் யாப்பின் வழியது" ஆகலின் திணைக்குரிய பூக்களொடு வேந்தர்க்குரிய அடையாளப்பூக்களையும் உடன் சூடிக்கொண்டு பொருதல் வழக்காதலின் அவ்வாற்றான் அவ்வப் பூச்சூடுதலும் துறையாக அமைந்ததென்க.

தானைமறவரது மறமேயன்றி யானைமறமும் குதிரைமறமும் தும்பைத் திணைக்கண் துறைகளாக அமைந்து வருதலின் "மாவருந்தானையர்" என்றார். மாபெருந்தானையர் எனப்பாடங் கொள்வாருமுளர் அப்பாடத்திற்குச் செய்யுளுறுப்பாகிய நோக்கின் மையான் அப்பாடம் சிறவாமையறிக.

நச்சினார்க்கினியர் இடைக்கால நூல் வழக்குக்களை நோக்கி இத்துறை தகர், சிவல், முதலாய விலங்குப் போர் பற்றிக் கூறுவதாகக் கொண்டு வலிந்துரை கூறுவார்.

எ - டு : இரும்பனைப் போந்தைத் தோடும் கருஞ்சினை
அரவாய் வேம்பின் அங்குழைத் தெரியலும்
ஓங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
இரு பெருவேந்தரும் ஒரு களத்தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாள்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன் (பொருந - )

இதன் கண் வேந்தர் தம் அடையாளப் பூக்களைச்சூடிக் கொண்டு போர்புரிந்தமை காண்க.

வட்கர் போகிய வளரிளம் போந்தை
உச்சிக் கொண்ட ஊசி வெண்டோடு
வெட்சிமாமலர் வேங்கையொடுவிரவி [புறம் - 100]

இதன்கண் வேந்தர்க்குரிய அடையாளப்பூவையும், திணைக் குரிய பூவையும் ஒருங்கு சூடிக்கொண்டமை புலனாம்.

இத்துறைகளைக் கூத்தாகக் கருதி நச்சினார்க்கினியர் விளக்குவார் அவர்கருத்து நூல் நெறிக்கொவ்வாமை மேற் கூறப்பட்டது.

5) (வயவரேத்திய) வாடாவள்ளி என்றது : வாடுங் கொடியல்லாத ஆடுங்கூத்தாகிய வள்ளி என்னும் துறையும் என்றவாறு

இது போர்மேற்செல்லும் மறவரைப் போற்றி மகளிர் ஆடும் பொதுவியற்கூத்தாகும். வாடாவள்ளி என்பது வெளிப் படைச்சொல் 'வயவரேத்திய' என்பது 'வள்ளிக்கும் கழனிலைக்கும் பொதுவாய்த் தாப்பிசையாக நின்றது. இதற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

6) வயவரேத்திய ஓடாக் கழனிலையுளப்பட என்றது : மறவாரற் புகழப்பட்ட புறக்கிடாத உணர்வை நல்கும் கழல் நிலை என்னும் துறையும் உட்பட என்றவாறு.

சூளுரைகூறிப் புனையப்படும் கழலாதலின் ஏத்திய என்றும் ஓடா என்றும் சிறப்பித்தார்.

எ - டு : கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண் (புறம்-100)

இதன்கண் கழல் யாத்துப் போர்க்குச் சென்றமை புலப் பாடாதல் காண்க.

இதனையும் கூத்துவகையாகக் கொண்டு பொருள் கூறுவார் நச்சினார்க்கினியர்.

7) ஓடா உடல்வேந்தடுக்கிய உன்ன நிலையும் என்றது : பிறக்கடியிடாது போரின் கண் உடலும் வேந்தன் நிமித்தமாக அடுக்கிக்கூறக் கருதிய உன்னநிலை என்னும் துறையும் என்றவாறு.

உன்னமாவது நிமித்தத்தைக்கருதிய நினைவு. அஃது ஆகுபெயராய் நிமித்தங் காணற்குரியதாகத் தெய்வத்தன்மை பொருந்திய ஒருவகை மரத்தினை உணர்த்தி நின்றது.
[உன்னுதல் = நினைதல்] இதனை, "மன்னவற் பராஅய் முன்னியது முடித்தோர் உன்னஞ்சிறக்கும் ஒள்வினை நினைஇ" என்பதனானும் அறியலாம்

உன்னமரத்தான் நிமித்தங்கோடலாவது, தமக்கு ஆக்க மாயின் இக்கோடு தழைக என்றும் பகைவர்க்கு ஆக்கமாயின் இக்கோடு வாடுக என்றும் கருதிக் கூறிக் காணுதலாகும். இங்ஙனம் இருதிறனாக அடுக்கிக் கூறலின் அடுக்கிய என்றார். அடுக்கு என்பது உன்னமரத்திற்கு அடையெனினுமாம்.

எ - டு : முன்னங் குழையவும் கோடெலாம் மொய்தளிரீன்று
உன்னம் குழையொலித் தோங்குவாய் — மன்னரைக்
கொன்று களங்கொள்ளும் கொல்யானை வேந்தனை
வென்று களங்கொளுமேல் வேந்து எனவரும்.

பிறவாறு நிமித்தங்கோடற்கும் இதுவே துறையாகக் கொள்க என்பார் இளம்பூரணர். அஃது ஏற்புடைத்து.

8) மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின் தாவா விழுப் புகழ் பூவை நிலையும் என்றது : மாயோனாகிய தெய்வத்தினது தன்மையை மேவிய நிலைபெற்ற பெருஞ் சிறப்பினான் கெடாத புகழையுடைய காயாம்பூவினான் நிமித்தங்கோடலாகிய துறையும் என்றவாறு.

இஃது உன்னமரத்தினது கோடு தழைதலையும் வாடுதலையும் நிமித்தமாகக் கொண்டாற்போலப், பூவைப்பூ மலர்தலையும் குவிதலையும் நிமித்தமாகக் கொள்வதொரு வழக்காகும்.

காயாம் பூவினைக் காயாம்பூ வண்ணனாகிய மாயோனாகக் கருதிக் கூறலின், மன்பெருஞ்சிறப்பின் என்றும் உன்ன மரம்போல இதுவும் தப்பாமல் நிமித்தங்காட்டலின் தாவா விழுப்புகழ் பூவை என்றும் சிறப்பித்தார்.

இதற்குச் சான்றோர் செய்யுள் வந்தவழிக்கண்டு கொள்க.

இனி இடைக்காலத்து நூலோர் தம் கொள்கையைக் கருதி மன்னரையும் மன்னர் பாங்கினரையும் மாயோன் முதலாய தெய்வங்களோடு ஒப்பிட்டு (உவமித்து)க் கூறலே பூவை நிலை எனக் கூறுவார் நச்சினார்க்கினியர். புறநானூற்றுச் செய்யுட்குத் துறை வகுத்தோரும் அக்கருத்தினரேயாவார். எனினும் அவர் தாமும் பூவை நிலையைப் பாடாண்டிணைக்குரிய துறையாகக் கொண்டனர். நச்சினார்க்கினியர் இத்துறைக்கு எடுத்துக் காட்டும் செய்யுட்கள் பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கின வாய்ப் பாடாண்டிணைக் கேற்பனவாகவே உள்ளமை காணலாம். அவ்வாற்றான் புறத்திணைகட்கெல்லாம் ஒழிபாகக் கூறும் இச் சூத்திர நோக்கிற்கு அவர் கருத்து இயையாமை புலனாகும்.

எ - டு : பூவை விரியும் புதுமலரிற் பூங்கழலோய்
யாவை விழுமிய யாமுணரேம் — மேவார்
மறத்தொடு மன்னர் மறங்கடந்த காளை
நிறத்தொடு நேர்தருத லான் (பு-வெ. மா.)

எனவரும்.

9) ஆரமர் ஓட்டலும் என்றது : போர்மேற் சென்றமறவரைப் போரெதிர்ந்தமறவர் சென்று பின்னிடச் செய்யும் துறையும் என்றவாறு.

ஓட்டல் என்றதனான் அமர் என்றது அமர்புரியும் மறவரை உணர்த்தி நிற்றல் புலப்படும்.

எ - டு : "வளரத்தொடினும்" என்னும் புறப்பாட்டினுள் (260)
முன்னூர் பூசலிற் றோன்றித் தன்னூர்
நெடுநிரை தழீஇய மீளியாளர்
விடுகணை நீத்தம் துடிபுணை யாக
வென்றி தந்து கொன்று கோள் விடுத்து

என்னும் பகுதி ஆரமரோட்டலாய் அமைந்துள்ளமை கண்டு கொள்க. இத்துறை தனியே வந்த செய்யுள் வந்துழிக் கண்டு கொள்க.

"பொன் வார்ந்தன்ன" என்னும் புறப்பாட்டு (புறம்-308) க் குறுநில மன்னன் வேந்தனைப் புறக்கிடச் செய்த ஆரமரோட்டலாய் அமைந்துள்ளமை கண்டு கொள்க.

10) ஆபெயர்த்துத் தருதலும் என்றது : வெட்சிமறவர் கவர்ந்த நிரையினை வேற்றுப்புல மறவர் மீட்டுத்தருதலாகிய துறையும் என்றவாறு.

எ - டு : நறவுந்தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவலிட்ட புன்காற் பந்தர்ப்
புனல்தரு மிளமணல் நிறையப் பெய்ம்மின்
ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வருஉம் என்னைக்கு
உழையோர் தன்னினும் பெருஞ்சாயலரே (புறம்-262)

எனவும்,

கரந்தை நீடிய அதிந்து மாறுசெறுவிற்
பல்லான் இனநிரை தழீஇய வில்லோர்க்
கொடுஞ்சிறைக் குரீஇப் பருந்தார்ப்பத்
தடிந்து மாறு பெயர்த்தவிக் கருங்கைவாளே

எனவும் வரும்.

11) சீர்சால் வேந்தன் சிறப்பெடுத்துரைத்தலும் என்றது : படைமறவர் புகழ்சான்றதம் வேந்தனது வீரச்சிறப்பையும் வெற்றிச் சிறப்பையும் பகைவர் அஞ்சுமாறு எடுத்துரைத்தலாகிய துறையும் என்றவாறு.

எ - டு : போற்றுவிர் மறவிர் சாற்றுதும் நும்மை
ஊர்க்குறு மாக்கள் ஆடக் கலங்கும்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத் தன்ன என்னை
நுண்பல் கருமம் நினையாது
இளையனென் றிகழின் பெறலரிது ஆடே (புறம்-104)

என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர் (குறள்) எனவரும்.

12) தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தலும் என்றது : தலையாய முயற்சியான் வஞ்சின மொழிகளைத் தன் நிலைமையொடு கூட்டிக் கூறுதலாகிய துறையும் என்றவாறு.

அவரவர் தாம் மதிக்கும் கோட்பாடொன்றனைச் சுட்டி நெடுமொழி கூறலின் 'தலைத்தாள் நெடுமொழி' என்றார்.

எ - டு : நகுதக்கனரே நாடுமீக் கூறுநர்
இளையன் இவனென உளையக் கூறிப்
படுமணி இரட்டும் பாவடிப் பணைத்தாள்
நெடுநல் யானையும் தேரும் மாவும்
படையமை மறவரும் உடையம் யாமென்று
உறுதுப் பஞ்சாது உடல்சினஞ் செருக்கிச்
சிறுசொல் சொல்லிய சினங்கெழு வேந்தரை
அருஞ்சமம் சிதையத் தாக்கி முரச மொடு
ஒருங்ககப் படேஎன் ஆயின் பொருந்திய
என்நிழல் வாழ்நர் செல் நிழல் காணாது
கொடியன் எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றுங் கோலே னாகுக
ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடா தொழிகவென் நிலவரை
புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையா னுறவே (புறம் - 72)

"மடங்கலிற் சினைஇய" (புறம் 71) என்னும் பூதப்பாண்டியன் பாட்டும் "மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி" என்னும் (73) பாட்டும் இத்துறையின்வே. வஞ்சினங் கூறுதல் மறவர்க்கும் வேந்தர்க்கும் பொதுவாகும்.

தானால் விலங்கால் தனித்தால் பிறன் வரைத்தால்
யானை எறிதல் இளிவரவால் — யானை
ஒருகை யுடையது எறிவலோ யானும்
இருகை சுமந்து வாழ்வேன் (நச் - மேற்)

என்பது மறவர் கூறிய நெடுமொழி.

13) அனைக்குரி மரபினது கரந்தை அன்றியும்: என்றது அத்தகையனவற்றிற்குரிய மரபினை யுடையதாகிய கரந்தை என்னும் துறையும் அவையன்றியும் என்றவாறு. கரந்தையும் என உம்மை விரித்துக் கொள்க.

என்றது, ஆனிரை கவர்ந்த மறவரை எதிர்த்துப் பொரும் வேற்றுப்புல மறவர் கரந்தைப் பூவைச் சூடுதலாகிய துறையும் என்றவாறு. தத்தம் வேந்தர்க் குரிய அடையாளப் பூவொடு நிரை கொண்டோரினின்று தம்மை வேறுபடுத்திக் காட்டற்காகப் பூச்சூடுதல் தனி ஒரு துறையா யாயிற்று.

இதுகாறும் போர்தொடங்க மேற்கொள்ளும் பொதுவாகிய துறைகளும் வெட்சியின் மறுதலைக் கூருகிய துறைகளும் கூறினார். இனிப் போர் மேற்கொண்டபின்னரும் போர் முடிந்த பின்னரும் நிகழும் ஒழுகலாற்றிற்குரிய பொதுவாகிய துறைகளைத் தொகுத்துக் கூறலின் அன்றியும் என இடையறவுபடுத்தோதினார் என்க.

எ - டு : "அந்தோஎந்தை" என்னும் புறப் பாட்டினுள் இனியே,

பல்லா தழீஇய கல்லாவல்வில்.
உழைக்குரற் கூகை யழைப்ப வாட்டி
நாகுமுலை யன்ன நறும்பூங் கரந்தை
விரகறி யாளர் மரபிற் சூட்ட
நிரையிவண் தந்து நடுகல்லாகிய
வென் வேல் விடலை யின்மையின்புலம்பி " (261)

என வேற்றுப்புலத்தார் கரந்தைப்பூச்சூடியமை கண்டுகொள்க. கரந்தைப் பூவைச்சூட்டுதலும் சூடுதலுமாகிய நிகழ்ச்சியே ஈண்டுத் துறை எனப்பட்டதென அறிக. எனவே, கரந்தை சூடுதல் துறையேயன்றித் தனி ஒரு திணையாகாமை தெரியலாம். இதனைக்

கொடைத் தொழிலெல்லாம் குறைவின்றிப் பண்டே
முடித்தனன் என்றிருந்த மூத்தோன் — கொடைக்கு
வரம்பிலன் என்றே மருண்டான் நிரைகோட்
கரந்தையங் கண்ணியார்க் கண்டு (நச் - மேற்)

என்னும் பழம்பாட்டானும் அறியலாம்.

14) "வருதார் தாங்கல் வாள்வாய்த்துக் கவிழ்தல் என்றிரு வகைப்பட்ட பிள்ளை நிலையும் என்றது: உடன்று மேல்வரும் கொடிப்படையினைத்தான் தனித்து நின்று தடுத்துப்போரிடலும், வாட்டொழில் தப்பாமல் பொருந்தியவழி விழுப்புண் கூர்ந்து விழுதலும் என இருதிறனாக வரும் பிள்ளைநிலை என்னும் துறையும் என்றவாறு.

வருதார்தாங்கலும் வாள்வாய்த்துக்கவிழ்தலும் பிள்ளைநிலை என்னும் துறைக்குரிய கூறுகளாகும். பிள்ளைநிலை என்னும் துறை இருவகையாக அமையும் என்பது விளங்க இருவகைப் பட்ட பிள்ளைநிலை என்றார். நூற்கருத்தறியாமல் இதனை இரு துறைகளாகக் கருதுவாருமுளர்.

பிள்ளை என்றது பிள்ளைத்தன்மை. அஃதாவது பகை யஞ்சாத வீறு அல்லது தறுகண்ணாண்மை. அஃது அதனை உடையானைக்குறித்து நின்றது.

எ - டு : பிள்ளை கடுப்பப் பிணம் பிறங்க ஆளெறிந்து
கொள்ளை கொள் ஆயந் தலைக்கொண்டார்-எள்ளிப்
பொருதழிந்து மீளவும் பூங்கழலான் மீளான்
ஒருதனியே நின்றா னுளன். (பு. வெ. மா)

இது வருதார் தாங்கிய பிள்ளைநிலை.

ஆளுங்குரிசில் உவகைக் களவென்னாம்
கேளின்றிக் கொன்றாரே கேளாகி — வாள்வீசி
ஆடினார் ஆர்த்தார் அடிதோய்ந்த மண்வாங்கிச்
சூடினார் வீழ்ந்தானைச் சூழ்ந்து
(பெரும்பொருள் விளக்கம்)

இது வாள்வாய்த்துக் கவிழ்ந்த பிள்ளைநிலை.

15) வாள்மலைந் தெழுந்தோனை மகிழ்ந்து பறைதூங்க நாடவற்கருளிய பிள்ளையாட்டும் என்றது: வாள்வாய்த்துக் கவிழாமல் வாளாற் பகைவரைப் பொருதழித்து மேலோங்கிய பிள்ளையனை உவந்து வெற்றிப்பறை முழங்க வேந்தன் தண்ணடை நல்கிய பிள்ளையாட்டு என்னும் துறையும் என்றவாறு. [ஆட்டுதல் = பாராட்டுதல். பிள்ளையாட்டு = பிள்ளையனைப் பாராட்டுதல்] உரையாட்டு சீராட்டு பாராட்டு என்பவற்றைப் போலப் பிள்ளையனைப் புகழ்ந்து போற்றுதல் பிள்ளையாட்டு எனப்பட்டது. அது "நாடு அவற்கருளிய" என்பதனானும் விளங்கும்.

எ - டு : வன் கண் மறமன்னன் வாள்மலைந்து மேம்பட்ட
புன்றலை ஒள்வாட் புதல்வர்க்கண்டு — அன்புற்றுக்
கான்கெழு நாடு கொடுத்தான் கருதார்க்கு
வான்கெழு நாடு வர. (பழம் பாடல்)

16) காட்சி என்றது : போரிற் பெருவீறு காட்டிப் பொருது துறக்கமுற்றானைத் தெய்வத்தொடு ஒப்ப வைத்து வழிபடுதற் பொருட்டு அம்மறவனின் பெயரும் பீடும் எழுதி உருவம் பொறித்தற்கேற்ற கல்லினைத் தேர்ந்து காணுதல் என்றவாறு.

எ - டு : தாழிகவிழ்ப்பத் தவஞ்செய்வார் மண்ணுக
வாழிய நோற்றனை மால்வரை — ஆழிசூழ்
மண்டல மாற்றா மறப்புகழோன் சீர்பொறிப்பக்
கண்டனென் நின்மாட்டோர் கல். (நச்-மேற்)

17) கால்கோள் என்றது = பீடும்பெயரும் உருவும் பொறித்த கல்லினை நிறுத்துதற்குரிய இடத்தைக் கொளுவுதல். அஃதாவது மேடை அமைத்தல். கல்நடுதற்குரிய விழாக் கால்கோள் கொள்ளுதலும் இரட்டுற மொழிதலான் இதன்கண் அடங்கும்.

எ - டு : காப்புநூல் யாத்துக் கடிகமழ் நீராட்டிப்
பூப்பலி பெய்து புகைகொளீஇ — மீப்படர்ந்த
காளைநடுகற் சிறப்பயர்ந்து கால்கொண்மின்
நாளை வரக்கடவ நாள். (நச் - மேற்)

18) நீர்ப்படையாவது : மறவனது உருவம் பொறித்த கல்லினை நீராட்டித் தூய்மை செய்தல்.

எ - டு : பல்லா பெயர்த்து நல்வழிப் படர்ந்தோன்
கல்சொரிந் தாட்டிய நீரே தொல்லை
வான் வழங்கு நீரினும் தூய்தே யதனாற்
கண்ணீ ரருவியும் கழீஇத்
தெண்ணீ ராடுமின் தீர்த்தமாம் அதுவே (நச் - மேற்)

19) நடுதலாவது : கல்லினை நீர்ப்படுத்தபின்னர்க் கால் கொண்ட மேடையின்கண் எழுந்தருளச் செய்தல் (நடுதல் = ஊன்றுதல்)

எ - டு : சீர்த்த துகளிற்றாய்த் தெய்வச் சிறப்பெய்த
நீர்ப்படுத் தற்கு நிலைகுறித்துப்-போர்க்களத்து
மன்னட்ட வென்றி மறவோன் பெயர்பொறித்துக்
கன்னட்டார் கல்சூழ் கடத்து (நச்-மேற்)

20) சீர்த்தகு சிறப்பின் பெரும்படையாவது: தெய்வத்தொடு ஒப்பச் சீர்த்திபொருந்திய சிறப்பினான் அதற்குப் பெருமை செய்தல். சிறப்பாவது பூசனை.

பெருமைப் படுத்துதல் என்பது பெரும்படை என மருவி நின்றது- படைத்தல், பலிதருதல் என்பவையும் அப் பொருளுடையனவேயாம்.

எ - டு : அன்றுகொல் ஆபெயர்த்தாரமரில் வீழ்ந்தோன்கற்கு
இன்றுகொள் பல்லான் இனமெல்லாம் — குன்றாமற்
செய்ம்மினோ சீர்ப்பச் சிறப்பாகத் தீபங்கள்
வைம்மினோ கோட்டம் வகுத்து (நச் - மேற்)

21) வாழ்த்தலாவது: தெய்வமாகிக் கல் நின்ற மறவனைப் பழிச்சுதல். பழிச்சுதலாவது— வாழ்த்தி வழிபடுதல்.

எ - டு : ஆவாழ் குழக்கன்றுய் வித்துக் களத்தவிந்த
நீவாழ வாழிய நின்னடுகல் — ஓவாத
விற்கோட்ட நீண்டதோள் வேந்தன் புலிபொறித்த
பொற்கோட் டிமயமே போன்று (நச்-மே)

காட்சி முதலாக இவ் ஆறனையும் இருகூறாகக் கொண்டு நச்சினார்க்கினியர் தேவர் படிமத்தைத் திருக் கோட்டமமைத்துக் குடமுழுக்குச் செய்வித்து வழிபடும் ஆகமவிதிகளை எண்ணிப் பொருள் கூறுவார்.

புறம் 263, 264 அகம் 131 முதலாய சான்றோர் செய்யுட்கண் இங்ஙனம் மறவர்க்குக் கல்நட்டுத் தெய்வத்தோடொப் பக்கக் கல்நின்றாரை வழிபடும் மரபினைக் காணலாம். பிறவாறு வரும் நடுகல் வழிபாட்டிற்கெல்லாம் இவையே விதியாகக் கொண்டு அடங்குமாறறிந்து அடக்கிக் கொள்க. ‘என்று’ என்பது எண்ணிடைச்சொல்.

என்று இருமூன்று வகையிற் கல்லொடு புணர = என்று சொல்லப்பட்ட ஆறுவகையினையுடைய நடுகல்பற்றிய துறைகளும் சேர. சொல்லப்பட்ட ஏழுமூன்று துறைத்தே = போர் கருதிய புறத்திணைகட்கெல்லாம் ஒழிபாகிய பொதுவியல் மேல் வகுத்துக் கூறப்பட்ட இருபத்தொரு துறைகளையுடையதாகும்.

இந்நூற்பாவிற்கு இளம்பூரணர் முதலாய உரையாசிரியன்மார் கூறியுள்ள உரைகளை ஆராயப்புகின் மிகவிரியுமாகலின் மேற்கூறிய உரைவிளக்கங்களொடு அவற்றை ஒருங்கு நோக்கி ஒவ்வுவன ஒவ்வாதனவற்றை ஓர்ந்து கொள்க.

## சூ. 63 : வஞ்சி தானே முல்லையது புறனே. (6)

**க - து :** அகத்திணையுள் முல்லைக்குப் புறனாயது வஞ்சித்திணை என்கின்றது.

**பொருள் :** கற்புக்கடம்பூண்ட தலைவி தலைவனது பிரிவை ஆற்றியிருக்கும் அக ஒழுக்கமாகிய முல்லைத்திணையினது புற ஒழுக்கமாவது வஞ்சித்திணையாகிய ஒழுக்கமேயாம்.

முல்லைத்திணைக்கு வஞ்சித்திணை புறனாயவாறு என்னை எனின்? ஆளும் இடம் சிறிதென்று எண்ணி மண்ணசை யுற்றுத் தன் மண்ணை நெறியின்றி அகப்படுத்திய ஒரு வேந்தனை அவன் நாட்டின்கண் அஞ்சுதகச் சென்று பொருது அழிக்கும் அரசியற் கடமை மேற்கொண்ட மற்றைய வேந்தன் தன் தலைவியைப் பிரிந்து சென்று பாசறைக்கண் இருத்தல் வேண்டுதலானும், பாசறை அமைப்பிற்கு ஏற்றநிலம் நீரும் நிழலும் உணவும் பெற வாய்ப்புடைய முல்லை நிலமாகலானும் அந் நிலவளம் செழித்தற்குரியகாலம் கார்கால மாகலானும் தனது மண்ணைக் காத்துக் கொள்ளுதல் அரசியற் கற்பாதலானும் அது கருதி அடல் குறித்துச் சென்ற தலைவன் தன் கடமை முற்றுமளவும் தலைவியைப் பிரிந்து ஆற்றியிருத் தலானும் முல்லைக்குரிய முதற்பொருளும் கருப்பொருளும் ஒத்து அமைதலானும் தலைவி ஆற்றியிருந்தற்குக் காரணமாக நிகழும் வஞ்சி ஒழுக்கம் முல்லைக்குப் புறனாயிற்றென்க.

பாசறை காடுறையுலகத்தின்கண் சிறப்பாக அமைதலை

"கான்யாறு தழீஇய அகல்நெடும் புறவிற்
சேண்நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி
வேட்டுப்புழை யருப்பம் மாட்டிக்காட்ட
இடுமுட்புரிசை ஏமுற வளைஇப்
படுநீர் புணரியிற் பரந்தபாடி" (முல்லைப்பாட்டு-24-28)

என்னும் முல்லைப்பாட்டுப் பகுதியான் அறிக.

வஞ்சிவேந்தனை 'முல்லைத்தார் வேந்தன்' எனச்சிறப்பித்துக் கூறுவார் ஐயனாரிதனார்.

## சூ. 64 : எஞ்சா மண்ணசை வேந்தனை, வேந்தன் அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே (7)

**க - து :** வஞ்சித்திணையின் பொதுவியல்பு ஆமாறு கூறுகின்றது.

**பொருள் :** மேற்கூறிய வஞ்சித்திணையாவது, ஆள வேண்டி நாட்டினது எல்லையைப் பெருக்கும் எஞ்சாத வேட்கையுனாய்ப் பிறனொரு வேந்தனது மண்ணினை அகப்படுத்திய வேந்தனை

அம்மண்ணுக்குரிய வேந்தன் நசையுற்ற வேந்தன் அஞ்சுமாறு அவன் நாட்டெல்லையுட் சென்று அடல்புரிதலைக் குறித்த தாகும். நசை = பெருவிருப்பம். அடல் = போரிட்டு அழித்தல்

அரசியல் நெறியைக் கடந்து பிறனுக்குரியமண்ணைக் கவர்ந்தமை தோன்ற 'எஞ்சா மண்ணசை வேந்தன்' என்றும் நெறியின் நீங்கினாரைக் கொலையின் ஒறுத்தல் அரசியலறம் என்பதைப் பிறரும் உணரப் படையொடு செல்லுதல் தோன்ற 'அஞ்சுதகத் தலைச் சென்று' என்றும் கூறினார்.

தலைச்சென்று, என்றதனான் மண்ணை நச்சியவேந்தன் தன் நாட்டகத்து அஞ்சி உறைந்திருத்தலும் அடல்கருதிச் செல்லும் வேந்தன் படையொடு சேறலும் பெறப்படும்.

இவ்வொழுக்கம் மண்ணசையுற்ற பகைவனிடத்து முறையாற் தூது விட்டு அது பயன் தாராத வழி ஆதந்தோம்பிய பின்னர் நிகழ்வதாகலின் இது வெட்சியின் பின்னர்த்தாயிற்று.

இச்சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கூறும் உரைவிளக்கம் ஒவ்வாதென்பதை நாவலர் பாரதியார் மறுப்புறையான் தெளிக. மற்று, பாரதியார் தும்பைத்திணையை இதனொடு இயைபு படுத்துக்கூறும் விளக்கம் வேண்டற்பாலதன்று. அது பற்றித் தும்பைத்திணைச் சூத்திரவுரையுள் விளங்கக் கூறுதும்.

இனி ஒரு சாரார், மண்ணசையுற்ற வேந்தன்மேற் படையொடு சேறலேயன்றிப் பிறவாறு பகைசெய்த மன்னர்மேற் படை எடுத்துச் சேறலும் வஞ்சித் திணையின் பாற்படும் என்பர். அது தமது செருக்கினான் தன் புகழைக் கொன்றுரைத்த வடவேந்தர்மேல் சேரன் செங்குட்டுவன் படை எடுத்துச் சென்றமையை வஞ்சியொழுக்கமாக இளங்கோ வடிகள் கூறுமாற்றானறிக என்பார் அவர். பன்னிருபடல இலக்கணத்தை ஒட்டி அவர் அங்ஙனம் கூறினாராவார் இதனைத்

தென்றிசை என்றன் வஞ்சியொடு வடதிசை
நின்றெதிர் ஊன்றிய நீள் பெருங்காஞ்சியும்
(சிலம்பு - காட்சி - 135 - 6)

என அவர் எதிர் ஊன்றுதலைக் காஞ்சி எனக்கொண்டு கூறினமையானறியலாம். எதிரூன்றல் தனியொரு திணையாகக் கோடல் தொல்காப்பிய நெறியன்று.

இனிப் பதிப்பறுபத் (பதிற்-68, 90) துள் காஞ்சி சான்ற வயவர், காஞ்சிசான்ற செரு (84) எனவரும் தொடர்களான். எதிர் ஊன்றலைக் காஞ்சி எனக் கொண்டதாகக் கருதலாமெனின்? ஆகாது, அவை காஞ்சித்திணைக்குரியவாகும் துறைகள் பலவற்றைப் பகைவர் அடையுமாறு செய்யும் வன்மை நிறைந்த வயவர் என்பதையும் அத்துறைகள் மலிந்த போர் என்பதையும் உணர்த்தி நின்றனவேயன்றி எதிர் ஊன்றலை உணர்த்தின வல்ல என்க. மண்ணசை யுற்றான்மேலன்றிப் பிறவாறு பகை செய்தான்மேற் சேறலை வஞ்சியின்பாற் படுத்துக் கொள்க.

**சூ. 65 :** இயங்குபடை யரவம் எரிபரந் தெடுத்தல்
வயங்கல் எய்திய பெருமை யானும்
கொடுத்தல் எய்திய கொடைமை யானும்
அடுத்தூர்ந் தட்ட கொற்றத் தானும்
மாராயம் பெற்ற நெடுமொழி யானும்
பொருளின் றுய்த்த பேராண் பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
ஒருவன் தாங்கிய பெருமை யானும்
பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும்
வென்றோர் விளக்கமும் தோற்றோர் தேய்வும்
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்
அழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பிற் றுறைபதின் மூன்றே. (8)

**க - து :** வஞ்சித்திணைக்குரிய தலையாயதுறைகள் இவை என்கின்றது.

**பொருள் :** மேற்கூறிய வஞ்சித்திணைக்குரியவை இயங்கு படையரவம் முதலாகிய மிக்க சிறப்பினையுடைய துறைகள் பதின்மூன்றாகும்.

**1)** இயங்குபடையரவம் = போரெனிற்புகலும் புனைகழன் மறவரும், தேரும், களிறும் பிறவும் எழுச்சியுற்றுப் பகைவரின் மிகையழிக்கச் செல்லும் ஆர்ப்பரவமும்.

வெட்சியரவம் மறவரது இயக்கத்தான் எழுவதாகலின் படையியங்கரவம் என்றார். ஈண்டு நால்வகைப் படை மறவர் தாம் எழுப்பும் அரவமாகலின் இயங்கு படையரவம் என்றார். வெட்சி மறவர் கரந்து செல்லுதலின் அவர் செலவின்கண் அரவஞ்செய்யார் என்றறிக.

எ - டு : சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல
இருகுடை பின்பட ஓங்கிய ஒருகுடை
உருகெழுமதியின் நிவந்துசேண் விளங்க
நல்லிசைவேட்டம் வேண்டி வெல்போர்ப்
பாசறையல்லது நீயொல் லாயே
நுதிமுகம் மழுங்க மண்டி ஒன்னார்
கடிமதில் பாயும்நின் களிறடங்கலவே
போரெனிற் புகலும் புனைகழன் மறவர்
காடிடைக் கிடந்த நாடு நனிசேய
செல்வேமல்லேம் எண்ணார் கல்லென்
விழிவுடையாங்கண் வேற்றுப் புலத்திறுத்துக்
குணகடல் பின்னதாகக் குடகடல்
வெண்டலைப் புணரிநின் மான்குளம்பலைப்ப
வலமுறை வருதலும் உண்டென்று அலமந்து
நெஞ்சுநடுங் கவலம் பாயத்
துஞ்சாக் கண்ண வடபுலத்தரசே (புறம் - 31)

இதன்கண் பகைவேந்தன் மேல் அஞ்சுதகச் சென்றவாறும் படைகளின் ஆரவாரமும் கண்டுகொள்க.

விண்ணசைஇச் செல்கின்ற வேலிளையார் ஆர்ப்பெடுப்ப
மண்ணசைஇச் செல்கின்றான் வாள்வேந்தன் — எண்ணம்
ஒருபாற் படர்தரக்கண் பொன்னார்தம் உள்ளம்
இருபாற் படுவதெவன் (பெரும்பொருள் விளக்கம்)

இஃது அரவத்தை விதந்து கூறியது.

2) எரிபரந்தெடுத்தல் - பகைவனது மண்ணசையழியுமாறு அவனது புறநாட்டை இயங்குபடை மறவர் எரிமூட்டுதலும்

சேரிதொறும் விரிந்து சென்று சுடுதலின் 'எரிபரந்தெடுத்தல்' என்றார். இயங்குபடையரவமும், எரிபரந்தெடுத்தலும் என உம்மை விரித்துக்கொள்க.

எ - டு : வினைமாட்சிய விரைபுரவியொடு
மழையுருவின் தோல்பரப்பி
முனை முருங்கத் தலைச் சென்றவர்
விளைவயல் கவர்பூட்டி
மனைமரம் விறகாகக்
கடிதுறைநீர்க் களிறுபடீஇ
எல்லுப்பட விட்ட சுடுதீவிளக்கம்

செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலங்கெடவிருக்கும் வரம்பில் தானைத்
துணைவேண்டாச் செருவென்றிப்
புலவுவாட் புலர் சாந்தின்
முருகற் சீற்றத்து உருகெழுகுரிசில்
மயங்குவள்ளை மலராம்பல்
பனிப்ப கன்றை கனிப் பாகல்
கரும்பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
ஏமநன்னா டொள்ளெரி யூட்டினை
நாம நல்லமர் செய்ய
ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே (புறம் - 16

3) வயங்கல் எய்தியபெருமையானும் = எரிபரந்தெடுத்துப் பகைவரை அஞ்சச் செய்த படை மறவரின் வினை விளகத்தான் வேந்தன் எய்தி நின்ற பெருமையும்.

பெருமையானும் என்பதன்கண் உள்ள ஆன் சீர்நிறைக்க வந்த அசைநிலை. உம்மை எண்ணும்மை, மேல்வருவன வற்றிற்கும் இஃதொக்கும்.

எ - டு : இருங்கண் யானையொடு அருங்கலந் தெறுத்துப்
பணிந்து வழிமொழிதல் அல்லது பகைவர்
வணங்கா ராதல் யாவதோ மற்றே
உருமுடன்று சிலைத்தலின் விசும்பதிர்ந்தாங்குக்
கண்ணதிர்பு முழங்கும் கடுங்குரல் முரசமொடு
கால் கிளர்ந்தன்ன ஊர்தி கால்முளை
எரிநிகழ்ந் தன்ன நிறையருஞ் சீற்றத்து
நளியிரும் பரப்பின் மாக்கடல் முன்னி
நீர் துனைந்தன்ன செலவின்
நிலந்திரைப் பன்ன தானையோய் நின்னே (பதிற்-திர)

இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் உரை சூத்திரச் சொல்லமைப் பிற்கு இயையாமையறிக. பாரதியார் எடுத்துக்காட்டும் அவ்வாறே யுளது. மாணாக்கர் ஓர்ந்தறிக.

4) கொடுத்தல் எய்திய கொடைமையானும் = வஞ்சிமறவர் ஒன்னார் புலத்தைக் கூரெரிகொளுவி வென்று தொகுத்த பொருள்களைப் பரிசிலர்க்கு வேந்தன் கொடுத்தலை மேற்கொண்ட கொடைத்தன்மையும். பொதுப்படக்கூறியமை யான் மறவர்க்குக் கொடுத்தலும் கொள்க.

எ - டு : பாணர் தாமரை மலையவும் புலவர்
பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்
அறனோ மற்றிது வினைமாண் குடுமி
இன்னா வாகப் பிறர்மண் கொண்டு
இனிய செய்தினின் ஆர்வலர் முகத்தே (புறம் - 12)

இது பாணர் முதலியோர்க்குக் கொடுத்தது.

"வால்மருப்பின்" என்னும் பதிற்றுப்பத்துள் (20)
"ஓடிவில் தெவ்வர் எதிர்நின்றுரைஇ
இடுக திறையே புரவெதிர்ந் தோர்க்கென
அம்புடை வலத்தர் உயர்ந்தோர் பரவ
அனையை யாகன் மாறே"

என வருவனவற்றான் மறவர்க்குக் கொடை வழங்குதல் பெறப் படுதல் காண்க.

5) அடுத்தூர்ந்து அட்ட கொற்றத்தானும் = மண்ணசைஇய வேந்தன் காவல் மறவர் எதிர்ந்த காலை வஞ்சிமறவர் அவரை மேற்சென்று பொருதழித்த கொற்றமும். கொற்றம் = வென் றொறுத்தல்.

எ - டு : நீள்நில வேந்தர் நாட்செல் விருப்பத்துத்
தோள்சுமந் திருத்தல் ஆற்றார் ஆள்வினைக்
கொண்டி மாக்கள் உண்டியின் முனிந்து
முனைப்புல மருங்கின் நினைப்பருஞ் செய்வினை
வென்றியது முடித்தனர் மாதோ
யாங்குள கொல்இனி ஊங்குப்பெறும் செருவே (நச்-மேற்)

6) மாராயம் பெற்ற நெடுமொழியானும் = வேந்தன் மாராயம் அளிக்கப் பெற்றதனான் வீறு பெற்ற மறவர்தம் தறு கண்மை தோன்ற (பகைவர் பால்) கூறும் மீக்கூற்று மொழியும்

எ - டு : போர்க்கட லாற்றும் புரவித்தேர்ப் பல்படைக்குக்
கார்க்கடல் பெற்ற காரையன்றோ — போர்க்கெல்லாம்
தானாதியாகிய தார்வேந்தன் மோதிரஞ்சேர்
ஏனாதிப் பட்டத் திவன். (நச் - மேற்)

'துடியெறியும் புலைய' என்னும் புறப்பாட்டும் (287) அது.

பொதுவியற் சூத்திரத்துட் கூறிய தலைத்தாள் நெடுமொழி' என்பது யாவர்க்கும் உரித்தாய்க் களம்புக்குக் கூறும் வஞ்சின மாகும். இது வேந்தனான் மாராயம் அளிக்கப்பெற்ற மறவர்க்கே உரியதாகும். அது சினத்தாற் கூறும் மொழி, இது பெருமிதத் தாற் கூறும் மொழி என வேறுபாடறிக.

7) பொருளின்றுய்த்த பேராண்பக்கமும் = முனைமுகத்துப் போர்க்கருவிகள் யாதுமின்றிப் பகைவர் அச்சமுற வீறு செலுத்திய தறுகண்மைப் பகுதியும்.

பொருள் என்றது ஈண்டு வாள் முதலிய படைக்கலங்களை உணர்த்தி நின்றது.

களிறும் தேரும் புரவியுமாகியவற்றை ஊர்ந்து சென்று பொருதலும் மெய்ம்மறை பூண்டு வாளும் வேலும் பிறவும் ஏந்திப்பொருதலும், கருவிகளின்றி மல்லுற்றுப் பொருதலுமாகிய போராட்டுகளுள் கருவியொடுவந்து பொருதற்கெதிர்ந்த பகைவரைக் கருவியின்றித் தன் பேராண்மைத்திறத்தான் அஞ்சாது பொருதலும் ஒரு வகையாதலான் அது பேராண் பக்கம் எனப்பட்டது. அது கைவேல் களிற்றொடு போக்கிய நிலையும் பிறநிலைகளுமாம்.

எ - டு : "பல்சான்றீரே பல் சான்றீரே" என்னும் புறப்பாட்டுள்
அறிந்தோர் யாரவன் கண்ணிய பொருளே
பலமென்றிகழ்தல் ஓம்புமின், உதுக்காண்
நிலனளப் பன்ன நில்லாக் குறுநெறி
வண்பரிப் புரவி பண்புபா ராட்டி
எல்லிடைப் படர்தந் தோனே கல்லென
வேந்தூர் யானைக் கல்லது
ஏந்துவன் போலான்றன் இலங்கிலைவேலே
(புறம் - 301)

இதன்கண் இவ்வீரன் கருவியின்றிப் போர்புரிய நிற்றலைக் கண்டுகொள்க. "வெண்குடைமதியம்" என்னும் புறப்பாட்டும் (294) அது.

பகைவரை மதியாது செலுத்திய பேராண்மை என்பார் உரையாசிரியன்மார். அதுமறவர்க்குரிய பொதுத்தன்மையாலின் அதனை ஒருதுறையாகக் கூறற்கொவ்வாமையும் இப்பொருள் அவருரையான் பெறப்படா தொழிதலையும் ஓர்ந்து கொள்க.

8) வருவிசைப் புனலைக் கற்சிறை போல ஒருவன் தாங்கிய பெருமையானும் = விசையொடு பெருகிவரும் கடும் புனலைக் கல்லாகிய அணைதடுத்து நிறுத்துமாறு போலத்தன் மேல்கடுகித் தொகையாக வரும் பகைமறவ ரைத்தான் ஒருவனே தடுத்து நிறுத்தும் பெருமிதமும்

எ - டு : வேந்துடைத்தானே முனைகெட நெறிதர
ஏந்துவாள் வலத்தன் ஒருவனாகித்

தன்னிறந்து வாராமை விலக்கலின் பெருங்கடற்கு
ஆழி யனையன் மாதோ என்றும்
பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வண்மையோனே (புறம் - 330)

எனவரும்.

9) பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும் = அடுத்தூர்ந்து கொற்றங்கொண்ட படையாளர் தமக்கு வேந்தன் உணவுத்திரளையை அளித்தலை விரும்பிய பெருஞ்சோற்று நிலை என்னும் துறையும்.

இதன்பின் வென்றோர் விளக்கங்கூறுதலான் இது கொற்றங் கொண்ட மறவர்க்கு பாசறையின்கண் வேந்தன் அளிக்கும் சோறு என்பது விளங்கும்.

வேந்தனும் உடனமர்ந்துண்ணலானும், வெற்றிப்பரிசாகக் கருதாலனும் "பெருஞ்சோறு" எனப்பட்டது. பெருஞ்சோறு = பெருமைக்குரிய உணவு.

உண்டாட்டு என்பது போர் முடிவுற்றபின் வெற்றிக் களிப்பினான் வேந்தன் மட்டொடு வழங்கும் உணவாகும். இது போர் நிகழ்ந்து கொண்டிருக்குங்கால் மேலும் மேலும் வெற்றி பெற ஊக்குதற்களிக்கும் உணவாகும்.

எ - டு : அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந்தும்பை
ஈரைம்பதின்மரும் பொருது களத்தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
(புறம்-2)

என்பதன்கண் வேந்தன் பெருஞ்சோறளித்தல் வந்துள்ளமை காண்க. ஈரைம்பதின்மர் ஐவருக்குரியமண்ணைக் கவர்ந்து கொண்டு அது தமக்கு உரிமையுடையதாக எண்ணி மைந்து பொருளாகப் போரிட்டனராகலின் பொலம்பூந்தும்பை ஈரைம் பதின்மர் என்றார்.

'இணர்ததை ஞாழல்' என்னும் பதிற்றுப்பத்தினுள் (30)

கருங்கட்காக்கையொடு பருந்திருந்தார
ஓடாப் பூட்கை ஒண்பொறிக் கழற்கால்
பெருஞ்சமந்ததைந்த செருப்புகல் மறவர்
உருமுறு நிலனதிர்க்கும் குரலொடு கொளை புணர்ந்து

பெருஞ்சோறு உகுத்தற் கெறியும்
கடுஞ்சினவேந்தே நின் கடுங்குரல் முரசே"

இதனான் பெருஞ்சோறளித்தலை வேந்தன் விரும்புவது புலனாகும்.

10) வென்றோர் விளக்கமும் = போரிடைப் பகைவரை வென்று மேம்பட்ட மறவரைப் பாணரும் புலவரும் பாராட்டி ஏத்துதலானாகிய விளக்கமும். விளக்கம் = ஒளி. அஃது ஈண்டு சீர்த்தியை உணர்த்தி நின்றது.

எ - டு : வீயாயாணர் நின்வயினானே
தாவா தாகும் மலிபெறு வயவே
மல்லல் உள்ளமொடு வம்பமர் கடந்து
செருமிகு முன்பின் மறவரொடு தலைச்சென்று
பனைதடி புனத்தின் கைதடிபு பலவுடன்
யானைபட்ட வாள்மயங்கு கடுந்தார்
மாவும் மாக்களும் படுபிணம் உணீஇயர்
பொறித்த போலும் புள்ளி எருத்தின்
புன்புற எருவைப் பெடைபுணர் சேவல்
குடுமி எழாஅலொடு கொண்டு கிழக்கிழிய
நிலமிழி நிவப்பின் நீள்நிரை பலசுமந்து
உருகெழு கூளியர் உண்டு மகிழ்ந்தாடக்
குருதிச் செம்புனல் ஒழுகச்
செருப்பல செய்குவை வாழ்கநின் வளனே. (பதிற்-36)

"அறாஅ யாணர்" என்னும் பதிற்றுப்பத்தும் அது.

11) தோற்றோர் தேய்வும் = போரின்கண் தோல்வியுற்றரது மெலிவினைப் பரிந்து கூறுதலும். தேய்வாவது பெருமையழிவு.

எ - டு : வால் மருப்பின் களிற்றியானை
மாமலையின் கணங்கொண்டு அவர்
எடுத்தெறிந்த விறல் முரசம்
கார்மழையின் கடிது முழங்க
சாந்துபுலர்ந்த வியல்மார்பின்
தொடி சுடர்வரும் வலிமுன்கை
புண்ணுடை எறுழ்தோள் புடையலங் கழற்கால்
பிறக்கடி ஒதுங்காப் பூட்கை ஒள்வாள்
ஒடிவில் தெவ்வர் எதிர்நின் றுரைஇ
இடுகதிரையே புரவெதிர்ந் தோற்கென
அம்புடைவலவர் உயர்ந்தோர் பரவ
அனையையாகன் மாறே பகைவர்

கால்கிளர்ந்தன்ன கதழ்ரிப்புரவிக்
கடும்பரி நெடுந்தேர் மீமிசை நுடங்குகொடி
புலவரைத் தோன்றல் யாவது சினப்பேர்
நிலவரை நிறீஇய நல்லிசை
தொலையாக்கற்பநின் தெம்முனையானே (பதிற் - 80)

எனவரும்.

12) குன்றாச்சிறப்பின் கொற்றவள்ளையும் = கொற்றங் கொண்டவேந்தன் தோற்றவேந்தனது குன்றாத சிறப்பினை யுடையவளங்களைக் கோடலும்

அஃதாவது தோற்ற வேந்தனது களிறும், தேரும் மாவும், குடையும், முடியும் பிறவுமாகியவற்றைத் தானே வலிந்து கொள்ளுதலும், அவன்பணிந்து திறையாகக் கொடுப்ப கொள்ளு தலுமாம், அவை கொற்றமுற்ற வேந்தற்குப் பெருமையாதலின் 'குன்றாச்சிறப்பின்' என்றார். குன்றாச் சிறப்பின்வள்ளை எனக்கூட்டுக.

மடல்என்பது மட்டையெனவும் முனம் என்பது முன்னை எனவும் வருதல் போல வளம் என்பது வள்ளை என ஒரு சொல்விழுக்காடாக வந்தது.

பாடாண்டிணைக் குரியதாகவரும் கொற்றவள்ளை வேறு இவ்வஞ்சித்திணைக் கொற்றவள்ளை வேறு.

பகைவரது உடைமைகளை அகப்பட வளைத்துக் கோடல் என்னாமோ எனின்? அது பகைவர் தாமே பணிந்து கொடுத்தலை அடக்காமையின் சிறவாதென்க.

எ - டு : 'வால்மருப்பின் களிற்றியானை' (பதிற் - 80) என்னும் பாட்டினுள் "இடுகதிறையே" என்பதனான் அவன் திறை கொடுத்தமையும் இவன்பெற்றமையும் அறிக.

இதற்குக் கொற்ற வேந்தனைப் புகழ்ந்தும் தோற்ற வேந்தற்குப் பரிந்தும் மகளிர்பாடும் உரற்பாட்டு எனப் பொருள் கூறுவார் நச்சினார்க்கினியரும், பாரதியாரும். பரவலும் புகழ்ச்சியு மாகக் கூறும் உரற்பாட்டுப் பாடாண்டினைக்குரிய துறையாதலன்றிப் போர்முனை நிகழ்ச்சிபற்றிய துறை யாகாமையின் ஆசிரியர் உரற்பாட்டினைக் "கொற்றவள்ளை ஓரிடத்தான" எனப் பாடாண்டிணைக்கண் ஓதினார். ஆண்டு

வள்ளை என்பது வள்ளம் என்பதனடியாகப் பிறந்த சொல்லாகும். வள்ளம்→வள்ளை = உரல். அஃது ஆகுபெயராய் உலக்கையை ஓச்சிக் குறுமிடத்து மகளிர் பாடும் பாடலுக்காகி வந்தது. வள்ளை என்னும் பலபொருளொருசொல்லின் நிமித்தங்களைக் கருதாமல் அவர் அங்ஙனங் கூறினார் எனலாம்.

13) அழிபடைதட்டோர் தழிஞ்சியொடுதொகைஇக் கழி பெருஞ்சிறப்பின் துறைபதின்மூன்றே = உயிரை அழிக்கும்வாள் முதலிய படைக்கலன்களை தமது தறுகண்மையான் தடுத்து விழுப்புண்பட்ட மறவரை வேந்தன் பரிவொடு தழுவிப் பாராட்டும் துறையாகிய அதனொடு கூடி வஞ்சித்திணைக்கண் நிகழும் மிக்க சிறப்பினையுடைய துறைகள் பதின்மூன்றாகும்.

எ - டு : ... ... ... ... தழிஞ்சிக்கு "மின்னவிர்
ஓடையொடு பொலிந்த வினைநவில் யானை
நீள்திரள் தடக்கை நிலமிசைப்புரளக்
களிறு களம் படுத்த பெருஞ்செய் யாடவர்
ஒளிறு வாள் விழும்புண் காணிய புறம்போந்து
... ... ... ... ... ... ... ...
புடை வீழ் அந்துகில் இடவயிற்றழீஇ
வாள்தோள் கோத்த வன்கட் காளை
சுவல்மிசை யமைத்த கையன் முகனமர்ந்து
... ... ... ... ... ... ... ... ...
சிலரொடு திரிதரும் வேந்தன் ..."

எனவரும் நெடுநல்வாடைப் பகுதியான் வேந்தன் படை மறவரைத் தழுவிப் பாராட்டும் இத்துறை நிகழ்ச்சி புலனாகும்.

இனி இதற்குப் படைதட்டழிந்தோர் எனக் கொண்டு கூட்டிப் பொருள் கூறுவார் நச்சினார்க்கினியர். அது கவர்படு பொரு ளாதல்காண்க. பாரதியார் இதனை இரட்டுற மொழிதலாக்கிக் கூறுவார் அவர் கூறும் இரண்டாவது பொருள் ஒருவன் தாங்கிய பெருமையுள் அடங்குமாறறிக. தழிஞ்சி என்பதற்கு இடைக் காலத்தார் கொண்ட பொருள் சிறவாமையைப் பாரதியார் உரையான் தெரிந்து கொள்க.

வஞ்சித்திணைக்கண் பிறவாறு நிகழும் ஒழுகலாறுகள் யாவும் இவற்றுள் அடங்குதலின் "கழிபெருஞ்சிறப்பின்துறை பதின்மூன்றே" என்றார் அவ்வாற்றான் கொற்றவையைப் பரவுதல், குடைநாட்கோள், வாணாட்கோள், பூக்கோள்நிலை முதலியவை இயங்குபடையரவத்தின் கண் அடங்கும்.

குறுவஞ்சி எனப் பிறர் கூறும் குறுநில மன்னர் படையும், பிற வேந்தர் படையும் துணையாக வந்து சேர்தலும் பாசறை நிலை கூறலும் பிறவும் வயங்க லெய்திய பெருமைக்கண் அடங்கும்.

கடிமரந் தடிதலும் பகைவர் பாடியை அழித்தலும் பகைவர் பொருள்களை அழித்தலும், கவர்தலும் பிறவும் அடுத்தூர்ந்தட்ட கொற்றத்தின்கண் அடங்கும்.

விழுப்புண் பட்டோரைப் பாராட்டலும், அவர்க்குத் தண்ணடை முதலிய நல்கிச் சிறப்பித்தலும் தழிஞ்சியின் பாற் பட்டடங்கும், மண்ணமையான் நிகழும் பிறவற்றையும் இவற்றுள் அடங்கு மாறறிந்து அடக்கிக் கொள்க.

## சூ. 66 : உழிஞை தானே மருதத்துப் புறனே (9)

**க-து :** அகத்திணையுள் மருதத்துக்குப் புறமாவது உழிஞைத் திணை என்கின்றது.

**பொருள் :** தலைவனது பரத்தமையைக் கருதித் தலைவி ஊடலும் உணர்தலும் புரியும் மருதத்திணையின் புற ஒழுக்கமாவது தலைவனது உழிஞைத்திணையாகிய ஒழுக்கமாம்.

மருதத்திற்கு உழிஞை புறனாயவாறு என்னையெனின்? முழுமுதல் அரணம் முற்றலும் கோடலுமாகிய உழிஞை ஒழுக்கம் நிகழ்தற்குரிய அரண்; பெரும்பான்மையும் தீம்புனலுலகத்ததாக லானும், உள்ளியது முடித்தல் தொல்லெயிற் கிவர்தல் ஏணி மிசைமயக்கம் நீர்ச்செருவீழ்ந்தபாசி முதலிய போர்ச்செயல்கட்கு விடியலாகிய சிறுபொழுது சிறத்தலானும் மதிலை முற்றுதற்கும் விடுதற்கும் பருவ வரையறை இஃமையானும் மருதத்திற்குரிய முதற்பொருளும், கிடங்கில் முதலிய கருப்பொருளும் ஒத்தலொடு, அறநெறியிகந்து குடிமரபு காரணமாகவும் வேட்கைகாரண மாகவும் மேற்கொள்ளும் பரத்தைமை ஒழுகலாறு போல நிலம் பொதுவெனப் பொறாத மரபு காரணமாகவும் திறை முதலிய பொருள் வேட்கை காரணமாகவும், பகைவேந்தன் அஞ்சி அடைந்திருக்கும் மதிலைப் படையொடு சென்று முற்றுதலானும். தலைவியின் நிலைகருதித் தோழி இடித்துரைக்குமாறு போல, மதிலகத்துள்ளோர் நிலைகருதி நல்லிசைப்புலவோர் இடித்துரைகூறலானும் உரிப்பொருளும் ஒத்து, மதிலை முற்றுவோன் பாடியின்கண் உறையுங்கால் புறத்தோரைப் புணரும் வாய்ப்புண்மை கருதி அதனை மாணாப் பிரிவாக எண்ணித் தலைவி ஊடற்குக் காரணமாக அமைதலின் உழிஞை மருதத்திற்குப் புறனாயிற்றென்க.

எஞ்சா மண்ணசையுற்ற வேந்தன் தன்மேல் வஞ்சி சூடி வந்த வேந்தனொடு எதிர் நின்று பொராது அரணகத்து மறைந்து நின்று போரிடக் கருதிய வழிச் சென்றுதலை யழித்தலை எண்ணிவந்த வேந்தன் மதிலை முற்றுதலும், உள்ளகத்தை முற்றுதலுமாகிய ஒழுகாலாறாதலின் உழிஞை வஞ்சித்திணையின் பின்னதாயிற்றென்க.

சூ. 67 : முழுமுத லரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற் றாகும் என்ப (10)

க - து : உழிஞைத் திணையின் பொதுவியல் பாமாறு கூறுகின்றது.

பொருள் : மேற்கூறிய உழிஞைத்திணையாவது அடைத் திருக்கும் பகைவேந்தனது, முழுமுதலரணத்தைச் சூழ்ந்து அழித்தற்கு புறத்தோன் முற்றுதலும், கைக்கொள்ளுதலும், அகத்தோன் அவனைத்தடுத்துக் காத்துக் கோடலும் என்னும் அத்தகைய இலக்கண மரபினையுடையதாகும் எனக்கூறுவர் புலவர்.

அரணகத்துள்ள வேந்தன் முற்றுகை செய்திருக்கும் வேந்தனது நாட்டகத்துள்ள மதிலைத் தன்துணை வேந்தனை விட்டு முற்றச் செய்விப்பதும் உழிஞையே என்பது விளங்க "அனைநெறி மரபிற்று" என்றார் "கோடல்" என்பது புறத்தோன் கைப்பற்றுதலையும் அகத்தோன் காத்துநிற்றலையும் ஒருங்குணர்த்தி நின்றது.

'முழுமுதல் அரணம்' என்றதனான் அரண், தலை, யிடை, கடை என மூவகைப்படும். அவற்றுள் தலையாய அரண் என்பது, அரணுக்குக் கூறப்பெற்ற இலக்கணமெல்லாம் குறை வின்றியுடையது என்பார் இளம்பூரணர். நச்சினார்கினியர்,

முழுமுதலரணமாவது மலையும், காடும், நீருமல்லாத அக நாட்டுச் செய்த அருமதில், அது வஞ்சனை பலவும் வாய்த்துத் தோட்டி முள் முதலியன பதித்த காவற்காடு புறஞ்சூழ்ந்து அதனுள்ளே இடங்கர் முதலிய உள்ளுடைத்தாகிய கிடங்கு சூழ்ந்து, யவனர் இயற்றிய பலபொறிகளும், ஏனைய பொறி களும், பதணமும், ஏப்புழையும், ஞாயிலும், ஏனைய பிறவும் அமைந்து எழுவும் சீப்பும் முதலியனவற்றான் வழுவின்றி யமைந்த வாயிற்கோபுரமும், பிற எந்திரங்களும் பொருந்த இயற்றப்பட்டதாகும். இனி மலையரணும் நில அரணும் சென்று சூழ்ந்து நேர்தலில்லா ஆரதர் அமைந்தனவும்,

இடத்தியற்றிய மதில்போல அடிச்சிலம்பின் அரணமைந்தனவும், மீதிருந்து கணைசொரியும் இடமும் பிற எந்திரங்களும் அமைந்தன வாம், இனிக்காட்டரணும் நீரரணும் அவ்வாறே வேண்டுவன யாவும் அமைந்தனவாம் என்பார்.

"வென்று கலந்தரீஇயர்" என்னும் பதிற்றுப்பத்தினுள்

செம்பொறிச் சிலம்பொடு அணித்தழை தூங்கும்
எந்திரத் தகைப்பின் அம்புடை வாயில்
கோள்வல் முதலைய குண்டுகண் அகழி
வானுற ஓங்கிய வளைந்து செய்புரிசை
ஒன்னாத் தெவ்வர் முனைகெட விலங்கி
நின்னிற் றந்த மன்னெயில் (பதிற் - 53)

எனவரும் பகுதி பழைய அரணமைப்பினை ஓரளவு விளக்குதலைக் காண்க.

அங்ஙனம் இலக்கணம் நிரம்பிய அரணம் யாவர்க்கும் ஒப்ப வாய்த்தல் அரிதாகலான் ஈண்டுக் கூறப்படும் மதிற் போர் பற்றிய ஒழுகலாறு உலகியலோடு நாடக வழக்கினைத் தழுவிய தாகும் என்பது விளங்க "மரபிற்றாகும் என்ப" எனக் கூறினார்.

**சூ. 68 : அதுவே தானும் இருநால் வகைத்தே (11)**

**க - து :** உழிஞைத்திணைக்குரிய துறைவகை இருபகுப்பினதாய் ஒவ்வொன்றும் நாற்கூறாக நிகழும் என்கின்றது.

**பொருள் :** மேற்கூறிய உழிஞையின் ஒழுகலாறு இருநான்கு வகையினதாகும்.

என்றது, புனைந்துரைவகையாற் கூறப்பெறும் முற்றலும் கோடலுமாகிய ஒழுக்கம் ஒவ்வொன்றும் நான்கு நான்கு வகை பட நிகழும் என்றவாறு.

தானும் எனச் சீர்நிறைக்க வந்த இடைச் சொற்கள் அவற்றின் சிறப்புணர்த்தி நின்றன.

இவை ஒவ்வொன்றும் பலதிறப்பட நிகழுமாதலின் துறை என்னாது "வகைத்து" என்றார்.

**சூ. 69 : கொள்ளார் தேஎங் குறித்த கொற்றமும்**
**உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்**
**தொல்லெயிற் கிவர்தலும் தோலின் பெருக்கமும்**
**அகத்தோன் செல்வமும் அன்றி முரணிய**
**புறத்தோன் அணங்கிய பக்கமும், திறப்பட**

ஒருதான் மண்டிய குறுமையும் உடன்றோர்
வருபகை பேணார் ஆரெயில் உளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே (12)

க - து : உழிஞைத்திணைத்துறை இரு நால் வகைத்தென மேற்கூறப்பட்டவை இவை என்கின்றது.

பொருள் : 1. கொள்ளார்தேஎம் குறித்த கொற்றமும் — அரணத்தை முற்றியோன் பகைவரது நாட்டினைத் தன் கருத்திற் கேற்ப நோக்கிய வெற்றி வீறும்.

உள்ளியது முடிக்குந்திறலோனாதலின் காரணத்தைக் காரியமாக (உபசரித்து)க் கூறினார். தன் கருத்தாவது பகைவர் நாட்டினைக் கைக்கொள்ளாமுன் அதனைக்கொண்டான்போலப் பரிசிலர்க்கும் இரவலர்க்கும் வழங்குதலை நோக்குதல், இதனை

... ... ... ... ... ... ... நீயே ஒன்னார்
ஆரெயில் அவர்கட்டாகவும் நுமதெனப்
பாண்கட னிறுக்கும் வள்ளியோய் (புறம் - 203)

என வருதலானறிக.

இராமன் இலங்கையைக் கொள்வதன்முன் அதனை வீடணனுக்கு வழங்கியது இத்துறைக்குரியதாகும் என்பார் நச்சினார்க்கினியர்!

எ - டு ; ஆனா ஈகை அடுபோரண்ணல் என்னும் புறப் புறப்பாட்டினுள்;

மென்புலவைப்பின் நன்னாட்டுப் பொருந
மலையின் இழிந்து மாக்கடல் நோக்கி
நிலவரை யிழிதரும் பல்யாறு போலப்
புலவ ரெல்லாம் நின்னோக்கினரே
நீயே ; மருந்தில் கணிச்சி வருந்த வட்டித்துக்
கூற்று வெகுண்டன்ன முன்பொடு
மாற்றிரு வேந்தர் மண்ணோக்கினையே (புறம்-42)

எனப் பகைவரது நாட்டினைக் கொள்ளுமுன் புலவர்க்கு வழங்க எண்ணினமை கண்டுகொள்க.

2) உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும் — எண்ணியதை எண்ணியாங்கும் முடிக்குந் திண்மையுடைய வேந்தனது செம்மையை எடுத்துக் கூறலும்.

எ - டு : அருங்கடி வரைப்பின் ஊர்கவி னழியப்
பெரும்பாழ் செய்தும் அமையான், மருங்கற
மலையகழ்க்குவெனே கடல் தூர்க்குவெனே
வான் வீழ்க்குவெனே வளிமாற்றுவென் எனத்
தான் முன்னிய துறை போகலின் (பட்டி-269-273)

எனவரும் பட்டினப்பாலை யடிகள் வேந்தன் உள்ளியது முடிக்கும் ஆற்றலைச் சிறப்பித் துணர்த்துமாறறிக.

''ஏற்றுவலனுயரிய '' (புறம் - 56) என்னும் பாடலும் அது.

சிறப்பெனப் பொதுப்படக் கூறினமையான் அவர் பண்பாட்டுச் சிறப்பும், குடிச்சிறப்பும் பற்றிக் கூறுதலும் இத்துறையாமெனக் கொள்க.

அடுநையாயினும் விடுநையாயினும் (புறம்-36) என்னும் புறப்பாட்டு பண்பாட்டினைச்சுட்டிக் கூறியது.

இரும்பனை வெண்டோடு மலைந்தோனல்லன் (புறம்-45) என்னும் புறப்பாட்டு குடிச் சிறப்பினைச் சுட்டிக் கூறியது. பிறவுமன்ன.

3) தொல்லெயிற் கிவர்தலும் = ஒன்னாரது தொன்னலம் வாய்ந்த மதிலிடத்து ஏணி முதலியவற்றை அமைத்து ஊர்ந்து ஏறி அதனை அழிக்க முற்படுதலும்.

இதுகாறும் பிறரான் அழிவுறாமல் ஓங்கி நிற்கும் மதில் என்பது புலப்படத் '' தொல்லெயில் '' என்றார். எயிற்கு என்பது வேற்றுமை மயக்கம் - எயிற்று எனப் பாடங்கொள்வார் இளம்பூரணர். இவர்தல் = படர்ந்து ஏறுதல்.

எ - டு : இழையணிந் தெழுதரும் பல்களிற்றுத் தொழுதியொடு
மழையென மருளும் மாயிரும் பல்தோல்
எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவியொடு
மைந்துடை ஆரெயில் புடைபட வளைஇ
வந்துபுறத் திறுக்கும் பசும்பிசிர் ஒள்ளழல்
ஞாயிறு பல்கிய மாயமொடு சுடர்திகழ்பு
ஒல்லா மயலொடு பாடிமிழ்பு உழிதரும்
மடங்கல் வண்ணம் கொண்ட கடுந்திறல்
துப்புத்துறை போகிய கொற்ற வேந்தே '' (பதிற்று-62)

இதன்கண் ஆரெயிலைமுற்றி வளைத்து அதன்மேல் இவர்தற்கு முற்பட்டமை கண்டுகொள்க.

இற்றைப் பகலுள் எயிலகம் புக்கன்றிப்
பொற்றாரான் போனகங்கைக் கொள்ளானால்
எற்றாங்கொல்
ஆறாதவெம்பசித்தீ ஆற உயிர்பருகி
மாறா மறலி வயிறு (நச் - மேற்) என்பதுமது.

4) தோலின் பெருக்கமும் = மதிலின்கண் ஏறமுற்படும் மறவர் மதில்மேலோர் எய்யும் கணை முதலாயவற்றைத் தடுத்தற் பொருட்டு ஏந்தும் கிடுகுகளின் பெருக்கமும். கிடுகு = கேடயம். அதுதோலைப் போர்த்துச்செய்வதாகலின் தோல் எனப்பெயர் பெற்றது.

எ - டு : "தென்குமரி வடபெருங்கல்" என்னும் புறப்பாட்டினுள்
ஏந்து கொடி இறைப்புரிசை
வீங்குசிறை வியலருப்பம்
இழந்து வைகுவம் இனிநாம், இவன்
உடன்று நோக்கினன் பெரிதெனவும்
வேற்றரசு பணிதொடங்கும்நின்
ஆற்றலொடு புகழேந்திக்
காண்குவந்திசின் பெரும ஈண்டிய
மழையென மருளும் பஃறோல், மலையெனத்
தேனிறை கொள்ளும் இரும்பல்யானை
உடலுநர் உட்க வீங்கிக் கடலென
வான்நீர்க் கூக்குந்தானை" (புறம்-16)

எனவருமாறு கண்டுகொள்க.

இந்நான்குவகைகளும் உழிஞைசூடி மதிலை முற்றுவோர்க்குச் சிறந்துரிமை பெற்று வரும் துறைகளாகும்.

5) அகத்தோன் செல்வமும் = மதில் முற்றப்பெற்றிருக்கும் நிலையை எண்ணி அரணகத்துள்ள வேந்தன் தளராமைக்குக் காரணமாகிய செல்வ வளங்கூறுதலும்.

எ - டு : அளிதோ தானே பாரியது பறம்பே
நளிகொள் முரசின் மூவிரும் முற்றினும்
உழவர் உழாதன நான்குபய னுடைத்தே
ஒன்றே, சிறியிலை வெதிரின் நெல்விளை யும்மே
இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழமூழ்க்கும்மே
மூன்றே, கொழுங்கொடிவள்ளிக்கிழங்குவீழ்க்கும்மே
நான்கே, அணிநிற ஓரி பாய்தலின் மீதமிந்து
திணிநெடுங் குன்றந் தேன் சொரியும்மே

வான்கண் அற்றவன் மலையே வானத்து
மீன்கண் அற்றதன் சுனையே, ஆங்கு
மரந்தொறும் பிணித்த களிற்றினிராயினும்
புலந்தொறும் பரப்பிய தேரினிராயினும்
தாளிற் கொள்ளலிர் வாளிற் றாரலன்'' (புறம்-109)

எனவரும் கபிலர் பாட்டுள் அகத்தோனது செல்வ வளம் புலப்படுத்தப்பட்டமை கண்டுகொள்க.

6) அன்றி, முரணிய புறத்தோன் அணங்கிய பக்கமும் = தனது செல்வ வளத்தான் உளந்தளராதிருத்தலேயன்றித் தனது மதிலை முற்றியிருக்கும் வேந்தனைத் தனது படை வலிமையான் வருந்தச் செய்த கூறுபாடும்.

புறத்தோனை அணங்கிய என உருபுவிரித்துக் கொள்க. அணங்குதலாவது பன்னாள் அடைத்திருந்து பகைவரை மெலிவுறச் செய்தலும், மதிற்பொறிகளான் ஊறுசெய்வித்தலும் பிறவுமாம்.

எ - டு : புற்றுறை பாம்பின் விடநோக்கம் போல் நோக்கிக்
கொற்றுறை வாய்ந்த கொலை வேலோர்—கொற்றவன்
ஆரெயில்மேற் றோன்றினார் அந்தரத்துக் கூடாத
போரெயில்மேல் வாழவுணர் போன்று.
(பெருந்தொகை)

தாக்கற்குப் பேரும் தகர்போல் மதிலகத்து
ஊக்கமுடையார் ஒதுங்கியும்—கார்க்கீண்டு
இடிப்புறம்பட்டாங் கெதிரேற்றார் மாற்றார்
அடிப்புறத் தீடும் அரிது. (பெரும்பொருள் விளக்கம்)

எனவரும்.

இதற்கு முற்றியோன் அகத்தவனை வருத்தும்பக்கம் எனப் பொருள் கூறின் "இருநால் வகைத்தே. நாலிருவகைத்தே" என்பவை வெற்றெனத் தொடுத்தலாய் முடியும். அன்றியும் முற்றிய நிலையும், தொல்லெயிற் கிவர்தலும் அகத்தோனை வருத்துதல் பற்றியவையாதலின் பின்னுங்கூறல் பயனில் கூற்றாய் முடியுமென்க.

7. திறப்பட ஒருதான் மண்டிய குறுமையும் = அரணகத்தும் அரண்மேலும் இருந்து புறத்தோனை அணங்கிய அகத்து வேந்தன் படையொடு ஒரு திறப்பட நெருங்கிப்புரியும் போரும்

குறுமை, என்றது குறுகி (நெருங்கி)ப் புரியும் போரை உணர்த்தி நின்றது. இதனைக் குற்றுழிஞை என்பார் இளம்பூரணர்.

எ - டு : ஊர்சூழ் புரிசை உடன்சூழ் படைமாயக்
கார்சூழ்குன் றன்ன கடை கடந்து — போர்மறவர்
மேகமே போலெயில் சூழ்ந்தார் விலங்கல்போன்
றாகஞ்சேர் தோள்கொட்டி ஆர்த்து. (பெருந்தொகை)

வென்றி பெறவந்த வேந்தை இகன் மதில்வாய்க்
கொன்று குடுமி கொளக்கண்டு—தன்பால்
விருந்தினர் வந்தார்க்கு விண்விருந்து செய்தான்
பெருந்தகை யென்றார்த்தார் பிறர் (பெருந் தொகை)

இது கண்டார் கூற்று.

8) உடன்றோர் வருபகை பேணார் ஆரெயில் உளப்பட = போர் மேற்கொண்டாராய் வரும் உழிஞை மறவரை ஒரு பொருளாகக் கருதாமல் இகழ்த்திருத்தற்குரியதாகப் பொறி முதலியவற்றான் நிறைந்துள்ள மதிலரணைச் சிறப்பித்துக் கூறுதல் உளப்பட.

எ - டு : மொய்வேற் கையர் முரண்சிறந் தொய்யென
வையகமறிய வலிதலைக் கொண்டது
எவ்வழி என்றி வியன்தார் மார்ப
எவ்வழி யாயினும் அவ்வழித் தோன்றித்
திண்கூர் எஃகின் வயவர்க் காணின்
புண்கூர் மெய்யின் உராஅய்ப் பகைவர்
பைந்தலை யுதைத்த மைந்துமலி தடக்கை
ஆண்டகை மறவர் மலிந்துபிறர்
தீண்டல் தகாது வெந்துறை யரணே(தகடூர் யாத்திரை)

எனவரும்.

சொல்லப்பட்ட நாலிருவகைத்தே = முற்றுவோர்க்கும் முற்றப்பட்டோர்க்கும் உரியவாகக் கூறப்பட்ட நான்கு நான்காகி வரும் எண் வகையினையுடையதாகும் மேலே கூறிய உழிஞைத் திணை.

பெற்றதன் பெயர்த்துறை நியமப் பொருட்டாகலின் ஈண்டுந் தொகை கூறினார். இவ் எட்டனையும் நான்கு நான்காக இரு கூறாக்கிக் கொள்ளல் வேண்டுமென்பதை வலியுறுத்தற்கென்க.

சூ. 70: குடையும் வாளும் நாள்கோ ளன்றி
மடையமை ஏணிமிசை மயக்கமும் கடைஇச்
சுற்றமர் ஒழிய வென்றுகைக் கொண்டு
முற்றிய முதிர்வும் அன்றி முற்றிய
அகத்தோன் வீழ்ந்த நொச்சியும், மற்றதன்
புறத்தோன் வீழ்ந்த புதுமை யானும்
நீர்ச்செரு வீழ்ந்த பாசியும் அதாஅன்று
ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும்
மதில்மிசைக் கிவர்ந்த மேலோர் பக்கமும்
இகல்மதிற் குடுமி கொண்ட மண்ணு மங்கலமும்
வென்ற வாளின் மண்ணொடொன்றத்
தொகைநிலை என்னும் துறையொடுதொகைஇ
வகைநான் மூன்றே துறையென மொழிப (13)

க - து: மேற்கூறிய உழிஞைத் திணைக்கண் விரிந்துவரும்துறை இவை என்கின்றது.

பொருள்: (1 - 2.) குடையும் வாளும் நாள்கோள் = மாற்றாரது அரணத்தை முற்றிக் கைக்கொள்ளுதற்குக் கணிவன் குறித்துரைத்த ஓரையின்கண் தான் முற்றக் கருதிய அரணமைந்துள்ள திசையை நோக்கித் தன் கொற்றக் குடையினையும், வெற்றி வாளினையும் புறவீடு செய்தலும்.

நாள்கோள் என்பதனைக் குடையொடும், வாளொடும் தனித்தனிக் கூட்டிக்கொள்க. நாளாவது அசுவிணி பரணி முதலிய விண்மீனுக்குரிய பொழுதுகளாகும். கோள் = கொள்ளுதல். அஃதாவது அந்நாளின்கண் அவற்றைப் புறப்படச் செய்தல்.

பகைவரது அரணத்தை வளைத்தல் கருதிய வேந்தன் இன்னநாளிற் புறப்படின் தனக்கு வெற்றியும் பகைவர்க்குத் தோல்வியும் நேரும் எனக் கோள்நிலைகளை ஆராய்ந்து கணிவன் கூறிய முழுத்தத்தில் புறப்படற்குச் சூழ்நிலை வாயாமல் காலம் தாழ்க்குமெனக்கருதின் கணிவன் குறித்த நாளின்கண் குடையையும் வாளையும் அத்திசை நோக்கிப் புறப்படச்செய்தல், படையொடு புறப்பட்டதாகக் கொள்ளப்படும் என்பது வழக்கு

ஏனைய போர் கருதிச் செல்லுங்காலும் குடையும் வாளும் நாட்கொள்ளுதல் வேண்டப்படுமாயினும் அவற்றிற்குச் சிறிது காலந்தாழ்த்துப்புறம்படினும் குறையில்லை, உழிஞைப் போர்

காலந்தாழ்ப்பின் பகைவர் தம் அரணுக்குள் வேண்டுவனவற்றைத் தொகுத்து ஏமஞ்செய்து கொள்வாராகலின் இவற்றை இத்திணைக்குச் சிறப்பாக அமைத்தோதினர் நூலோர். இதற்குப் படையியங்கரவம் கூறாமைக்குக் காரணமும் அதுவே. சிறுபான்மை படையியங்கரவம், செலவு முதலியன ஏற்றபெற்றி வருமாயினும் இழுக்காகாதென்க.

"இலங்குதொடி மருப்பிற் கடாஅம் வார்ந்து" (பதிற்-திரட்டு) என்னும் பதிற்றுப்பத்தினுள் அரவமும் செலவும் வந்துள்ளமை கண்டு கொள்க.

எ - டு : குடைநாட் கோள் :-
குன்றுயர் திங்கள்போற் கொற்றக் குடையொன்று
நின்றுயர் வாயிற் புறம் நிவப்ப — ஒன்றார்
விளங்குருவப் பல் குடை விண்மீன்போற் றோன்றித்
துளங்கினவே தோற்றந் தொலைந்து
(பெரும் பொருள் விளக்கம்)

வாணாட்கோள் :-
முற்றரணம் என்னும் முகிலுருமுப் போற்றோன்றக்
கொற்றவன் கொற்றவாள் நாட்கொண்டான் — புற்றிழிந்த
நாகக் குழாம்போல் நடுங்கின என்னாங் கொல்
வேகக் குழாக்களிற்று வேந்து (பெரும் பொருள் விளக்கம்)

இத்துறைகள் இரண்டும் அகத்தோற்கும் உரியவென்பார் நச்சினார்க்கினியர். முற்றப்பட்டநிலையில் நாள்கோள் செய்தலாற் பயனின்மையின் அதுபொருந்தாமையறிக.

3) அன்றி மடையமை ஏணிமிசை மயக்கமும் = அவையே யன்றிப் புறமதிலின்கண் மடுத்தலமைந்த ஏணி இடமாக இருந்து இருதிறத்தாரும் கலந்து புரியும் போரும்.

புறத்தோன் ஏணி வழி ஏறியும் அகத்தோன் அவ்ஏணிவழி இறங்கியும் பொருதலின் ஏணிமிசைமயக்கம் என்றார்.

மதிற்பொறிகளைப் பறித்தலும் அழித்தலும், அகத்தோர் அவற்றைக் காத்தலும் இயக்கலும் முதற்கண் நிகழ்த்த வேண்டுதலின் இது முதற்கண் வைக்கப்பட்டது.

எ - டு : சேணுயர் ஞாயில் திணிதோளான் ஏற்றவும்
ஏணி தவிரப் பாய்ந்தேறவும் — பாணியார்
புள்ளிற் பரந்து புகல் வேட்டார் போர்த் தொழிலோர்
கொள்ளற் கரிய குறும்பு.

இது புறத்தோர் செயல்

இடையெழுவிற் போர்விலங்கும் யானையோர் போலும்
மடையமை ஏணி மயக்கிற் — படையமைந்த
ஞாயில் பிணம்பிறக்கித் தூர்த்தார் நகரோர்க்கு
வாயில் எவனாங்கொல் மற்று

இது அகத்தோன் செயல் (பெரும் பொருள் விளக்கம்)

4) கடைஇச் சுற்றமர் ஒழிய வென்று கைக் கொண்டு முற்றிய முதிர்வும் = முற்றிய உழிஞையோன் தன் மறவரைச் செலுத்திப் புறமதிலைச் சுற்றிப் புரிந்தபோர் எதிர்ப்போரின்றி யொழிய, வென்று கைப்பற்றி அதனைக் கடத்தற்கு முற்றிய முதிர்ந்த போர்ச் செயலும்.

புறமதிலாவது ஊர்ப்புறத்துச் சேரிகளையும் சூழ்ந்த அரண்.

எ - டு: கடல் பரந்து மேருச்சூழ் காலன்போற் சென்றார்
கொடிமதில் காத்தோரைக் கொல்லக் — கடலெதிர்
தோன்றாப் புவிபோ லரண்மறவர் தொக்கடைந்தார்
மான்றேரான் மூதூர் வரைப்பு

இதனை அகத்தோற்கும் உரித்தாக்கிக் கூறுவார் நச்சினார்க்கினியர் "வென்றுகைக்கொண்டு" என்பதனான் புறத்தோற்கே உரியதாகக் கோடல் நேரிதாகும்.

5) அன்றி முற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சியும் = அத்துறையேயன்றிப் பகைவரான் முற்றப்பட்ட அகத்தோன் அதனைத் தவிர்த்துக் கோடற்கு விரும்பிய மதிலகத்துப் போர் நிகழ்த்தலும்

முற்றிய என்பது செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது. வீழ்தல் = விரும்புதல் நொச்சியாவது மதில். இது நொசி (வளைவு) என்னும் வினையுரிச் சொல்லடியாக வந்த ஆக்கப் பெயர்.

நொச்சி என்னும் மரப்பெயர் (நொ + சீ = நொச்சி) நோவை நீக்குதல் என்னும் காரணப்பெயரானமைந்தது எனினும் சொல்லொற்றுமை கருதி அதனை அகத்தோற்கு அடையாளப் பூவாகக் கொண்டனர் நூலோர். அதனான் அகத்தோரை நொச்சிமறவர் என வழங்குதல் மரபாயிற்று.

எ - டு: இருகன்றின் ஒன்றிழந்த ஈற்றாப்போல் சீறி
ஒருதன் பதிசுற் றொழியப் — புரிசையின்
வேற்றரணங் காத்தான் விறல் வெய்யோன்
வெஞ்சினத்துக்
கூற்றரணம் புக்கதுபோற்கொன்று (பெ-பொ-விளக்கம்)

மணிதுணர்ந்தன்ன மாக்குரல் நொச்சிப்
போதுவிரி பன்மரனுள்ளும் சிறந்த
காதல் நன்மரம் நீமற்றிசினே
கடியுடை வியனகர்க் காண்வரப் பொலிந்த
தொடியணி மகளிர் அல்குலுங் கிடத்தி
காப்புடைப்புரிசை புக்கு மாறழித்தலின்
ஊர்ப்புறங்கொடா நெடுந்தகை
பீடுகெழு சென்னிக் கிழமையும் நினதே (புறங்-272)

இது மறவர் நொச்சி சூடியமையைப் புகழ்ந்தது.

இதனையும் இருதிறத்தார்க்கும் பொதுவென்பார் நச்சினார்க்கினியர். அகத்தோன் என ஆசிரியர் விதந்து கூறுதலின் அதுசாலாமையறியலாம்.

6) மற்றதன் புறத்தோன் வீழ்ந்த புதுமையானும் = புறமதிலைக் கைப்பற்றிய புறத்தோன் நொச்சி மறவரை வென்று இடைமதிலை முற்றுதற்கு விரும்பிய புதியநிலையும்.

அகத்தோன் செயலை மாற்றுதலின் மற்று வினைமாற்றின் கண் வந்தது. புதுமையாவது புறமதிலின் கண் புரிந்த போர் முறைமையை மாற்றி இடை மதிலைப் பற்றுதற்கு வகுத்துக் கொண்ட போர் முறைமை.

இடைமதிலாவது மன்னவன் கோயிலைச் சூழ்ந்து அமைந்த காவல் மதில். இது செயற்கை அகழியான் சூழப் பட்டிருக்கும். அதனுள் இடங்கரும் வஞ்சனைக் கருவிகளும் இருக்கும்.

எ-டு : வெஞ்சினவேந்தன் எயில்கோள் விரும்பியக்கால்
அஞ்சி ஒதுங்காதார் யாவரவர் — மஞ்சுசூழ்
வான்றோய் புரிசை பொறியு மடங்கின
ஆன்றோர் அடக்கம் போன் றாங்கு (பெ-பொ-விளக்கம்)

இதனையும்இருசாரார்க்குமுரியதாகக்கூறுவார் நச்சினார்க்கினியர் புறத்தோன் என விதந்து கூறியுள்ளமையின் அது பொருந்தாமை யறிக.

7) நீர்ச் செரு வீழ்ந்த பாசியும் = இடைமதிலைச் சூழ்ந்து கிடக்கும் நீர்க்கிடங்கினைக் கடத்தற்கு முயலும் புறத்தோனும் அதனைத் தடுத்தற்கு முற்படும் அகத்தோனும் ஒருவர் ஒருவரை அழித்தலை விரும்பி இகல் புரியும் பாசிநிலை என்னும் போரும்.

நீரிடைப் பாசிபோல நெருங்கியும் விலகியும் உடற்றும் போர் நிலை பாசி எனப்பட்டது.

எ - டு : பொலஞ்செய் கருவிப் பொறையுமிப் பண்ணாய்
நிலந்திடர்ப்பட்ட தின்றாயின் — கலங்கமர்மேல்
வேத்தமர் செய்யும் விரகென்னாம் வேல்மறவர்
நீத்துநீர்ப் பாய்புலிபோல் நின்று (பெருந்தொகை)

8) அதாஅன்று, ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறனும் = நீர்க் கிடங்கின்கண் புரியும் போரன்றியும் அதனைக்கடந்து ஏறிய மறவர் இடைமதிலை வளைக்குங்கால் ஊரகத்துக்காவல் மறவர் எதிர்த்து ஒருவரை ஒருவர் கோறலை விரும்பியபோர் நிலையும்.

பாசி போல ஊரவர் சூழ்ந்தும் ஒதுங்கியும் போர் உடற்றலான் மற்றதன் மறனும் எனப்பட்டது. மறம் = போர்.

எ - டு : மறநாட்டுத் தங்கணவர் மைந்தறிய மாதர்
பிறநாட்டுப் பெண்டிர்க்கு நொந்தார்-எறிதொறும் போய்
நீர்ச்செறி பாசிபோல் நீங்காது தங்கோமான்
ஊர்ச்செரு உற்றாரைக் கண்டு

இது புறத்தோன் உடற்றும் பாசிமறம்.

தாந்தங் கடைதொறுஞ் சாய்ப்பவும் மேல் விழுந்த
வேந்தன் படைப்பிணத்து வீழ்தலான் — ஆங்கு
மறுக்கமழுந்தார் மன்னர்க் குள்ளூர் மறுகிற்
பதுக்கையும் வேண்டாதாம் பற்று (நச் - மேற்)

இஃது அகத்தோன் புரிந்த பாசிமறம்.

9) அகமிசைக் கிவர்ந்தோன் பக்கமும் = இடை மதிலைக் கைப்பற்றிய பின்னர் மன்னவன் உறையும் கோயிற் புரிசையை அகப்படுத்தற்குப் பரந்து சென்றோனது பகுதியும்.

எ - டு : வாயிற் கிடங்கொடுக்கி மாற்றினார் தம்பிணத்தாற்
கோயிற் கிடங்கொடுக்கிக் கோள்மறவர் - ஞாயிற்
கொடுமுடிமேற் குப்புற்றார் கோவேந்தற்காக
நெடுமுடிதாங் கோடல் நினைந்து

இத்துறையை அகத்தோற்கும் உரியதாகக் கூறுவார் நச்சினார்க்கினியர். ஆங்கு அகத்தோன் செயல் மேற்கூறிய 'புறத்தோனை அணங்கிய பக்கம்' என்பதனுள் அடங்குமென்க.

10) இகன் மதிற் குடுமிகொண்ட மண்ணு மங்கலமும் = அங்ஙனம் இவர்ந்தவேந்தன் அகத்து வேந்தனது கோயில்

முடியினைக் கைக் கொண்ட வெற்றியான் அதன்கண் அமர்ந்து நீராடுதலாகிய மண்ணு மங்கலம் என்னும் சிறப்பும்.

எ - டு : ... ... ... ... பகைவர்
கடிமதில் எறிந்து குடுமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடன் படினும்
ஒன்றல் செல்லா உரவுவாள் தடக்கைக்
கொண்டியுண்டித் தொண்டையோர் மருக
(பெரும்பாண் — 150 - 154)

பட்டவேந்தன் பெயரானே முடிபுனைந்து நீராடும் மங்கலம் என்பார் நச்சினார்க்கினியர். அவர் கருத்துப் பொருந்தாமையைப் பாரதியார் மறுப்புரையான் அறிக.

11) வென்ற வாளின் மண்ணொடு ஒன்ற = அகவேந்தன் கோயிற் குடுமியகத்தமர்ந்து மண்ணுமங்கலம் புரிந்த புறத்தோன் தனக்கு வெற்றிதந்த வீரவாளினை நீராட்டிச் சிறப்புச் செய்த லாகிய வாள்மங்கலம் என்னும் விழாவொடு கூட,

எ - டு : செற்றவர் செங்குருதி யாடற்கு வாள்சேர்ந்த
கொற்றவை மற்றிவையுங் கொள்ளுங்கொல்
— முற்றியோன்
பூவொடு சாந்தும் புகையவிநெய்ந்நறைத்
தேவொடு செய்தான் சிறப்பு. (நச் - மேற்)

தலைமைபற்றி வாள் எனக்கூறினாரேனும் வேல் முதலிய வற்றிற்கும் மண்ணுதல் கொள்க.

"பிறர்வேல் போலாதாகி" என்னும் புறப்பாட்டினுள் (332) வேல்மண்ணுதல் வந்தவாறு காண்க. இதனை அகத்தோற்கும் கொள்வர் நச்சினார்க்கினியர் அது சாலாமை தேற்றமாம்.

(12) தொகைநிலையென்னும் துறையொடு தொகைஇ வகைநான் மூன்றே துறையெனமொழிப = அரணத்தைக் கைப் பற்றி வென்ற உழிஞை மறவர்தம் வேந்தனை ஏத்திப் போற்றுதற்குக் குழுமுதலும் தோல்வியுற்ற நொச்சி மறவர் வென்று நிற்கும் வேந்தனைப் பணிந்து அவற்கு ஆளாகக் குழு முதலு மாகிய "தொகைநிலை" என்னும் துறையொடு கூடி மேற்கூறிய உழிஞை வகை இரு நான்கிற்குமுரிய துறைகள் பன்னிரண்டா மெனக் கூறுவர் நூலோர்.

இருசாராரும் வெவ்வேறு நோக்கிற்றொகுதலின் " தொகை நிலை என்னும் துறை " எனப் பிரித்துக் கூறினார். தொகுதல் = குழுமுதல்.

மைந்து பொருளாக இருபெருவேந்தர் பொருது இருவரும் அழிதலைக் கூறும் தும்பைத்திணைக்குரிய தொகைநிலைவேறு. அதனை " இருவருமொழியாத் தொகைநிலை " என்பார் ஆதலின் இஃது அழியாமல் இருசாராரும் குழுமுதல் என்பது புலப்படும்.

இகன்மதிற் குடுமிகொண்ட மண்ணுமங்கலமும் வாள் மங்கலமும் செய்து உழிஞை வேந்தன் வீறுபெற்று இலங்குதல் கூறினமையின் அவன் அழியாமை பெறப்படும்.

'துறை' என்றதனான் வென்ற வேந்தனது படைமறவர் பகைவர் மதிலைப் பாழ்செய்தலும் கவடிவித்திக் கழுதை ஏர்பூட்டி உழுதலும் பிறவும் கொள்க.

' மதியோர் வெண்குடை " என்னும் புறப்பாட்டினுள் (392)
வெள்ளைவரகுங் கொள்ளும் வித்தும்
வைகலுழவ வாழிய பெரிதெனச்
சென்றியான் நின்றனெனனாக " என

வெள்வரகு வித்தினமை காண்க.

இருசாராரும் குழுமியதற்குச் செய்யுள் வந்துழிக் கண்டுகொள்க.

**சூ. 71 : தும்பை தானே நெய்தலது புறனே (14)**

**க — து :** அகத்திணையுள் நெய்தலுக்குப் புறமாவது தும்பைத்திணை என்கின்றது.

**பொருள் :** பிரிவாற்றாத தலைவி உள்ளத்தாற் புலம்பி இரங்குதலைச் செய்யும் நெய்தற்றிணையின் புற ஒழுக்கமாவது தலைவனது தும்பைத்திணையாகிய ஒழுக்கமாம்.

ஆதந்தோம்பலாகிய அறநெறி கருதி ஆனிரைகவர்தலை இடையீடாகவும் ஓராற்றான் பொருள் செயல் வகையாகிய மண்ணசை இடையீடாகவும் அதன் தொடர்பாகிய பகைவர் மதிலைப் பற்றுதல் இடையீடாகவும் நிகழும் வெட்சி, வஞ்சி, உழிஞையாகிய புற ஒழுகலாறுகளைப் போலாமல் இசையும் புகழும் கருதி மைந்துஇடையீடாக நிகழும் தும்பைத்திணை அவற்றின் வேறுபட்டதொரு ஒழுகலாறாகும்.

இத் தும்பைஒழுகலாறு நாடுநகரங்கட்கும் அவற்றின்கண் வாழும் குடிமக்கட்கும் ஊறுபட நிகழும் வஞ்சித்திணை போலாமல் ஊர்ப்புறத்தே மைந்து பொருளாக எதிரெதிர் அமைந்து இருசாராரும் வஞ்சியாது உடற்றும் தறுகண்மைப் போராகலின் இது பெருமணலுலகம் போலமைந்த பரந்துபட்ட களர் நிலத்தே நிகழ்தல் வழக்காதலானும், பெரும்பொழுது வரையறையின்மையானும் போரிற் புண்பட்டு உழந்தோரையும் மண்பட்டு மாய்ந்தோரையும் எண்ணி அவர்தம் கேளிர் பிரிவாற்றாமல் இரங்குதற்குரிய காலமும் போர்நிறுத்தத்திற் குரிய காலமும் எற்படுபொழுதாக அமைதலானும். நெய்தலின் கண் தலைவி கடற்கானலையும் மடற் புள்ளினங்களையும் நோக்கிக் கையற்றுக் கூறி இரங்குதல் போல நால்வகைப்படை மறவர் தம் ஆற்றலும் திறலும் அழிவும் சுட்டி உற்றோரும் மற்றோரும் இரங்குதலானும் முதற்பொருளும் கருப்பொருளும் உரிப்பொருளும் ஒத்து இது நெய்தற்குப்புறனாயிற்றென்க.

**சூ. 72 : மைந்து பொருளாக வந்த வேந்தனைச்**
**சென்று தலையழிக்குஞ் சிறப்பிற் றென்ப. (15)**

**க - து :** தும்பைத் திணையின் பொதுவிலக்கண மாமாறு கூறுகின்றது.

**பொருள் :** மேற்கூறிய தும்பைத்திணையாகிய ஒழுகலாறு தனது வலிமையை நிறுவுதலைப் பொருளாகக் கொண்டு போருடற்றத் தன்மேல் வந்த வேந்தனை இருந்த வேந்தன் எதிர் ஏற்று அவனது செருக்கினை அழிக்கும் சிறப்பினையுடையது எனக் கூறுவர் நூலோர்.

மைந்து = வலிமை. அஃதாவது மெய்யினது வலிமை. இச்சொல் மெய் + தூ என்னும் இரு பண்புரிச் சொற்களின் உட்பிணைப் பாக அமைந்ததொரு பண்புப்பெயர்.

மைந்து எனப் பொதுப்படக் கூறியதனான். கருவிப்போர் வலிமையும் நாற்படைவலிமையும் கொள்ளப்படும்

தலைமையும் சிறப்பும் பற்றி வேத்தனை விதந்து கூறினார். எனினும் படைத்தலைவரும், தண்டத் தலைவரும், தானை மறவரும் தனித்தனி எதிர்நின்று பொருதலும் யானைகளும், குதிரைகளும் தம்முள் எதிரெதிர் நின்று மைந்து பொருளாக உடலுதலும் கொள்ளப்படும்.

தலையழித்தல் என்பதற்குத் தலைமைப்பாட்டினை அழித்தல் என்பார் உரையாசிரியன்மார், பொருதடக்குதல்

என்பார் பாரதியார். தலை என்பது தலைக் கூடினார் என்றாற்போல அழித்தலைச் சிறப்பித்து வினையடையாக நின்ற இடைச்சொல் எனினும் ஒக்கும். அழித்தல் என்பது தேய்த்தல், சிதைத்தல் ஆகிய வினைகளையும் அடக்கி நின்றது.

நாடு முதலிய செல்வ நோக்கின்றிக் குடிமக்களுக்கு ஏதமின்றித் தத்தம் தறுகண்மை புலப்பட இருசாராரும் வஞ்சியாது எதிர்நின்று பொரும் மறவீறு பற்றிய ஒழுக்கமாதலின் "சென்றுதலையழிக்கும் சிறப்பினது" என்றார்

சூ. 73 : **கணையும் வேலும் துணையுற மொய்த்தலின்**
**சென்ற உயிரின் நின்ற யாக்கை**
**இருநிலந் தீண்டா அருநிலை வகையொடு**
**இருபாற் பட்ட ஒருசிறப் பின்றே.** (16)

**க - து :** எய்தியதன் மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**பொருள் :** தும்பைப் போராவது மைந்து பொருளாக வந்தோரைச் சென்றுதலையழிப்போர் எய்த அம்பும் ஓச்சிய வேலும் பாங்குறச் சென்று அவர்மேற் செறிதலின் உயிர் சென்றமையான், துளங்காது நின்றயாக்கை வகையும், வீசியவாள் முதலியவற்றான் வெட்டுண்டு வீழ்ந்த குறையுடம்பும் உறுப்பும் பரந்த நிலத்தினைத் தீண்டாமல், எழுந்தெழுந்து துள்ளும் வகையும் ஆகிய இருதிறப்பட்ட ஒப்பற்ற சிறப்பினையுடையது என்று கூறுவர் நூலோர்

இருநிலந்தீண்டா என்பதற்கு யாக்கை என்னும் வினைமுதல் அவாய் நிலையான் வந்தியைந்தது. அது வாள்முதலிய கருவிகளான் ஏறுண்டு துணிபடல் உய்த்துணர நின்றது. வகை என்பதை யாக்கை என்பதனொடும் கூட்டிக்கொள்க. ஒடு எண்ணுப் பொருட்டாய் நின்றது. ஒரு என்றது ஒப்பற்ற என்றவாறு.

இந்நூற்பாவின் பயனாவது, வெட்சி முதலியபோரின்கண் அவ்வவற்றிற்கோதிய துறைகள் நிறப அவற்றினூடே இருசாராரும் மைந்து பொருளாக எதிரேற்று வஞ்சியாது ஈண்டுக் கூறப்பட்ட இருவகையும் நிகழப் பொருவாராயின் அஃது தும்பையின் பாற்படும் என அறிந்து கோடலாம்.

கணை முதலிய கருவிகள் மொய்த்தவழி அம்மறவன் நின்ற நிலையும், சாய்ந்தநிலையும் கிடந்தநிலையும் அதன் வகையாம். இருநிலந்தீண்டாமல் தலையற்ற உடம்பு (கவந்தம்) ஆடலும், உறுப்புக்கள் துடித்தாடலும் அதன் வகையாம். இவை இருசாராருக்கும் ஒக்கும்.

'அருநிலை' என்பதற்கு நீருள் கிடக்கும் 'அட்டை' எனவும் 'இருபாற்பட்ட' என்பதற்கு இரு கூறாக வெட்டுண்ட எனவும் பொருளுரைத்து அட்டையின் வெட்டுண்ட கூறுகள் தனித்தனி இயங்குமாறு போல வெட்டுண்ட தலையும் உடம்பும் எழுந்து துள்ளுதல் இருநிலந்தீண்டா வகை என்பார் இளம்பூரணர். அட்டை இரு கூறுபடினும் அதன் உயிர் நீங்காமையானும், அது நிலத்தின்கண் ஊர்வதன்றி எழுந்து துள்ளி ஆடுதலின் மையானும் அவர் கருத்துப் பொருந்தாமை புலனாகும்.

உடம்பு அற்று ஆடுதல் என்னும் வழக்கினை அறியாமல் அதனை அட்டையாடல் எனக்கொண்டு விளக்கும் இடைக் கால இலக்கண நூலார் கருத்தினை எண்ணி இளம்பூரணர் அங்ஙனம் கூறினார் போலும்.

வெட்டுண்ட தலையும் எழுந்தாடும் எனக்கொண்டனர் உரையாளர் யாவரும். குருதி ஓட்டம் தலைக்கு மேவாமையான் தலை எழுந்துதுள்ளாதென்பதை அவர் மறந்தனர்.

இனிக் கணையும் வேலும் துணையுற மொய்த்தலின் என்பதற்குப் "பலர் ஒருவனை அணுகிப் பொருதற்கு அஞ்சி அகலநின்று கணைஎய்தும் வேலெறிந்தும் போர்செய்ய" என்பார் நச்சினார்க்கினியர், அதுதும்பை மறவரின் தறுகணாண் மைக்கு இழுக்காகி வஞ்சனையின் பாற்பட்ட சிறுமையாதலின், ஒப்பற்ற சிறப்பினது என்னும் ஆசிரியர் கூற்றுக்கு முரணாகு மென்க.

வெட்சி முதலாய ஒழுகலாறுகளுள் இருசாராரும் களங் குறித்து மைந்து பொருளாகச் செய்யும் போர்கள், வெட்சிப் புறத்துத்துதும்பை, வஞ்சிப்புறத்துத்தும்பை, உழிஞைப் புறத்துத்தும்பை என அமையுமென்பார் நச்சினார்க்கினியர்.

களங்குறித்து இருவர்மைந்து பொருளாகப்போர்மேற் கொண்டபின் அந்நிகழ்ச்சி தும்பைப் பகுதியாவதல்லது வெட்சி முதலியவாகாமையின் அங்ஙனம் கூறுதல் மயங்க வைத்தலாகுமென்க.

எ.-டு : தண்ணடை பெறுதலும் உரித்தே வைந்நுதி
நெடுவேல் பாய்ந்த மார்பின்
மடல்வன் போந்தையின் நிற்குமோர்க்கே (புற-27)

என்பது கணையும் வேலும் மொய்த்து நின்ற நிலை.

தாருந் தாருந் தாமிடை மயங்கித்
தோளுந் தலையுந் துணிந்துவே றாகிய
சிலைத்தோள் மறவர் உடற்பொறை யடுக்கத்து
எறிபிணம் இடறிய குறையுடற் கவந்தம்
பறைக்கட் பேய்மகள் பாணிக்காட (சிலம்பு - கால்கோள்)

இஃது இருநிலந்தீண்டாமல் உடற்குறை ஆடியநிலை. பிறவும் சான்றோர் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

**சூ. 74 : தானை யானை குதிரை என்ற**
**நோனார் உட்கும் மூவகை நிலையும்**
**வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன்**
**தான்மீண் டெறிந்த தார்நிலை, அன்றியும்**
**இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்**
**ஒருவன் ஒருவனை உடை படைபுக்குக்**
**கூழை தாங்கிய எருமையும், படையறுத்துப்**
**பாழி கொள்ளும் ஏமத் தானும்**
**களிறெறிந் தெதிர்ந்தோர் பாடும், களிற்றொடு**
**பட்ட வேந்தனை அட்ட வேந்தன்**
**வாளோர் ஆடும் அமலையும், வாள்வாய்த்து**
**இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும்**
**ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக் கண்ணும்**
**செருவகத் திறைவன் வீழ்ந்தெனச் சினைஇ**
**ஒருவன் மண்டிய நல்லிசை நிலையும்**
**பல்படை ஒருவற் குடைதலின் மற்றவன்**
**ஒள்வாள் வீசிய நூழிலும் உளப்படப்**
**புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே (17)**

**க - து :** தும்பைத்திணைக்குரிய துறைகள் இவை என்கின்றது.

**பொருள் :** 1 2. 3. தானை யானை குதிரை என்ற நோனார்உட்கும் மூவகைநிலையும் என்பது : ஆற்றும் வலியிலார் அஞ்சவரும் தானைநிலை, யானைநிலை, குதிரைநிலை என்று சொல்லப்பட்ட மூவகையாய படைநிலையும் என்றவாறு.

தானை என்றது காலாட்படையினை. இவை தொகுதியாக வன்றி தனித்தனித் தத்தம் பகையொடு எதிர்தலும் உண்மையான் மூவகை நிலையும்'' என்றார்.

''துறக்கம்புகும் வேட்கையுடைமையின் காலாளை முற் கூறினார். மதத்தாற் கதஞ்சிறந்து போரிடும் யானையை அதன்பின் வைத்து மதஞ்சிறுவாமையின் கதஞ்சிறவாத குதிரையை இறுதிக்கண் கூறினார். குதிரையானன்றித்தேர் தானே இயங்காமையின் தேர்க்குமறமின்று என்று அது கூறாராயினார்'' என்னும் நச்சினார்க்கினியர் விளக்கம் போற்றற் பாலதாம்.

தானைநிலை, தானைமறம் எனக் கூறுபடுத்துரைப்பார் ஐயனாரிதனார், அவரைத் தழுவி நச்சினார்க்கினியர் இவை தாமே கருவு கொண்டு பொருவுழித்தானைமறம் யானைமறம் குதிரை மறம் என வேறு பெயர் பெறும் என்பார். அங்ஙனம் பிரிப்பதனால் எய்தூவதோரிலக்கணப் பயனின்மையறிக.

இனி மூவகையும் என்னாது மூவகை நிலையும் என்றதனான் தும்பைப் பூச்சூடுதலும், படையெழுச்சியும் படையரவமும் பிறவும் தானைநிலையின்பாற்படுத்திக் கொள்க.

எ - டு : தானைநிலை :

குழாக் களிற்றரசர் குறித்தெழு கொலைக்களம்
விழாக்களம் போல மெய்ம்மலி உவகையர்
ஆண்மையுள்ளம் கேண்மையிற் றுரத்தலின்
அழுந்துபடப்புல்லி விழுந்துகளம் படுநரும்
நீர்ப்பெயற் பிறந்த மொக்குள் போலத்
தாக்கிய விசையிற் சிதர்ந்துநிலம் படுக்கும்
தகரும் தகரும் தாக்கிய தாக்கின்
முகமுகஞ் சிதர மூட்டுவோரும்
கட்டிய கையொடு கால்தட்குநரும்
கிட்டின கையற்று ஓட்டி நிற்போரும்
சுட்டிய பெயரை விட்டழிப் போரும்
சக்கரம் போலச் சங்குவிட்டெறிநரும்
சிலைப்புடை முரசிற்றலைப் புடைக்குநரும்
மல்லிற் பிடித்து வில்லின் எற்றியும்
ஊக்கியும் உரப்பியும் தோக்கியும் நுவன்றும்
போக்கியும் புளுங்கியும் நாக்கடை கவ்வியும்
எயிறுடன் திருகியும் கயிறுபல வீசியும்
இனைய செய்தியின் முனைமயங்குநரும்
பிறப்பும் பெருமையும் சிறப்பும் செய்கையும்

அரைசறி பெருமையும் உரைசெல்லாண்மையும்
உடையோ ராகிய படைகொள் மாக்கள்
சென்றுபுகும் உலகம் ஒன்றே யாகலின்
ஒன்றுபடு மனத்தொடு கொன்றுகொன்றுவப்பச்
செஞ்சோற்று விலையும் தீர்த்து தம்மனைவியர்
தம்பிணந்தழீஇ நொந்துகலுழ்ந்திரங்கவும்
புதுவது வந்த மகளிர்க்கு
வதுவை சூட்டிய வான்படர்ந்தோரே. [புறத்திரட்டு]

இதுதொகுதி மறவர் நிகழ்ச்சியாகிய தானைநிலை.

வெண்குடை மதியம் மேனிலாத் திகழ்தர
கண்கூ டிறுத்த கடல்மருள் பாசறை
குமரிப்படை தழீஇய கூற்றுவினையாடவர்
தமர்பிறர் அறியா அமர்மயங்கு அழுவத்து
இறையும் பெயரும் தோற்றி நுமருள்
நாள்முறை தபுத்தீர் வம்மின் ஈங்கென
போர் மலைந்து ஒருசிறைநிற்ப, யாவரும்
அரவுமிழ் மணியிற் குறுகார்
நிரைதார் மார்பினின் கேள்வனைப் பிறரே (புறம்-294)

இது தனிமறவர்தானைநிலை.

யானைநிலை :

மாயத்தாற் றாக்கும் மலையும் மலையும் போற்
காயத்தா றஞ்சாக் களிறொடும்போய்ச் — சாயும்
தொலைவறியா ஆடவரும் தோன்றினார் வான்மேல்
மலையுறையும் தெய்வம்போல் வந்து (புறத்திரட்டு-14)

குதிரை நிலை :

மாவா ராதே யாவா ராதே
எல்லார் மாவும் வந்தன எம்மில்
புல்லுளைக் குடுமிப் புதல்வர்த் தந்த
செல்வன் ஊரும் மாவா ராதே
இருபேர் யாற்ற ஒருபெருங் கூடல்
விலங்கிடு பெருமரம் போல
உலந்தன்று கொல்லவன் மலைந்தமாவே [புறம்-273]

எனவரும்.

(4) வேன்மிகு தானை மொய்த்தவழி ஒருவன் தான் மீண்டெறிந்த தார்நிலை அன்றியும், என்பது — வேலாற்போர்

செய்தலான் வெற்றி மிகுகின்ற வேந்தனை அது பொறாத மாற்றோர் அவனை அழிக்கச் சூழ்ந்தவிடத்துக் கொடிப்படைத் தலைவன் ஒருவன் அதனின் நீங்கி வந்து வேந்னைச் சூழ்ந்த பகைவரைப் பொருது எறிந்த தார்நிலை என்னும் துறையும்; அதுவன்றியும் என்றவாறு.

தார் என்பது நால்வகைப் படையையும் சூழ்ந்து அலங்கல் போல முன்செல்லும் கொடிப்படை. இதனை முன்னணிப் படை என்றும், தூசிப்படையென்றும் வழங்குவர். தார் என்பது முன்னிற்றலையுணர்த்தும் தரவு என்னும் சொல்லின் மரூஉவாகும்.

இது தார்ப்படை மறவனின் ஒருவகை மறவீறுகூறலின் இதனைப் பிரித்துணர்த்தினார். இவன் வென்றநிலையைப் பின்னர் வாகைத்திணையுள் "பெரும்பகை தாங்கும் வேலினா னும்" என எடுத்துக் கூறுவார்.

எ - டு: சான்றோர் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க

இவற்கீத் துண்மதி கள்ளே சினப்போர்
இனக்களிற்றியானை இயல்தேர்க்குரிசில்
நுந்தை தந்தைக்கு இவன் தந்தைதந்தை
எடுத்தெறி ஞாட்பின் இமையான், தச்சன்
அடுத்தெறி குறட்டின் நின்று மாய்ந்தனனே
மறப்புகழ் நிலைத்த மைந்தினோன் இவனும்
யுறைப்புழி ஓலைபோல
மறைக்குவன் பெருமநிற் குறிந்து வருவேலே

(புறம் - 290)

என்பது இதன் பாற்படும்.

5) இருவர் தலைவர் தபுதிப்பக்கமும் என்பது = இருபெரும் வேந்தர்தம் தானைத்தலைவர் தம்முள் மைந்துபொருளாகப் பொருதழிந்த பகுதியும் என்றவாறு.

எ - டு: ஆதிசான்ற மேதகு வேட்கையின்
நாளும் கோளும் மயங்கிய ஞாட்பின்
மதியமும் ஞாயிறும் பொருவன போல
ஒருத்தி வேட்கையின் உடன் வயிற்றிருவர்
செருக்கூர் தண்டின் நெருக்கினர் எனவும்
அரவணி கொடியோற் கிளையோன் சிறுவனும்
பெருவிறல் வீமற் கிளையோன் சிறுவனும்
உடன்றமர் தொடங்கிய காலை அடங்கார்
உடங்குவரு சீற்றத்துக் கைப்பட வழங்கி

இழந்தவை கொடாஅர் கிடந்தன வாங்கித்
தேர்மிசைத் தமியர் தோன்றார் பார்மிசை
நின்றுசுடர் நோக்கியும் ஒன்றுபடத் திருகியும்
தும்பியடி பிணங்கும் மண்ணிற் றோற்றமொடு
கொடி கொடி பிணங்கி வீழ்வனபோல
ஒருவயின் வீழ்ந்தடுகாலை
இருபெருவேந்தரும் பெரிதுவந்தனரே [நச்-மேற்]

இதனைத் தலைவர் இருவர் தபுதிப்பக்கமும் எனக்கூட்டி மறவர்க்கெல்லாம் பொதுத்துறையாகக் கொள்ளினும் ஆம். பக்கம் என்றதனான் இருவருள் ஒருவர் மடிதலும் இதன் பாற்படுத்துக்கொள்க.

(6) ஒருவன் ஒருவனை உடைபடைபுக்குக் கூழை தாங்கிய எருமையும் என்பது = இருசாராரும் கலந்து புரியும் கடும்போர் காரணமாக அணி சிதைந்த படைக்குள் புகுந்து ஒருவன் ஒருவனைக் கூழைப்படைபோலத் தடுத்து நிறுத்திய எருமை மறம் என்னும் துறையும் என்றவாறு.

உடைபடை என்பது வினைத்தொகை. கூழைதாங்கிய என்பது உவம உருபு தொக்க தொடர். கூழை - பின்னணிப் படை.

கதம்மிகின் எதிர்வரும் எவற்றிற்கும் அஞ்சாது சிரக்கணித்து நிற்கும் எருமைக்கடாவை ஒப்பப் பகைவர்க்கு அஞ்சாது நிற்கும் தறுகண்மை எருமை மறம் எனப்படும் எருமை மறம் என்பது எருமை எனக் குறைந்து நின்றது.

பெருமையும் எனப்பாடங்கொள்ளின் அது பாடாண்டிணைக் குரித்தாவதன்றித் தும்பையாகாதென்க. இதற்கு உரையாசிரியன்மார் கூறும் விளக்கம் தெளிவுடைத்தாக இல்லை எடுத்துக்காட்டு வந்துழிக்கண்டு கொள்க.

கடுங்கண் மறவன் கனல்விழியாச்சீறி
நெடுங்கைப் பிணத்திடை நின்றான் — நடுங்கமருள்
ஆள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி
வாள் வெள்ளந்தம்மேல்வர. (புற-வெ. மா-139)

என்பது புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யுள்.

7. படையறுத்துப் பாழிகொள்ளும் ஏமத்தானும் என்பது = படைக்கருவிகளை ஏந்தாமல் நீக்கி மெய்வலியாற்புரியும் மற்போராகிய துறையும் என்றவாறு.

பாழி = வலிமை. இஃது ஆகுபெயராய் உடம்பினை உணர்த்தி நின்றது. ஏமம் = மயக்கம். ஈண்டு அஃதிருவர் கலந்து புரியும் மற்போரை உணர்த்தி நின்றது பகைவர் கருவியொடு எதிர்ப்பினும் ஒக்கும்.

எ - டு : நீலக்கச்சைப் பூவா ராடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிற்றொடு வேல்துரந்து இனியே
தன்னுந் துரக்குவன் போலும் ஒன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தர
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பின் ஊக்கி மெய்க் கொண்டனனே (புற-274)

இது பகைவர் கருவியொடு எதிர்த்தது. இருவரும் கருவியின்றி மெய்யாற்புரிந்த போர்த்துறைக்குச் செய்யுள் வந்தவழிக் கண்டு கொள்க.

8. களிறெறிந்து எதிர்ந்தோர்பாடும் என்பது = சினந் தெதிர்ந்த போர்க் களிற்றினையும் மாற்றுவேந்தன் ஊர்ந்து வரும் களிற்றினையும் வாள்கொண்டும் வேல் கொண்டும் எதிர்ந்து புரியும் மறச்செயலும் என்றவாறு.

அரும்பாடுபட்டான் என்பதுபோலப் பாடு என்பது செயல் குறித்து நின்றது. பெருமை எனப்பொருள் கொள்ளின் அது பாடாண் பகுதியாய்ச் செல்லுமென்க. இளம்பூரணர் பாடு என்பதற்கு அழிவு எனப்பொருள் கொண்டுள்ளார் என்பது அவர் காட்டிய உதாரணத்தாற் புலனாகின்றது. அப்பொருள் “களிற்றொடு பட்ட வேந்தனை அட்டவேந்தன்” என மேல் வரும் துறையொடு இயையாமையின் அது பொருந்தாமையறிக.

எ - டு : கட்டி யன்ன காரி மேலோன்
தொட்டது கழலே கையது வேலே
சுட்டியதூவும் களிறே ஒட்டிய
தானை முழுதுடன் விடுத்துநம்
யானை காமினவன் பிறிதெறியலனே (புறத்திரட்டு)

9. களிற்றொடு பட்ட வேந்தனை அட்டவேந்தன் வாளோர் ஆடும் அமலையும் என்பது = ஊர்ந்த யானையொடு பட்டழிந்த வேந்தனைக் கொன்றழித்த வேந்தனது படையாளர் சூழ்ந்து அமலையாடலும் என்றவாறு.

பகைவனழிந்தமைக்கு மகிழ்ந்து ஆடுதற்கு ஆரவாரித்து மறவர் திரளும் திரட்சி அமலை எனப்பட்டது. அமலுதல் - நெருங்குதல் - திரளுதல். அஃது ஈண்டு நெருங்கி ஆடுதலைக் குறித்து நின்றது.

எ - டு : ஆளுங் குரிசில் உவகைக் களவென்னாம்
கேளன்றிக் கொன்றாரே கேளாகி — வாள்வீசி
ஆடினார் ஆர்த்தார் அடிதோய்ந்த மண்வாங்கிச்
சூடினார் வீழ்ந்தானைச் சூழ்ந்து (நச்-மேற்)

எனவரும்.

10) வாள்வாய்த்து இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக்கண்ணும் என்பது = வாளேறு தப்பாமல் வாய்த்தமையான் எதிரேற்ற இருபெரு வேந்தரும் அவருக்குத் துணையாயினாரும்ஆக ஒருவரும் எஞ்சாமல் மாய்ந் தொழிந்த தொகைநிலை என்னும் துறையும் என்றவாறு.

தொகுதல் = மறைதல். அஃது ஈண்டு மாய்ந்தொழிதலைக் குறித்துநின்றது. கண் என்பது அசைநிலை.

எ - டு : வருதார் தாங்கி அமர்மிகல் யாவது
பொருதாண் டொழிந்த மைந்தர் புண்தொட்டுக்
குருதிச் செங்கைக் கூந்தல் தீட்டி
நிறங்கிளர் உருவின் பேஎய்ப் பெண்டிர்
எடுத்தெறி அனந்தற் பறைச்சீர் தூங்கப்
பருந்தருந் துற்ற தானையொடு செருமுனிந்து
அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்
தாம் மாய்ந்தனரே குடை துளங்கினவே
உரைசால் சிறப்பின் முரைசொழிந்தனவே
பல் நூறடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்
இடங்கெட ஈண்டிய வியன்கண் பாசறை
களங்கொளற் குரியோர் இன்றித் தெறுவர
உடன் வீழ்ந்தன்றால் அமரே பெண்டிரும்
பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்
மார்பகம் பொருந்தி ஆங்கமைந்தனரே
வாடாப் பூவின் இமையா நாட்டத்து
நாற்ற உணவி னோரும் ஆற்ற
அரும்பெறல் உலகம் நிறைய
விருந்து பெற்றனரால் பொலிகநும் புகழே (புறம்-62)

எனவரும்-

11. செருவகத்திறைவன் வீழ்ந்தெனச் சினைஇ ஒருவன் மண்டிய நல்லிசை நிலையும் என்பது = போரின் கண்ணே தன் தலைவன் வீழ்ந்து பட்டானாக அதனைப்பொறாத ஒருமறவன் அதற்குக் காரணமானோரை அழித்தற்குச் சினந்து நெருங்கிப் பொருத புகழுக்குரிய நல்லிசைநிலை என்னும் துறையும் என்றவாறு.

மாற்றாரது பெரும்படையை மதியாது நெருங்கிப்பொரும் மறவனது அரசப்பற்று சான்றோரான் புகழ்தற்குரிய தாகலின் நல்லிசைநிலை எனப்பட்டது.

மறவனது சினத்திற்குக் காரணங்கற்பித்தல் வேண்டித்தன் வேந்தன் 'பகைவரது வஞ்சனையாற் பட்டானாக' என்பார் நச்சினார்க்கினியர். அது மைந்துபொருளாகப் பொருதல் துப்பை என்பதற்கு இழுக்காமென்க.

எடுத்துக் காட்டுவந்துழிக் கண்டுகொள்க. நச்சினார்க்கினியர் அவர்கருத்திற்கேற்ப "மறங்கெழு வேந்தன் குரங்கறுத் திட்டபின்" என்னும் பாரதப்பாட்டினைக் காட்டுவர்.

12) பல்படை ஒருவற்கு உடைதலின் மற்றவன் ஒள்வாள் வீசிய நூழிலும், உளப்படப் புல்லித்தோன்றும் பன்னிருதுறைத்தே என்பது = பல்கிநின்ற மாற்றாரது படையானது அதன்மேற் சினந்து மண்டிய ஒரு மறவனுக்கு ஆற்றாமல் சிதைதலின் தன் ஒள்ளிய வாளான் வீசிக் கொன்றுகுவித்தலாகிய துறையும் உளப்படத் தும்பைத்திணை இருசாரார்க்கும் ஒப்பப்பொருந்தி விளங்கும் பன்னிரண்டு துறைகளையுடையதாகும் என்றவாறு.

நூழில் = குவித்தல். அஃது ஈண்டுப் பகைவரைக் கொன்று குவித்தலுக்காகி நின்றது.

எ - டு : வள்ளை நீக்கிய வயமீன் முகந்து
கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்
வேழப் பழனத்து நூழிலாட்டு (மதுரை-255-77)

என்றாற்போலப் போர்க்களத்தின்கண்

அறத்திற் பிறழ அரசெறியுந்தானை
மறத்திற் புறங்கண்டு மாறான் — குறைத்தடுக்கிச்
செல்லுங்காற் காட்டுத்தீச் சென்றாங்குத் தோன்றுமே
பல்படையார் பட்ட படி
(நச்-மேற்)

என்றாங்கு நிகழும்,

இனி, மைந்துபொருளாகப் பலவாறாக நிகழ்வனவற்றை யெல்லாம் இப்பன்னிரண்டனுள் அடங்குமாறு அறிந்து அடக்கிக் கொள்க.மைந்து பொருளாகப் போரேற்றபின் அறத்தின் நீங்கி வஞ்சித்து ஒழுகுதல் வழுவாயினும் பிறிதாறின்மையான் அங்ஙனம் வருதலைத் தும்பைத் திணையின்பாற்படுத்துக் கொள்க.

**சூ. 75 : வாகை தானே பாலையது புறனே (18)**

**க - து :** அகத்திணையுள் பாலைக்குப் புறனாவது வாகைத்திணை என்கின்றது.

**பொருள் :** இருவகைக் கைகோளின் கண்ணும் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்லுதல் தலைவிக்கு வருத்தந்தருவ தாயினும் கடப்பாட்டினை எண்ணி அப்பிரிவை ஏற்று ஒழுகும் பாலைத் திணையின் புற ஒழுக்கமாவது வாகைத்திணையாகிய ஒழுக்கமாம்.

வாகைத்திணை, பாலைத்திணையின் புறனாயவாறு என்னையெனின்? படைச்செருக்கானும் தோள்வலியானும் நடுவிகந்த முடியுடை வேந்தரையும் நயனிகந்து கோல்கோடிய மன்னரையும் அவர் சார்பினரையும் வேறலையும் கோறலையும் கருதிப் போர் மேற்கொண்டு ஒழுகும் ஏனைய பிரிவுகளினும் வேறாய், எழுமைக்கும் ஏமாப்புடைய கல்வி பற்றியும், இன்பமும் அறனும் ஒருங்கு எய்துதற்குக்காரணமாகிய பொருள் பற்றியும் ஏதமில் புகழ் பயக்கும் தூது பற்றியும், அறப்புறம் முதலாய காவற்கடன் பற்றியும் பிரியும் பிரிவுகட்குரியதாகிச் சிறக்கும் பாலைத்திணைபோல இவ்வாகைத் திணையும், வேந்தர்க்கும் மறவர்க்குமே உரிய வெட்சி முதலிய திணைகளைப் போலாமல் அந்தணர் முதலாய நாற்பாலார் அறிவர் தாபதர் முதலானோர்க் கும் மூதில் மடவாராகிய மனைமகளிர்க்கும் ஒப்ப உரியதாய் அவர் தத்தங் கூற்றைப் பாகுபட மிகுதிப்படுக்கும் ஒழுகலாறாகிச் சிறத்தலானும், கல்வியிற் பிரிவையும், பொருள்வயிற் பிரிவையும், உடையதாய்த் தலைமகற்குப் பெருமையும் புகழும் சேர்த்த லானும் அது கருதி ஆற்றியிருந்து தலைவன் மீண்ட காலை ஆயத்தாரும் பிறரும் தலைவனை ஏத்துதல் கண்டு தலை மகள் பெருமிதமுற்று உவத்தலானும், அவ்வாறே தலைவனும் தன்னை ஒத்தாரொடு உறழ்ந்து மேம்பட்டு வெற்றிப் பெருமித முறுதலானும், பாலை ஏனைய நானிலத்தும் அவற்றின் திரிபாக அமைந்து நிகழுமாறு போலப் பெரும்பான்மையும் வெட்சி முதலிய திணைகளிடமாக அவற்றின் பயனாக நிகழ்தலானும்

ஓதலும், தூதும் பிறவுமாகிய கடப்பாட்டாண்மை புரிதற்குப் பின்பனியும் இருவகைவேனிலுமாகிய பெரும்பொழுதும் நண்பகலாகிய சிறுபொழுதும் ஏற்புடைய காலங்களாக அமைதலானும் பாலைக்குரிய முதலும் கருவும் ஒத்துச்சிறத்தலானும் வாகை பாலையதுபுறனாயிற்றென்க. பிற இயைபுகளையும் இவ்வாறே ஓர்ந்துணர்ந்து கொள்க

## சூ. 76 : தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
## பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப. (19)

**க - து** : *வாகைத் திணையின் பொது விலக்கண மாமாறு கூறுகின்றது.*

பொருள் : குலமும் குடியும் பற்றிய மரபானும் மேற்கொண்ட பணிகளின் நிலைகளானும் அவரவர்க்கமைந்த வருத்தமில்லாத ஒழுகலாறுகளுள் தமக்கு உரியவாக வகைபட நின்ற செயற் கூறுகளை அவை விளக்கமுறத் தம் அறிவாற்றல்களான் பிறரினும் மேற்படச் செய்து விளங்குதல் வாகையாகிய ஒழுகலாறு எனக் கூறுவர் நூலோர்.

கொள்கையாவது அவரவர்க்கு வழக்காறாக அமைந்து வரும் கோட்பாடுகளாகும்.

தத்தங் கூறு என்றது அக்கொள்கை வழியே இயற்கையாயும் செயற்கையாயும் அமைந்து நிகழும் செயல்களை. அவை வரும் சூத்திரத்தாற் புலப்படும். மிகுதிப்படுத்தலாவது

அருங்கடி வைப்பின் ஊர்கவின் அழியப்
பெரும்பாழ் செய்தும் அமையான், மருங்கற
மலையகழ்க்குவனே கடல்தூர்க்குவனே
வான்வீழ்க்குவனே வளிமாற்றுவன் எனத்
தான்முன்னிய துறைபோகலின் ... (பட்டின—269-84)

என்றாற்போல அவ்வத் தொழிலின்கண் பிறரொடு ஒப்ப நில்லாமல் மேம்பட்டுத் தோன்றலும் பிறர் உறழ்ந்த வழி அவரை வென்று நிற்றலுமாம்.

எனவே, அவரவர்க்கான தொழிலின்கண் பிறரினும் மேம்பபட்டு விளங்குதல் வாகை என்னும் திணையாதல் புலனாகும். வாகை வெற்றியொடு தொடர்புடையாதலின் அதனை வென்றி எனவும் வழங்குவர்.

இனி இயல்பாகவே மேம்பட்டுத் தோன்றுதலை முல்லை எனவும் உறழ்ந்து வெற்றி பெற்றுத் தோன்றுதலை வாகையெனவும் இடைக்கால நூலோர் கூறுவர். தாளாண்மையின்றிப் பிறரினும் மேம்பட்டுத் தோன்றுதல் அரிதாகலின் அதுவும் பாகுபட மிகுதிப் படுத்தலாகவே கொள்ளப்படும், அதனான் அப்பாகுபாடு சிறவாமையறிக.

இனி நச்சினார்க்கினியர் மிகுதிப்படுதல் என்னாது படுத்தல் என்றமையான் தம்மின் உறழ்ந்த வழியும் ஒருவன் ஒருவனையுறழ்ந்து உயர்ந்தோன் இவன் எனக் கூறலும் வாகையாம் என்பார். படுதல் என்பது கூற்றை என்னும் இரண்டாவதனொடு இயையாது. மற்றுத் தான் தன்னை மிகுத்தலும் பிறர் தன்னை மிகுத்தலும் படுத்தல் என்பதனான் அடங்கும்.

எ. டு. : நன்றாய்ந்த நீள்நிமிர்சடை
முதுமுதல்வன் வாய் போகாது
ஒன்று புரிந்த ஈரிரண்டின்
ஆறுணர்ந்த ஒருமுதுநூல்
இகல்கண்டோர் மிகல் சாய்மார்
மெய்யன்ன பொய்யுணர்ந்து
பொய்யோராது மெய்கொளீஇ
மூவேழ்துறையும் முட்டின்றி போகிய
உரைசால் சிறப்பின் உரவோன்மருக ” (புறம்-166)

இது கௌணியன் விண்ணந்தாயன் பிறரினும் மேம்பட்டு நிற்றலை ஆவூர் மூலங்கிழார் கண்டு கூறிய பார்ப்பனவாகை.

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவதன்றிவ் வுலகத் தியற்கை
இன்றின் ஊங்கோ கேளலம் திரளரை
மன்ற வேம்பின் மாச்சினை ஒண்டளிர்
நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து
செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி
ஒலியல் மாலையொடு பொலியச் சூடி
பாடின் தெண்கிணை கறங்கக் காண்டக
நாடுகெழுதிருவின் பசும்பூண் செழியன்
பீடும் செம்மலும் அறியார் கூடிப்
பொருதும் என்று தன்றலை வந்த
புனைகழல் எழுவர் நல்வலம் அடங்க
ஒருதானாகிப் பொருதுகளத் தடலே (புறம்-76)

இது தன்னொப்பார் பிறரொடு உறழந்து வென்று மிகுதிப் பட்டு நின்றதனைக் கண்டுகூறிய அரசவாகை. பிறவும் சான்றோர் செய்யுள் வந்தவழிக் கண்டுகொள்க.

சூ. 77 : **அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்**
**ஐவகை மரபின் அரசர் பக்கமும்**
**இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்**
**மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்**
**நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்**
**பாலறி மரபிற் பொருநர் கண்ணும்**
**மனைநிலை வகையொடு ஆங்கெழு வகையான்**
**தொகை நிலை பெற்றது என்மனார் புலவர் (20)**

க - து : பாகுபட மிகுதிப்படுத்தல் என மேற்கூறிய தாவில் கொள்கைத் தத்தங் கூறுகளாக வருபவை இவை என்கின்றது.

**பொருள் :** பார்ப்பார்க்குரிய அறுவகைப்பக்கம் என்பது முதலாக மனைநிலை வகையும் என்பது ஈறாக அவ்வாகைத் திணை ஏழுவகையான் தொகைநிலை பெறுவதாயிற்று எனக் கூறுவர் புலவர்.

பக்கம் என்றது 'தாவில் கொள்கைத்தத்தங்கூறு' என மேற்கூறிய பகுப்பினை. 'ஆங்கு' என்பது வாகைத்திணையைச் சுட்டிநின்றது. 'தொகைநிலை' என்பது ஒரு சொல் நீர்மைத் தாய்த் தொகுதி என்னும் பொருள்பட நின்றது.

அகத்திணையுள், பெயரும் வினையுமென்றாயிரு வகைய
திணை தொறும் மரீஇய திணைநிலைப் பெயரே (அகத்-22)
என்பது முதலாக ஏவல் மரபின் ஏனோரும் உரியர் ஆகிய
நிலைமை யவரும் அன்னர் (அகத்-26)

என்பது ஈறாக ஓதப்பெற்ற மாந்தர் தாம் பாலை ஒழுக்கத்திற் பிரிந்து சென்று செயலாற்றுமிடத்து அவர் யாவரும் புறத்திணைக் குரியவராய், ஓதல் முதலாய வினைகளைப் புரிவர் என்றும்

இன்ன இன்ன பிரிவு இவரிவர்க்கு உரிய என்றும் விதித்தமை யான் ஈண்டு அவ்வினைகளைச்சுட்டி அறுவகைப்பட்ட எனவும் ஐவகைப்பட்ட எனவும் இரு மூன்று மரபு எனவும் சுருங்கக் கூறினார். அவை ஒவ்வொன்றும் பலதிறப்பட நிகழ்தலின் வகைப்பட்ட பக்கம் என்றார்.

இருமூன்று மரபின் ஏனோர் என்றது நாற்பாலாருள் ஆண்டுவிதந்தோதிய பார்ப்பாரும், மன்னருமல்லாத வணிகரையும் வேளாண்மாந்தரையும், ஏனோர் சேறலும் (அகத் 29) ஏனோர் படிமைய (அகத் - 30) ஏ னோ ர் மருங்கினும் (அகத் - 33 ) எனக்கூறிய குறுநில மன்னர் தானைத்தலைவர் தண்டத்தலைவர் ஆகியோரையும் அவரல்லாத ஏ னை ய மாந்தரையுமாம்.

இனி அறிவரது திறனும் தாபதரது ஒழுக்கமும், பொருநரது மறச்செயலும் மனைமகளிர் மாண்வினையும் பாலைக்குரிய நிமித்தவினைகளாகாமல், மிகுதிப்படுத்தலின்கண் த த் த ங் கூறாக நிற்றலின் அவற்றைப் பிரித்து விளங்க ஓதினார்.

தேயம், கண், என்பவை பக்கம் என்னும் பொருள்பட நின்றன. ஒடு எண்ணின் கண் வந்தது. இவை ஏழும் துறையாகா வாகைத்திணையின் வகையாம் என்பது விளங்கத் ‘தொகைநிலை பெற்றது’ என்றார்.

விளக்கம் (1) அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்றது = அகத்திணையுள் அந்தணர்க்கு உரியவாக ஓதப்பட்ட ஓதலும் ஓதுவித்தலும், தூதுபோதலும் தேவர் கோட்டம் முதலாயவற்றைப் பேணும்காவலும், வேள்வியான் மன்பதையைப்பேணும் காவலும், அரசாளும் பொறுப்பேற்றவழித் துணைவயிற்சேறலும், வேட்டலானும், ஓதுவித்தலானும் பொருள்செயலும் ஆகிய அறுவகைப்பட்ட பகுதியினும் வினைபுரியுமிடத்து அவற்றைப் பாகுபட மிகுதிப்படுத்தலான் எய்தும் வாகையும் என்றவாறு.

பார்ப்பனப்பக்கத்து வாகை பார்ப்பனவாகையாம். அகத்திணையுள் உயர்ந்தோர் என்றது பாப்பாரை(அந்தணரை) என இச்சூத்திரத்தான் விளங்க வைத்தார்.

அந்தணர், மறையோர், ஐயர், பார்ப்பார் என்பவை தம்முள் நிமித்த வேறுபாடுடைய சொற்களாயினும் அவர் நால்வரையும் ஒருகுறியீட்டான் அடக்குதல் வேண்டி இயல்நூலோர், பார்ப்பனர் என வழங்குதல் தோன்றப் பார்ப்பனப்பக்கம் என்றார்.

இதனை, “ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றல் என்று ஆறுபுரிந் தொழுகும்
அறம்புரி அந்தணர் வழிமொழிந் தொழுகி”

எனக் கௌதமனார் (பதிற்-24) கூறுமாற்றானறிக இதன்கண் ஈதல் என்றது கற்பித்தலை. ஏற்றல் என்றது ஓதுவித்தல் வேட்பித்தல் வழிவரும் ஊதியமாகிய பொருள் கோடலை. வழிமொழிந்தொழுகி என்றதனான் பூசனை முதலியவற்றைக் கொள்ளுதலும் ஏற்றலாய் அடங்குமென்க.

எ - டு : ஓதல், ஓதுவித்தல்

இம்மை பயக்குமால் ஈயக்குறைவின்றால்
தம்மை விளக்குமால் தாமுளராக் கேடின்றால்
எம்மை உலகத்தும் யாங்காணேன் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து (நாலடியார் - 132)

ஒத்த முயற்சியான் ஒத்து வெளிப்படினும்
நித்திய மாக நிரம்பிற்றே—எத்திசையும்
தாவாத அந்தணர் தாம்பயிற்றிக் காவிரிநாட்டு
ஓவாத ஓத்தின் ஒலி. (நச்-மேற்)

தூது : வயலைக் கொடியின் வாடிய மருங்குல்
உயவல் ஊர்திப் பயலைப் பார்ப்பான்
எல்லி வந்து நில்லாது புக்குச்
சொல்லிய சொல்லோ சிலவே அதற்கே
ஏணியும் சீப்பும் மாற்றி
மாண்வினை யானையும் மணிகளைந்தனவே
(புறம்-305)

காவல் : காவல் என்பது அந்தணர்க்கு வேட்டலும் வேட்பித்தலுமாம். வேட்டலை : "நன்றாய்ந்த நீள்நிமிர்சடை" என்னும் புறப்பாட்டான் அறிக. (புறம்-166)

"நளிகடல் இருங்குட்டத்து" என்னும் புறப்பாட்டினுள் (26)

ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்றமாக

மன்னர் ஏவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே"

என வேட்பித்தது வந்தவாறு கண்டு கொள்க.

அறப்புறங்காவற்கும், பகைவயிற்செலவிற்கும் சான்றோர் இலக்கியம் வந்துழிக் கண்டு கொள்க. பாரதத்துள் அசுவத்தாமன் படைத்தலைமை ஏற்றதும், பரசுராமன் மன்னர் பகை அழித்ததும் துணைவயிற் சேறலும், பகைவயிற்சேறலுமாம்,

பக்கம், என்றதனான் தானைத் தலைமைபூண்டு செயலாற்றலும் அரசன் உழையிருந்து உதவலும் நல்லிசைப் புலமையான் நன்னய முரைத்தலும் பிறவும் கொள்க.

வாகை என்பது தத்தங் கூற்றை மிகுதிப்படுத்தல் என்னும் இலக்கணத்தை நோக்காமலும், பார்ப்பனரின் அறுவகைப்பட்ட பக்கம் எனக்கொண்டு கூட்டல் வேண்டுமென்பதை உணராமலும், பார்ப்பார் அறுவகையினர் என விபரீதமாக எண்ணிப் பொருள் விரிப்பார் பாரதியார். ஐவகை மரபின் அரசர் பக்கமும் என்பதற் கும், இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் என்பதற்கும் அவ்வாறே பொருள் கூறுவார். அவர் கருத்து நூல்நெறிக் கொவ்வாமை வெளிப்படை. நச்சினார்க்கினியர் இடைக்கால ஆரிய வழக்கினைக்கருதி ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் ஈதல் ஏற்றல் எனப்பொருள் கூறுவார். இத்தடு மாற்றங்களுக்கு ஏது அகத்திணை மாந்தரையும் புறத்திணை மாந்தரையும்வேறு வேறாகக் கருதிக் கொண்டமையேயாம்.

2. ஐவகை மரபின் அரசர் பக்கமும் என்பது = அரசியல் நூல் கலைநூல், நீதிநூல், படைக்கலக் கல்வி ஆகியவற்றை ஓதி உணர்தலும், பயின்றறிதலும் தூது போதலும் முல்லை முதலாச் சொல்லிய முறையான் பிழைத்தது பிழையாதாதல் வேண்டிக் காவல் புரிதலும், குடிபுரந்தோம்பலும், பகைவயிற் சேறலும், துணைவயிற்சேறலும் என அகத்திணையில் வகுத்துக் கூறப்பெற்ற ஐவகைப்பகுதிக் கண்ணும் செயலாற்றலை மேற் கொண்டு அவற்றைப் புரியுமிடத்துத் தத்தங் கூற்றைப் பாகுபட மிகுதிப்படுத்தலான் எய்தும் வாகையும் என்றவாறு. அரசர் பக்கத்து வாகை = அரச வாகை எனப்படும்.

அரச வாகையைக் கூறுமிடத்து வேந்தன், மன்னன் இறைவன் என்னும் பிறபெயர்களான் கூறாமல் நாட்டுரிமையும் நாடாளும் உரிமையும் தோன்ற அரசன் என்னும் குறியீட்டாற் கூறினார். அரையத்தையுடையவன் அரசன் ஆதலின்.

அரையம் = நகர். இச்சொல் அரையன் -- அரயன் – அரசன் என மருவி நின்றது. அரையம் என்பது ஆர் என்னும் உரிச் சொல்லடியாகப் பிறந்த பெயர். ஆர் = வட்டம், கோட்டம். அரையம் என்பது உடைமைப் பொருள்தரும் இகரத்தையும் அம் என்னும் இடப்பொருள் விகுதியையும் பெற்று மருவிய உட்பிணைப்புச் சொல்லாகும். இதன் திரியாக அமைந்த வட மொழிப் பெயரே இராச்சியம், இராசன் என்பவை. இராசன்

என்பதற்கு இயைபுடைய சொல் மேலையாரிய மொழிகளுள் இல்லாமையின் அது பழந்தமிழ்ச் சொல்லின் திரிபாதல் புலனாகும். "நீடுநிலையரையத்துக் கேடும் கேளினி" (புறம்-208) என்னும் புறப்பாட்டடியானும் அதுவிளக்கமாகும்.

பகையை வென்று திறை கோடலும் நாடு கோடலுமன்றி வாணிகம் முதலிய தொழில்களான் பொருளீட்டுதல் மன்னவர் மாண்பாகாமையான், இழைத்த ஒண்பொருட்பிரிவை மேவிய சிறப்பின் ஏனோர்க்குரியதாக அகத்திணையியலுட் கூறினார். அதனான் பொருவயிற் பிரிவு ஒழிந்த ஏனைய கல்வி, பகை தணிவினை, தூது, காவல், துணை ஆகிய ஐந்து தொழில்கள் பற்றிய வினைகளே அரசர்க்குரிய வையாக அமைந்தமை நோக்கி ஐவகை மரபின் அரசர் பக்கம்' என்றார் என்க.

பகைவென்று திறைகோடலும் ஆறிலொரு கூறு இறை கோடலும் உல்கு முதலியவற்றான் பொருள் கோடலும் தண்டத் தாற்பொருள் கோடலும் பொருள்வயிற் பிரிவாகாமை புணர்ந்து கொள்க.

எ - டு: சொல் பெயர் நாட்டம் கேள்வி நெஞ்சமென்று
ஐந்துடன் போற்றி அவை துணையாக
எவ்வஞ்சூழாது விளங்கிய கொள்கை
.. ... ... ... ... ... ... ... ...
நன்கலந் தரூஉம் மண்படு மார்ப! (பதிற்-21)

என அரசனது ஓதல் மரபுணர்த்தியவாறு கண்டு கொள்க.

'ஊழி உய்த்த உரவோ ரும்பல்!
பொன்செய் கணிச்சித் திண்பிணி உடைத்துச்
சிரறுசில ஊறிய நீர்வாய்ப்பத்தல்
கயிறுகுறு முகவை மூயின மொய்க்கும்
ஆகெழுகொங்கர் நாடகப் படுத்த
வேல் கெழுதானை வெருவருதோன்றல்!
உளைப் பொலிந்த மா
இழைப் பொலிந்த களிறு
வம்பு பரந்த தேர்
அமர்க்கு எதிர்ந்த புகல் மறவரொடு
துஞ்சுமரந் துவன்றிய மலரகன் பறந்தலை
ஓங்குநிலைவாயில் தூங்குபு தகைத்த
வில்விசை மாட்டிய விழுச்சீர் ஐயவி
கடிமிளை குண்டு கிடங்கின்
நெடுமதில் நிரைப்பத ணத்து

அண்ணல் அம் பெருங்கோட்டு அகப்பாஎறிந்த
பொன்புனையுழிஞை வெல்போர்க் குட்டுவ'|(பதிற்-22)

என்பது பகைதணிவினை கூறிற்று.

"மடந்தாழும் நெஞ்சுத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தாரணம் முழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
நாராயணாவென்னா நாவென்ன நாவே" (சிலம்பு ஆய்ச்சி)

என்பது அரசன் தூது சென்றமை சொல்லிற்று.

"சினனேகாமம் கழி கண்ணோட்டம்
அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை
தெறல் கடுமையொடு பிறவுமிவ் வுலகத்து
அறந்தெரிதிகிரிக்கு வழியடையாகும்
தீது சேணிகந்து நன்றுமிகப் புரிந்து
கடலும் கானலும் பலபயம் உதவ
பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது
மையில் அறிவினர் செவ்விதின் நடந்துதம்
அமர்துணைப் பிரியாது பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
ஊழி உய்த்த உரவோரும்பல்" (பதிற்-28)

என்பது அரசனது காவற் சிறப்புணர்த்திற்று.

கடல் கொளப்படாஅது உடலுநர் ஊக்கார்
கழல்புனை திருந்தடிக் காரிநின் நாடே
அழல்புறந் தரூஉம் அந்தண ரதுவே
வீயாத் திருவின் விறல்கெழு தானை
மூவருள் ஒருவன் துப்பாகியர் என
ஏத்தினர் தரூஉம் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வரூஉம் இரவலரதுவே
வடமீன் புரையும் கற்பின் மடமொழி
அரிவை தோளள வல்லதை
நினதென இலைநீ பெருமிதத்தையே (புறம்-122)

இதன்கண் மலையமான் திருமுடிக்காரி வேந்தர்குத் துணை யாகப் போர்வழிப்புகுதலைப் புலப்படுத்தியவாறு கண்டுகொள்க.

பக்கம் என்றதனான், நாடுகாவலும் அறப்புறங்காவலுமே யன்றி, அறங்கூரவை ஆன்றோரவை ஆயவற்றின்கண் அமர்ந்து நீதிகாத்தலும், பாணர் கூத்தர் முதலானோரை வள்ளன் மையாற் காத்தலும் பிறவும் காவலாயடங்கு மெனக்கொள்க.

(3) இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும் என்றது = நான்மறை ஓத்துக்களின் வழிவந்த. ஆகமம் முதலாயநூல் களையும் பிறபிற கலை நூல்களையும் செய்யுள் நூல்களையும் ஓதலும், மன்னராற் சிறப்புப்பெற்றவழி, பகைமேற் சேறலும், தூது போதலும், துணைவயிற் செல்லுதலும், காவல்மேற்கோடலும் வாணிகம் முதலிய வற்றான் பொருளீட்டலும் உழுதுபயன் விளைத்துப் பொருளீட்டலும் ஆகிய அறுவகைப்பட்ட வினைகளின்கண் அந்தணரும் அரசருமல்லாத ஏனோராகிய வணிகரும், வேளாண்மாந்தரும் தத்தங் கூற்றைப் பாகுபட மீகுதிப்படுத்தலான் எய்தும் வாகையும் என்றவாறு.

வாணிகர் எய்தும் வாகை வாணிக வாகை என்றும் வேளாண் மாந்தர் எய்தும் வாகை வேளாண் வாகை என்றும் வழங்கப்பெறும்.

வேற்றுமை தெரிந்த நாற்பாலாருள் அந்தணரை உயர்ந் தோர் என்றும், அரசரை வேந்தர் என்றும் அகத்திணை யியலுள் விதந்து கூறி மற்றை இருவரையும் ஏனோர் என்றும் பின்னோர் என்றும் குறித்துக் கூறினமையான் ஈண்டு அவ் வாய்ப்பாட்டானே உணர்த்தல் வேண்டி. இருமூன்று மரபின் ஏனோர் என்றார்.

வாணிகமும் வேளாண்மையும் (உழப்பும், உழவும்) குலமும் குடியும் பற்றி உரிமையுடையவையாகாமை யானும் அறிவும் ஆற்றலும் உடையார் யாவர்க்குப் பொதுவாக அமைந்து வருதலானும் ஏனோர் எனப்பொதுமைப் படுத்தோதினார் என்க. அவ்வாற்றான் அந்தணர் குலச்சிறப்பானும் அரசர் குடிச் சிறப்பானும் வழங்கப் படுவாராயினர் என்க. இங்ஙனம் வகுத்துக் கூறுதல் மரபென்பதை வள்ளுவத்தானும் தெரிந்து கொள்க.

இனி இருமூன்று மரபின் வணிகரும் வேளாளரும் எனச் சுட்டிக் கூறாமல் ஏனோர் என அடக்கிக் கூறியது என்னை யெனின்? அகத்திணையியலுள் பிரிவுகட்குரிய மாந்தரை வகுத்துரைக்குமிடத்து. வேந்தர் என அரசரை வெளிப்படை யாகவும், உயர்ந்தோர் என அந்தணரைக் குறிப்பாகவும் கூறி அரசுக்கு அங்கமாவாரையும் வணிகரையும் வேளாண்மாந்தரை யும் பிறவினைவலபாங்கினரையும் கூறுமிடத்து

"தானே சேறலும் தன்னொடு இவணிய
ஏனோர் சேறலும்" எனவும்
"மேவிய சிறப்பின் ஏனோர்படிமைய" எனவும்
ஒத்தின் ஆன, வேந்து வினையியற்கை,

வேந்தனின் ஒரீஇய ஏனோர் மருங்கினும்
எய்திடன் உடைய ''

எனவும் அடக்கிக் கூறினமையான் அவர் எல்லோரும் அடங்க ஈண்டு ஏனோர் எனத் தொகுத்துக் கூறினார் என்க.

அம்முறைமையானே இச்சூத்திரத்துள் விதந்து கூறப்பெறும் அறிவர், தாபதர், பொருநர் என்னும் மாந்தரல்லாத ஏனைய சிற்றரசர். குறுநில மன்னர், அமைச்சர், தானைத் தலைவர் முதலாய அரசச் சுற்றத்தாரும், நல்லிசைப்புலவரும்,பண்ணிசைப் பாணரும், கூத்தரும் பிற கலை வல்லுநரும் தத்தங்கூற்றைப் பாகுபட மிகுதிப்படுத்தற்கண் வாகை சூடற்குரியார் என்பது போதரும்.

இனித் தத்தங் கூற்றினை மிகுதிப்படுத்தற்கு ஒவ்வாத வினைவல பாங்கினரும் குற்றேவல் மரபினரும் அடியோரும் இழிதொழிலாளரும் பரவுதற்கும், புகழுதற்கும் ஏற்றவராகாமை யான் அவரும் அவர்போல்வாரும் வாகையொழுக்கத்திற்கு உரியராகார் என அறிக.

அந்தணர் முதலாய நாற்பாலருக்கும், ஏனோர்க்கும் புற ஒழுக்கமாதற்குரிய செயல்களைப் பற்றி மரபியலுள்

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங்காலை அந்தணர்க்குரிய [மரபியல் - 71]
படையும் கொடியும் குடையும் முரசும்
நடைநவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவு கொள் செங்கோல் அரசர்க்குரிய (மரபி - 72)
அந்தணாளர்க்கு அரசு வரை வின்றே (மரபி - 73)
பரிசில் பாடாண்டிணைத் துறைக்கிழமைப் பொருள்
நெடுந்தகை செம்மல் என்றிவை பிறவும்
பொருந்தச் சொல்லுதல் அவர்க்குரித் தன்றே (மரபி - 74)
ஊரும் பெயரும் உடைத்தொழிற் கருவியும்
யாரும் சார்த்தி அவையவை பெறுமே (மரபி-75)
தலைமைக் குணச்சொலும் தத்தமக் குரிய
நிலைமைக் கேற்ப நிகழ்த்து மென்ப. (மரபி-76)
இடையிரு வகையோர் அல்லது நாடின்
படைவகை பெறுஅர் என்மனார் புலவர் (மரபி-77)
வைசியன் பெறுமே வாணிக வாழ்க்கை (மரபி-78)

மெய்தெரி வகையின் எண்வகை உணவின்
செய்தியும் வரையார் அப்பா லான (மரபி-79)
கண்ணியும் தாரும் எண்ணினர் ஆண்டே (மரபி-80)
வேளாண் மாந்தர்க்கு உழுதூ ணல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி (மரபி-81)
வேந்து விடுதொழிலின் படையும் கண்ணியும்
வாய்ந்தனர் என்ப அவர் பெறும் பொருளே (மரபி-82)
வில்லும் வேலும் கழலும் கண்ணியும்
தாரும் மாலையும் தேரும் மாவும்
மன்பெறு மரபின் ஏனோர்க்கும் உரிய (மரபி-84)
அன்ன ராயினும் இழிந்தோர்க்கில்லை (மரபி-85)

எனக் கூறுமாற்றான் வேற்றுமை தெரிந்த நாற்பாலார் பற்றிய கோட்பாடுகளை அறியலாம். இந் நூற்பாக்களுக்குரிய செம் பொருள் மரபியலுள் கூறப்படும்.

எ - டு : உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே
பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலான் தாயும் மனந்திரியும்
ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது அவருள்
அறிவுடையோன் ஆறு அரசுஞ் செல்லும்
வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனும் அவன்கட்படுமே (புறம் - 183)

இஃது ஏனோரின் ஓதல் பற்றிக் கூறிற்று.

பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின் நேர் பச்சை மிஞிற்றுக் குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை எஃகம்
வேந்தூர் யானை ஏந்து முகத் ததுவே
வேந்துடன்று எறிந்த வேலே என்னை
சாந்தார் அகலம் உளங்கழிந் தன்றே
உளங்கழி சுடர்ப்படை ஏந்திநம் பெருவிறல்
ஓச்சினன் துரந்தகாலை மற்றவன்
புன்தலை மடப்பிடி நாண
குஞ்சரமெல்லாம் புறங்கொடுத்தனவே

இது பகைதணி வினை கூறிற்று

இவ்வே ; பீலியணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ்திருத்தி நெய்யணிந்து
கடியுடை வியல்நகரவ்வே, அவ்வே
பகைவர்க்குத்தி கோடுநுதி சிதைந்து
கொல்துறைக் குற்றிலம் மாதோ என்றும்
உண்டாயின் பதங்கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ண லெங்கோமான் வைந்நுதிவேலே (புறம் - 95)

இஃது அதியமான் பொருட்டுத் தொண்டைமானிடம் ஒளவை யார் தூது சென்றது.

'இரும்பிடித் தொழுதி' என்னும் புறப்பாட்டு (44) துன்புறும் மக்களின் பொருட்டுக் கோவூர்கிழார் தாமே தூதராகி நெடுங்கிள்ளிக் குரைத்தது 'பக்கம்' என்றதனான் தூதாகச் சேறலும் அடங்கு மெனக் கொள்க.

"வெருக்கு விடையன்ன" என்னும் புறப்பாட்டினுள் (324)
"பாணரொடு இருந்த நாணுடை நெடுந்தகை
வலம்படுதானை வேந்தர்க்கு
உலந்துழி உலக்கும் நெஞ்சறி துணையே"

என்பதனான் துணைச் சிறப்புக் கூறியவாறு கண்டுகொள்க. காவற் சிறப்பும் பொருளீட்டற் சிறப்பும் அகப்பாடலுள்வரும் புறப்பகுதியான் அறிந்து கொள்க.

4 மறுவில் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும் என்றது = குறைபடாத செயற்பாடுடைய நாள், கோள், ஞாலம் ஆகிய இம் மூன்றானும் நிகழும் மூவகைக் காலங்களையும் நூலானும் நுண்ணறிவானும் அறிந்து செய லாற்றிய அறிவன் வாகையாகிய பகுதியும் என்றவாறு.

காலமென்பது புவியினது சுழற்சியும் கோள்களின் செலவும், நாள் (நாள்மீன்) களின் திரிவும் பற்றி நிகழ்வதாகலின் மூவகைக் காலமும் என்றும், அவை எஞ்ஞான்றும் தம் தன்மையினின்று வழுவாமையான் மறுவில் செய்தி [செய்தி = செயல், தொழில்] என்றும் கூறினார்.

நெறியின் ஆற்றுதலாவது விருப்பு வெறுப்பின்றிப் புவியா னும் கோளானும் நாளானும் நிகழும் காலநிலைமைகளைக் கணக்கியலான் அறிந்து அவற்றான் மன்பதைக்கு நேரும் நன்மை தீமைகளை உணர்ந்து நன்மை பெருகவும் தீமை

அருகவும் நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த மந்திரங் களானும் வேள்விகளானும் செயலாற்றலும் ஆற்றுவித்தலுமாம்.

இவ் அறிவர்தம் செயல்கள் குலம் பற்றியதாகாமையானும், பாலைக்குரிய நிமித்தமாகாமையானும் இவரை நாற்பாலாருள் அடக்காமல் பிரித்தோதினார் என்க. மேல்வரும் தாபதர், பொருநர் என்போரைப் பிரித்தோதியமைக்கும் இவ்விளக்கம் பொருந்தும்.

அல்லவை கடிந்து நல்லவை யுரைத்தலும் செய்தலும் அறிவர்க்குரிய கடனாதலைச் ''சொல்லியகிளவி அறிவர்க்குமுரிய (கற்பி - 13) என்னும் கற்பியற் சூத்திரத்தானறிக.

அறிவன் என்றது கணிவனை என்பார் இளம்பூரணர். கணிவன் என்னும் பெயரை ஆசிரியர் இந்நூலின்கண் யாண்டும் ஆளாமையானும் இடைக்கால நூலோரும் கணிவனையும் அறிவனையும் வேறு வேறாகக் கூறுதலானும் அவர் கருத்துப் பொருந்தாமையறியலாம்.

கணிவன் நாள் கோள் நிலைமைகளைக் கணித்துக் கூறலன்றி அவற்றான் எய்தும் உற்பாதங்களையும் நிமித்தங்களை யும் ஓர்ந்துணர்ந்து பரிகரிக்கும் ஆற்றலுடையானல்லன். அவ் ஆற்றலுடையாரே 'அறிவர்' என்க.

அறிவராவார் முழுதுணர்ந்தோர் என்பார் நச்சினார்க்கினியர். முழுதுணர்ந்தோர்க்கு விருப்பும், வெறுப்பும், வெற்றியும் தோல்வியும் இலவாகலின் பாகுபட மிகுதிப்படுத்தல் என்னும் வாகை ஒழுக்கம் அவர்க்கு ஏலாமை அறிக.

பாரதியார் கருத்து நூலொடு பொருந்தாமையான் ஆய்ந் திலம். இனி மூவகைக் காலமும் என்பதற்கு இறப்பு நிகழ்வு எதிர்வு எனல் ஒவ்வாது. என்னை அவை காலத்தின் நிலை களேயன்றி வகைமையாகாமையின் என்க. அதனானன்றே ஆசிரியர் முக்காலத்தும் என்னாது மூவகைக் காலமும் என்பாரா யினார்.

எ - டு : சான்றோர் செய்யுள் வந்தவழிக் கண்டு கொள்க.

''இம்மூவுலகின் இருள்கடியும் ஆய்கதிர் போல்
அம் மூன்றும் முற்ற அறிதலான் — தம்மின்
உறழா மயங்கி உறழினும் என்றும்
பிறழா பெரியோர்வாய்ச் சொல் ''

என்பது புறப்பொருள் வெண்பா மாலைச் செய்யுள் (167).

5) நாலிருவழக்கிற் றாபதப்பக்கமும் என்றது = இயமம் நியமம், இருக்கை, வளிநிலை, தொகைநிலை பொறைநிலை, நினைதல் சமாதி ஆகிய எண்வகை வழக்கினையுடைய யோக நெறிபற்றி ஒழுகும் தாபதர் தத்தங் கூற்றின்கண் மிகுதிப்பட நிற்கும் வாகைப் பகுதியும் என்றவாறு.

தாபதராவார் முனிவர். புலன்களின்வழிவரும் அவா வினைத்தபுத்தவர் தாபதர் என்க.

இயமம் நியமம் முதலியவை யோக நூலார் வகுத்தநெறியாகலின் நாலிருவழக்கிற் றாபதப்பக்கம் என்றார். உற்றநோய் நோன்று பிற உயிர்க்குறுகண் செய்யாது தங்கருமம் புரியும் தவத்தோர் வேறு இத் தாபதர் வேறு என அறிக. தவத்தோர் ஐவகை அவாவினை நீக்க முயல்பவர், தாபதர் அவற்றை அவித்தவர் என்க.

யோகநெறி யொழுகி அணிமா முதலிய எண்வகை (சித்தி) ஆற்றல்களைப்பெற்று அவற்றான் மிகுதிப்பட்டு விளங்குதல் தாபத வாகையாம்.

நச்சினார்க்கினியர் ஊண் நசையின்மை முதலியவை என்பார். அவை நோன்பாதலின் வாகைக்குரிய பொருளாதற்கு ஏலாமையறிக.

எ.டு: சிலப்பதிகாரத்துக் கௌந்தியடிகள் வம்பப்பரத்தரைக் குறுநரியாகெனச் சபித்துப்பின் சாபம் நீக்கியமை தாபத வாகைக்குரியதாகும். பிறவும் நாயன்மார் ஆழ்வார் வரலாறுகளான் அறிந்துகொள்க.

(6) பாலறி மரபிற் பொருநர்கண்ணும் என்றது = தானை யானை, குதிரை என்ற நோனார் உட்கும் மூவகை நிலையும், எனத் தும்பைத்திணைக்கண் கூறிய மூவகை நிலையின்கண் தத்தம் ஆற்றலை மிகுதிப்படுத்து நிற்கும் பொருநவாகையும் பகைமையின்றித் தத்தம் ஆற்றலை உறழ்ந்து காணும் வகையாற்புரியும் கருவிப் போர் மற்போர் ஆகியவற்றின் கண் மிகுதிப்பட்டு நிற்கும் வாகையும் என்றவாறு.

[பால் = பக்கம்] பால் அறிமரபின் என்றதனான், தகரும், சேவலும் சிவலும் பிறவுமாகியவற்றைக் கொண்டு இகலுதலும் கவறு முதலிய 'ஆடல் பற்றி இகலுதலும் கொள்க

இங்ஙனம் வாகைக்குரிய செயல்கள் பல்வேறு நிலையில் நிகழ்தலான் 'பாலறி மரபு' என்றார். அறிமரபு - வினைத்தொகை

பொருநர்தம் மறவீறு அரசர் பக்கத்துள் அடங்காமை கருதியும், பகை மேற்செல்லும் பாலைப் பிரிவாகாமை கருதியும் தம்முள் ஓட்டமிட்டு விளையாட்டுவகையான் உறழ்தலைக் கருதியும் பொருநர் பகுதி பிரித்தோதப்பட்டது என்க.

பொருநர் என்னும் பலபொருளொருசொல் ஒருவரை ஒப்ப வேடம் புனைந்து கூத்தியற்றுவோரையும் குறிக்குமாதலின் வேத்தியலும் பொதுவியலுமாக நிகழும் நாடகக் கூத்தினுள் உறழ்ச்சிவகையாற்பெறும் வென்றியும் வாகையாகக் கொள்ளப் பெறும். இன்னும் அதனானே ஆடல் பற்றியும், பாடல் பற்றியும் உறழ்ந்து பெறும் வெற்றியும் வாகையின் பாற்படுமெனக் கொள்க.

இடைக்கால நூலோர் பொருநவாகையை வில்வென்றி-வாள்வென்றி மல்வென்றி தகர்வென்றி சிவல்வென்றி எனவும் சூதுவென்றி ஆடல்வென்றி பாடல்வென்றி எனவும் விரித்துக் கூறுவர்.

எ - டு : இழையணிப் பொலிந்த ஏந்து கோட்டல்குல்
மடவரல் உண்கண் வாள்நுதல் விறலி !
பொருநரும் உளரோநும் அகன்றலை நாட்டென
வினவலானாப் பொருபடை வேந்தே
எறிகோல் அஞ்சா அரவின் அன்ன
சிறுவல் மள்ளரும் உளரே அதாஅன்று
பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை
வளிபொரு தெண்கண் கேட்பின்
அது போர் என்னும் என்னையும் உளனே (புற-89)

இது தானை மறவர் பொருநவாகை.

இன்கடுங்கள்ளின் ஆமூர் ஆங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகால் மார்பொதுங்கின்றே ஒருகால்
வருதார் தாங்கிப் பின் ஒதுங்கின்றே
நல்கினும் நல்கா னாயினும் வெல்போர்ப்
பொரலருந்தித்தன் காண்கதில்லம்ம
பசித்துப் பணைமுயலும் யானைபோல
இருதலை ஒசிய எற்றிக்
களம்புகு மல்லற் கடந்தடு நிலையே (புறம் - 89)

இது மல்பற்றி வந்த பொருநவாகை

பிறவும் சான்றோர் செய்யுளிடத்துக் கண்டுகொள்க.

7) மனைநிலை வகையொடு ஆங்கெழுவகையான் தொகை நிலைபெற்றது என்மனார் புலவர் என்றது = மனைக்கிழமை பூண்டொழுகும் முதுகுடிமகளிரின் திறல்மிகு வாகைப்பகுதியொடு கூடி அவ்வாகைத்திணை ஏழுவகையான் தொகுப்பமைதி பெற்றது எனக் கூறுவர் புலவர் என்றவாறு

"கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்" பிறவுமாகிய இல்லற மாண்புகளான் மனைத் தலைவி மிகுதிப்பட்டு நிற்றலும், கொண்டகொழுநன் குடி வறனுற்றகாலை அசைவின்றிஅறத் தாற்றின் நிற்றலும், ஒன்னார்தம் படையழியத்தம் புதல்வரை வேல்கைக்கொடுத்துப் போர்க்களத்துச் செலவிடுத்தலும் புதல்வனின் மறவீறு கண்டு மகிழ்வுறலும் பிறவும் மகளிரின் வென்றியாதலின் அவர் பகுதியாக நிகழ்வனவற்றை யெல்லாம் ஒரு கூறாக்கி "மனைநிலை வகையொடு" எழுவகையான் தொகை பெற்றது என்றார்.

மெய்ப்பாட்டியலுள் ஒப்பினது வகை கூறுங்கால் பிறப்பே குடிமை, ஆண்மை, ஆண்டு என இருபாலார்க்கும் ஆண்மைப் பண்பு கூறுவதும் இவ்வாகைத்திறம் நோக்கியே என்க. இடைக் கால நூலோர் வாகையுள், மூதின்முல்லை, ஏறாண் முல்லை, நாண் முல்லை, இல்லாண்முல்லை, கற்பு முல்லை என வகுத்துக் கூறியவையாவும் தொல்லாசிரியர் கூறிய இம் மனை நிலை வகையேயாமென்க.

எ. டு. : கெடுக சிந்தை கடிதிவன் துணிவே
மூதில் மகளி ராதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை
யானை எறிந்து களத்தொழிந்தனனே
நெருநல் உற்ற செருவிற் கிவள் கொழுநன்
பெருநிரை விலங்கி ஆண்டுப் பட்டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇ
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகனல்லது இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கெனவிடுமே (புறம்-279)

இது வீரத்தாய் ஒருத்தியின் மறவீறு கூறிய வாகை. இதன் கண் மூதில் மகளிர் ஆதல் தகுமே" என்றது மனைநிலை வகையாகிய வாகை எனற்கு ஒக்கும் என்றவாறு.

நரம்பெழுந்துலறிய நிரம்பாமென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினன் என்று பலர் கூற
மண்டமர்க் குடைந்தனனாயின் உண்டவென்
முலையறுத்திடுவென் யான் எனச் சினைஇக்
கொண்டவாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து வேறாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே (புறம் 278)

என்பதுமது.

'கல்லறுத்தியற்றிய' என்னுப்புறப் பாட்டினுள் (331)
... ... ... ... .. ... ... உள்ளது
தவச்சிறிதாயினும் மிகப்பலர் என்னாள்
நீள்நெடும்பந்தர் ஊண்முறை ஊட்டும்
இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
வரிசையின் அளிக்கவும் வல்லன்"

என இற்பொலி மகடூஉவின் விருந்தோம்பற் சிறப்புக் கூறியது மனைநிலை வாகைப் பகுதியாதல் காண்க.

இல்லறச் சிறப்பு முதலியவற்றை அகப்பாடற் பகுதிகளுள் கண்டுகொள்க.

இனி உரையாசிரியன்மார் அனைவரும் "பாலறி மரபிற் பொருநர் கண்ணு மனைநிலை வகையொடு" என்னும் தொடரை 'அனைநிலை வகையொடு' என இசையறுத்துப்பாடங் கொண்டு உரைகூறினர். அனைநிலை என்னும் சுட்டு மேற்கூறிய அறுவகையைச் சுட்டி அவற்றிற்குரிய புறனடையாதற்குரிய தாகுமேயன்றித் தனியொரு வகையாக ஏழாவதாக எண்ணுதற் கொவ்வாதென்க. இங்ஙனம் பின்னரும் ஆசிரியர்

ஆவயின் வயிற்றோன்றிய கிளவியொடு தொகைஇ
அனைநிலை வகையான் வரைதல் வேண்டினும் (கற்-33)

என, அனைநிலை என்பது மேற்கூறியவற்றை சுட்டிநிற்ப தாகவே ஓதுமாறறிந்து கொள்க. அவர் இங்ஙனம் பிறழப் பிரித்தமையானே மகளிர்க்குரிய வாகைப்பகுதி இலக்கண முறையாற் பெறப்படாதொழிதலொடு மகளிரின் மறவீறு பற்றி யதாக உள்ள சான்றோர் செய்யுள்கட்கெல்லாம் விதியில்லாக் குறை நேர்தலையும் ஓர்க.

இனி அனைநிலை வகை என்பது அன்னைநிலை வகை என்பதன் இடைக்குறையாகக் கொள்ளளாகாதோ எனின் ஆகாது

என்னை? அன்னை என்பது முறைப் பெயராலாகன் என்க. அது சிறுபான்மை தலைவியைச் சுட்டுதல் வழுவமைதியா மென்பது பொருளியலுள் பெறப்படும்.

அற்றாயின் மனைவி என்பதும் முறைப்பெயரன்றோ எனின்? அன்று. அது மனைக்கண் உறைபவள் என்னும் காரணப் பெயராம். அதனானன்றே ஒருதலை உரிமை வேண்டினும் (பொருளியல் - 29) என்னும் சூத்திரத்து

"நோக்கொடு வந்த இடையுறு பொழுதினும்
போக்கும் வரவும் மனைவிகண் தோன்றும்"

என வரைந்து கொண்டு இல்லறம் புகாத நிலையில், கள வொழுக்கத்தின்கண் ஒழுகும் தலைவியை 'மனைவி' எனக் கூறுவாராயினர், ஆண்டு அச்சொல் இற்செறிப்புற்று மனையகத் திருப்பவள் என்னும் பொருளே பற்றி நிற்பதையும் கண்டு கொள்க.

இச்சொல் ஆகுபெயர்க் குறிப்பானே இலக்கிய வழக்காய் இல்லாளைச் சுட்டி வரும் மரபு கருதி மயங்கற்க. இலக்கணங் கூறுமிடத்துச் சொற்களின் செம்பொருட்கே முதன்மை தரப் பெறுமென்க. ஆசிரியர் 'மனைவி நிலை வகை' என்னாது மனை நிலை என்றமையும் காண்க. அம்முறைமையான் முதியோள், மூதிலாட்டி மனையோள் இல்லாள் எனப் பெண்பாற்குரிய பெயரெல்லாம் கொள்ளப்படுமென அறிக.

"கல்லெனிர் வேலிக் கணவன் கழல் வாழ்த்தி
ஒல்லும் வகையான் விருந்தோம்பிச்—செல்லுந்தம்
இற்செல்வமின்றி இரந்தவர்க்கீகல்லாப்
புற்செல்வம் பூவா புகழ்" என்பது, இல்லாண் முல்லைக்கு வெண்பாமாலை கூறும் செய்யுள். பிறவும் அன்ன.

**சூ. 78 : கூதிர் வேனில் என்றிரு பாசறைக்**
**காதலின் ஒன்றிக் கண்ணிய வகையினும்**
**ஏரோர் களவழி யன்றிக் களவழித்**
**தேரோர் தோற்றிய வென்றியும், தேரோர்**
**வென்ற கோமான் முன்றேர்க் குரவையும்**
**ஒன்றிய மரபின் பின்றேர்க் குரவையும்**
**பெரும்பகை தாங்கும் வேலினானும்**
**அரும்பகை தாங்கும் ஆற்ற லானும்**

புல்லாவாழ்க்கை வல்லாண்பக்கமும்
ஒல்லார்நாணப் பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து
தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும்
ஒல்லா ரிடவயிற் புல்லிய பாங்கினும்
பகட்டி னானும் மாவி னானும்
துகள் தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்
கடடில் நீத்த பாலின்கண்ணும்
எட்டுவகை நுதலிய அவையகத்தானும்
கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும்
இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்
பிழைத்தோர்த் தாங்குங் காவ லானும்
பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்
அருளொடு புணர்ந்த அகற்சி யானும்
காமம் நீத்த பாலினானும் என்று
இருபாற்பட்ட ஒன்பதின் துறைத்தே (21)

க - து: மேற்கூறிய வாகைத்திணை மறத்துறையும் அறத்துறையும் என இருபாலாக வருமென்றும், பார்ப்பனப்பக்கம் முதலாக மேற்கூறிய ஏழுவகையுள்ளும் துறை என எடுத்துக்கூறற்குரியனவாக வருபவை இவை என்றும் கூறுகின்றது.

இவை பதினெட்டும் துறையாமெனவே மேற் கூறிய ஏழும் வாகையின் கூறுகள் என்பது புலனாகும். எனவே ஈண்டு விரிக்கப்பெற்ற துறைகளன்றிப் பொதுப்பட வருவன வெல்லாம் மேற்கூறிய ஏழனுள் ஒன்றாக அடங்கி நிற்கும் என்பதும் அவ்வழி அவற்றைப் பார்ப்பன வாகை, அரசவாகை, வாணிக வாகை, வேளாண் வாகை, அறிவன் வாகை, தாபத வாகை, பொருநவாகை, மனைநிலை வாகை எனல் மரபென்பதும் விளங்கும்.

பொருள் . (1) கூதிர்வேனில் என்றிரு பாசறைக் காதலின் ஒன்றிக்கண்ணிய வகையினும் என்பது - பகைவயிற்பிரித்தோன் கூதிர்ப்பாசறை - வேனிற்பாசறை என்னும் இருவகைப் பாசறைக் கண்ணிருந்து நிகழ்த்தும் தொழிலின்பாற் காதலான் உளமொன்றிப்புரியும் போர்ச்செயலைக் கருதியவகையான் அமைந்துறையும் துறையும் என்றவாறு.

தலைவியொடமர்ந்து இன்பம் நுகர்தற்குச் சிறந்த அவ்விரு வகைப் பருவத்தே பாசறைக்கண் உறையுங்கால் உள்ளம் தலைவியின்பால் செல்லுதலைத் தவிர்த்துப் போரின்கண் காதலைச் செய்தலின் தலைவனின் அந்நிலை வாகைக்குரிய தாயிற்றென்க.

காலக்கூறுபாட்டான் கூதிர்ப்பாசறை - வேனிற்பாசறை என இரண்டாமெனினும் அவை "பாசறைநிலை" என ஒன்றாக அடங்கலின் ஒரு துறையாகக் கூறினார் என்க. இடைக்கால நூலோர் கூறும் வாடைப்பாசறை என்பது கூதிர்ப்பாசறையுள் அடங்கும். இதுமேற்கூறிய வகை ஏழனுள் அரசர் பக்கத்திற் குரியதாகும்.

எ – டு : மூதில்வாய்த் தங்கிய முல்லைசால் கற்புடைய
மாதர்பாற் பெற்ற வலியளவோ — கூதிரின்
வெங்கண் விறல்வேந்தன் பாசறையுள் வேனிலான்
ஐங்கணை தோற்ற அழிவு (புறத்திரட்டு)

கவலை மறுகிற் கடுங்கண் மறவர்
உவலைசெய் கூரை ஒடுங்கத்—துவலை செய்
கூதிர் நலியவும் உள்ளான்கொடித் தேரான்
மூதின் மடவாள் முயக்கு. (பு. வெ. வாகை)

இனி, வினைவயிற்பெயர்க்கும்தானைப்
புனைதார் வேந்தன் பாசறையேமே (அக - 84)

எனத் தலைவன் தலைவியை நினைந்து கூறுதல் வாகைத் திணையாகாது வஞ்சித்திணையின் பாற்படும் என்க.

பாலைத்திணை ஏனைய நானிலங்களின் திரிபாக அவற்றைச் சார்ந்து வருமாறு போல அதன்புறமாகிய வாகையும் வெட்சி முதலிய நான்கு திணைகளிற் கூறப்பட்ட ஒழுகலாறுகளின் அடிப்படையில் வருமென அறிக.

தலைவன் பாசறைக்கண் இருத்தல்பற்றி இதனைப்பாசறை முல்லை எனக்கூறுவாருமுளர். அவர் 'இருத்தல்' என்னும் முல்லை உரிப்பொருட்கும். தலைவன் போர் கருதி உறையும் செயலுக்கும் வேறுபாடு அறிந்திலர். 'முல்லை' என்பதற்கு வென்றி எனப் பொருள் கருதுவாராயின் அஃது ஒருவாறு பொருந்தும்.

இடைக்கால நூலோர் முல்லை என்னும் சொல்லை வெற்றி என்னும் பொருளில் மேற்கொண்டமையான் மனைநிலைவாகை என்னும் திணைக்கூறு கொள்ளாது விட்டனர் போலும்

புறநானூற்றுச் செய்யுள்கட்கு இடைக்கால நூல்களை ஒட்டித் திணையும் துறையும் வகுத்துக் கொண்டமையான் மகளிர்க்குரிய வாகைப்பகுதிகளை முல்லை என்றே குறித்துச் சென்றனர் எனலாம்.

(2) ஏரோர் களவழியன்றிக் களவழித் தேரோர் தோற்றிய வென்றியும் என்றது - ஏரோர் தோற்றிய களவழி வென்றியும் அதுவேயுமன்றித் தேரோர் தோற்றிய களவழிவென்றியும் என்றவாறு.

அஃதாவது வேளாண்மாந்தர்தம் உழவுத் தொழிலான் விளைந்த கூலங்களைக் குவித்து அக்களத்தின்கண் போந்த இரவலர்க்கு வரிசையறிந்து வழங்குதலாகிய ஏர்க்களவழி என்னும் வாகைத்துறை இருக்க, அதுவல்லாமல் தாளாண் மாந்தராகிய தானைமறவர் தாம் உஞற்றிய போரான் தோல்வி யுற்ற பகைவரிடத்துக் கொண்ட பொருள்களைக் குவித்து அக்களவென்றியைப் பாடிவந்த பாணர் முதலானோர்க்குப் பரிசிலாக வழங்குதலையுடைய களவழி என்னும் துறையும் என்றவாறு.

நெல் முதலிய கூலங்களின் கதிர்களைக் கொன்று குவிக்கு மிடமும், பகைவர்தம் படைகளைக் கொன்று குவிக்குமிடமும் களம் எனப்படுதலின் வேளாண்மைக் களத்தைக் ஏர்க்களம் என்றும் வாளாண்மைக் களத்தைப் போர்க்களமென்றும் அடை கொடுத்துக்கூறுவர். ஏரோர் என்பது உழவரையும் தேரோர் என்பது மழவரையும் வரைந்துணர்த்தும் பெயர்க்குறியீடுகளாகும்.

களத்தின்கண் இருந்து தம் ஆள்வினையாற் பெற்ற பொருள்களைத் தெய்வத்திற்குப் பலி நேர்ந்து பின்னர் இரவலர்க்கு வரிசையறிந்து வழங்குதல் அறநெறி மரபு. அவ் வள்ளன்மையாகிய செயல் களவழி எனப்பட்டது.

வழி என்பதற்கு நெறியெனப் பொருள் கொண்டு களத் திற்குரிய நெறி, அஃதாவது வழங்குதல் எனினுமாம். அஃது உழவரும் மழவரும் பெற்ற வெற்றியாதலின் வாகைத்துறை யாயிற்றென்க.

அங்ஙனம் போரான் வளைத்துக் கொண்ட பொருள்களை வழங்கி எஞ்சியவற்றைத் தாம் கோடாலே மறக்களவழி என்பதை விளக்குதல் வேண்டி ஏரோர் களவழியைச் சுட்டித் தேரோர் களவழியைக் கூறினார் என்க. அதனான் வாகைக் குரிய களவழி இருவகை என்பதும் உணர்த்தினார்.

இனிக் களவழி என்பதற்கு ஒருசாரார் களத்தின்கண் நிகழ்ந்த அழிவு எனப் பொருள் கொண்டு பகைவரையும் அவர் தம் படைகளையும் அழித்த செயலையே இத்துறையின் பொருளாகக்கூறுவர். களவழி நாற்பது என்னும் செய்யுட்களை இயற்றிய பொய்கையாரும் இக்கருத்தினரேயாவர்.

போர்க்கள அழிவு அழித்தவனின் மறவீற்றினைப் புலப் படுத்தலன்றிப் பாகுபடமிகுத்தலாகிய பெருமிதத்தைப்புலப் படுத்தாமையான் வாகையாதற்குச் சிறவாமையறிக. அதனை வஞ்சித்திணையின்பாலும் காஞ்சித்திணையின்பாலும் அடக்குதலே இந்நூல் நெறிக்கொத்ததாகும்

களவழி நாற்பது என்னும் நூலுக்கு இவ்இலக்கணவிதியைப் பொருத்துதல் வேண்டி நச்சினார்க்கினியர் இத்தொடரைச் சிதைத்துக் கொண்டுகூட்டி உரை கூறுவார். அவர் உரை இயைபின்றி மயங்க வைத்தலாய் உள்ளமையை அறியலாம்.

தேர்தானே இயங்காமையான் படைப்பிரிவுகளுள் தேர்ப் படை என ஒருபிரிவைக் கூறாமல் தானைப்படையுள் அடக்கித் தேரோர் என்றார். போரிடுவோரும் வாகைபெறுவோரும் தானை மறவரேயாதலின் தும்பைத்திணையுள் "தானை, யானை, குதிரை என்னும் நோனார் உட்கும் மூவகைநிலை" என முப்படையே கூறினார் ஆசிரியர் என அறிக. வடநூலார் தேர்ப்படையை ஒரு பிரிவாகக் கொள்வர். தொல்காப்பியர்க்குப் பின் வந்தோர் அதனை ஏற்று இலக்கியஞ் செய்து போந்தனர்.

அம்முறைமை பற்றி இடைக்கால நூலோர் தேர்மறம், தேர்வென்றி, தேர்முல்லை என வாகைத்திணைக்கண் துறை களை வகுத்துக் கூறிச் சென்றனர். தொல்காப்பியத்தின் அறிவியல் சான்ற இலக்கண விதிகளை நன்கு நோக்காமல் தொல்காப்பியர் காலத்தில் தேர்ப்படையே இல்லை எனக் கூறுவோரும் உளர்.

ஏரோர் களவழி, இருமூன்று மரபின் ஏனோர் பக்கம் என்பத னுள்ளும் தேரோர்களவழி அரசர் பக்கம் என்பதனுள்ளும் அடங்கும். இவையிரண்டும் பரவலும் புகழ்ச்சியும் பற்றிவரும் பாடாண்டிணையுள் புகழ்ச்சியாய் அமைதலை நோக்கிக் "களவழி" என ஒரு துறையாக அடக்கி ஓதினார் என்க.

'மொழிந்த பொருளொடொன்ற அவ்வயின் மொழியாத தனையும் முட்டின்று முடித்தல்" என்னும் உத்தியான் களத்தின்கண் பேய்களின் செயலாகக் கூறும் வருணனை களை எல்லாம் இத்துறையின் பாற்படுத்துக் கொள்க.

ஏர்க்களத்தும் போர்க்களத்தும் வாகையுற்ற உழவரும் மழவரும் தொகுத்த பொருளை வழங்கிய வள்ளன்மைக்குச் சான்றோர் செய்யுள் வந்த வழிக் கண்டுகொள்க.

"இருப்பு முகஞ்செறித்த" என்னும் புறப்பாட்டினுள் (369)
"கணநரியொடு கழுதுகளம் படுப்பப்
பூதங்காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடையாள"

என்பது வென்ற வேந்தன் வழங்குதல் குறித்திருந்தமையைச் சுட்டி நின்றது.

பாணர் தாமரை மலையவும், என்னும் புறப்பாட்டு (12) களவழியாதற்கும் ஒக்கும்-பிறவும் இவ்வாறு ஓர்ந்து கொள்க.

(3) தோரேரர் வென்ற கோமான் முன்றேர்க் குரவையும் என்றது = தேரேறி வந்த பகைப்படைஞரைப் பொருது வென்ற பேரரசனது தேரின் முன் அவன் தானை மறவரும் கூத்தரும் கைபிணைந்தியற்றும் குரவையாடலும் என்றவாறு.

எ - டு : வந்தவழிக் கண்டுகொள்க.

தேரோரை வென்ற வேந்தன் தன் தானைமறவரொடு கைபிணைத்தாடும் ஆடல் என்பார் நச்சினார்க்கினியர். அவ்வுரை வென்ற கோமான் என்னும் சால்பிற்குச் சிறவாமை யறிக.

(4) ஒன்றிய மரபின் பின்றேர்க் குரவையும் என்றது = வாகைக்குரிய வெற்றியைப் பொருந்திய மரபினையுடைய தேரின் பின் பாணரும் கூத்தரும் விறலியரொடு கைப்பிணைத்தாடும் குரவையாடலும் என்றவாறு.

முன்றேர்க் குரவையாவது களத்தின்கண் வெற்றியொடு திகழும் கோமானது தேரின் முன் அவனைப் பரவி மகிழ்ந்தாடும் கூத்து. பின்றேர்க் குரவையாவது வெற்றி பெற்று மீண்டு வரும் கோமானது தேரின்பின் அவனைப் புகழ்ந்து மகிழ்ந்து ஆடும் கூத்து.

இங்ஙனம் பரவலும் புகழ்ச்சியுமாக நிகழ்தல் கருதி இருதுறை யாகக் கூறினார். பரிசில் முதலியவை கருதிப் பரவலும் புகழ்ச்சி யும் செய்யாமல் உவப்பினாற் புரிதலின் இவை வாகைத்திணைப் பகுதியாயின என்க.

'மரபின்' என்றதனான் தேரின்பின் கூளிச்சுற்றம் களித்தாடுதலும் அத்துறையின் பாற்படும். சான்றோர் செய்யுள் வந்தவழிக்கண்டு கொள்க.

(5) பெரும்பகை தாங்கும் வேலினானும் என்றது = தம் முடைய வேந்தனைத் தாக்குதற்குச் சூழ்ந்த பெரிய பகைப்படையினை ஒருவன்தன் வேற்படையான் தடுத்து வென்ற தொழில் வன்மையும் என்றவாறு.

இத்துறை " வேன்மிகு வேந்தனை {மொய்த்தவழி ஒருவன் தான் மீண்டெறிந்த தார்நிலை " எனத் தும்பையுள் கூறிய வேற்படை மறவனது வெற்றியமைந்த வாகையாம். இதுபொருந வாகைப் பகுதியாய் அடங்கும்.

பெரும்பகை என்றது பகைப்படையினது பெருக்கத்தையும், வேல் என்றது வேற்படை மறவனையும் சுட்டி நின்றன.

பலரிடையே ஒருவன் மிக்குத் தோன்றிப் புரிந்த வென்றியாதலின் தனியொருதுறையாக விதந்துகூறப்பட்டது.

எ - டு : இரும்புமுகஞ்சிதைய நூறி ஒன்னார்
இருஞ்சமம் கடத்தல் ஏனோர்க்கும் எளிதே?
நல்லரா உறையும் புற்றம் போலவும்
கொல்லேறு திரிதரு மன்றம் போலவும்
மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
உளன்என வெரூஉம் ஒரொளி
வலனுயிர் நெடுவேல் என்னைகண்ணதுவே(புற-309)

வேலோனானும் என்னாது வேலினானும் எனக் கருவியைச் சிறப்பித்துக் கூறியதனான் படைக்கலத்தைச் சிறப்பித்துக் கூறினும் இத்துறையாகக் கொள்க.

எ - டு : இவ்வே பீலியணிந்து மாலைசூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்தி நெய்யணிந்து
கடியுடை வியனகரவ்வே, அவ்வே
பகைவர்க் குத்திக் கோடு நுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றிலமாதோ என்றும்
உண்டாயின் பதங் கொடுத்து
இல்லாயின் உடனுண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணலெங் கோமான் வைந்நுதிவேலே (புறம்-95)

பிறவும் வந்துழிக் கண்டுகொள்க.

(6) அரும்பகை தாங்கும் ஆற்றலானும் என்றது = வெல்லுதற்கு அருமைப் பாடுடையதொரு படையைத்தடுத்து வெல்லும் பெருஞ்செயலும் என்றவாறு.

இது "களிறெறிந்தெதிர்ந்தோர் பாடும்" எனத்தும்பையுட் கூறிய போர் பற்றி வந்த வாகைத்துறையாகும். பெரும்பகை என மேற்கூறி ஈண்டு அரும்பகை என்றதனான் தானை, யானை, குதிரை என்ற நோனார் உட்கும் மூவகை நிலையும் என்றவற்றுள் மேலது தானை மறவர் பகை என்பதும் இஃது ஏனைய பகையென்பதும் உய்த்துணரப்படும்.

இனி, வஞ்சித் திணையுள் வருவிசைப்புனலைக் கற்சிறை போல ஒருவன் தாங்கிய பெருமையும் என்ற துறைபற்றி வந்த வெற்றியும் இதன்கண் அடங்குமென்க. "ஆற்றல்" எனப் பொதுப்படக் கூறியவதனான் வன்மையும் திண்மையும் பற்றிய வாகைப் பகுதிகளும் இதன்கண் அடங்குமென்க.

எ - டு : களம்புகழ் ஓம்புமின் தெவ்விர் போரெதிர்ந்து
எம்முளும் உளனொரு பொருநன், வைகல்
எண் தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த காலன்னோனே (புறம்-87)

எனவரும்.

(7) புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும் என்றது = மண்ணக வாழ்வே பெரிதென அதனைத்தழுவாமல், இறப்பிற்கு அஞ்சாமல் வீறு கொண்டுபுரியும் வல்லாண்மைக் கூறுபாடும் என்றவாறு.

அஃதாவது வெல்லுதல் அரிதென உணர்ந்தவழியும் போரைத் தவிராது எதிரேற்றுப் புரியும் ஆண்மை இரண்டனுள், காலமும் இடமும் தேர்ந்து தன்வலியும் மாற்றான் வலியும் உணர்ந்து இயற்றுதலை நல்லாண்மை என்றும் அதனை மதியாதியற்றுதலை வல்லாண்மை என்றும் கூறுப.

இத்துறை வாள் வாய்த்து இருபெருவேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகைநிலை, எனத் தும்பையுள் கூறிய வெற்றியைப்பெற்று அமைந்ததாகும். ஒருவரும் எஞ்சாமையான் அஃது இருசாரரர்க்கும் வெற்றியாய் வாகையாயிற்றென்க.

இஃது அரசவாகை, பொருந வாகையாய இருவகைகட்கும் உரியதாகும்.

எ - டு : எனைப்பல் யானையும் அம்பொடுதுளங்கி
விளைக்கும் வினையின்றிப் படையொழிந்தனவே
விறற்புகழ் மாண்ட புரவியெல்லாம்
மறத்தகை மைந்தரொடு ஆண்டுப்பட்டனவே
தேர்தரவந்த சாறைறோரெல்லாம்

தோல்கண் மறைப்ப ஒருங்கு மாய்ந்தனரே
விசித்து வினைமாண்ட மயிர்க்கண் முரசம்
பொறுக்குநர் இன்மையின் இருந்து விளிந்தனவே
சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென
வேந்தரும் பொருதுகளத் தொழிந்தனர் இனியே
என்னா வதுகொல் தானே கழனி
ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்
பாசவல் முக்கித் தண்புனல் பாயும்
யாணர் அறாஅ வைப்பின்
காமர் கிடக்கையவர் அகன்றலை நாடே (புறம் 63)

இதற்கு வறுமையுற்றபோதும் வண்மை குன்றாத வல்லாண்மைச் செயல் எனப் பொருள் கூறின் அது மறத்துறை யாதற் கேலாமையான் பொருந்தாதென்க.

வாழ்க்கையை விரும்பாது வான்விரும்பிப் போர் மகிழும் வல்லாண்மை என்பார் பாரதியார். அது மறனிழுக்கா மான முடைய மறவர்க்குரிய பொதுப்பண்பாதலின் அதனை ஒரு துறை யாகக் கூறலமையா தென்க.

(8) ஒல்லார் நாணப் பெரியவர்க் கண்ணிச் சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்ந்து தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும் என்றது. போரியல் நூலோர், மறத்துறையிற் பீடு பெறும் பெரியோரைப்பற்றிக் கருதிச் சொல்லிய தறுகணாண்மை வகையினுள் ஒன்றனொடு பொருந்திப் பகைவர் நாணும் வண்ணம் உடம்பொடு உடன் தோன்றியதாகிய உயிரை வழங்கிய அவிப்பலியாகிய துறையும் என்றவாறு.

போர்க்கள அமைப்பு, படைவகுப்பு, போர்முறை, போர் அறநெறி, படைப் பயிற்சி, மறவர் மாண்பு, மறவரிலக்கணம் முதலியவை பற்றி விரித்துரைக்கும் போரியல் நூலோர் இன்ன இன்ன செயல் பற்றி மறவருள் இவர் இவர் பெருமைக்குரிய பெரியோராவார் என ஓர்ந்து வகுத்துச் சொல்லிய தொழில் முறையை, ஆசிரியர் “பெரியவர்க்கண்ணிச் சொல்லிய வகை” என்றார். போர்களைப் பற்றிய நூலை வட நூலார் தனுர் வேதம் என்ப.

அவையாவன : உலைவிடத்து ஊறு அஞ்சாமை, மறமானம், அறைபோகாமை, புரந்தார் கண்ணீர்மல்கச் சாதல் மாண்டவழிச்செலவு, தேற்றம், தன்னைவேட்டல், அவிப்பலி முதலியவையாம். இவற்றை வள்ளுவர் கூறும் படைமாட்சிக் கோட்பாடுகளான் அறியலாம்.

தம் வேந்தர்க்கு வெற்றி வேண்டிக் களப்பலி நேர்தல், இழைத்தது இகவாமைச் சாதல் முதலியவற்றைப் போலத் தன்னை வேட்டலாகிய அவிப்பலியும் அவற்றுள் ஒன்றாகும். அது கொற்றவையைப் பரவியும் வேண்டியும், சூளுரை கூறித் தன் தலையைத் தானே அரிந்து பலியிடுதலாகும். இச்செயல் ஈகத்துள் (தியாகம்) பேரீகமாகும். இத்தகைய மற மாண்பு களைப் பின்வந்த பரணி நூல்கள் விரித்துக் கூறுமாற்றான் அறியலாம். அம்முறைமையான் அத்தகு மறவரைப் 'பெரியவர்' எனப் போரியல் நூலார் சிறப்பித்துரைத்தனர் என்க. " செயற்கரிய செய்வார் பெரியர் " என்றது காண்க.

ஆவிப்பலி என்பது அவிப்பலி என இலக்கணக் குறியீட்டுப் பெயராய் மருவி நின்றது. ஈண்டு ஒல்லார் என்றது அத்தகு பெருஞ்செயலைச் செய்ய மாட்டாதார் என்னும் நயம்பட நின்றது. இது பொருந வாகைக்குரித்தாக அமையும்.

எ - டு : வந்துழிக் கண்டு கொள்க.

சிறந்த திதுவென்னச் செஞ்சோறு வாய்ப்ப
மறந்தரு வாளமர் என்னும் — பிறங்கழலுள்
ஆருயிர் என்னும் அவிவேட்டார் ஆங்கஃதால்
வீரியரெய் தற்பால வீடு " (பு. வெ. மாலை 154)

என்பது புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யுள்

9) ஒல்லாரிடவயிற் புல்லியபாங்கினும் என்றது - பகையா யினாரிடத்தே அவர்தம் பகைமையை நீக்கி அவரைத் தழுவிக் கொண்ட பகுதியும் என்றவாறு

பகையொடு வந்தோர் தம் பகைமையழிதலின் புல்லி யோர்க்கு அது வெற்றியாய் வாகையாயிற்று

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடையாளன்
தகைமைக் கட்டங்கிற் றுலகு (குறள்) என்பதனான் தழுவிக் கொள்ளும் பாங்கு வாகையாதல் புலனாகும்.

எ. டு. வந்துழிக்கண்டுகொள்க.

இத்துறைக்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் தரும் விளக்கங்கள் சூத்திரச்சொற் கிடக்கைக்கு இயையுமாறில்லை என்க.

இவ் ஒன்பது துறைகளும் மறவீறு பற்றிய வாகைத்துறை களாம். இனி வரும் ஒன்பது துறைகளும் அறவீறு பற்றிய வாகைத் துறைகளாம்.

10) பகட்டினானும் மாவினானும் துகள்தபு சிறப்பின் சான்றோர் பக்கமும் என்றது = எருமையும், ஆனும் ஆனேறுமாகிய பகட்டினங்களானும் பரிமாவும் கரிமாவுமாகிய மாவினங்களானும் வரும் குற்றம் நீங்கிய செல்வத்தினையுடைய வேளாண்மாந்தரும் வாணிகமாந்தருமாகிய சான்றோர் பகுதியும் என்றவாறு.

உழவு முதலாகிய தொழில்கள் பழுதுபடாமல் இயற்றுதலான் வரும் ஆக்கமும், பண்டங்களைக் கொண்டுசென்று வாணிகம் புரிதலான் வரும் ஆக்கமும் அவர்க்கு வெற்றியாதலின் அப்பகுதி அறவீறு பற்றிய வாகையாமென்க.

பகட்டினானும் மாவினானும் விளைவன அழிவின்றி ஆக்கமே பயந்து நிற்றலின் "துகள் தபு சிறப்பின் பக்கம்" என்றார். சிறப்பென்றது கூலமும், தவசும், பொன்னும், மணியும் பிறவுமாகிய செல்வங்களைக் குறித்து நின்றது.

எ-டு: "நளியிருமுந்நீர் ஏணியாக"
என்னும் புறப்பாட்டினுள் (35)

வருபடைதாங்கிப் பெயர் புறத்தார்த்துப்
பொருபடை தரூஉங் கொற்றமும்; உழுபடை
ஊன்று சால் மருங்கின் ஈன்ற தன் பயனே,

என்றும்

நொதுமலாளர் பொதுமொழி கொள்ளாது
பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந் தருகுவை யாயின் நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே

என்றும், வெள்ளைக்குடி நாகனார் வேளாண் மாந்தர் சிறப்புக் கூறியமை வேளாண் வாகையாதல் காண்க.

புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்கை
கொடுமேழி நசையுழவர்
நெடுநுகத்துப் பகல் போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்பநாடிக்
கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம்
குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்
தொல்கொண்டித் துவன்றிருக்கை (பட்டின-203-212)

என, வாணிகர் சிறப்புக் கூறியவாறு காண்க.

யானை நிரையுடைய தேரோரினும் சிறந்தோர்
ஏனை நிரையுடைய ஏர்வாழ்நர் — யானைப்
படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டேர்
உடையோர்க் கரசரோ ஒப்பு (பெரும் பொருள் விளக்கம்)

11) கட்டில் நீத்த பாலினானும் என்றது ஓர் ஏதுவான் அரசாளும் உரிமையை மேற்கொளவிரும்பாமல் அறம் நோக்கி அதனைத் தவிர்ந்த கூறுபாடாகிய வாகையும் என்றவாறு.

அது பெருஞ்சேர லிரும்பொறை தானும் தன்கோயிலாளும் புறம் போந்து நின்று ... அரசு கட்டிற் கொடுப்ப அதனைக் கொள்ளாது அரிசிற் கிழார் தவிர்த்தமை போல்வதாகும்.

பரதனும், பார்த்தனும் போல்வார் அரசு துறந்த வென்றி என்பார் நச்சினார்க்கினியர். தவம் முதலாய ஆக்கத்தை நோக்கி அரசு கட்டிலைத் துறத்தல் வாகையாதற்குச் சிறவாதென அறிக. இஃது ஏழு வகையுள் அரசர் பக்கமாக அடங்கும்.

12) எட்டுவகை நுதலிய அவையகத்தானும் என்றது = அறங்கூர் அவையத்தார் முதலாய எண்வகை அவையத்தார்க்கும் வேண்டுவனவாகிய எண்வகைக் குணங்களைக் கருதிய அவைத் தலைவர் பகுதியும் என்றவாறு.

அவையகம் என்றது ஆகுபெயரான் அவையகத்துத் தலைமையுற்றாரை உணர்த்தி நின்றது. எண்குணத்தான் என்னும் மரபு நோக்கி எட்டுவகை நுதலிய என்றார். நுதலுதல் என்றது கருதி ஒழுகும் ஒழுகலாற்றின் மேல் நின்றது.

அவையாவன இலங்குநூற்கல்வி, விழுப்பந்தரும் ஒழுக்கம், வாய்மை, நடுவுநிலைமை, வெஃகாமை, அழுக்காறின்மை, வெகுளாமை, அருளுடைமை என்பனவாம். பிறவெல்லாம் இவற்றுள் அடங்குமாறுணர்ந்து கொள்க. உரையாசிரியன்மார்

குடிப்பிறப் படுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டுக் காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையிற்
காதலின்பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி, வைகலும்
அழுக்காறின்மை அவா வின்மையென
இருபெரும் நிதியமும் ஒருதாம் ஈட்டும்
தோலாநாவின் மேலோர் பேரவை ”

எனக் கூறப்பெற்ற குணங்கள் என்பார்.

பேரவை, போரவை, மேலோரவை, நூலோரவை முதலாய ஏனைய அவையத்தார்க்கு இவற்றுள் சில விதிவிலக்காக அமையுமாதலின் பொதுப்பட "எட்டு வகை" என்றார். அக்குணங்களான் பிறரின் உறழ்ந்து சிறத்தலின் அவர் வாகைக்குரியராயினார் என்க.

"அறங்கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டாசான்" எனச் சிறப்பித்தமை கண்டு கொள்க. இஃது அறிவன் தேயம் என்பதனுள் அடங்கும்.

13) கட்டமை ஒழுக்கத்துக் கண்ணுமையானும் என்றது = அற நூலோர் கட்டுரைத்தமைத்த ஒழுக்கத்தின் கண் நின்றொழுகும் தன்மையும் என்றவாறு.

கட்டுரை = கழற்றுரை. யாப்புறுத்துரைக்கப் பெற்றமையின் கட்டமையொழுக்கம் என்றார். கண்ணுதல் = கருதுதல். கருதி ஒழுகுந்தன்மை கண்ணுமை எனப்பட்டது.

கண் என்னும் முதனிலைத் தொழிற்சொல் உகரம் பெற்றுக் கண்ணுதல் என வருமாறு போல அச்சொல் மை என்னும் பண்புப்பெயர் விகுதியொடு கூடிக் கண்ணுமை என நின்றது.

இது வெளுத்தல், வெளுமை, கொழுத்தல் கொழுமை என வந்தாற்போல்வதொரு சொல்லாக்கம் என்க.

"இன்னாத கூறல் கனியிருப்பக்காய் கவர்ந்தற்று"
"உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு"
"அடங்காமை ஆரிருள் உய்த்துவிடும்"
"தீயொழுக்கம் என்றும் இடும்பைதரும்"
"கொடுப்பத ழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉமின்றிக் கெடும்"
"நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்"

என்றாற்போல நீதி நூலார் கழறியுரைத்தவற்றைத் தம் மனத்திண்மையான் வென்றொழுகும் தன்மை கண்ணுமையாமென்க.

அவ்வகைத் தீய பண்பும் செயலும் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்குப் பகையாவன ஆதலின் அவை அணுகாதவாறு நீக்கி ஒழுகும் ஒழுக்கம் வாகையாயிற்றென்க. இது தாபதப் பக்கத்துள் அடங்கும்,

எ - டு : அவிர்சடை முனிவரும் மருளக் கொடுஞ்சிறைக்
கூருகிர்ப் பருந்தின் ஏறுகுறித் தொரீஇத்
தன்னகம் புக்க குறுநடைப் புறவின்
தபுதி அஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் ” (புறம் 43)

இஃது, ஈகம் கூறிற்று.

“ குருதி வேட்கை உருகெழு முரசம்
மண்ணி வாரா அளவை எண்ணெய்
நுரை முகந்தன்ன மென்பூஞ்சேக்கை
அறியா தேறிய என்னைத் தெறுவர
இருபாற் படுக்கும் நின் வாய்வாள் ஒழிந்ததை
அதூஉம் சாலும்நற் றமிழ்முழு தறிதல்
அதனொடு மமையாது அணுக வந்து நின்
மதனுடை முழவுத்தோள் ஒச்சித் தண்ணென
வீசியோயே ! ” (புறம் -50)

இது பொறை கூறிற்று.

“ கிண்கிணி களைந்த ” என்னும் புறப்பாட்டினுள் (77)
“ உடன்று மேல் வந்த வம்ப மள்ளரை
வியந்தன்றும் இழிந்தன்றுமிலனே அவரை
அழுந்தப்பற்றி அகல்விசும்பு ஆர்ப்பெழக்
கவிழ்ந்து நிலஞ்சேர அட்டதை
மகிழ்ந்தன்றும் மலிந்தன்றும் அதனினுமிலனே ”

என்பது அடக்கங் கூறிற்று.

“கடல் கொளப்படாஅது” என்னும் புறப்பாட்டினுள் (122)
“வடமீன் புரையும் கற்பின் மடமொழி
அரிவை தோளளவு அல்லதை
நினதென இலைநீ பெருமிதத் தையே ”

என்பதும்

‘ மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி ’
என்னும் புறப்பாட்டினுள் (72)
“ ... ... ... ... பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல்கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகவென் தாரே ”

என்பதும் ஒழுக்கங் கூறிற்று.

"விழையா உள்ளம் விழையுமாயினும்
என்றுங், கேட்டவை தோட்டியாக மீட்டாங்கு
அறனும் பொருளும் வழாமை நாடித்
தற்றகவுடைமை நோக்கி மற்றதன்
பின்னாகும்மே முன்னியது முடித்தல்
இனைய பெரியோர் ஒழுக்கம்" (அகம் 286)

என்பதும் அது

14) இடையில் வண்புகழ்க் கொடைமையானும் என்றது - இடையீடில்லாத, வளவியபுகழைப் பயக்கும் கொடைத்தன்மையும் என்றவாறு.

இடைஇல் என்பதனைக் கொடையொடும் கூட்டுக. பிறவகையான் வரும் புகழினும் கொடையான் வரும்புகழ் துகளறு சிறப்புடையதாகலின் வண்புகழ் எனப்பட்டது. இடையீடில்லாத கொடையான் நேரும் பொருளிழப்பினைக் கருதாமையான் அது வாகைத்திறனாயிற்றென்க.

இது பார்ப்பனப் பக்கம் முதலாய மூன்றற்கும் பொதுவாய் அவற்றுள் அடங்கும்.

எ - டு : இன்று செலினும் தருமே சிறுவரை
நின்று செலினும் தருமே பின்னும்
முன்னே தந்தனென் என்னாது, துன்னி
வைகலும் செலினும் பொய்யலனாகி
யாம்வேண்டி யாங்கென் வறுங்கலம் நிறைப்போன்"
(புறம்-171)

விளங்கு மணிக்கொடும் பூண் ஆஅய்! நின்னாட்டு
இளம்பிடி ஒருசூல் பத்தீனும்மோ
நின்னும் நின்மலையும் பாடி வருநர்க்கு
இன்முகங் கரவாது உவந்து நீ அளித்த
அண்ணல் யானை எண்ணின் கொங்கர்க்
குடகடல் ஓட்டிய ஞான்றைத்
தலைப் பெயர்த்திட்ட வேலினும் பலவே (புறம்-130)

எனவரும்.

15) பிழைத்தோர்த்தாங்குங் காவலானும் என்றது = அறிந்தும் அறியாதும் தம்மைப் பிழைத்தோரைச் செறாது பொறுத்து அவர்க்குத் தம்மானும் பிறரானும் ஏதம் வாராமற் காக்கும் காவலும் என்றவாறு.

பொறுத்தலே யன்றிப் பின்னரும் அவரைக்காக்கும் பெருமிதம் வாகைக்குரியதாயிற்று. இது பெரும்பாலும் ஆளும் பொறுப்பினை யுடையார்க் குரியது என்பது தோன்றக் காவல் என்றார். காவலன் என்பது அரசனைக் குறிக்கும் காரணப்பெயர்.

எ - டு : சான்றோர் செய்யுள் வந்துழிக் கண்டு கொள்க.

16) பொருளொடு புணர்ந்த பக்கத்தானும் என்றது-அரசர் முதலானோர் தத்தம் நிலையிற் செம்மாந்திருத்தற்குரிய பொருளுடைமையொடு திகழும் பகுதியும் என்றவாறு.

செல்வம் பொருளல்லவரைப் பொருளாகச் செய்தலானும் நடுவணதாகி ஏனையிரண்டும் எண்பொருளாக ஒருங்குவரச் செய்தலானும், எண்ணிய தேயத்துச் சென்று இருளகற்றும் பொய்யாவிளக் காகலானும் பொருளொடு புணர்ந்துதிகழ்தல் வாகைக்குரியதாயிற்றென்க.

ஈண்டுப் பொருளென்றது பொன்முதலாய செல்வங்களும் கல்வியும், தவமும், பிறவுமாகிய செல்வங்களுமாம். இவை பிறரினும் ஒருவர்க்கு மிக்க வழி வாகையாம்.

அவ்வாற்றான் அந்தணர்க்குப் பொருளாவது நோன்பும் தவமும் முற்றிச் செந்தண்மையான் நிறைந்து திகழ்தலாம். அரசர்க்குப் பொருளாவது படைகூடி கூழ் அமைச்சு, நட்பு அரண் ஆகியவற்றான் நிறைந்து விளங்குதலாம். வாணிகர்க்குப் பொருளாவது மலைபடுபொருளும் கடல்படுபொருளும், எண் வகைக் கூலமும், பொன்னும்மணியும் ஆகியவற்றான் சிறந்து நிற்றலாம். வேளாண் மாந்தர்க்குப் பொருளாவது. நீர் வளந்தப் பாத நன்செய்யும், புன்செய்யும் ஆகிய நிலப்பெருக்கமும், பகட்டினப் பெருக்கமும் உடைமையாம்.

இனி ஆயர் வேட்டுவர் முதலாய ஐந்நில மக்கட்குரிய பொருட்செல்வமும் இவ்வாறே கொள்க.

எ - டு : தொகையுள்ளும் பாட்டுள்ளும் இவ்வாகை விரவி வருமாறு கண்டு கொள்க.

17) அருளொடு புணர்ந்த அகற்சியானும் என்றது = அருளுணர்வொடு நிறைந்த பண்புகளான் விரிந்து நிற்கும் நிலையும் என்றவாறு.

என்றது ; மன்பதை யிடத்துக் கைம்மாறு கருதாது பரிவும், இரக்கமும் அன்பும் ஈகமுமாகிய அருளுணர்வு நிறைந்து பரந்த உள்ளத்தாற் புரியும் செயல்களான் விளங்குநிற்றலையாம்.

அஃதாவது தனக்கு இடர் செய்தவராயினும் அவர்க்கோரிடையூறு நேர்ந்துழித் தன் உயிர் முதலாயவற்றை வழங்கிக் காத்தலும், புழு முதலிய சிற்றுயிரேனும் அவற்றின் துயர் கண்டு பொறாது வருந்துதலும் இன்னோரன்ன அருளுடைமையாம். அவ் அருளுடைமை மக்கட் பண்பின் மிக்கதாகலின் அது வாகைக்குரியதாயிற்றென்க.

எ - டு : புனிற்றுப் பசியுழந்த புலிப்பிணவு தனாது
முலைமறாக் குழவி வாங்கி வாய்மடுத்து
இரையெனக் கவர்வுற நோக்கியாங்க
வளரிளங் குழவியின் முன்சென்று காணக்
கூருகிர் வயமான் புலவு வேட்டுத் தொடங்கிய
வாளெயிற்றுக் கொள்ளையிற் றங்கினன் கதுவப்
பாசிலைப் போதி மேவிய பெருந்தகை
ஆருயிர் காவல் பூண்ட
பேரருட் புணர்ச்சியி னாகலும் உரித்தே (நச்-மேற்)

சிபி 'பாரி, பேகன் முதலியோர் செயல்களும் இவ்வாகைக் குரியவாம். அகலுதல் = விரிதல். இதற்கு இவ்விடத்து நீங்கல் எனப்பொருள் கொள்ளின் அது வாகையாதற்குச் சிறவாமை யறிக இது தாபத வாகையுள் அடங்கும்.

18) காமம் நீத்த பாலினானும் என்றது-தத்தமக்குரிய கடமைகளை மேற்கொண்டு அவற்றைப் பிழையின்றி நடத்தும் வழி, மண்ணும், பொன்னும், பெண்ணுமாகிய மூவகை வேட்கையினும் நீங்கி ஒழுகும் பகுதியும் என்றவாறு.

என்றது, பயனை விழையாது என்கடன் பணி செய்து கிடப்பதே எனப் பற்றறுத்துச் செயலாற்றும் நிலையினையாம். யான் எனது என்னும் பற்றற்ற மெய்யுணர்வு நிலைவேறு இதுவேறு என அறிக.

உலகியல் வழாமல் வாழ்வாங்கு வாழ்தற்கண் பொன் முதலாய வேணவா நீங்கி நிற்கும் சமநிலை உணர்வு வாகைக் குரியதாகும். இது தாபத வாகையின் பாற்படும்.

எ - டு : இம்மைச் செய்தது மறுமைக்காமெனும்
அறவிலை வணிகன் ஆஅய் அல்லன்
பிறரும் சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன்று அவன் கைவண்மையே
(புறம்-134)

எனவரும். வடநூலார் இதனை நிட்காமிய கருமம் என்பார்.

மேலாயதொரு குறிக்கோள்பற்றிக் காதலின்பமாகிய காமத்தை நீக்கிய இளங்கோவடிகள், வீடுமன் போன்றாரது திண்மையும் இதன்பாற்படுமெனக் கொள்க.

என்று இருபாற்பட்ட ஒன்பதின் துறைத்தே என்றது = என்ற மறப்பகுதியும் அறப்பகுதியுமாகப் பாகுபாடுற்ற இரண்டு ஒன்பது துறைகளையுடையது வாகைத்திணை என்றவாறு.

'இன்'சாரியை அசைப்பொருட்டாய் நின்றது. இரு என்பதனை ஒன்பது என்பதனொடு கூட்டிப் பொருள் கொள்க.

ஏழுவகைப் படநிற்கும் வாகை ஒழுகலாற்றின் கண் இப் பதினெட்டும் சிறப்பாகக் கொள்ளப்பெறும் துறைகள் என்பது கருத்து.

## சூ. 79 : காஞ்சி தானே பெருந்திணைப் புறனே (22)

க - து : அகத்திணையுள் பெருந்திணைக்குப் புறனாவது காஞ்சித்திணை என்கின்றது.

பொருள் : அகத்திணையின் பாங்காக அவற்றின் கண் நிகழும் பெருந்திணையாகிய ஒழுகலாற்றிற்குப் புறனாவது மறக்குடி மாந்தர்க்கும் புறக்குடி மாந்தர்க்கும் உரிய காஞ்சித் திணையாகிய ஒழுகலாறாகும்,

காஞ்சி என்பதற்குச் சொற்பொருள் விளக்கம் மேற்கூறப் பட்டது.

அகனைந்திணை பெரும்பான்மை நாடக வழக்கும் சிறிபான்மை உலகியல் வழக்கும் தழுவிய மையப், பெருந்திணை பெரும்பான்மை, உலகியல் வழக்கும் சிறுபான்மை நாடக வழக்கும் பொருந்தி அகனைந்திணையின் மருங்காக அவற்றின் கண் நிகழுமாறு போல்க் காஞ்சித்திணை பெரும்பான்மையும் உலகியற்கையாக அமைந்து வெட்சி முதலிய ஐந்துபுறத்திணை களின் மருங்காக அவற்றின்கண்ணே நிகழுமாதலானும்.

பெருந்திணையானது அளவிறந்த காம வேட்கையான் பெருமையும் உரனும் அச்சமும் மடனும் நாணும் ஆகிய பண்பு களை இகந்து மடவேறுதல் முதலியவற்றைப் பற்றி வருமாறு போலக் காஞ்சித்திணை மறவெறி மிக்குத் தன்னைத்தான் பல்லாற்றானும் வருத்திக் கோடலானும்.

வேட்கை மிகுதியான் இன்பப் பகுதியாகிய காமக் கூட்டத்தை மடலேறுதல் முதலிய துன்பப் பகுதிகளாக்கிக் கொண்டு நிலை கலங்கிச் சாம்புதல் போலப், புகழும், வெற்றியும் நோக்கி மிக்கெழுந்த மறச் செயல்களான் துன்பத்தைப் பெருக்கிச் சிதைந்து மடிதல் ஒப்புமையானும்,

இளமை தீர்திறம், தேறுதல் ஒழிந்த காமத்துமிகுதிறம், மிக்ககாமத்துமிடல் ஆகியவை குறிப்பான் இளமை நிலையாமை, இன்ப நிலையாமையாகியவற்றை உணர்த்தி நிற்குமாறுபோலக் காஞ்சித்துறைகள் செல்வ நிலையாமை யாக்கைநிலையாமை ஆகியவற்றை உணர்த்தி நிற்றலானும் பெருந்திணையுள் தலைமைப்பாடில்லாத அடியோரும் வினைவல பாங்கினரும் புரியும் காம ஒழுக்கங்கள் அடங்கி நிற்குமாறுபோல ஊழ்முறை யான் நேரும் முதுபாலை, தாபதநிலை தபுதார நிலை முதலியவை நிலையாமையின் பாங்காகிக் காஞ்சியாய் அடங்கு தலானும்,

பெருந்திணை ஒழுக்கம் சான்றோரான் இகழப்படுதலையும் காமநிலையின்மையையும் நோக்கிக் கிழவனும் கிழத்தியும், "அறம்புரி சுற்றமொடு சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயன்"என்பதை உணர்தற்கு ஏதுவாயினாற்போல,மாற்றருங்கூற் றத்தின் வலிமையையும் யாக்கையும் பொருளும் நிலையாமை யையும் நோக்கி யான் எனது என்னும் செருக்கு நீங்கி அருளொடு புணர்ந்து செம்பொருள் காணுதல் பிறந்ததன் பயன் என்பதை உணர்தற்கு ஏதுவாக நிற்றலானும், இன்ன பிற ஒப்புமைகளானும் காஞ்சி பெருந்திணைக்குப் புறனாயிற் றென்க.

இனி, நச்சினார்க்கினியர் பெருந்திணையானது எண்வகை மணங்களுள் நான்குமணம் பெறுதல் போல அறம் பொருள் இன்பம் என்னும் நிலையாமை மூன்றையும் பெறுதலான் காஞ்சி பெருந்திணைக்குப்புறனாயிற்றென ஒப்புமை கூறுவார். பெருந் திணை நான்குமணம் பெறும் என ஆசிரியர் யாண்டுங்கூறாமை யான் அவர் கருத்துப் பொருந்தாமையறிக 'பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே' (கள-15) என்னும் நூற்பாவின் செம் பொருளைக் களவியலுரை விளக்கத்துள் கண்டுகொள்க.

**சூ. 80 · பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்**
**நில்லா உலகம் புல்லிய நெறித்தே (23)**

**க - ஆ :** இது காஞ்சித்திணையின் இயல்பாமாறு கூறுகின்றது.

**பொருள் :** துணையில்லாத சிறப்பினையுடைய காஞ்சித் திணையானது பலவழிகளானும் நிலைபேறில்லாத உலகத்தைப் பொருந்திய முறைமையினையுடையதாகும்.

பாஅங்கருஞ் சிறப்பென்பது மேற்கூறிய காஞ்சித்திணை என்னும் எழுவாய்க்கு அடையாக நின்றது. [ பாங்கு = துணை, ஒப்புமை ]

வெட்சி முதலாய ஒழுகலாறுகள் அவற்றை நிகழ்த்தும் மாந்தர்தம் விருப்பு வெறுப்புப்பற்றி நிகழ்வனவாதலின் அவை நிகழாமைக்கும் உரியவாகும். காஞ்சித்திணையாகிய நிலையாமை மாந்தர்தம் அறிவாற்றலுக்கு அப்பாற்பட்டு ஊழான் நிகழ்வதாகலின் அதனை நிகழாமற் செய்தற்கு ஆகாமை நோக்கிப் 'பாங்கருஞ்சிறப்பின்' என்றார். இவ்வாறே இதன் துறைகளைக் கூறுமிடத்தும் 'நிறையருஞ் சிறப்பின் துறை" எனக் கூறுதல் காண்க.

பாங்கருஞ் சிறப்பென்பதற்குத் தனக்கு துணையில்லாத வீட்டின்பம் எனப் பொருள் கூறுவார் நச்சினார்க்கினியர். பாரதியாரும், வெள்ளைவாரணனாரும் சிறிது வேறுபடக் கூறுவர். சூத்திரச் சொற் கிடக்கையை நோக்கின் அவ்வுரைகள் வலிந்துரையாய் காஞ்சி என்பதற்கு இயைபின்றி நிற்றலை யறியலாம்.

பல்லாற்றானும் என்றது, செயல் பற்றி மேற் கொள்ளும் அணுகு முறைகளை. அணுகு முறையை வடநூலார் உபாயம் என்பர். ஈண்டு உலகம் என்றது உயர்திணையும், அஃறிணையு மாகிய பொருள்களை. காட்சிப் பொருளும் கருத்துப்பொருளுமாகிய அவையன்றி உலகு என்பது வேறின்மையறியப்படும்.

நிலையாமை என்பது அனாதியாகவே அமைந்து வருதலின் 'புல்லிய நெறித்தே' என்றார். எனவே உலகத்துப் பல்வேறு பட்டபொருள்களின் நிலையாமைமைச் சுட்டும் ஒழுகலாற்றினை உடையது காஞ்சித்திணை என்பது விளங்கும்.

பற்றற்றான் பற்றினைப்பற்றிப் பற்றுவிடற்கு, நிலையாமை யை உணரும் உணர்வு நிமித்தமாகலான் அந்நெறிபற்றி வீடு பேற்றிற்கு நிமித்தங்கூறுவது காஞ்சித்திணை என்ப.

நிலையாமையைச் செல்வம் நிலையாமை யாக்கை நிலையாமை, என வகுத்துக் கூறுவர் நூலோர். செல்வமும் யாக்கையும் இளமையும் நிலையாயவையல்ல வாயினும் அவை அமைந்து நிகழும் காலத்து அவற்றான் அறம் பொருள் இன்பமாகிய மும்முதற் பொருள்பற்றி எய்தும் பயனை நுகர்ந்து செல்லுதல் மக்கட் பிறப்பின் குறிக்கோளாதலின்,

காமஞ் சான்ற கடைக்கோட்காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே (கற் - )

என இவ்வாசிரியரும்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும். (குறள் )

எனத் திருவள்ளுவரும்

" இன்னாதம்ம விவ்வுலகம்
இனிய காண்கிதன் இயல் புணர்ந்தோரே " (புறம்-194)

எனப் பக்குடுக்கை நன்கணியாரும் இவ்வாறே பிற நல்லிசைப் புலவோரும் கூறுவாராயினர். எனவே காஞ்சித்திணை துறவினை வற்புறுத்துகின்றது என்பதும் நரைவரும் என்றெண்ணி நல்லறிவாளர் குழவியிடத்தே துறப்பர் என்பதும் தமிழ்நெறியாகாமை புலப்படும்.

சூ. 81 : **மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும்**
**கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும்**
**பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்**
**புண் கிழித்து முடியும் மறத்தினானும்**
**ஏமச்சுற்றம் இன்றிப் புண்ணோற்**
**பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும்**
**இன்னன் என்றிரங்கிய மன்னை யானும்**
**இன்னது பிழைப்பின் இதுவாகியர் எனத்**
**துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத் தானும்**
**இன்னகை மனைவி பேஎய்ப் புண்ணோற்**
**றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும்**
**நீத்த கணவற் றீர்த்த வேலின்**
**பேர்த்த மனைவி ஆஞ்சி யானும்**
**நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி**
**மகட்பா டஞ்சிய மகட்பா லானும்**
**முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன்**
**தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ**
**ஈரைந் தாகும் என்ப பேரிசை**

மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம்
ஆய்ந்த பூசல் மயக்கத் தானும்
தாமே எய்திய தாங்கரும் பையுளும்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதானந்தமும்
நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து
தனிமகள் புலம்பிய முதுபா லையும்
கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ
ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும்
காதலி இழந்த தபுதார நிலையும்
காதலன் இழந்த தாபத நிலையும்
நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச்
சொல்லிடை யிட்ட பாலை நிலையும்
மாய்பெருஞ்சிறப்பிற் புதல்வர்ப் பயந்த
தாய்தப வரூஉம் தலைப்பெயல் நிலையும்
மலர்தலை யுலகத்து மரபுநன்கறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
நிறையருஞ் சிறப்பிற்றுறையிரண்டுடைத்தே. (24)

க - து : காஞ்சித்திணையின் துறைகளை மறக்கூறும் அறக் கூறுமாக வகைப் படுத்தி அவற்றைத் தொகுத்துக் கூறுகின்றது.

பொருள் : (1) மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமையும் என்றது: எவ்வகையானும் மாற்றுதற்கரிய கூற்றத்தின் இயல்பினை எடுத்துக்கூறிய பெருங்காஞ்சி என்னும் துறையும் என்றவாறு.

சாற்றுதல் = நிறைவுறக்கூறல், அஃதாவது சான்றுடன் கிளத்தல். உயிரையும் உடம்பையும் வேறு வேறாகக் கூறுபடுத்தலின் காலக்கடவுட்குக் கூற்றென்பது ஒருபெயராயிற்று.

இசைத்தலும் உரிய வேறிடத்தான (கிள-59) என்பதனான் இச்சொல் கூற்றுவன் எனப் பால் பிரிந்திசைக்கும். இத்துறை யாக்கைநிலையாமையை உணர்த்திற்று

எ - டு : பல்சான்றீரே பல் சான்றீரே
கயல்முள் ளன்ன நரைமுதிர் திரைகவுள்
பயனில் மூப்பின் பல்சான் றீரே !
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்

பிணிக்குங் காலை இரங்குவிர் மாதோ
நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமாரதுவே (புறம்-195)

எனவரும்.

(2) கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையும் என்றது - இளமைப்பருவம் கழிந்தோர் அதனை இப்பொழுதுடையார்க்குத் தாமே சான்றாக இளமைநிலையாதென்பதைக் காட்டிய முதுகாஞ்சி என்னும் துறையும் என்றவாறு.

முதுமையைக் காட்சியளவையான் நின்று காண்பித்தலான் இது முது காஞ்சி எனப்பட்டது.இஃது இளமை நிலையாமையை உணர்த்திற்று.

எ - டு : தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றா
வீழா இறக்கும் இவள் மாட்டும்—காழிலா
மம்மர்கொள் மாந்தர்க் கணங்காகும் தன்கைக்கோல்
அம்மனைக்கோ லாகிய ஞான்று (நாலடியார்)

3) பண்புற வரூஉம் பகுதி நோக்கிப் புண்கிழித்து முடியும் மறத்தினானும் என்றது. மறவன்தன் தறுகண்மைப் பண்பு அதனான் மிக்குத் தோன்றும் மறக்கூறு பாட்டினை எண்ணி உயிரை முடிக்கமாட்டாத விழுப்புண்ணினைப் பெரிதாக்கி இறந்துபடும் மறக்காஞ்சி என்னும் துறையும் என்றவாறு. இன்னும்-ஆனும்-அசைகள். மேல்வருவனவும்அன்ன இது யாக்கை நிலையாமையை உணர்த்திற்று.

எ - டு : பொருது வடுப்பட்ட யாக்கை நாணிக்
கொன்றுமுகந் தோய்ந்த எஃகுந் தாங்கிச்
சென்று களம்புக்க தானை தன்னொடு
முன்மலைந்து மடிந்த ஓடா விடலை
நடுகல் நெடுநிலை நோக்கி யாங்குத்தன்
புண்வாய் கிழித்தனன் புகழோன் அந்நிலைச்
சென்றுழிச் செல்க மாதோ வெண்குடை
அரசு மலைந்து தாங்கிய களிறுமடி பறந்தலை
முரண்கெழு தெவ்வர் காண
இவன்போ லிந்நிலை பெறுகயானெனவே (நச்-மேற்)

எனவரும்.

4) ஏமச்சுற்றம் இன்றிப் புண்ணோற் பேஎய் ஓம்பிய பேஎய்ப் பக்கமும் என்றது = பேணுதற்குரிய சுற்றத்தாரைக் காணாமையான் புண்பட்டு வீழ்ந்தோனைப் பேயானது தானே பாதுகாத்த பேய்க் காஞ்சியாகிய துறைப்பகுதியும் என்றவாறு.

ஓம்புதலாவது ஓரியும் நரியும் பிறவும் தசையைப்பறித்துச் செல்லாவாறு காவல் செய்து நிற்றல்.

இனி, கிடந்தானை நோக்கி அஞ்சி அணுகாதும் அகலாதும் சூழ்வருதலும், அச்சுறுத்தலும் பிறவுமாகிய பேயினது செயல்களெல்லா மடங்கப் பேய்ப்பக்கம் என்றார். இத்துறையைப் பேய்க்காஞ்சி என்ப. இதுயாக்கை நிலையாமையை உணர்த்திற்று.

எ - டு : ஆயும் அடுதிறலாற் கன்பிலா ரில்போலும்
தோயுங் கதழ்குருதி தோள்புடைப்பப் — பேயும்
கலம்புகலச் சீறிக் கதிர்வேல்வாய் வீழ்ந்தான்
உளம்புகல ஓம்ப லுறும் (பு வெ.மா.77)

இது பேய் காத்தது.

கொட்கும் நிமிரும் குறுகும் குடற்சூடிப்
பெட்ப நகும் பெயரும் பேய்மகள் — உட்கப்
புனலங் குருதிப் புலால்வாய்க் கிடந்து
கனலவிழிப்பவற்கண்டு (பு-வெ-மா.)

இது அச்சுறுத்தியது.

5) இன்னனென்று இரங்கிய மன்னையானும் என்றது. — இறந்து பட்டோன் இன்ன இன்ன தன்மையாளன் என ஏனையோர் கலங்கிக் கூறிய மன்னைக் காஞ்சியாகிய துறையும் என்றவாறு. மன் என்னும் இடைச்சொல் மன்னை எனத் திரிந்து நின்றது.

இரங்குவோர் கூற்றின்கண் இச்சொல் பயின்று வருதலின் இப்பெயர்த்தாயிற்று- இவ் இடைச்சொல் இன்றிச் சிறுபான்மை வரினும் இப்பெயரே வழங்கப்படும்.

இது செல்வம் நிலையாமையையும் யாக்கை நிலையாமை யையும் உணர்த்திற்று.

எ - டு : சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத்தான் மகிழ்ந்துண்ணுமன்னே
சிறு சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற்றானும் நனிபல கலத்தன் மன்னே

என்பொடு தடிபடு வழியெலாம் எமக்கீயும் மன்னே
அம்பொடு வேல்நுழை வழியெலாம் தானிற்குமன்னே
நரந்தம் நாறும் தன்கையால்
புலவுநாறும் என்தலை தைவருமன்னே
அருங்கலை இரும்பாணர் அகல்மண்டைத்துளையுறீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல் நுண்டேர்ச்சிப் புலவர் நாவில்
சென்று வீழ்ந்தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசாகெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப் பாடுநருமில்லைப் பாடுநருக்கொன்றீகு
நருமில்லைப்
பனித்துறைப் பகன்றை நறைக்கொள் மாமலர்
சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்று
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே (புறம் 235)

இது மன்னைச்சொல் மிக்கு வந்தது.

பாடுநர்க்கீத்த பல்புகழன்னே
ஆடுநர்க்கீத்த பேரன்பினனே
அறவோர் புகழ்ந்த ஆய்கோலன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பினனே
மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்
அனையன் என்னாது அத்தக் கோனை
நினையாக் கூற்றம் இன்னுயிர் உய்த்தன்று
பைதல் ஒக்கல் தழீஇ அதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை உலகம் அரந்தை தூங்கக்
கெடுவில் நல்லிசை சூடி
நடுகல்லாயினன் புரவலன் எனவே (புறம் - 221)

இது மன் அடாது வந்த மன்னைக்காஞ்சிப்பாட்டு. பிறவும் இவ்வாறு வருவனவற்றை ஓர்ந்துணர்ந்து கொள்க.

(6) இன்னது பிழைப்பின் இதுவாகியரெனத் துன்னருஞ் சிறப்பின் வஞ்சினத்தானும் என்றது — இன்னதொன்றனைச் செய்யாது பிழைபடுவேனாயின் இந்நிலையனாகக் கடவேன் எனக்கூறிய துன்னுதற்கரிய வஞ்சினக் காஞ்சியாகிய துறையும் என்றவாறு.

நிலையாமையை உணர்ந்தாலன்றி அச்சூளுரையை நெருங்குதல் அரிதாகலின் துன்னருஞ்சிறப்பின் வஞ்சினம் எனச் சிறப்பிக்கப்பட்டது இதுவும் மேற் கூறிய இருவகை நிலையாமை பற்றியதாகும்.

எ - டு: மெல்ல வந்தென் நல்லடி பொருந்தி
ஈ என இரக்குவர் ஆயின் சீருடை
முரசுகெழு தாயத்து அரசோதஞ்சம்
இன்னுயிராயினும் கொடுக்குவென், இந்நிலத்து
ஆற்றலுடையோர் ஆற்றல் போற்றாது என்
உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்
துஞ்சுபுலி இடறிய சிதடன் போல
உய்ந்தனன் பெயர்தலோ அரிதே—மைந்துடைக்
கழைதின் யானைக் காலகப்பட்ட
வன்திணி நீள்முளை போலச் சென்றவன்
வருந்தப் பொரேஎ னாயின் பொருந்திய
தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக் கிடைக் குழைகஎன் தாரே (புறம் - 73)

எனவரும்.

7) இன்னகை மனைவிபேய்ப் புண்ணோற் றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியும் என்றது — நகுதற்குரியளாகிய இனிய மனைவி புண்பட்டுக் கிடந்த கணவனைப் பேய் தீண்டற்கு நெருங்குதலை விலக்கித்தானும் தொடுதலைத் தவிர்ந் திருந்த தொடாக் காஞ்சியாகியதுறையும் என்றவாறு.

நகுதல், புணர்ச்சியை உணர்த்தும் குறிப்புச்சொல். இதனை நம் முன்நாம் நகுதல் தொடீஇயர் (கலி-94) எனவரும் மருதக்கலிப்பாட்டானறிக. நகுதற்குரியாள் தொடுதற்கும் அஞ்சி நிற்கும் என இன்ப நிலையாமையை உணர்த்தியவாறு.

இதன்கண் விரிந்த 'காஞ்சி' என்பதனை இடைநிலை விளக்காக்கி முன்னும் பின்னும் ஏற்குமிடத்துக் கூட்டிக்கொள்க.

எ - டு: தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்குமருப்பு யாழொடு பல்லியங்கறங்கக்
கைபயப் பெயர்த்து மைஇழுது இழுகி
ஐயவி சிதறி ஆம்பல் ஊதி
இசைமணி எறிந்து காஞ்சி பாடி

நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇ
காக்கம் வம்மோ காதலம் தோழி
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே.

(புறம்-28)

எனவரும்.

8) நீத்த கணவற் றீர்த்தவேலின் பேர்த்த மனைவி ஆஞ்சியானும் என்றது = தன்னைப்பிரிதற்குக் காரணமாகித்தன் கணவனை இறக்கச் செய்த வேலினானே தன்னுயிரையும் உடம்பினின்று பெயர்த்த மனைவியைக் கண்டோர் அஞ்சிய ஆஞ்சியாகிய துறையும் என்றவாறு.

தீர்த்தற்குக் காரணமாகியவேல் என்க. மெல்லியல்புடையாளாகிய தலைவியின் மறச்செயல் உட்குத்தருவதாக நிகழ்தலின் கண்டோர்க்கு அச்சம் தோன்றிற்றென்க.

அஞ்சிய என்பது ஆஞ்சி என நீண்டு இலக்கணக் குறியீடாக நின்றது. அஞ்சுதலை உடையது ஆஞ்சி என வந்ததொரு சொல் விழுக்காடு எனினுமாம்.

பேஎத்த எனப் பாடங்கொண்டு தலைவன் உற்ற வேல் வடுவான் மனைவி அஞ்சிய காஞ்சி என்பார் நச்சினார்க்கினியர். அது மறக்குடி மகளிர்க்கு மாண்பாகாமையான் இளம்பூரணர் பாடமே நூல் நெறிக்கு ஏற்றதாகுமென்க. இது யாக்கை நிலையாமையை உணர்த்திற்று

எ - டு : கௌவை நீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல் வாய் வீழ்ந்தான் விறல் வெய்யோன் அவ்வேலே
அம்பிற் பிறழும் தடங்கண் அவன் காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று (பு. வெ. மா. 83)

எனவரும்.

(9) நிகர்த்துமேல் வந்த வேந்தனொடு முதுகுடி மகட் பாடஞ்சிய மகட்பாலானும் என்றது – குல முறை ஒவ்வாதேனும் மகட்கோடற்கு ஒத்து நடுவுநிலை இகந்து வந்த வேந்தனொடு தொல்குடிப்பிறந்ததன் மகளை அவன் மணப்பதற்கு அஞ்சிய மகட்பாற் காஞ்சியாகிய துறையும் என்றவாறு.

ஒவ்வாமை தெரிந்து பகை உணர்வு கொண்டு மிகைத்து வந்தமை தோன்ற "நிகர்த்து மேல்வந்த" என்றார். முதுகுடி

என்றது ஆயர்வேட்டுவர் என அகத்திணையியலுள் கூறிய நிலமக்களது குடியினை, வேந்தர் குடி திணைதொறும் மரீஇய மேற்குடியாகலின் ஒவ்வாமை புலப்படும். அஞ்சுதல் தன்குடி மரபிற்குப் பழிவருமென்றும், வழிமுறைக் கிழத்தியாகவன்றி உரிமை மனைவியாகக் கொள்ளான் என்றும் கருதி மறுத்தல். படுத்தல் = மணம் கூட்டுவித்தல்

மகளைத் தருதற்கு உடம்படாமையான் மேல்வந்த வேந்தனொடு பகைத்து நாடும் வீடும் அழியப் போரிட்டு மடிதலான் செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை பற்றிய காஞ்சியாயிற்று — மகள் காரணமாக நிகழ்தலின் அப்பெயர்த்தாயிற்று

எ - டு : நுதிவேல் கொண்டு நுதல்வியர் துடையாக்
கடிய கூறும் வேந்தே — தந்தையும்
நெடிய அல்லது பணிந்து மொழியலனே
இஃதிவர் படிவமாயின் வையெயிற்று
அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை
மரம்படு சிறுதீப் போல
அணங்காயினள் தான் பிறந்த ஊர்க்கே (புறம் - 349)

“ களிறு அணைப்பக் கலங்கின காஅ ” என்னும புறப்பாட்டினுள்

“ கருங்கண் கொண்ட நெருங்கல் வெம்முலை
மையல் நோக்கின் தையலை நயந்தோர்
அளியர்தாமே, இவள் தன்னைமாரே
செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி
நிரலல்லோர்க்குத் தரலோ இல்லென ” (புறம் - 345)

என மகளை விரும்பினமையும் குடி ஒவ்வாமை கருதினமையும் கூறியவாறு கண்டுகொள்க.

10) முலையும் முகனும் சேர்த்திக் கொண்டோன் தலையொடு முடிந்த நிலையொடு தொகைஇ ஈரைந்தாகும் பேரிசை என்றது - கணவனது உடலற்ற தலையினை மனைவி தன் மார்பினும் முகத்தினும் சேர்த்து அணைத்துக் கொண்டு இறந்த தலைக்காஞ்சியாகிய துறையொடு கூடிப் பெரும் புகழுக் குரியவாக வரும் துறைகள் பத்தாகும் எனக் கூறுவர் நூலோர்.

மறக்காஞ்சி முதலிய எட்டும் மறக்களச் செயல் பற்றித் தறுகணாண்மை விளங்க வருதலானும், பெருங்காஞ்சியும் முதுகாஞ்சியும் மருந்து பிறிதில்லாச் சிறப்பினவாகலானும் இவற்றைப் பேரிசை சான்ற துறைகளென வகுத்தனர் நூலோர் என்க.

ஈரைந்தாகும் என்னும் பயனிலைக்குரிய துறை என்னும் வினைமுதல் அவாய் நிலையான் கூட்டப்பட்டது. பேரிசைத் துறை ஈரைந்தாகும் எனக்கூட்டி முடித்துக் கொள்க.

பாரதியார் இவற்றை விழுப்பவகை என ஓர்ந்து விளக்கிய உரைநயம் போற்றத்தக்கது.

உரையாசிரியன்மார் பேரிசை என்பதனைப் பின்வரும் மாய்ந்த மகனை என்பதனொடு கூட்டி இடர்ப்படுவர். நச்சினார்க்கினியர் மூவகைநிலையாமையும் மாந்தர்க்குப் பொது வாதலைக்கருதாமல் ஆண்பாற்காஞ்சி, பெண்பாற் காஞ்சி எனப்பகுத்துக்கூற முற்பட்டுக் கடைபோகக் காட்ட இயலாமல் மயங்க வைத்தார். அவர் விளக்கம் வேண்டா கூறலாய் இலக்கணப் பயனின்றி நிற்றலை ஓர்ந்து கொள்க.

எ-டு : சான்றோர் செய்யுள் வந்துழிக் கண்டுகொள்க.
கொலையானாக் கூற்றங்கொடிதே கொழுநன்
தலையானாள் தையலாள் கண்டே — முலையான்
முயங்கினாள் வாண்முகஞ் சேர்த்தினாள் ஆங்கே
உயங்கினாள் ஓங்கிற் றுயிர் (பு வெ மா. 78)

என்பது வெண்பாமாலைச் செய்யுள்

(11) மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் ஆய்ந்த பூசல் மயக்கத்தானும் என்றது = மாய்ந்து கிடந்த செம்மலோனைத் துயரத்தொடு சூழ்ந்த சுற்றத்தார் வாய்விட்டு அரற்றாமல் நுணுகிய குரலோடு நொந்து இரங்கி வருந்திய பூசல் மயக்க மாகிய துறையும் என்றவாறு

மாய்ந்தநிலை முனையகத்திற்கும் மனையகத்திற்கும் பொதுவாய் நின்றது. மகன் என்றது முறைமை சுட்டாது ஆடூஉ என்னும் பொருட்டாய் நின்றது அவனது குலத்தினர் என்பார் சுற்றிய சுற்றம் என்றார்.

ஆய்ந்த என்பது உள்ளதன் நுணுக்கப் பொருள்தரும் 'ஆய்' என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சவினை. பூசல் என்பது புரைசொல் என்பதன்மருவாய் அமைந்ததொரு திரிசொல் [அரசல் புரசல் என்பது சேரிவழக்கு] பலருரையும் கலந்து பொருள் தெரிவின்றி ஆரித்தலான் அதனை மயக்கம் என்றார். அஃது இக்காலத்து ஒப்பாரி என வழங்குதலோ டொத்தது.

எ - டு : இரவலர் வம்மி னெனவிசைத்த லின்றிப்
புரவலன் மாய்ந்துழியும் பொங்கும் — உரைமயங்க
வேற்கண் ணியரழுத வெம்பூசல் கேட்டடங்கா
தோற்கண்ண போலுந் துடி. [தகடூர் யாத்திரை]

12) தாமே எய்திய தாங்கரும் பையுளும் என்றது = எதிர் பாராத நிலையில் இழவூழ் காரணமாகத் தாமே வந்தடைந்த தடுத்தற்கரிய துன்பமாகிய தாங்கரும் பையுள் என்னும் துறையும் என்றவாறு.

தாமே எய்தும் பையுளாவன. மிக்கமூப்பும், வறுமையும், நோயுமாகிய காரணங்களானும், பெரும்புயல், வெள்ளம் முதலாய இயற்கையினது சீற்றங்களானும் வரும் துன்பங்களும், கள்வர் முதலானோரான் வரும் ஊறுகளுமாம்.

தாங்குதல் = தடுத்தல் — பொறுத்தற்கரிய எனினுமாம்

பை என்னும் ஓரெழுத்தொருமொழி ‘ உள் ’ என்னும் தொழிற் பெயர் விகுதியொடுகூடிப் பையுள் என நின்றது. பை என்பது பே என்னும் அச்சப்பொருள் தரும் உரிச்சொல்லின் திரியாகும்.

இதனான் அறிவு, ஆற்றல் முதலியவை ஓரோவழிப் பயன் படாமையைச் சுட்டிச் செல்வம் நிலையாமையையும், யாக்கை நிலையாமையையும் உணர்த்தியவாறு.

எ - டு : குழவி இறப்பினும் ஊன்றடி பிறப்பினும்
ஆளன்றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகையின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணும் அளவை
ஈன்மரோ இவ்வுலகத் தானே (புறம்-74)

எனவரும். இதன்கண் நீர்வேட்டுத் தானே இரந்தநிலையை எண்ணி மான மீதூர வருந்தியமை கண்டுகொள்க. இதற்குச் சிறைப்பட்டவர் தாமுற்ற துன்பம் என்றும் போரின்கண் ஊறுபட் டெய்திய துன்ப மென்றும் பொருள் கூறுவர். பிறவற்றான் வரும் துன்பங்களையெல்லாம் ஒருங்கு கூறாமல் சிலவற்றை மட்டும் கூறின் அது குன்றக் கூறலாமென்க.

இனி நச்சினார்க்கினியர் ‘தாமே தத்தம் கொழுநரைத் தழுவியிருந்து அழுததுகண்டோர் பொறுத்தற்கரியநோய் எனப் பொருள் கூறுவார். அவர் கருத்துச் சூத்திரச் சொற் கிடக்கைக்கு ஏலாமையறிக.

13) கணவனொடு முடிந்த படர்ச்சிநோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தமும் என்றது = மாய்ந்துபட்ட கணவனொடு ஒருயிராக இயைந்த மனைவி தானும் தன் வாழ்நாளை முடித்துக் கொண்ட பெருஞ்செலவைக் கண்டு செல்வோர் இரங்கிக் கூறிய மூதானந்தமாகிய துறையும் என்றவாறு.

படர்ச்சி-மெல்லிதாகச் செல்லும் செலவு. இருதலைப் புள்ளின் ஒருயிராக இயைந்த நட்பினை உள்ளுதலான் 'நோக்கி' என்றார். (முதுமை + ஆனந்தம்) முதுமை ஈண்டு மதிப்பின் மேல் நின்றது. ஆனந்தம் = சாக்காடு

அரசு கட்டிலின் வீழ்ந்ததென்னவனொடு கோப்பெருந் தேவி உடன் படர்ந்தமையைச் சிலப்பதிகாரம் கூறுமாற்றான் அறிக.

எ-டு: ஒருயிராக உணர்க உடன்கலந்தார்க்கு
ஈருயிர் என்ப இடைதெரியார் — போரில்
விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையினாட்கும்
உடனே உலந்தது உயிர் (பு. வெ. மா-262)

என்பது வெண்பா மாலைச் செய்யுள்.

14) நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முதுபாலையும் என்றது = வெம்மை நனி கூர்ந்த வறிய காட்டிடை உடன் போகிய தலைவி தன் கணவனை இழந்து தனியளாய் நொந்தழுத முதுபாலையாகிய துறையும் என்றவாறு.

நனிமிகு சுரம் எனப் பாலையின் கொடுமை உணர்த்தியவாறு. மீளாப் பிரிவாதலின் முதுபாலை எனப்பட்டது. இஃது எண்ணியது எண்ணியாங்கு நிகழாமை பற்றிக் காம நிலை யின்மையும் யாக்கை நிலையின்மையும் உணர்த்திற்று.

எ-டு: ஐயோ எனின் யான் புலியஞ்சுவலே
அணைத்தனென் கொளினே அகன் மார்பு
எடுக்கவல்லேன்
என்போல் பெருவிதிர்ப்புறுக. நின்னை
இன்னாதுற்ற அறனில் கூற்றே
நிரை வளை முன்கை பற்றி
வரை நிழல்சேர்கம் நடந்திசின் சிறிதே (புறம் - 255)

எனவரும்.

15) கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறு நிலையும் என்றது - முறையானே வாணாள் கழிந்து மாய்ந்தோர்மாட்டு, அவர் தமக்கு ஏமமாக இருந்தமை

யை எண்ணிப் பெருந்துயர் உற்று மற்றையோர் தமியராய் நொந்து கலுழ்ந்த கையறு நிலை என்னும் துறையும் என்றவாறு

கை விதிர்த்துக் கலங்கும் நிலை கையறு நிலை எனப் பட்டது.

ஏமமும் துணையுமின்றித் தமித்தலின் "ஒழிந்தோர்" என்றும் "கழிபடர் உறீஇ" என்றும் கூறினார்.

இத்துறை தலைவன் தலைவியர் ஒழிந்த ஏனைய சுற்றத்தார், பெற்றோர், உடன் பிறந்தார், புரப்போர் யாவர்க்கும் ஒத்ததாகலின் பொதுப்பட 'ஒழிந்தோர்' என்றார்.

எ - டு : பெருஞ்சோறு பயந்து பல்யாண்டு புரந்த
பெருங் களிறிழந்த பைதற் பாகன்
அதுசேர்ந் தல்கிய அழுங்கல் ஆலை
வெளில் பாழாகக் கண்டு கலுழ்ந்தாங்குக்
கலங்கினெ னல்லனோ யானே பொலந்தார்த்
தேர்வண் கிள்ளி போகிய
பேரிசை மூதூர் மன்றங்கண்டே (புறம்-226)

"நோகோயானே" என்னும் புறப்பாட்டும் (234) அது.

16) காதலியிழந்ததபுதார நிலையும் என்றது = கணவன் தன் மனைக் கிழத்தியை இழந்த தபுதார நிலையாகிய துறையும் என்றவாறு. தாரம்தபுநிலை என்பது முன்பின்னாக மாறி ஒரு சொல் நீர்மைத்தாய் இலக்கணக் குறியீடாக நின்றது.

தபுதல் = இறத்தல். இது காமநிலையின்மையை உணர்த்திற்று.

எ - டு : யாங்குப் பெரிதாயினும் நோயளவுஎனைத்தே
உயிர் செகுக்கல்லா மதுகைத் தன்மையின்
கள்ளிபோகிய களரி மருங்கின்
வெள்ளிடைப் பொத்திய விளைவிறகு ஈமத்து
ஒள்ளழற் பள்ளிபாயல் சேர்த்தி
ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை
இன்னும் வாழ்வல் என்னிதன் பண்பே (புறம்-245)

17) காதலன் இழந்த தாபத நிலையும் என்றது = கணவனை இழந்த மனைவி கைம்மை நோன்பு புரிந்துழலும் தாபத நிலையாகிய துறையும் என்றவாறு.

தாபதம் : தவம் (நோன்பு) ஈண்டுக் கைம்மை நோன்பை உணர்த்தி நின்றது.

தாபதமாவது தவிப்பு என்பார் பாரதியார். இதுவும் காம நிலையின்மையை உணர்த்திற்று.

எ – டு : அளியதாமே சிறுவெள் ளாம்பல்
இளையமாகத் தழையாயினவே
இனியே,
பெருவளக் கொழுநன்மாய்ந்தெனப் பொழுது மறுத்து
இன்னா வைகல் உண்ணும்
அல்லிப்படூஉம் புல்லாயினவே (புறம்.248)

18) நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச் சொல்லிடை யிட்ட பாலை நிலையும் என்றது = கற்புடைய மனையாள் மாய்ந்த கணவனொடு மிக்கெரியும் ஈம அழலின்கண் புகுதல் வேண்டி அதனை விலக்க முயல்வாரொடு உறழ்ந்து கூறிய பாலைநிலையாகிய துறையும் என்றவாறு.

நல்லோள் என்பதன்கண் நலம் கற்பின் மேல் நின்றது. 'கணவனொடு முடிந்த படர்ச்சி' என மேற்கூறியது. அறக்கற்பினளாகிய மனைவி தானே மாய்ந்தநிலை. இத்துறை மறக்கற்பினளாகிய தலைவி அழலின்கண்புக்குத் தன்னை மாய்த்துக் கொள்ளும் நிலை ஆதலின் இவை வேறு வேறு துறையாயின என்க.

தன்னை விலக்க முயல்வார்க்கு விடைபகர்ந்து பின்னர்த் தீமூழ்கலான் சொல்லிடையிட்பாலை என்றார். ஈண்டுப் பாலை என்றது பெரும்பிரிவாகிய இறத்தலை. நச்சினார்க்கினியர் பாலையைப் புறங்காடென்பார்.

எ - டு : பல்சான்றீரே பல்சான்றீரே
செல்கெனச் சொல்லாது ஒழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந்திட்ட
காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது
அடையிடைக் கிடந்த கைபிழி பண்டம்
வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய்து அட்ட
வேளை வெந்தை வல்சியாகப்
பரற்பெய்பள்ளி பாயின்று வதியும்
உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டீமம்
நுமக்கரி தாகுக தில்ல எமக்கெம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென, அரும்பற

வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோரற்றே (புறம். 246)

'உயவற்பெண்டிரேமல்லேம்' என்றதனான் இச்செயல் மறக்கற்பாதல் அறிக.

19) மாய்பெருஞ்சிறப்பின் புதல்வற் பயந்த தாய்தபவரூஉம் தலைப்பெயல் நிலையும் என்றது பெருஞ்சிறப்பொடுபொருது மாய்ந்த புதல்வனை ஈன்ற தாய் தானும் அவனொடுமடியக் கருதிப் போர்க்களத்திற்கு வரும் தலைப்பெயல் நிலையாகிய துறையும் என்றவாறு. தலைப்பெயல் - ஒன்றுபடுதல்.

எ - டு: சான்றோர் செய்யுள் வந்துழிக் கண்டுகொள்க

இடம்படு ஞாலத் தியல்போ கொடிதே
தடம்பெருங்கட் பாலகன் என்னும் — கடன்கழித்து
முள்ளெயிற்றுப் பேதையாள் புக்காள் முரணவியா
வள்ளெயிற்றுக் கூற்றத்தின் வாய் (பு.வெ மா. 258)

என்பது வெண்பாமாலைச் செய்யுள்.

இதற்கு நச்சினார்க்கினியர் இருவகையாகப் பொருள் கூறுவார். முதலுரை இந்நூல் நெறிக் கொவ்வாதெனப் பாரதியார் மறுத்துரைப்பார். அவர் மறுப்புரை ஏற்புடைத்தே யாம். மற்றுத் தலைப்பெயல் நிலை என்பதற்குப் பாரதியார் கூறும் உரை முரண்பட நிற்றலின் அவர் கருத்துப் பொருந்து மாறில்லை.

20) மலர்தலையுலகத்து மரபு நன்கறியப் பலர் செலச் செல்லாக் காடுவாழ்த்தொடு நிறையருஞ் சிறப்பின் துறை யிரண்டுடைத்தே என்றது = பரந்த இடத்தினையுடைய இந் நிலவுலகின்கண் வரலாற்று முறைமையினை யாவரும் பெரிதும் உணர அதன்கண் தோன்றியவர் பலரும் இறந்தொழியத் தான் மட்டும் அங்ஙனம் செல்லாது நிற்கும் புறங்காட்டினை வாழ்த்தும் காடு வாழ்த்தாகிய துறையொடு ஒப்பரிய சிறப்பினையுடைய இப்பத்துத் துறைகளை இரண்டாங் கூறாகக் காஞ்சித்திணை உடையதாகும் என்றவாறு.

வாழ்த்தென்றது குறிப்புமொழி அது புகழ்வது போலப் பழித்தலாம். இரண்டுடைத்தென்றது இரண்டாம் கூறாக உடையது என்னும் பொருள்பட நின்றது. என்னை? முன்னர் ஈரைந்தாகும் பேரிசை " என முதலாங் கூற்றினைப் பிரித்தோதி யமையான் என்க.

இச்சூத்திரத்து இறுதிக்கண் ஓரிரண்டடிகள் சிதைந்திருக்கலாம் எனக் கருதுவார் பாரதியார். இங்ஙனம் ஒட்பமும் நுட்பமுமாக அமைத்தல் சூத்திர யாப்பிற்குரிய மரபாகலின் அவற்றை உணர்ந்து விரித்துக் கோடல் உரையாசிரியன்மார் கடனாகும். எனவே கிடந்தவாறு கொள்ளுதலே சால்பாகும்.

இனி, பூசல்மயக்கு முதலாகக் கூறிய துறைகள் பத்தும் மறத்தகவும் புகழும் நோக்காமல் பற்றும் கேண்மையுமாகிய அறத்தகவுபற்றி உலகியல்பாக அமைந்துள்ளமையின் பிரித்து இரண்டாக ஓதப்பட்டன என்க. இவற்றை விழுமவகை எனக் கூறுவார் பாரதியார்.

## பாடாண்டிணை பற்றியதொரு சிறுகுறிப்பு

கைக்கிளையின் புறனாகிய பாடாண்டிணை பற்றிய இலக்கண நூற்பாக்களுள் இறுதி இரு நூற்பாக்களைத் தவிர்ந்த ஏனையவற்றிற்குப் பொருள்கூறுமிடத்து உரையாசிரியன்மார் பெரிதும் வேறுபட்டுள்ளனர். ஆதலின் அவற்றின் செம்பொருளைக் காண்பதற்குப் பின்வரும் குறிப்புக்கள் துணைபுரியும்.

புறத்திணை ஏழும் அகத்திணை ஏழனது புறக்கூறுகளே என்பதனை ஐயத்திற்கிடமின்றி ஆசிரியர் இதற்கு இது புறனே எனக் கூறுதலான் அறியலாம். அகத்திணைக்குரியராகிய மாந்தரே புறத்திணைக்கும் உரியர் என்பதும் மேல் விளங்கப் பெற்றது.

இந் நானிலத்தே தோன்றி வாழ்பவராகிய மக்கள் தம் உள்ளத்துணர்வுகளும் அவை பற்றிய செயல்களும் அவற்றிற்குரிய காரணங்களும் அச்செயல்கட்குத் துணையாவாரும் அவற்றான் எய்தும் பயன்பாடுகளும் பற்றிய ஒழுகலாறுகளின் பகுப்புக்களே அகபொருளும் புறப்பொருளும் பற்றிய இலக்கணமாம்.

தொல்நூலோர் அமைத்த அகத்திணை ஏழனுள் நடுவணைந்திணைகளின் இயல்புகளை அகத்திணையியலுள் விரிவாகத் தோற்றுவாய் செய்து களவியல் கற்பியல்களுள் சிறப்பாகவும் பொருளியலுள் பொதுவாகவும் ஏனை இயல்களுள் குறிப்பாகவும் தொகுத்தும் வகுத்தும் இவ்வாசிரியர் விளக்கியுள்ளார்.

அகனைந்திணைகளின் இருமருங்கும் அமைந்த கைக்கிளை பெருந்திணைகளின் இயல்புகளை அகத்திணையியல் இறுதிக்கண் மூன்று நூற்பாக்களானும், களவியலுள் இரண்டு நூற்பாக்

களானும் பொருளியலுள் சில நூற்பாக்களிற் குறிப்பாகவும் விளக்கியுள்ளார்.

அவற்றை ஊன்றி நோக்கின் அகனைந்திணை விளக்கங்களுள் உணர்வு பற்றிய விளக்கங்களினும் செயற்பாடு பற்றிய விளக்கங்கள் மிக்கிருப்பதை அறியலாம். கைக்கிளை பெருந்திணை பற்றிய விளக்கங்களுள் உணர்வு பற்றியவை மிகுதியாகவும் செயல் பற்றியவை குறைவாகவும் அமைந்திருப்பதைக் காணலாம். அவ்வாறே புறத்திணைகட்குரிய விளக்கங்களை ஊன்றி நோக்கின் அவை பண்பும் தொழிலும் பற்றிய விளக்கங்களாக உள்ளமையை அறியலாம்.

அகனைந்திணைகட்குப் புறமாகிய வெட்சி, வஞ்சி உழிஞை தும்பை, வாகை ஆகிய ஐந்துதிணைகள் முறையே ஆனிரை கவர்தலும் மீட்டலும், மண்ணசையான் மேற்சேறலும் எதிர்தலும் எயில்வளைத்தலும் தடுத்தலும் மைந்து பொருளாக ஒருவரொடொருவர் பொருதலும், தத்தங்கூற்றைப் பாகுபட மிகுதிப்படுத்தலும் ஆகிய உரிப்பொருள் நிகழுமிடத்துப் பண்பு பற்றிய விளக்கங்களினும் செயல் பற்றிய விளக்கங்கள் மிக்கமைந்துள்ளமையைக் காணலாம்.

அம்முறைமையான் பெருந்திணை கைக்கிளைத்திணைகளின் புறமாக நிகழும் காஞ்சித்திணையும் பாடாண்டிணையும் முறையே நிலையாமையைக் கருதிய ஒழுகலாறாயும் பரவலும் புகழ்ச்சியும் பற்றிய ஒழுகலாறாயும் நிகழுமிடத்துப் பண்பு பற்றிய விளக்கங்கள் மிக்கும் செயல் பற்றிய விளக்கங்கள் குறைந்தும் அமைந்திருப்பதைக் காணலாம் அஃதாவது பெருந்திணை இயல்புகளாகக் கூறிய நான்கனுள் ஏறிய மடற்றிறம் தவிர்ந்த ஏனைய மூன்றும் உணர்வுக் கூறாக இருத்தலையும் கைக்கிளையின் இயல்புகளாகக் கூறியவை முழுதும் உணர்வுக்கூறாக இருத்தலையும் காணலாம். செயற்கூறுகள் "முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே" "பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" எனச்சிறு பான்மையாக அமைந்துள்ளமையையும் காணலாம்.

அவ்வாறே காஞ்சித்திணைத்துறைகள் போர்நெறி பற்றிய மறப்பண்பும் வாழ்முறை பற்றிய அறப்பண்பும் பற்றியனவாய் நேரந்திறமாக அமைந்திருத்தலையும் பாடாண்டிணைப் பகுதிகளும், துறைகளும், பரவலும் புகழ்ச்சியுமாக உவந்தெழும் உள்ளக்கிளர்ச்சி பற்றியனவாய்ச் செந்திறமாக அமைந்திருத்தலையும் காணலாம்.

மற்றும் அகத்திணை ஏழனுள் பெருந்திணையும் கைக்கிளையும் தமக்கென முதற்பொருளும் கருப்பொருளும் பெறாமல் அகனைந்திணைக்கண் அவைகளையே இடமாகவும் பற்றுக் கோடாகவும் கொண்டு நிகழ்தலையும், பாலைத்திணை தனக்கென முதற்பொருளுள் ஒரு கூறாகிய காலத்தையும் கருப்பொருளையும் பெற்று முல்லை முதலாய நால்வகைத் திணைகளைப் பற்றுக் கோடாகக் கொண்டு நிகழ்தலையும் காணலாம்.

அவ்வாறே புறத்திணைகளுள் காஞ்சியும் பாடாணும் ஏனைய ஐந்து திணைகளின் செயற்பாடுகளையே அடிப்படையாகக் கொண்டு நடத்தலையும், வாகைத்திணை ஏனைய நான்கு திணைகளின் தொழிற்பாடுகளையே பற்றுக் கோடாகக் கொண்டு நிகழ்தலையும் காணலாம்.

எனவே கைக்கிளைத்திணை அகனைந்திணைகளின் பாங்காக அவற்றின்கண் நிகழுமாறு போலவே பாடாண்டிணையும் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சியாகிய திணை நிகழ்ச்சிகளை வாயிலாகக் கொண்டு தலை மக்களது ஆளுமைப் பண்புகளையும் சுட்டியொருவர் பெயர் விளங்க வந்த அகவொழுகலாற்றுத் தலைமக்களின் ஆளுமைப் பண்புகளையும் பற்றி நிகழும் என்பது நன்கு புலனாகும்.

இனி வாகையும் பாடாணும் ஏனைத் திணை நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு நிகழுமேனும் அவை தத்தமக்குரிய சிறப்பிலக்கணங்களான் வேறுபட்டு நிற்கும். அஃதாவது வாகைத்திணையின் பொதுவியல்பு வெட்சி முதலிய நான்கு திணைக்கண் நிகழும் செயல் பற்றி வரும் வென்றியாகும். அதன் சிறப்பியல்பு பிறப்பு நிலையானும் சிறப்பு நிலையானும் பிறரினும் மேம்பட்டுத் தோன்றும் வெற்றியாகும்.

இனி, பாடாண்டிணையின் பொதுவியல்பு வெட்சி முதலாகிய ஆறு திணைகளில் நிகழும் நிகழ்ச்சியையும் அகத்திணையுள் புறத்திணைக் கூறுகளாக வரும் நிகழ்ச்சியையும் பற்றித் தோன்றும் ஆளுமைப் பண்பைக் கருதுதலாகும். அதன் சிறப்பியல்பு அவ் ஆளுமைப் பண்புகளைப் பாராட்டி அவரான் பயன்கோடலைக் கருதி அவரையும் அவர் சுற்றத்தையும் அவர் முன்னோரையும் ஏத்திப் பரவுதலும் புகழ்தலுமாகும்.

அஃதாவது பயன் கருதாது. பரவலும் புகழ்தலுமின்றி ஒருவர் திறலைச் சிறப்பித்துப் போற்றுதல் வாகைத் திணையாம். பயனைக் கருதிப் பரவலும் புகழ்ச்சியுமாக ஒருவரின் பெருந்தகவினைப் போற்றுதல் பாடாண்டிணையாம்.

அங்ஙனம் போற்றியுரைக்குங்கால் நாடக வழக்குப் பற்றிச் சிறுபான்மை புனைந்துரையொடு கூறுதல் மரபாகும். அம் முறையான் பாடாண்டிணை பற்றி ஆசிரியர் கூறும் இலக்கணங் களை இனிக் காணலாம்.

சூ. 82 : பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே
நாடுங் காலை நாலிரண் டுடைத்தே (25)

க ரு. எஞ்சிநின்ற கைக்கிளையின் புறவொழுக்கம் பாடாண் என்றும், அஃது எண்வகைப்பட்டுவரும் என்றும் கூறுகின்றது.

பொருள் : பாடாண்டிணையாகிய ஒழுகலாறு கைக்கிளைத் திணையின் புறனாம். அதனை ஆராயுமிடத்து அஃது எட்டுப் பகுதியினையுடையதாகும்.

வாகைத்திணையைப் போல இதுவும் பிறதிணைகளின் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு நிகழ்தலான் அது போலவே இதுவும் வகைப்பட்டு நிற்கும் என்பது விளங்கப் பாடாண்பகுதி என்றார். அவ்வகைமைகளை ஆராய்ந்து உணர்தல் வேண்டுமென்பார் 'நாடுங்காலை' என்றார். வகை யாவன இவையென மேற்கூறுப

பாடாண் என்பதற்குப் பொருள் பாடுபெறும் ஆளுமைத் திறன் என்பதாகும். எனவே அது சொல்லின் முடியும். இலக்கணத்ததாய் நிற்றலின் மிகைபட வேறு விளக்கம் கூறாரா யினர் என்க. இதற்கு இதுவே பொருள் என்பதனை அமரர் கண் முடியும் அறுவகை, புரைதீர் காமம் புல்லியவகை என்ப தனானும், பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும் முன்னோர் கூறிய குறிப்பினும் என்பதனானும் அறிந்து கொள்க,

சூ. 83 : அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப. (26)

க ரு. : ஒருசார் பாடாண்பகுதி வருமாறு கூறுகின்றது.

பொருள் : அமரர் கண்ணவாய் முடியும் வெட்சி முதலாய அறுவகைபற்றி நிகழும் ஒழுகலாற்றின்பாலும், குற்றந்தீர்ந்த காமக்கூட்டம் பற்றி நிகழும் ஒழுகலாற்றின்பாலும் ஒருகூறு பாடாண்டினையாகக் கிளத்தற்குப் பொருந்தும் எனக் கூறுவர் நூலோர்.

புறப்பகையையும் அகப்பகையையும் நீக்குதற்கு அமர் புரிபவராதலின் பேராண்மையும் ஊராண்மையுமுடைய மறவீறுடைய மாந்தர் அமரர் எனப்பட்டனர்.

அமர் = போர். அம்மு என்னும் முதனிலையடியாகப் பிறந்த பெயர் அமரர். அம்முதல் — இகலுற்று நெருங்குதல். அமுக்குதல் என்பது சேரிவழக்கு, இதனை ஆரமர் ஓட்டலும் (புறத் - 5) சுற்றமர் ஒழிய வென்றுகைக்கொண்டு (புறத் — 11) என ஆசிரியர் வழங்குமாற்றானறிக. அமரர் என்னும் வடசொற்கு மரணமில்லாதவர் என்பது பொருள், அமரர் என்னும் தமிழ்ச்சொற்கு விரும்பத்தக்கவர் என்பது பொருள். முன்னதை அ + மரர் என்றும் பின்னதை அமர் ; அர் என்றும் பிரித்தல் வேண்டும். "அமர்தல் மேவல்" என்பது உரியியற் சூத்திரம்.

அறுவகை என்றது வெட்சி முதல் காஞ்சியீறாகக் கூறிய ஒழுகலாறுகளை, புரைதீர்காமமாவது அறத்தாற்றின் நிகழும் காதற்கேண்மை. ஈண்டுப் புரைஎன்பது " புரைதீர் இறுதி நிலையுரைத் தன்றே " (செய்-132) என்புழிப்போலக் குறையை உணர்த்தி நின்றது.

மேற்கூறிய எழுவகைகளுள் பாடாணாகக் கொள்ளுதற்குரிய பகுதிகள் மட்டும் பாடாண்டிணையாக அமையுமாதலின் "ஒன்றன் பகுதி ஒன்றும்" என்றார். ஒன்றன் என்பதனுள் 'அன்' சாரியை. புரைதீர்காமப் பகுதியாவது மக்கள் நுதலிய அகனைந்திணை ஒழுகலாற்றினுள் சுட்டி ஒருவர் பெயர் விளங்கப் புறத்திணை மருங்கிற் பொருந்தி வருவனவாகும்.

எ - டு : நறவுந்தொடுமின் விடையும் வீழ்மின்
பாசுவல் இட்ட புன்காற் பந்தர்ப்
புனல்தரும் இளமணல் நிறையப் பெய்ம்மின்
ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று
நிரையொடு வருஉம் என்னைக்கு
உழையோர் தன்னினும் பெருஞ்சாயலரே (புறம்-262)

இதன்கண் வெட்சி மறவனது ஆளுமையைப் பரவி ஏத்தலின் அப்பகுதி பாடாண் பகுதியாம்.

மலையுறழ் யானை வான்றோய்வெல் கொடி
வரைமிசையருவியின் வயின்வயின் நுடங்க
கடல்போல் தானைக் கடுங்குரல் முரசம்
காலுறு கடலின் கடிய உரற
எறிந்து சிதைந்தவாள்

இலை தெரிந்த வேல்
பாய்ந் தாய்ந்த மா
ஆய்ந்து தெரிந்த புகல்மறவ ரொடு
படுபிணம் பிறங்க நூறிப் பகைவர்
கெடுகுடி பயிற்றிய கொற்ற வேந்தே
நின்போல், அசைவில் கொள்கையர் ஆகலின் அசையாது
ஆண்டோர் மன்றஇம் மண்கெழு ஞாலம்
நிலம்பயம் பொழிய சுடர் சினந் தணியப்
பயங்கெழு வெள்ளி ஆநியம் நிற்ப
விசும்பு மெய்யகல பெயல்புரவு எதிர
நால்வேறு நனந்தலை ஓராங்கு நந்த
இலங்குகதிர்த் திகிரிநின் முந்திசினோரே (பதிற்—69)

இது வஞ்சித்திணை நிகழ்ச்சி பற்றிப் புகழ்ந்து ஏத்துதலின் பாடாண் பகுதியாம்.

இறும்பூதாற் பெரிதே கொடித்தேரண்ணல்
வடிமணி அனைத்த பணைமருள் நோன்றாள்
கடிமரத்தான் களிறணைத்து
நெடுநீர துறை கலங்க
மூழ்த்திறுத்த வியன்றானை யொடு
புலங்கெட நெரிதரும் வரம்பில் வெள்ளம்
வாள்மதிலாக வேல்மிளை உயர்த்து
வில்விசை யுமிழ்ந்த வைம்முள் ளம்பின்
செவ்வாய் எஃகம் வளைஇய அகழின்
காரிடி யுருமின் உரறு முரசின்
கால்வழங் காரெயில் கருதின்
போர் எதிர்வேந்தர் ஒருஉப நின்னே (பதிற் - 33)

இஃது உழிஞைத்திணை நிகழ்ச்சி பற்றிப் புகழ்ந்தேத்துதலின் பாடாண்பகுதியாம்.

உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடை மல்கு குளவியொடு மகிழும் சாரல்
மறப்புலி யுடலின் மான்கணம் உளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய
இருளும் உண்டோ ஞாயிறு சினவின்
அச்சொடு தாக்கிப் பார்உற்று இயங்கிய
பண்டச் சாகாட்டு ஆழ்ச்சி சொல்லிய
வரிமணல் ஞெமிரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ

எழுமரங் கடுக்கும் தாள்தோய் தடக்கை
வழுவில் வன்கை மழவர் பெரும!
இருநிலம் மண் கொண்டுசிலைக்கும்
பொருநரும் உளரோ நீகளம் புகினே (புறம்-90)

இது தும்பைத் திணை நிகழ்ச்சி பற்றிப் புகழ்ந்தேத்துதலின் பாடாண் பகுதியாம்.

புரைசால் மைந்தநீ ஓம்பல் மாறே
உரைசான் றனவால் பெரும நின்வென்றி
இருங்களிற் றியானை இலங்குவால் மருப்பொடு
நெடுந்தேர்த் திகிரி தாய வியன்களத்து
அளகுடைச் சேவல் கிளைபுகா ஆர
தலைதுமித் தெஞ்சிய மெய்யாடு பறந்தலை
அந்தி மாலை விசும்புகண் டன்ன
செஞ்சுடர்க் கொண்ட குருதிமன் றத்துப்
பேஎய் ஆடும் வெல்போர்
வீயா யாணர் நின்வயி னானே. (பதிற்—35)

இது வாகைத்திணை நிகழ்ச்சிப் பற்றிப் புகழ்ந்தேத்துதலின் பாடாண்பகுதியாம்.

பாடுநர்க் கீத்த பல்புகழன் னே
ஆடுநர்க் கீத்த பேரன்பின னே
அறவோர் புகழ்ந்த ஆய்கோ லன்னே
திறவோர் புகழ்ந்த திண்ணன் பின னே
மகளிர் சாயல் மைந்தர்க்கு மைந்து
துகளறு கேள்வி உயர்ந்தோர் புக்கில்
அனையன் என்னாது ஆண்டக்கோனை
நினையாக் கூற்றம் இன்னுயிர் உய்த்தன்று
பைதல் ஒக்கல் தழீஇ அதனை
வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை யுலகம் அரந்தை தூங்க
கெடுவில் நல்லிசை சூடி
நடுகல் ஆயினன் புரவலன் எனவே (புறம்-221)

இது காஞ்சித்திணை நிகழ்ச்சி பற்றிப் புகழ்ந்து ஏத்தலின் பாடாண் பகுதியாம். பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

இனிக் காமப் பகுதி பற்றி வருமாறு

"கோடுறழ்ந்தெடுத்த" என்னும் பதிற்றுப்பத்தினுள் (16)

ஆறிய கற்பின் அடங்கிய சாயல்
ஊடினும் இனிய கூறும் இன்நகை
அமர்துபொதி துவர்வாய் அமர்த்த நோக்கின்
சுடர்நுதல் அசைநடை உள்ளலும் உரியள்
பாயல் உய்யுமோ தோன்றல் தாவின்று
திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்
வயங்குகதிர் வயிரமொடு உறழ்ந்துபூண் சுடர்வர
எழுமுடி கெழீஇய திருஞெமர் அகலத்து
புரையோர் உண்கண் துயிலின் பாயல்
பாலும் கொளாலும் வல்லோய் நின்
சாயல் மார்பு தனி அலைத்தன்றே ” எனவும்

‘ கொடிநுடங்கு நிலைய ’ என்னும் பதிற்றுப் பத்தினுள்
... ... ... ... ... ... ... இனியே
சுடரும் பாண்டில் திருநாறு விளக்கத்து
முழாஇமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணையாகச்
சிலைப்புவல் லேற்றின் தலைக்கை தந்துநீ
நளிந்தனை வருதல் உடன் றனளாகி
உயலும் கோதை ஊரலம் தித்தி
ஈரிதழ் மழைக்கண் பேரியல் அரிவை
ஒள்ளிதழ் அவிழகம் கடுக்கும் சீறடி
பல்சில கிண் கிணி சிறுபரடு அலைப்பக்
கொல்புனல் தளிரின் நடுங்குவனள் நின்றுநின்
எறியர் ஒக்கிய சிறுசெங்குவளை
ஈயென இரப்பவும் ஒல்லாள் நீயெமக்கு
யாரையோ எனப் பெயர்வாள் கையதைக்
கதுமென உருத்த நோக்க மொடு அதுநீ
பாஅல் வல்லாய் ஆயினை பாஅல்
யாங்கு வல்லுநையோ வாழ்கநின் கண்ணி, எனவும்

புறத்திணைத்தலைவன் கூடலும் ஊடலுமாகப் பெற்ற இன்பச் சிறப்பினைப் புகழ்ந்து ஏத்துதல் பாடாண் பகுதியாய் நிற்றலைக் கண்டுகொள்க.

சூ. 84 : **வழக்கியல் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே** (27)

க. து. மேற்கூறிய பாடாண் பகுதிக்குரிய பொருள்மையும் அவை செய்யுட்கண் அமைந்து வருமாறும் பற்றிக் கூறுகின்றது.

**பொருள்** : மேற்கூறிய ஏழுவகைப் பாடாண் பகுதிக்கண் பாடாண்டிணை ஆதற்குரிய தலைமக்களது ஆளுமைப் பண்புகளை இருவகை வழக்கினும் பயின்று வரும் பக்கத்தான் வகைபட நிறுத்திப் பரவலும் புகழ்ச்சியுமாக அவற்றைக்கருதிக் கூறுமிடத்தும், அறநெறி முறைமையாக முன்னோர் கூறிய உறுதிப்பொருளைக் குறித்துக் கூறுமிடத்தும் செந்துறையாக வண்ணித்துக்கூறும் வண்ணப்பகுதி நீக்கப்படும் நிலையில்லை எனக் கூறுவர் நூலோர்.

என்றது ; இலக்கண நெறியான் பாடுபெறும் தலை மக்களின் ஆளுமைத் திறங்களைப் பட்டாங்குக் கூறுமிடத்துச் சான்றோர் வழங்கிய வழக்கியல் நோக்கி (நாடக வழக்குப் பற்றிப்) புனைந்து கூறலும் மரபு என்றவாறு.

'செந்துறை' யாவது உயர்வு நவிற்சியின்றிப் பட்டாங்குக் கூறும் முறைமை. 'கூறிய' என்பது உறுதிப் பொருள்களை குறித்தலின் வினையாலணையும் பெயர். குறிப்பினும் என்றது கருதிச் சொல்லினும் என்றவாறு "ஆங்கு" என்றது மேற்கூறிய பாடாண் பகுதிகளையாம்.

வண்ணமாவது = அழகும் (அணி) ஓசையுமாம். அஃது ஈண்டுச் செய்யுட்கு அணி செய்யும் உவமக் கூறுகளையும், ஒழுகு வண்ணம் முதலாய ஓசைகளையும் ஒருங்குணர்த்தி நின்றது.

இனி வண்ணப்பகுதி என்பதற்கு நால்வகைச்சாதிப் பிரிவுகள் எனப் பொருள்கூறுவார் நச்சினார்க்கினியர். அவர் கருத்துப் பொருந்தாமையைப் பாரதியார் விளங்கக்கூறி மறுப்பார். செந்துறைவண்ணப்பகுதி என்பதற்கு பாரதியார் இசைவகை வண்ணக்கூறுகள் எனப்பொருள் கூறுவார்.

**எ - டு :** கடும்பின் அடுகலம் நிறையாக நெடுங்கொடிப்
பூவாவஞ்சியும் தருகுவன் ஒன்றோ
வண்ணம் நீவிய வணங்கிறைப் பணைத்தோள்
ஒண்ணுதல் விறலியர் பூவிலை பெறுக, என்
மாட மதுரையும் தருகுவன் எல்லாம்
பாடுகம் வம்மினோ பரிசில் மாக்கள்
தொல்நிலக் கிழமை சுட்டின் நன்மதி
வேட்கோச்சிறார் தேர்க்கண் வைத்த
பசுமண் குருஉத்திரள் போல அவன்
கொண்ட குடுமித்து இத்தண்பணை நாடே (புறம் 32)

இது பரவி ஏத்துதற்கண் உயர்வு நவிற்சியாக வண்ணித்துக் கூறியது.

வரைபுரையும் மழகளிற்றின்மிசை
வான்துடைக்கும் வகையபோல
விரவு உருவின கொடி நுடங்கும்
வியன்தானை விறல் வேந்தே
நீ உடன்று நோக்கும்வாய் எரிதவழ
நீ நயந்து நோக்கும்வாய் பொன்பூப்ப
செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்
வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்
வேண்டியது விளைக்கும் ஆற்றலை ஆகலின்
நின்னிழற் பிறந்து நின்நிழல் வளர்ந்த
எம்மளவு எவனோ மற்றே இன்நிலைப்
பொலம்பூங் காவின் நன்நாட்டோரும்
செய்வினை மருங்கின் எய்தல் அல்லதை
உடையோர் ஈதலும் இல்லோர் இரத்தலும்
கடவதன்மையின் கையற வுடைத்தெனை
ஆண்டுச்செய் நுகர்ச்சி ஈண்டும் கூடலின்
நின்நாடு உள்ளுவர் பரிசிலர்
ஒன்னார் தேஎத்தும் நின்னுடைத் தெனவே (புறம்-38)

இது, புகழ்ந்தேத்துதற்கண் வண்ணித்துக் கூறிய செந்துறைப் பாடாண்பாட்டு.

சேற்றுவளர் தாமரை பிறந்த ஒண்கேழ்
நூற்றிதழ் அலரி நிரை கண்டன்ன
வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை எண்ணுங் காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வானவூர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்தெனக்
கேட்பல் எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி
தேய்தல் உண்மையும் பெருகலுண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியாதோரையும் அறியக் காட்டித்
திங்கட்புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினுங்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி

அருள வல்லை யாகுமதி அருள்இலர்
கொடாஅமை வல்லர் ஆகுக
கெடாஅத துப்பின்நின் பகைஎதிர்ந் தோரே (புறம்-27)

இது முன்னோர் கூறிய அறத்தைச் சுட்டி வாழ்த்திக் கூறிய பாடாண்பாட்டு:

ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும், பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅதீரும்
எம் அம்பு கடிவிடுதும் நும் அரண்சேர்மின் என
அறத்தாறு நுவலும் பூட்கை, மறத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமித் தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீந்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே (புறம்-9)

இது முன்னோர் கூறியவற்றைக் கருதிச் செய்தலைச் சுட்டிப் புகழ்ந்துரைத்த பாடாண்பாட்டு.

பிறவும் இங்ஙனமே அமைந்து விளங்கும் புறநானூறு' பதிற்றுப்பத்துப் பாடல்களான் இத்திணையமைப்பினை அறிந்து கொள்க.

**சூ. 85 : காமப் பகுதி கடவுளும் வரையார்**
**ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர் (28)**

**க - து :** மக்கள் நுதலிய அகனைந்திணையாகிய காமப்பகுதி கடவுளர்க்கும் கடவுட்பாங்கினர்க்கும் உரியதாகி வரும் என்கின்றது.

**பொருள் :** புரைதீர் காமம் புல்லிய வகையினும் எனக் கூறப் பெற்ற காமப்பகுதியாகிய பாடாண் பகுதி உருவகமாக அமைந்து திகழும் தத்துவப் பொருளாகிய கடவுளர் பாங்கின் வருதலையும் அவரல்லாத தெய்வப் பகுதியரான ஏனோர் பாங்கின் வருதலை யும் நீக்கார் (மேற்கொள்வர்) எனக் கூறுவர் நூலோர்.

தத்துவப் பொருளாக அமைந்த கடவுளராவார். மாயோன் சேயோன், வருணன், இந்திரன் முதலாய திணை நிலைக்கடவுளரும் நீலமணிமிடற்றொருவன், வாலிழைபாகன், உமையவள், கொற்றவை எனவரும் கடவுளருமாம்.

ஏனோராவார் காலம் உலகம் என்னும் சூத்திரத்தான் அமைந்து " இசைத்தலும் உரிய வேறிடத்தான " என்னும் விதியான் உயர்திணைப் பாலராய் வரும் தெய்வப்பகுதியினர்.

கடவுளரையும் தெய்வப்பகுதியினரையும் பாட்டுடைத் தலைவராக வைத்தும், பாட்டுடைத் தலைவரொடு சார்த்தியும் வழக்கியல் மரபான் பரவலும் புகழ்ச்சியுமாகக் கூறலும் பாடாண்டிணையாகும் என்றவாறு.

கடவுளும் என்னும் உம்மை மக்கட்குரிமையாகிய காமப்பகுதி அவர்க்கேயன்றித் தெய்வப் பகுதியினர்க்கும் வரையார் என நிற்றலின் எச்ச உம்மையாம். " ஏனோ பாங்கினும் " என்பதன் கண் உள்ள உம்மை எண்ணும்மை.

காமப்பகுதி கடவுளர் பாங்காக வருமிடத்துக் காதற் கேண்மை அக்கடவுளருள்ளும் அமையும் கடவுளரொடு மக்களுள்ளும் அமையும். மக்களொடு கலந்து வருமிடத்து அவர் மக்கட்சுட்டின் நீங்கிக் கடவுளராகக் கொள்ளப் பெறுவர் என்க. அந்நிலையில் காதற் கேண்மையைப் புலப்படுத்தும் கருத்துக் களுக்கியையப் பாற் பகுதி கொள்ளப்படும்.

அஃதாவது சமய நெறி பற்றி ஒழுகிய ஆளுடைய பிள்ளையார், நம்மாழ்வார் போன்ற அருளாளர் இறைவனைத் தலைவனாகக் கொண்டு தம்மைத் தலைவியாகக் கருதித்தம் காதற்கேண்மையைப் புலப்படுத்துமிடத்துப் பெண்பாலராகக் கொள்ளப்பெறுவர் என்றவாறு.

இவ்வகைப் பாடாண்டிணைப் பகுதிகளை இடைக்கால நூலோர் கடவுண் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயந்த பக்கம் என்றும் கடவுண் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்க மென்றும், மானிடப் பெண்டிர் மாட்டுக் கடவுள் நயந்த பக்க மென்றும் விரித்துக் கூறுவர். இவை இடைக்காலத்தெழுந்த புராண வரலாறுகளைக் கருதி அமைத்துக் கொண்டவையாகும்.

இந்நூலாசிரியர் காலத்து இலக்கியங்கள் காணக் கிடை யாமையான் தெற்றென எடுத்துக்காட்டுமாறில்லை, எனினும் உரையாசிரியன்மார் காலங்களுக்கெல்லாம் முற்பட்டவராகிய அருளாளர் தம் பாக்களுள் சில ஓரளவு தொல்காப்பிய நெறியைப் புலப்படுத்துவனவாக உள.

" முன்றில் வாய் மடற்பெண்ணைக் குரம்பை வாழ் முயங்கு சிறை
அன்றில் காள் பிரிவுறும் நோய் அறியாதீர் மிக வல்லீர்
தென்றலார் புகுந்துலவும் திருத்தோணி புரத்துறையும்
கொன்றைவார் சடையார்க் கென்கூர் பயலை கூறீரே "

என்பது திருஞானசம்பந்தர் தன்னைப் பெண்பாலாக வைத்து கூறிய அகத்திணைச் செய்யுளாகும்.

இனி, ஏனோர் என்பதற்கு மக்கள் எனப்பொருள் கூறின் அது கூறியது கூறலாய் முடியும். என்னை? 'புரைதீர்காமம் புல்லிய வகையினும்'' என முன்னர் மக்களைக் குறித்துக் கூறியிருத்தலின் என்க. மற்றும் கனைகதிர்ச் செல்வன், திங்களஞ் செல்வன் என்றாற்போல வரும் இலக்கியகட்கு விதியின்றாய்க் குன்றக் கூறலாக முடியும் என்க.

## சூ. 86 : குழவி மருங்கினும் கிழவ தாகும் (29)

**க - து :** குழவிப் பருவத்தினரிடத்தும் காமப்பகுதி உரியதாகும் என்கின்றது.

**பொருள் :** புரைதீர்காமம் புல்லிய பகுதி கடவுளர் பாங்கினும் ஏனோர் பாங்கினும் அமைந்து வருதலேயன்றிக் குழவிப் பருவத்தினர் பக்கத்தும் உரிமையுடைத்தாக வரும். உம்மை எச்சவும்மை.

ஈண்டுக் குழவிஎன்றது உலகியலறிவுகிளைக்கப் பெறாத இளம் பருவத்தினரை. பால் பாகுபாடின்மை விளங்கக் குழவி என்றார். அவராவரர் மக்கள் யாக்கையினராய்க் கூவுட்டன்மை யுடையாரையும், குழவியாகக் கருதிக்கொள்ளப்பெறும் கடவுளரை யுமாம்.

சமய நெறி பரப்பிய அருளாளர் கடவுளரைக் குழவிப் பருவத்தராக உருவகப்படுத்திச் செய்த இலக்கியங்களை நோக்கி ஆசிரியர் இவ் விதியை அமைத்தனர் போலும், ஆசிரியர் காலத்து இலக்கியங்கள் இக்காலத்துக் காணப்பெறாமையின் எடுத்துக் காட்டு அரிதாயிற்று.

இனி, இடைக்காலத்துத் தோன்றி வழங்கும் பாட்டியல் நூல் கூறும் பிள்ளைத்தமிழ் என்னும் கோட்பாடு, ஈன்றாளும் ஈன்றாளொடொப்பாரும் குழவியிடத்துக் கொண்ட பேரன்பாகிய காதற்கேண்மையை புலப்படுத்த அமைந்ததாகும். ஈண்டுக்கூறியது காமப்பகுதி பற்றிய கேண்மையைப் புலப்படுத்துவதாகும். இவை இரண்டற்குமுரிய வேறுபாடு கருதாமல் இச்சூத்திரம் இக்காலப் பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு மூலமாக அமைந்ததென்பார் கருத்துப் பொருந்தாதென்க.

இதனை மக்கட் குழவிக்கே கொள்க என்பார் நச்சினார்க்கினியார் கடவுட்பகுதி அதிகாரமாதலின் அவர் கருத்து ஏற்புடைத்தாக இல்லை என்க.

சூ 87 : ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப
வழக்கொடு சிவணிய வகைமை யான (30)

க - து : காமப்பகுதி கடவுளர்பாங்காக வருமிடத்து ஆவதொருமரபு கூறுகின்றது.

பொருள் : மேற்கூறப்பெற்ற கடவுளர், ஏனோர், குழவி ஆகியோர் மாட்டுப் புரைதீர்காமம் புல்லிய வகையாற் கூறப் படும் பாடாண் பகுதிக்கண் அக்கடவுளர்க்குரியனவாகத் தொன்னூலோர் அமைத்து வழங்கிய வழக்கொடுபொருந்திய வகையான் அவரவர் ஊர்ப்பெயரொடு கூட்டித்தோற்றுவிக்கும் தோற்றமும் உரியதே எனக் கூறுவர் நூலோர்.

'ஊரொடு' என்றமையான் அவரவர்க்குரிய ஊர்தி, உடை, படை, அணி, கொடி முதலியவற்றொடு தோற்றுவிக்கும் தோற்றமும் உரித்தெனக் கொள்க. திருமுருகாற்றுப்படையுள்,

மாடமலி மறுகின் கூடற்குடவயின்
... ... ... ... ... ... ... ... ... ...
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே
ஆவி னன் குடி அசைதலும் உரியன்
ஏரகத்துறைதலும் உரியன்

என, ஊரொடு தோற்றங் கூறியவாறு கண்டுகொள்க.

கண்ணிகார் நறுங் கொன்றை, காமர்
வண்ணமார்பிற் றாருங் கொன்றை
ஊர்தி வால்வெள்ளேறே, சிறந்த
சீர்கெழுகொடியும் அவ்வேறென்ப [புறம்-கடவுள்] எனவும்
கையது கணிச்சியொடு மழுவே மூவாய்
வேலுமுண்டத் தோலா தோற்கே [அகம்-கடவுள்] எனவும்
குன்றி ஏய்க்கும் உடுக்கை, குன்றின்
நெஞ்சுபக எறித்த அஞ்சுடர் நெடுவேல்
சேவலங் கொடியோன் காப்ப
ஏமவைகல் எய்தின்றாலுலகே [குறுந்-கடவுள்]

எனவும் படை கொடி உடை அணி முதலியவற்றோடு தோற்றம் கூறியவாறு கண்டு கொள்க.

இனி, ஊரொடு தோற்றம் என்பதற்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் பிற்காலப் பாட்டியல் நூலார் கூறும் 'உலா' இலக்கணக் கோட்பாட்டினைக் கருதிக் கொண்டு ஊரிற் பொது மகளிரொடு கூடி வந்த விளக்கம் என்பார்.

அவ்வுரை புரைதீர்காமம் என்னும் இலக்கணத்திற்கு முரணாதலின் பொருந்தாமையறிக. அன்றியும் அவர் கூறும் உலா இலக்கியம் கைக்கிளையும் பெருந்திணையுமாக நிற்றலை யும் ஏழுபருவ மகளிரும் தம் காமநிலையைப் புலப்படுத்தலன்றிப் பரவலும் புகழ்ச்சியுமாகிய பாடாண்பகுதிக்குரியவாக நிகழாமை யும் கண்டுகொள்க.

இனி, பாரதியார் ஊர்ச்சிறப்பும் உயர்குடிப்பிறப்பும் பாராட்டுக்குரியன என்பார். அது சுட்டி ஒருவர்பெயர் கொளவருதல் புறத்திணைக்கு ஆகும் என்று கூறிய இலக்கணவிதியான் அமையுமாதலானும் ஊரையும் குடியையும் பாராட்டுதல் ஏனைய புறத்திணைகட்கும் ஒக்குமாகலானும் கடவுட்பகுதி அதிகாரமாகலானும் அவர் கருத்துப் பொருந்தாமை யறியலாம்.

இச்சூத்திரம் பிற்கால உலா இலக்கியந் தோன்றுதற்கு அடிப்படையாக அமைந்துள்ளது என்பாரைப் பாரதியார் மறுத்துரைத்தலை அவர் உரையிட் கண்டுகொள்க.

## சூ. 88 : மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே (31)

**க - து :** ஊரொடு தோற்றம் கூறப்படுமிடம் இதுவென்கின்றது.

**பொருள் :** புரைதீர்காமப் பகுதி பற்றிய பாடாண்டிணைக் கண் ஊரும், ஊர்தி முதலாயினவும் தோன்றக் கூறுதல் வழக்கு நெறியானே சுட்டி யொருவர் பெயர் கூறுதற்கண் மரபாக வைத்தனர் நூலோர்.

கடவுட் பெயராக வழங்குவன தத்துவப் பொருண்மையாக அமைந்தவையாதலின் அவை புனைந்துரையெனக் கருதற்க அவை பொருளுடையனவே என்பது விளங்க ‘‘ மெய்ப்பொருள் ’’ என்றார்.

அஃதாவது சேயோன், மாயோன், காலக்கடவுள், நீலமணி மிடற்றொருவன் வாலிழைபாகன் எனவருவன எல்லாம் அவ்வத் தத்துவங்களை உணர்த்தி நிற்றலின் அவை மெய்ப்பொருளே என்றவாறு.

மற்றுச் சேரன், சோழன், பாண்டியன் என்றாற்போல வருவனவும் மெய்பொருள்களேயாம். மெய்ம்மை = பொருண்மை. வேந்தரைச் சார்த்துவகையான் கடவுளராகக் கூறுமிடத்து அவரும் கடவுட் பகுதியராவார் என அறிக. வழி என்றது வழக்கினை.

33

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியன்மார் கூறும் பொருள் யாவும் வலிந்துரையாயும் கூறியது கூறலாயும் உள்ளமையான் அவை பொருந்துமாறில்லை என்க.

**சூ. 89. : கொடிநிலை கந்தழி வள்ளி என்ற**
**வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்**
**கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே (32)**

**க - து :** தெய்வத்தொடு (கடவுளரொடு) சார்த்தி வழங்கப்பெறும் சில பொருள்கள் பற்றிய மரபு கூறுகின்றது.

**பொருள் :** நாள் மீனாகிய கொடிநிலை, விண்வெளியாகிய கந்தழி, வான் மாரியாகிய வள்ளி என்று அவற்றின் தன்மை கருதிச் சொல்லப்பட்ட மாசற்ற சிறப்பினையுடைய முதலன வாகிய அம்மூன்றும் கடவுள் வாழ்த்தொடு பொருந்தியனவாக வரும்.

சொல்லதிகாரத்துள் 'காலம் உலகம்' என்ற நூற்பாவின்கண் இவற்றைத் தெய்வப் பகுதியாக எடுத்துக் கூறாமல் அன்னபிற என அடக்கிக் கூறினார் ஈண்டு விதந்து கூறலை வேண்டியென்க.

இவை மூன்றும் இம்மண்ணுலகும், மன்பதையும் இயங்கு தற்கு அடிப்படைப் பொருள்களாம் ஆதலின் அச்சிறப்பு நோக்கித் தத்துவப் பொருளாகிய கடவுளை ஒப்ப இவையும் வாழ்த்திப் போற்றப்படும் என்பார் "கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வரும்" என்றார்.

நாண்மீன்கள் பன்னிரு கூறாக வகுக்கப் பெற்ற இராசி மண்டிலத்துள் கொடிபோலப் படர்ந்து கிடத்தலின் அவற்றைக் கொடிநிலை என்றார். [உடுத்தொடையைக் கொடியென வழங்கும் வழக்கினை நச்சினார்க்கினியர் உரையானும் அறிந்து கொள்க] கதிரவன் முதலாய கோள்கள் யாவும் விண்மீன்களின் கூறுகளேயாதலின் அவையெல்லாம் இதனுள் அடங்குமென அறிக.

நாளும் கோளுமாகிய அம்மீன்களே (உடுத்தொடைகளே) காலங்களைத் தோற்றுவித்து மன்பதை இயங்குதற்குக் காரண மாதல் வெளிப்படை. அதனானே ஞாயிறு, திங்கள் முதலிய கோள் மீன்களும் கடவுள் வாழ்த்தொடு பொருந்தி வருதல் தானேபெறப்படும்.

நிலமுதலாகிய பூதக்கூறுகள் தோன்றி ஒடுங்குதற்கும் நாளும் கோளுமாகிய மீன்கள் இயங்குதற்கும் தான் இடமாகித் தனக்கென ஒரு வடிவமின்றி அருவாய் நிற்றலின் ஆகாயமாகிய பூதக்கூறு கந்தழி எனப்பட்டது.

கொடிநிலையாகிய நாண்மீன் கோண்மீன்களின் இயக்கத்தால் உருப்பெற்று ஆகாயத்தை இடமாகக்கொண்டு மன்பதை வாழத் தன்னை வழங்கலின் வான்மாரியாகிய மழை வள்ளி எனப்பட்டது. வள்ளன்மையை உடையது வள்ளி என்பது.

இம்மூன்றும் பரம்பொருளாகிய தெய்வத்தை ஒப்ப உருவாகவும் அருவாகவும் அருவுருவாகவும் அமைந்து திகழ்தலானும் எவ்வாற்றானும் தம்தன்மை திரியாதிலங்குதலானும் உலகிற்கும் உயிர்கட்கும் அடிப்படையாக நிற்றலானும் வடுநீங்கு சிறப்பின் என்றும், முதலன (முதன்மையாவன) என்றும் கூறினார்.

இவை மூன்றையும் இயற்பெயராற் கூறாமல் தன்மைப் பெயராற் கூறினமையின் 'என்ற' எனச்சான்றோர் வழக்கினைச் சுட்டியுரைத்தார் என்க.

இச்சூத்திரத்திற்கு இளம்பூரணர் இடைக்கால ஆசிரியன்மார் வழக்கு நோக்கி உரை கூறுவார். நச்சினார்க்கினியர் கொடிநிலை என்பதற்கு ஞாயிற்றுப் புத்தேள் என்றும் வள்ளி என்பதற்குத் திங்கள் மண்டிலம் என்றும் கந்தழி என்பதற்குத் தத்துவங் கடந்த பொருள் என்றும் உரை கூறுவார்.

ஞாயிறும் திங்களும் கோள் மீனாக அடங்குமாதலானும் தத்துவங் கடந்த பொருள் கடவுளாகக் கொள்ளப்பட்டமையான் கடவுள் வாழ்த்தொடு என்பதற்கு ஏலாமையானும் அவர் கருத்துப் பொருந்துமாறில்லை.

இனிப் பாரதியார் கொடி நிலை என்பதற்கு அரசர்க்குரிய சின்னமாகிய கொடி எனப் பொருள் கூறுவார். கந்தழி என்னும் பாடத்தை விட்டுக் காந்தள் எனப் பாடங் கொண்டு காந்தள் கூத்து வகை என்பார், வள்ளியும் கூத்து வகை என்பார். இவை மூன்றும் கடவுள் வாழ்த்தொடு இணைத்துக் கூறப்படும் என்பது அவர் கருத்து

அங்ஙனம் இணைத்துக் கூறுமிடத்துப் பாடாண்டிணைக்குரிய பரவலும் புகழ்ச்சியும் கடவுளுக்கு எய்துதலன்றி இவற்றிற்கு எய்தாமையான் இவை பாடாண் பகுதி என்னும் நூற்கருத்திற்கு முரணுதல் காணலாம் அவர் கருத்தின்படி இம்மூன்றும் வெட்சித்திணைக்குரிய துறைகளாகி அமரர்கண் முடியும் அறுவகையானும் என்னும் விதியுள் அடங்குமாதலின் அவர் கருத்துப் பொருந்தாமை தெளிவாகும்.

இனி மறைமலையடிகள் கொடிநிலை கந்தழி வள்ளி என்பதற்கு முறையே ஞாயிறு, தீ, திங்கள் எனவும் மு. இராக வையங்கார் முகில், நீத்தார், அறம் எனவும் க. வெள்ளை வாரணனார் மாற்றாரைவென்றுயர்த்த கொடியின் சிறப்பு, அரணழித்தல், வரையாது வழங்கும் வள்ளன்மை எனவும் விளக்கங் கூறுவர் இவை யாவும் இந்நூல்நெறியொடு பொருந்தி வாராமையை ஓர்ந்து தெளிக

திருவள்ளுவர் வான்சிறப்பினுள் மழையைப் பரவலும் புகழ்ச்சியுமாகக் கடவுளொடு ஒப்பக் கூறுதலான் மழை கடவுள் வாழ்த்தொடு கண்ணியதாகி வந்துள்ள மரபினை அறியலாம். விண்வெளியாகிய கந்தழியைப்பரவி வாழ்த்தும் மரபு அமைத் திருத்தல் வேண்டும் என்பது திருவள்ளுவர் மழையைப் போற்றும் அதிகாரத்தை மழைச் சிறப்பு என்னாமல் வான்சிறப்பு என வழங்கியுள்ளமையானறியலாம்.

இளங்கோவடிகள் திங்களைப் போற்றுதும், ஞாயிறு போற்றுதும் மாமழைபோற்றுதும் என இவற்றைக் கடவுள் வாழ்த்தாக அமைத்துக் கூறியது இத்தொல்காப்பிய மரபினை ஒட்டியதென்பது புலப்படும்.

இச்சூத்திரம் இதுகாறும் அதிகரித்து நின்ற "காமப்பகுதி கடவுளும் வரையார்" என்ற பாடாண்டினைக் காமப்பகுதியை மாற்றிக் கடவுள் வாழ்த்தாகிய பாடாண்டிணைப்பகுதியை அதிகாரப்படுத்திநின்றது.

## சூ. 90 : கொற்ற வள்ளை ஓரிடத் தான (33)

க - து : அகத்திணைக்கண் கடவுளர் பற்றிய ஒரு சார் பாடாண்பகுதி வருமாறு கூறுகின்றது.

பொருள் : கொற்றவள்ளை ஓரிடத்தின்கண் கடவுள் வாழ்த்தொடு பொருந்திவரும். அவ்விடத்து அது பாடாண் பகுதியாகும்.

"கடவுள் வாழத்தொடு கண்ணிய வருமே" என்பது அதிகார முறைமையான் வந்தியைந்தது.

கொற்றவள்ளையாவது கடவுளரின் வெற்றியைப் புகழ்ந்து போற்றிப்பரவும் உரற்பாட்டு. ஓரிடம் என்றது அகனைந் திணையுள் புரைதீர்காமப்பகுதியாக நிகழும் களவொழுக்க மாகிய இடத்தினை.

ஒருநெறிப் பட்டாங் கோரியல் முடியும்
கரும நிகழ்ச்சி இடனென மொழிப [செய் - 193]

என்பாராகலின் அந்நிகழ்ச்சி ஈண்டு இடமெனப்பட்டது. ‘வள்ளை’ என்பது ஆகுபெயரான் உரற்பாட்டினை உணர்த்தி நின்றது.

அஃதாவது களவொழுக்கத்தின்கண் தலைவியும் தோழியும் வரைவு கடாதற் கருத்தினராய்த் தலைவனை இயற்பழித்தலும், இயற்பட மொழிதலுமாக உரையாடும் உரையாட்டிற்குச் சார்பாகத் தினை முதலாய கூலங்களை குறும் வினையை மேற் கொள்ளுமிடத்துத் தேவரைப் பரவும் பரவலாக இப்பாடாண் பகுதி வரும் என்றவாறு.

தினை முதலியவற்றைக் குறுதற்கு மலைப் பாறையின்கண் வள்ளம் போலக் குழி செய்து அதனை உரலாகக் கொள்வாராத லின் வள்ளம் போலமைந்த அவ்வுரலுக்கு வள்ளை என்பது ஒரு பெயராயிற்று. அதன்கண் கூலத்தை இட்டு ஒச்சிக் குற்றும் உலக்கையின் இடியையே தாளமாகக் கொண்டு தம் கருத்துக் களை இசைத்தலின் அப்பாட்டு (உரற் பாட்டு) வள்ளைப்பாட்டு என்னும் பெயர் பெறலாயிற்று. சிறுபான்மை இதனை உலக்கைப் பாட்டெனவும் கூறுவர்.

வஞ்சித்திணைக்கண்வரும் குன்றாச் சிறப்பின் கொற்ற வள்ளை என்னும் துறைவேறு இதுவேறு என அறிக. ஆண்டு வள்ளை என்றது பகைவரது வளத்தினைக்கைக் கொள்ளுதல். அஃதாவது வளைத்துக்கொள்ளுதல் என்னும் பொருளுடைய தாகும். ஈண்டு வள்ளை என்றது வள்ளம் போலும் உரலைச் சுட்டி ஆகுபெயரான் வள்ளைப் பாட்டினைக் குறித்து நின்றது.

மற்று வஞ்சித்திணைக்குரிய கொற்றவள்ளை நிகழ்ச்சி யினைக் கடவுள் வாழ்த்தொடு கூட்டிப் பரவலும் புகழ்ச்சியு மாகக் கூறின் அவ்வழி அது பாடாண் பகுதியாக அடங்கும்.

எ-டு : கடவுள் வாழ்த்தொடுவரும் பாடாண் கொற்றவள்ளை பற்றிய இலக்கியம் இக்காலத்து அரிதாயிற்று. எனினும்

வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்து
ஏந்து மருப்பின் இனவண்டிமிர்பூதும்
சாந்த மரத்தின் இயன்ற உலக்கையான்
ஐவன நெல்லை அறையுரலுட் பெய்து இருவாம்
ஐயனை ஏத்துவாம்போல அணி பெற்ற
மைபடு சென்னிப் பயமலை நாடனைத்
தையலாய் பாடுவாம் நாம் [குறிஞ்சிக்கலி-7]

எனவரும் குறிஞ்சிக் கலிச் செய்யுளின்கண் "ஐயனை ஏத்துவாம் போல" ... ... பாடுவாம், என்றமையின் நெல் முதலியவற்றை மகளிர் குறுதற்கண் கடவுளரின் கொற்றத்தைப் போற்றி வாழ்த்திப்பாடுதல் பெருவழக்காக இருந்துள்ளமை புலனாகும்.

இனிஇளம்பூரணர் வஞ்சித்திணைக்கண் கூறப்பட்ட கொற்ற வள்ளையே இது எனக் கொண்டு துறை கூறுதல் கருத்தாயின் வஞ்சித்திணையாம் புகழ்தல் கருத்தாயின் பாடாண்டிணையாம் என்பார். ஆசிரியர் கருத்து அதுவாயின் வஞ்சியுள்ளும் பிற திணைகளுள்ளும் வரும் கொற்றம் பற்றிய துறைகளையெல்லாம் எடுத்தோதாமல் இஃதொன்றனைமட்டும் கூறியது குன்றக் கூறலாமாகலின் உரையாசிரியர் கருத்து ஒவ்வாமை புலனாகும்.

நச்சினார்க்கினியர் கொற்றவள்ளை என்பதற்கு வெற்றி நிலை என்பதைக் கருத்தாகக் கொண்டு வெட்சி முதலிய புறத் திணைகளைத் தேவர்க்குரியவை இவை என்றும் மக்களுக் குரியவை இவையென்றும் ஆசிரியர் வகுத்துரைப்பதாக வலிந்துரை கூறுவார். அவர் கருத்து நூலொடும் சான்றோர் செய்யுளொடும் இயையாமையை விளக்கப் புகின் மிக விரியு மாதலின் மாணாக்கர் ஓர்ந்து தெளிவாராக.

நாவலர் பாரதியார் வஞ்சித்திணை கொற்றவள்ளை பாடாண் பகுதியாங்கால் ஒரோவிடத்துக் கடவுள் வாழ்த்தைத் தழுவி வரும் என்பார். அடுத்தூர்ந்தட்ட கொற்றம், வென்றோர் விளக்கம் முதலிய ஏனை வஞ்சித் துறைகளும் ஏனைய திணைக் கண் வரும் கொற்றம் பற்றிய துறைகளும் கடவுள் வாழ்த்தொடு வாரா என்பது அவர் கருத்துப் போலும், மற்றும் வஞ்சிக் கொற்றவள்ளை கடவுள் வாழ்த்தொடு வருதற்கு அவர் காட்டி யுள்ள செய்யுளும் அவர் கட்டியது போலும்.

இனி, காமப்பகுதி கடவுளும் வரையார் என்றாற்போல ஏனைப்புறத்திணை ஒழுகலாறுகளும் கடவுட்பாங்கினவாக வருமென ஆசிரியர் விதந்து கூறாமைக்குக் காரணம் என்னை யெனின்? அகத்திணையியலிறுதிக்கண் "மக்கள் நுதலிய அகனைந்திணையும்" என்னும் விதி கடவுளரை விலக்கி நின்ற மையான், ஏறிய மடற்றிறம் முதலிய புரைபடு காம ஒழுக்கத்தை நீக்கிப் புரைதீர் காமப் பகுதியை மட்டும் கடவுளருக்கு எய்து விக்கவேண்டி ஈண்டுக் காமப்பகுதி கடவுளும் வரையார் என விளங்கக் கூறினார். புறத்திணை ஒழுகலாறுகளை அங்ஙனம் மக்கட்கே உரியவை என வரைந்துக் கூறாமையான் அவை கடவுளர்க்கும் உரியவாம் என்பது தாமே போதருமாதலின் விதந்து கூறாராயினார் என்க,

அம்முறைமையான் மக்கட்குரிய புறத்திணை ஒழுகலாறுகள் கடவுளர்க்கும் ஒக்குமெனப் போதருமாயினும் காமப்பகுதியைச் சுட்டுமிடத்துப் "புரைதீர்காமம்" எனப்பிரித்துக் கூறினமை கொண்டு புறத்திணையுள்ளும் புரைதீர்ந்தனவாக அமைவனவே கொள்ளப்படும். என்னை?

வெட்சி பற்றியும் வஞ்சி பற்றியும் நிகழும் ஒழுகலாறுகள் கடவுளருக்கு ஒவ்வாமையானும் பேய் நிலை, தபுதார நிலை, தாபத நிலை, முதுபாலை போன்ற காஞ்சித்துறைகள் அவர்க்குப் புரைபடுவன ஆகலானும் என்க. பிறவும் இங்ஙனம் ஏலாதன வற்றை நீக்கி ஏற்பன கொள்ளப்படுமென அறிக.

இதுகாறும் கூறிய பாடாண்டினைக்குரிய சூத்திரங்கள் மரபிய லுள் கூறும் சூத்திரவிதிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கு தலைக் காணலாம். மேலும் அவை நுதலியதறிதல் அதிகார முறைமை மொழிந்த பொருளொடொன்ற மொழியாததனையும் முட்டின்று முடித்தல் முடித்துக் காட்டல், ஆணை கூறல், உய்த்துக் கொண்டுணர்தல் முதலாய உத்திவகைகளைக் கொண்டு திகழ் தலையும் அறிந்து கொள்க.

சூ 91 : கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தலும்
அடுத்தூர்ந் தேத்திய இயன்மொழி வாழ்த்தும்
சேய்வரல் வருத்தம் வீட வாயில்
காவலர்க் குரைத்த கடைநிலை யானும்
கண்படை கண்ணிய கண்படை நிலையும்
கபிலை கண்ணிய வேள்வி நிலையும்
வேலின் ஒக்கிய விளக்கு நிலையும்
வாயுறை வாழ்த்தும் செவியறிவுறூஉவும்
ஆவயின் வரூஉம் புறநிலை வாழ்த்தும்
கைக்கிளை வகையொடு உளப்படத் தொகைஇத்
தொக்க நான்கும் உளவென மொழிப. (34)

க - து : பாடாண் பகுதி நரலிரண்டுடைத்தே எனக் கூறிய எட்டனுள் பிற புறத்திணைகளின் சார்பாக வரும் அமரர்கண் முடியும் அறுவகையும் புரைதீர்காமம் புல்லிய வகையும் ஆகிய ஏழு பகுதிகளைக் கூறி எஞ்சி நின்ற எட்டாவது பகுதியைக் கூறுவான் தொடங்கிப் பிற சார்புகளின்றிப் புகழ்ச்சியும், பரவலும் முன்னோர் கூறிய குறிப்பும் பற்றி வரும் பாடாணுக்குரிய ஒழுகலாறுகளைத் தொகுத்து அவற்றை இரண்டு சூத்திரங்களுள் வகுத்துக் கூறுகின்றார். அவற்றுள் இச் சூத்திரம் பரவுதல் பற்றி வருவனவற்றைத் துறை முறையாக விரித்து கூறுகின்றது.

இதன்கண் கூறப்பெறும் துறைகள் தனித்தனியாகப் பிரித்துணர்தற்கேற்ப முறையாக அமைந்துள்ளமையக் கண்டு கொள்க.

இச்சூத்திரத்திற்குப் பாரதியார் கூறும் கருத்து ஒவ்வாமையை வெள்ளைவாரணனார் மறுப்புரையான் அறிந்து கொள்க.

**பொருள் :** கொடுப்போர் ஏத்திக் கோடாஅர்ப்பழித்தலும் என்பது - இரவலராய் வந்து பரவினாரைப்பேணி உண்டி முதலியவற்றை வழங்கும் தண்ணளியாளரைப் பாராட்டியும் அங்ஙனம் கொடாது இவறியாரைப்பழித்துரைத்தலும் என்றவாறு.

"எடுத்த மொழி இனஞ் செப்பலு முரித்தே" (கிளவி - 60) என்பதனான் இவற்றுள் ஒன்றைக் கூறினும் ஏனையது பெறப் படுமாயினும் இவற்றை ஒருங்கு கூறல் வேண்டுமென்பது விளங்கக் கொடுப்போ ரேத்தலும் கொடார்ப் பழித்தலும் என்னாது கொடுப் போரேத்திக்கொடார்ப் பழித்தலும் என ஒருதுறையாகக் கூறினார். பழித்தலைப் பிரித்துக் கூறின் அது பரவலும் புகழ்ச்சியுமாகாமை யான் பாடாண் என்பதற்கு இயையாது புரைபடுமென்க. இந்நுண்மை கருதாத உரையாசிரியன்மார் இதனை இருதுறை யாகக் கூறி வழுவுவார்.

மற்றுச் சான்றோர் செய்யுட்கள் இவை இரண்டும் ஒருங்கு வருவனவும் உளவால் எனின் தனித்துவருமிடத்து மற்றொன்று தொக்கு நிற்பதாகக் கொள்ளல் வேண்டும் என்பதன்கன்றே ஆசிரியர் இவற்றை ஒருங்குகூட்டி ஒரு துறையாக்கி விதித்தார். அதனான் தனித்துவருமாயினும் துறை கூறுதற்கண் ஒருங்கு கூறப்படுமென்றுணர்க.

எ - டு : களங்கனியன்ன கருங்கோட்டுச்சீறியாழ்ப்
பாடின் பனுவற்பாணர் உய்த்தெனக்
களிறு இலவாகிய புல்லரைநெடுவெளில்
கான மஞ்ஞைகணனொடுசேப்ப
ஈகையரிய இழையணி மகளிரொடு
சாயின்றென்ப ஆஅய் கோயில்
சுவைக்கினிதாகிய குய்யுடையடிசில்
பிறர்க்கீவின்றித் தம்வயிறருத்தி
உரைசால் ஓங்குபுகழ் ஓரீஇய
முரைசுகெழு செல்வர் நகர் போலாதே (புறம்-127)

இது கொடுப்போரேத்திக் கொடாஅர்ப் பழித்தது.

நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்
புல்லிலை எருக்க மாயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா ஆங்கு
மடவர் மெல்லியர் செலினும்
கடவன் பாரி கைவண் மையே [புறம் 106]

இது கொடுப்போரேத்திக் கொடார்ப் பழித்தலை உய்த்துணரவைத்தது.

ஒல்லுவது ஒல்லும் என்றலும் யாவர்க்கும்
ஒல்லா தில்லென மறுத்தலும் இரண்டும்
ஆள்வினை மருங்கிற் கேண்மைப்பாலே
ஒல்லாது ஒல்லும் என்றலும், ஒல்லுவது
இல்என மறுத்தலும் இரண்டும் வல்லே
இரப்போர் வாட்டல் அன்றியும் புரப்போர்
புகழ்குறை படூஉம் வாயில் அத்தை
அனைத்தாகியர் இனி இதுவே எனைத்தும்
சேய்த்துக் காணாது கண்டனம், அதனான்
நோயிலராக நின்புதல்வர், யானும்
வெயிலென முனியேன் பனியெனமடியேன்
கல்குயின் றன்னஎன் நல்கூர் வளிமறை
நாண் அலதில்லாக் கற்பின் வாணுதல்
மெல்லியற் குறுமகள் உள்ளிச்
செல்வல் அத்தை சிறக்கநின்நாளே (புறம் - 196)

இதுகொடார்ப்பழித்துக் கொடுப்போரை உய்த்துணரவைத்தது.

2) அடுத்தூர்ந்தேத்திய இயன்மொழி வாழ்த்தும் என்றது : பாடாண்மையுடையோரை அணுகிச் சென்று அவர் பெருமையைப் பரவிப் புகழ்ந்து கூறிய இயன்மொழி வாழ்த்தும் என்றவாறு.

இயல் = தன்மை. அஃது ஈண்டு வாழ்த்தப் படுவோரின் மாண்புகளைச் சுட்டி நின்றது.

வாழ்த்துதற் கருத்தின்றேல் அது பாடாணாகாமையின் வாழ்த்துச் சொற்கள் அதன்கண் இன்றேனும் அவை தொக்கு நிற்பதாகக் கொள்ள வேண்டுமென்பார் இயன்மொழி என்னாது இயன்மொழி வாழ்த்து என்றார்.

உரையாசிரியன்மார் இதனையும் இரண்டாகப் பிரித்துப் பொருள் கூறுவர்.

இத்துறை கடவுளரைப் பற்றிவரின் கடவுள் வாழ்த்தெனப் படும். என்னை ? கடவுளரைப்பற்றிக் கூறும் மாண்புகள் அவர்க்கு இயற்கையாதலின் என்க.

மேற்கூறிய துறை ஈதலாகிய கொடைப்பண்பு ஒன்றையே பற்றி வரும். இஃது ஏனைய பண்பு நலன்களைச் சுட்டி வருமாதலின் 'இயன் மொழி' என வேறாக வகைப் படுத்தோதினார்.

(எ-டு): ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும், பேணித்
தென்புல வாழ்நர்க்கு அருங்கடனிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்
கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்
எங்கோ வாழிய குடுமித் தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே (புறம்-9)

இஃது இயன்மொழியும் வாழ்த்தும் ஒருங்கு வந்தது வாழ்த்துரை வெளிப்படையாக வந்தது.

மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய, மஞ்ஞை
ஒலிநெடும் பீலி ஒண்பொறி மணித்தார்
பொலங்குழை உழிஞையொடு பொலியச் சூட்டிக்
குருதி வேட்கை உருகெழு முரசம்
மண்ணி வாரா அளவை எண்ணெய்
நுரைமுகந் தன்ன வெண்பூஞ் சேக்கை
அறியா தேறிய என்னைத் தெறுவர
இருபாற் படுக்கும்நின் வாள்வாய் ஒழிந்ததை
அதூஉம் சாலும் நற்றமிழ் முழுதறிதல்
அதனொடு மமையாது அணுகவந்து நின்
மதனுடை முழவுத்தோள் ஓச்சித் தண்ணென
வீசி யோயே, வியலிடங் கமழ
இவணிசை யுடையோர்க் கல்லது அவணது
உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை
விளங்கக் கேட்ட மாறுகொல்
வலம்படு குரிசில்நீ ஈங்கிது செயலே. (புறம் - 50)

இது வாழ்த்துச் சொல் தொக்குநின்ற இயன்மொழி வாழ்த்து பிறவும் இவ்வாறு வருவனவற்றை ஓர்ந்து கொள்க.

3) சேய்வரல் வருத்தம் வீட வாயில் காவலர்க்குரைத்த கடை நிலையானும் என்றது = இன்மைதுரப்பச் சேயதாஇய இடத்தினின்று வருதலான் எய்திய மெய்வருத்தம் நீங்கப் புரவலர்தம்நகர் வாயிலைக் காவல் செய்து நிற்கும் காவலரிடத்துத் தான் நாடி வந்த புரவலரது பண்புகளை ஏத்தித் தன்நிலை புலப்படக் கூறிய கடைநிலை என்னும் துறையும் என்றவாறு. நகர், அரண்மனை, வளமனைவாயில் எனினும் கடை எனினும் ஒக்கும் கடந்து செல்லற்குரியது என்னும் கருத்துடையதாகலின் வாயிலுக்குக்கடை என்பது காரணப் பெயராயமைந்தது. எ-டு : பண்டை இலக்கியம் வந்துழிக் கண்டு கொள்க,

வேற்றுச் சுரத்தொடு வேந்தர்கண் வெம்மையும்
மாற்றற்கு வந்தனேம் வாயிலோய் — வேற்றார்
திறைமயக்கும் முற்றத்துச் சேணோங்கு கோயில்
இறைமகற்கெம் மாற்றம் இசை (நச்-மேற்)

இதற்கு "வாயிலோயே வாயிலேயே" (புறம் - 206) என்னும் ஔவையார் பாடலை எடுத்துக்காட்டுவர். அது பொருந்தாது. என்னை ? அது பரிசில் நீட்டித்தவழி முனிந்து கூறியதாகலானும் அதன்கண் பாடாணுக்குரிய பொருண்மை இன்மையானும் என்க. கடைநிலையானும் என்பதனுள் ஆன் அசை.

(4) கண்படை கண்ணிய கண் படை நிலையும் என்றது = புரவலன் இனிது துயிலேற்றலை வேண்டி அவனது பண்புகளை ஏத்திக் கூறிய கண்படைநிலை என்னும் துறையும் என்றவாறு.

கண்ணுறக்கம் பேணாது மக்கள் நலங்கருதிச் செயலாற்றும் புரவலனது பண்புகளைப் புகழ்ந்து கூறுதலின் இது பாடாணுக்குரிய துறையாயமைந்தது.

எ - டு : தொல்லோர் இலக்கியம் வந்துழிக்கண்டுகொள்க.

வாய்வாட்டானை வயங்குபுகழ்ச்சென்னிநின்
ஓவா ஈகையின் உயிர்ப்பிடம் பெறாஅர்
களிறுகவர் முயற்சியிற் பெரிதுவருந் தினரே
உலகங் காவலர் பலர் விழித்திருப்ப
வறிதுதுயில் கோடல் வேண்டும்நின்
பரிசின் மாக்களும் துயில்கமா சிறிதே (நச் - மேற்)

5) கபிலை கண்ணிய வேள்வி நிலையும் என்றது — வெற்றி கருதிப்புரியும் வேள்வியின்கண் பார்ப்பார்க்குப் பரிசாகப் பாலா வினை வழங்குதற்குக் கருதிய வேள்விநிலை என்னும் துறையும் என்றவாறு.

கபிலை என்றது அந்நிறமுடைய பெற்றத்தை ஆகு பெயரான் உணர்த்தி நின்றது, ஏற்றினை நீக்குதல் வேண்டிக் கபிலை என்றார்.

வேள்வியின்கண் கொடை பெறுவோர் மறைமொழி (மந்திரம்) கூறி ஏத்துதலின் இதுவும் பாடாணுக்குரியதாயிற்று. இது பரவுதற்குரிய பகுதியாதலின், வரையாது கொடுக்கும் "கொடை நிலை" என்பது புகழ்ச்சிக்குரிய பகுதியாதலின் இதனைப் பிரித்துக் கூறினார் என்க. எ - டு : வந்தவழிக் கண்டு கொள்க.

இனி, நன்றாய்ந்த நீள்நிமிர் சடை என்னும் ஆவூர் மூலங்கிழார் பாடலுள் (புறம்-166)

"காடென்றா நாடென் றாங்கு
ஈரேழின் இடம் முட்டாது
நீர் நாண நெய்வழங்கியும்
எண்ணாணப் பலவேட்டும்"

எனச் சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் வேள்வியினிடத்துப் பார்ப்பார்க்குப் பெற்றம் வழங்கிய நற்றிறம் கூறப்பட்டவாறும்

"அருங்கடிப் பெருங்காலை
விருந்துற்றநின் திருந்தேந்துநிலை
என்றும் காண்கதில் அம்ம"

எனப்பரவி ஏத்தப் பட்டவாறும் கண்டுகொள்க.

இச்செய்யுள் தமிழொடு ஆரிய வழக்கு ஓரளவு கலந்து வந்த காலத்து நிகழ்ந்தவற்றைக் கூறுவதாகும். ஈண்டுக்கூறிய வேள்விநிலை தமிழ் நான்மறையோர் வகுத்தவிதிப்படி அமையும் வேள்விக்கண் நிகழ்வதனைக் கூறுவதாகலின் ஆசிரியர் காலத்து இலக்கியம் காட்டுவதற்கு அரிதாயிற்று என அறிக.

6) வேலின் ஓக்கிய விளக்கு நிலையும் என்றது — நிலை கோடாது நெடிதோங்கி நிற்கும் வடிவேல் போலப் புரவலன் தன் செங்கோலை உயர்த்திக் கூறிய விளக்கு நிலை என்னும் துறையும் என்றவாறு.

வேலின் என்பதனுள் இன் உவம உருபு. ஒக்கிய என்றது - உயர்த்துக் கூறிய என்றவாறு. விளக்கம்-விளக்கு என நின்றது. அவாய் நிலையாக நின்ற ஒக்கிய என்பதற்குரிய செயப்படு பொருள் (செங்கோல்) வருவிக்கப்பட்டது.

விளக்கம் - ஒளி. ஒளி என்பது " உண்ணான் ஒளி நிறான் " என்புழிப்போலச் சீர்த்தியைச் சுட்டி நின்றது. சீர்த்தி = மிகுபுகழ். அது செங்கோன்மையான் அமைந்த சீர்த்தியைக் குறித்து நின்றது.

எ - டு : மைம்மீன் புகையினும் தூமந் தோன்றினும்
தென்றிசை மருங்கின் வெள்ளி ஓடினும்
வயலகம் நிறையப் புதுப்பூ மலர
மனைத்தலை மகவை ஈன்ற அமர்க்கண்
ஆமா நெடுநிரை நன்புல் லாரக்
கோஒல் செம்மையின் சான்றோர் பல்கிப்
பெயல்பிழைப் பறியாப் புன்புலத் ததுவே " (புறம்-117)

என்னும் கபிலர் பாட்டினுள்

பெயல் பிழைப்பறியாமைக்கும் நிலவளம் செழித்து நிற்பதற்கும், சான்றோர் பல்கியுள்ளமைக்கும் காரணம் " கோலினது செம்மை " எனப் பாரியின் செங்கோலை உயர்த்திப் பரவியுள்ளமையறிக.

இதற்கு நெய்பெய்துகொளுவும் சுடர்விளக்கினைப் பொருளாக்கி உரைவிளக்கஞ் செய்வர் உரையாளர். பாரதியார் இது செங்கோன்மைத்திறம் கூறியதெனத் தெரிந்துரைத்தார்.

(7) வாயுறை வாழ்த்தும் என்றது : வேம்பும் கடுவும் போல வெம்மையுடையவை எனத் தவிர்க்காமல் வழிவழி நன்மைபயக்குமென எண்ணிக் காவற் கிழமையுடைய சொற்களான் மெய்ம்மைப் பொருளை வற்புறுத்துக் கூறுதலாகிய ' வாயுறை வாழ்த்து ' என்னும் துறையும் என்றவாறு.

வாய்மை = மெய்ம்மை, உறை = உறைந்துள்ள சொற்கள். வாயுறைகூறி அறிவுறுத்துதல் அறிவுறுக்கப்படுவாரும் அவர்தம் வழியினரும் நெடிது வாழ வேண்டுமென்னும் கருத்தினானன்றே அதனான் வாழ்த்துச்சொல்லொடு கூறினும் அச்சொல்லைத் தொகுத்துக்கூறினும் வாழ்த்துதலேயாம் என்பது விளங்க வாயுறை வாழ்த்து என்றார்.

எ - டு : வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்
கீழது, முப்புணர் அடுக்கிய முறைமுதற் கட்டின்
நீர்நிலை நிவப்பின் கீழும் மேலது
ஆனிலை உலகத்தானும் ஆனாது
உருவும் புகழும் ஆகி விரிசீர்த்
தெரிகோல் ஞமன் போல ஒருதிறம்
பற்றல் இலியரோ, நின்திறம் சிறக்க!
செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர் தேஎத்துக்
கடற்படை குளிர்ப்ப மண்டி அடர்புகர்ச்
சிறுகண் யானை செவ்விதின் ஏவி
பாசவல் படப்பை ஆரெயில் பலதந்து
அவ்எயில் கொண்ட செய்வுறுநன் கலம்
பரிசில் மாக்கட்கு வரிசையின் நல்கிப்
பணியியர் அத்தைநின் குடையே, முனிவர்
முக்கட்செல்வர் நகர்வலம் செயற்கே
இறைஞ்சுக பெருமநின் சென்னி - சிறந்த
நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே
வாடுக இறைவநின் கண்ணி, ஒன்னார்
நாடுசுடு கமழ்புகை எறித்த லானே
செலியியர் அத்தைநின் வெகுளி வாலிழை
மங்கையர் துனித்த வாண்முகத் தெதிரே
ஆங்க, வென்றியெல்லாம் வென்றகத்தடக்கிய
தண்டா ஈகைத் தகைமாண் குடுமி!
தண்கதிர் மதியம் போலவும் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெருமநீ நிலமிசையானே [புறம்-6]

எனவரும்.

இத்துறைக்கு "எருமையன்ன" (புறம்-5) என்னும் புறப் பாடலை எடுத்துக்காட்டுவர் அது செவியறிவுறூஉ எனற்கு ஏற்ப நிற்றலை அறிக.

8) செவியறிவுறூஉவும் என்றது = உயர்ந்தோர் நாப்பண் தன்னை வியந்து காட்டுதலின்றி அடங்கி ஒழுகுதல் கடப்பாடா மென உளங்கொள்ளுமாறு கூறப்படும் செவியறிவுறூ என்னும் துறையும் என்றவாறு.

எ - டு : ஓங்குமலைப் பெருவில் பாம்புஞாண் கொளீஇ
ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
பெருவிறல் அமர்க்கு வென்றி தந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறை நுதல் விளங்கும் ஒருகண் போல
வேந்து மேம்பட்ட பூந்தார் மாற
கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்
நெடுங் கொடியநிமிர் தேரும் நெஞ்சுடையபுகல்
மறவருமென
நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால் நமரெனக் கோல் கோடாது
பிறர் எனக் குணங் கொல்லாது
ஞாயிற் றன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்களன்ன தண்பெருஞ் சாயலும்
வானத் தன்ன வண்மையும் மூன்றும்
உடையை யாகி இல்லோர் கையற
நீநீடு வாழிய நெடுந்தகை தாழ்நீர்
வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை
கடுவளி தொகுப்ப ஈண்டிய
வடுவாழ் எக்கர் மணலினும் பலவே [புறம்-55]

எனவரும்.

9) ஆவயின் வருஉம் புறநிலை வாழ்த்தும் என்றது. வழிபடு தெய்வம் நின்னைப் புறங்காப்பப் பழிதீர்ந்த செல்வத்தொடு வழிவழி சிறந்து பொலிமின் என ஓம்படையாகப் பரவி அவ்விடத்த தாகிவரும் புறநிலை வாழ்த்து என்னும் துறையும் என்றவாறு.

இப் புறநிலை வாழ்த்து தெய்வத்தைப்பராவும் குறிப்பொடு மேற்கூறிய வாயுறை வாழ்த்து செவியறிவுறூஉ ஆகியவற்றைப் போல அறநெறிப்பண்பும் அமைந்து வருதல் வேண்டும் என்பது விளங்க, "ஆவயின் வருஉம்" என்றார். அதனான் அதன் பொருள் மரபுகளைக் கூறுங்கால் 'பழிதீர்செல்வமொடு வழி வழி சிறப்ப' எனச் சுட்டிக்கூறினார் என்க.

எ - டு : இமையா முக்கண் இலங்குசுடர் பயந்த
உமையொரு பாகத்து ஒருவன் காப்பநின்
பல்கிளைச் சுற்றமொடு நல்லிதின் நந்தி
நீபல வாழிய வாய்வாட் சென்னிநின்

ஒருகுடை வரைப்பின் நீழல் பெற்றுக்
கிடந்த எழுகடல் நாப்பண்
அகலிரு விசும்பின் மீனினும் பலவே (நச்-மேற்)

செய்யுளியலுள் இவற்றின் பொருளமைவு கூறுமிடத்துப் புறநிலை வாழ்த்தினை முன் வைத்து கூறுவார் ஈண்டுப் பின் வைத்துக் கூறியது அறிநெறிக் குறிப்பு அதிகாரத்தால் பெறப்பட வைத்தற்கென அறிக.

10) கைக்கிளை வகையொடு உளபடத் தொகைஇத் தொக்க நான்கும் உளவென மொழிப என்றது = புரைதீர் காமப்பகுதியாக வாராமல் பாடாண் பொருட்டாகி வரும் கைக் கிளை வகை என்னும் துறையொடு கூடி வாழ்த்தியலாகத் தொகைப்பட்ட நான்கும் மேற்கூறிய கொடுப்போரேத்திக் கொடாஅர்ப் பழித்தல் முதலியவற்றைப் போலப் பரவுதற் பொருளாகக் கோடற்குரியவையாகும் எனக் கூறுவர் நூலோர் என்றவாறு.

செய்யுளியலுள் வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே (செய்-105) எனக் கூறிப் பின்னர் விளக்குவாராதலின் வாழ்த்து வகையாகவரும் துறைகள் புகழ்தலைக்கருதிய பாங்கினவாயினும், இந்நான்கும் பரவுதலைக்கருதியேவரும் என்பதனை உடன் பட்டுத் "தொக்க நான்கும் உளவென மொழிப" எனக்கூறிப் பின்வரும் புகழ்ச்சிபற்றிய துறைபற்றிய சூத்திரத்தொடு இயை இவற்றை இறுதிக்கண் வைத்தார் என்க.

இதனானும் கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தல் முதலிய துறைகள் பரவற் பொருள் பற்றியே வருமென்பது புலனாகும்.

இச்சூத்திரத்துக் கூறிய கைக்கிளை ஆடவர் பெண்டிர் ஆகிய இருபாலாரையும் பற்றி வருமாதலின் "கைக்கிளை வகை" என்றார் என்க.

எ - டு : பெருமட நோக்கிற் சிறுநுதற் செவ்வாய்க்
கருமழைக்கண் வெண்முறுவற் பேதை — திருமுன்ல்
புல்லும் பொறியி லேனுழை
நில்லாதோடும் என் நிறையில் நெஞ்சே
[பு. வெ. மா. 291]

இஃதாண்பாற் கைக்கிளை.

கன்னவில் தோளானைக் காண்டலுங் கார்க்குவளை
அன்னவென் கண்ணுக் குமுதமாம் - என்னை
மலைமலிந் தன்ன மார்ப
முலைமலிந்தூழூழ் முயங்குங் காலே [பு. வெ. மா 295]

இனி, முத்தொள்ளாயிரத்து வருவனவெல்லாம் சுட்டியொருவர் பெயர் கொளநிற்கும் கைக்கிளையாமென்க. இப்பாடாண்டிணை கைக்கிளைபற்றி நச்சினார்க்கினியர் கூறுவன இந்நூல் நெறிக் கேலாதனவாம். ஏனைக்கைக்கிளை பற்றிய அவர் கருத்தும் அவ்வாறேயாம்.

**சூ. 92 :** **தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றுபயனெதிரச் சொன்ன பக்கமும்
சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப்
பிறந்த நாள்வயின் பெருமங்கலமும்
சிறந்த சீர்த்தி மண்ணுமங்கலமும்
நடைமிகுத் தேத்திய குடைநிழல் மரபும்
மாணார்ச் சுட்டிய வாள்மங் கலமும்
மன்னெயில் அழித்த மண்ணுமங் கலமும்
பரிசில் கடைஇய கடைக் கூட்டு நிலையும்
பெற்ற பின்னரும் பெருவள னேத்தி
நடை வயிற் றோன்றும் இருவகை விடையும்
அச்சமும் உவகையும் எச்ச மின்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்
காலங் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற்
காலம் மூன்றொடு கண்ணிய வருமே.** (35)

**க - து :** ஏனைப்புறத்திணை நிகழ்ச்சிகளின் சார்பின்றிப் பரவலும் புகழ்ச்சியும் கருதிய பாங்கினும் முன்னோர் கூறிய குறிப்பினும் வருமெனப் பட்ட பாடாண் பகுதியுள் எட்டாவதாகிய பகுதி பரவலும் புகழ்ச்சியுமாக அமைதலான் அவற்றுள் பரவற் பொருளினவாக வரும்துறைகளை மேலைச்சூத்திரத்துள் தொகுத்தோதி இறுதியாக இச் சூத்திரத்தான்புகழ்தற் பொருளாக வருவனவற்றைத் தொகுத்தோதுகின்றார்.

முன்னோர் கூறிய குறிப்பு இருபகுதிக்கும் பொதுவாகிவரும்

உரையாசிரியன்மார் மேலைச் சூத்திரம் எல்லாத் தலை மக்களுக்கும் பொதுவானதெனவும் இச்சூத்திரத்தாற் கூறப் பெறுவன வேந்தர்க்கே உரியவை எனவும் கூறுவர். இதன்கண் ஆற்றுப்படை, பரிசில்விடை, ஓம்படை யாகியவை பொதுவாக வருபவையாதலின் அவர்கருத்துப் பொருந்தாமையறியலாம்.

பொருள் : (1) தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச் சூதர் ஏத்திய துயிலெடை நிலையும் என்றது = பெருமிதத் தான் மகிழ்ந்து கிடந்தோர்க்குக் குற்றமில்லாத நல்ல புகழை மேலும் கருதுதற் பொருட்டு அவர் தம் பேராண்மையைப் புகழ்ந்து சூதர் ஏத்தி எழுப்பிய துயிலெடைநிலை என்னும் துறையும் என்றவாறு.

கிடத்தோர் என்றது கண்வளர்ந்து (உறங்கிக்) கிடந்தோரை. சூதராவார் நின்றேத்துவோர். எடைநிலை—எழுப்பும் செய்கை சூதர் புகழ்ந்தேத்துதற்குக் காரணம் தோன்ற "நல்லிசை கருதிய" என்றார். கருதிய என்றது செய்யிய என்னும் எச்சம்.

உரையாளர் கருதிய என்பதனைப் பெயரெச்சமாகக் கொண்டு அதற்கேற்பப்பொருள் கூறிச் சென்றனர்.

எ - டு : கானம் பொருந்திய கயவாய் மகளிரின்
யானுறும் துயரம் நந்திய பானாள்
இமையாக் கண்ணோ டமையாக் காத்தநின்
மூதில் முதல்வன் துயில்கொண் டாங்குப்
போற்றா மன்னரை எள்ளிச் சிறிதுநீ
சேக்கை வளர்த்தனை பெரும தாக்கிய
வன்கை யவுணன் உயிர்செல ஆங்கவன்
நன்றுணர்ந்தாங்கு வென்றிய
வாடா வஞ்சி மலைந்த சென்னிப்
போரடு தானைப் பொலந்தேர் வளவ
நின்றுயி லெழுமதி நீயும்
ஒன்றாவேந்தர் பொன்றுதுயில் பெறவே (நச்-மேற்)
எனவரும்.

2) கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச் சென்று பயன் எதிரச் சொன்ன பக்கமும் என்றது= வள்ளியோன் ஒருவன்பால் மிக்க செல்வத்தைப் பரிசிலாகப் பெற்று வரும் கூத்தரும், பாணரும், பொருநரும், விறலியும், வரும்

வழியிடத்தே தம்மைக் காண்போர்க்கு இவர் வேந்தரோ, குறுநில மன்னரோ பிற பெருஞ்செல்வரோ எனக் காட்சி மிகத் தோன்றிப் பரிசில் பெறாதாராய்த் தம்மை எதிர்ப்பட்டுத் தோன்றி வியந்து நோக்கும் இரவலர்க்குத் தாம் பெற்ற பெருவளத்தைத் தெரிவித்து அவரை அவ் வள்ளியோன்பாற் சென்று பயன் கொள்ளச் சொல்லிய ஆற்றுப்படுத்தலாகிய துறைப் பகுதியும் என்றவாறு.

சென்று பயனெதிரச் சொன்ன பக்கம் என்றது ஆற்றுப் படுத்துதலாம். இதனை ஆற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும் (சொல் - 462) எனச் சொல்லதிகாரத்துட் கூறிய வாற்றானறிக.

பெருவளம் பெற்றுவரும் கூத்தர் முதலானோர் கரியும் பரியும் சூழத் தேரூர்ந்து வருதலான் அவரைக்கண்ட பிறஇரவலர் இவர் வேந்தரோ மன்னரோ எனவும் யாழும், குழலும் முழவும் ஏந்தி யிருத்தலின் பிறர்யாரோ எனவும் ஐயுறுதலின் " காட்சி உறழத் தோன்றி " என்றார்.

அங்ஙனம் ஐயுற்று நோக்கும் இரவலரை அவர் ஐயம் நீங்க அப் பரிசிலர் கூறலின் " அறிவுறீஇ " என்றும், சென்று மீளும் வழியினது அருமை தோன்றச் " சென்று " எனவும், செல்லின் முட்டின்றிப் பரிசில் பெறுதல் உறுதி என்பது விளங்கப் பயன் எதிர " என்றும் கூறினார். பெருஞ் செல்வத்தைப் பரிசிலாகப் பெற்று வருமவர் தமக்கு ஈத்தளித்த புரவலரைப் புகழ்ந்தேத்திக் கூறலின், இது பாடாண் பகுதியாயிற்று.

கூத்தராவார் நாடகத்தர், ஆரியக்கூத்தர், கழைக் கூத்தர் எனவும் பாணராவார் இசைப்பாணர், யாழ்ப்பாணர், மண்டைப் பாணர் எனவும் பொருநராவார் நாடகப் பொருநர் நாட்டியப் பொருநர் எனவும் பலதிறப்படுவர். பாணருள் பெண்பாலார் பாடினி எனவும் அவிநயக் கூத்தருள் பெண்பாலார் விறலி எனவும் வழங்கப் பெறுவர். விறலியருள் வகைப்பாடின்மையின் அவரை ஒருமையாற் கூறி ஏனையோரைப் பன்மையாற் கூறினார் என்க.

இனி, பக்கம் என்றதனான் உலகியற்குரிய பொருட் பரிசில் பெற்றவர் பெறாத இரவலரை ஆற்றுப்படுத்துதல் போல இறை யருளாகிய மெய்ப்பொருளைப் பரிசிலாகப் பெற்ற ஒருவர் அதனைப் பெறும் வேட்கையுடையாரை அதனை வழங்கும் இறைவன்பால் ஆற்றுப்படுத்துதலும் ஆற்றுப்படையாக அடங்கும் எனக் கொள்க.

முருகாற்றுப்படை அங்ஙனம் அமைந்து விளங்குதலையும் அதனைப் புலவராற்றுப்படை எனச் சான்றோர் வழங்கும் வழக்குண்மையும் அறிக.

பத்துப்பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப்படையை இவ்விதியுள் அடக்க வேண்டி நச்சினார்க்கினியர் கூறும் உரை வலிந்துரையாக நிற்பதனையறியலாம்.

ஆற்றுப்படை என்பது ஆற்றுப் படுத்தப்படுவோர் பெயரான் அமைதல் வேண்டுமென்று கருதி முருகாற்றுப்படை முருகனை முருகனிடத்து ஆற்றுப்படுத்தியது எனக் கூறுவாருமுளர். அவையெல்லாம் இந்நூல் நெறிக்கு ஒவ்வாமையறிக.

மலைபடுகடாம் கூத்தரைஆற்றுப்படுத்தியது. சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படைகள் பாணரையாற்றுப்படுத்தியது. பொருநாற்றுப்படைப்பொருநரை ஆற்றுப்படுத்தியது.

ஒருதலைப் பதலைதூங்க ஒருதலைத்
தூம்பகச் சிறுமுழாத் தூக்கத் தூங்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்
சுரன்முதல் இருந்த சில்வளை விறலி
செல்வை யாயின் சேணோன் அல்லன்
முனைசுட எழுந்த மங்குல் மாப்புகை
மலைசூழ் மஞ்சின் மழகளிறு அணியும்
பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி
பொழுதிடைப் படாஅப் புலரா மண்டை
மெழுகுமெல்லடையின் கொழுநிணம் பெருப்ப
அலத்தற் காலை யாயினும்
புரத்தல் வல்லன் வாழ்க அவன் தாளே (புறம் - 103

என்பது விறலியாற்றுப்படை. பிறவும் அன்ன

3) சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப் பிறந்த நாள் வயின் பெருமங்கலமும் என்றது - மாற்றாரை வெற்றிகொண்ட சிறந்த நாளின்கண் இகல்கருதி அவர்பால் தோன்றிய செற்றம் பற்றிய குணங்களைக் கூறாமல் நீக்கி அவர்தம் அருளாண்மைப் பண்பு களையே போற்றி அவர் பிறந்த நாளின்கண் புகழ்ந்தேத்தும் பெருமங்கலம் என்னும் துறையும் என்றவாறு.

பெருமங்கலமாவது - பிறந்தநாள் பற்றிச் செய்யும் மங்கல விழாவாகும். அற்றைக்கு அவ்விழாவிற்குரியோன் வெள்ளுடை உடுத்து வெள்ளணி பூண்டு திகழ்வானாகலின் பெரு மங்கல விழாவை வெள்ளணி விழா என்றும், பிறந்தநாள் விழா என்றும் வழங்குதல் மரபு.

நச்சினார்க்கினியர் ‘ சிறந்தநாளணி ’ எனப் பாடங்கொண்டு உரை கூறுவார். இளம்பூரணர் பாடமே இத்துறைக் கருத்திற்குச் சிறந்திருத்தலை அறிந்து கொள்க.

பகைவரை வென்று வாகை சூடிய நாளினைச் சிறந்த நாள் என்றார், அந்நாளின் கண் தோன்றிய செற்றம் பகைவரை அழித்தற்குத் தோன்றியதாகலின் அது பாராட்டற்குரியதாயினும் பிறந்த நாளின்கண் அவர்தம் பண்புகளைப் புகழ்ந்து ஏத்துமிடத்து மறச் செயல்களைக் கூறுதல் மங்கலமாகாமை கருதி அவற்றை நீக்கி மங்கலத்திற்குரிய பண்புகளையும் செயலையும் சுட்டி வாழ்த்துதலை இத்துறை மரபாக்கினர் நூலோர். எ - டு : சான்றோர் செய்யுள் வந்துழிக் கண்டுகொள்க

அந்தணர் ஆவொடு பொன் பெற்றார்நாவலர்
மந்தரம் போன்மாண்ட களிறூர்ந்தார் - எந்தை
இலங்கிலை வேற்கிள்ளி இரேவதி நாளென்னோ
சிலம்பிதன் கூடிழந்த வாறு

என்பது முத்தொள்ளாயிரச் செய்யுள்

4) சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமும் என்றது - சிறப்புமிக்க புகழுடைய முடியணிந்து நீராடிய நாளினைப் பற்றிய விழாவாகிய மண்ணுமங்கலம் என்னும் துறையும் என்றவாறு.

இது மன்னன் முடிசூடிய நாளின்கண் ஆண்டுதொறும் நிகழும் விழாவாகும். பண்டை இலக்கியங்கள் அரியவாயின.

அளிமுடியாக் கண்குடையான் ஆகுதி நாள் வேய்ந்த
ஒளிமுடி பொன்மலையே ஒக்கும் — ஒளிமுடிமேல்
மந்திரத்தா லந்தணர் வாக்கியநீ ரம்மலைமேல்
அந்தரத்துக் கங்கை யனைத்து

என்பது நச்சினார்க்கினியர் மேற்கோள்

இவ் இருபெரு மங்கலநாளின்கண் நாவலரும் புலவோரும் ஏனைப் பரிசிலரும் புகழ்ந்தேத்தி மகிழ்தலின் இவை பாடாண் பகுதியாயின.

5) நடை மிகுத்தேத்திய குடைநிழல் மரபும் என்றது = கொற்றவனது தண்ணிய ஒழுகலாற்றினைக் குடையின்கண் ஏற்றிப்புகழ்ந்து கூறும் குடை வாழ்த்து என்னும் துறையும் என்றவாறு.

குடைநிழல் நடைமிகுத்தேத்திய மரபும் எனக்கூட்டுக. நடை என்றது ஒழுக்கத்தினை.

குடைநிழல் வெம்மை நீக்கித் தண்மை செய்தல் போல வேந்தன் பகையை விலக்கி மக்கட்கு நன்மை புரிதலின் அது பாடுபெறுவதாயிற்று. மரபு, என்றதனான் செங்கோலும் திகிரியும் போல்வனவற்றைப் புகழ்ந்தேத்துதலும் கொள்க.

எ - டு : அறநீர்மை தாங்கி அளப்பரிதாய் வானப்
புறநீர்போல் முற்றும் பொதியும் — பிறரொவ்வா
மூவேந்த ருள்ளும் முதல்வேந்தன் முத்தமிழ்க்குக்
கோவேந்தன் கண்டன் குடை (நச் - மேற்)

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்தலான் (சிலம்பு—மங்கல)

ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவு நின்றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன் குடை
வெயில்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய
குடிமறைப்பதுவே கூர்வேல் வளவ" (புறம்-35)

என்பது செவியறிவுறூ அடிப்படையில் அமைந்த குடை வாழ்த்து.

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரிநாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேருவலந்திரிதலான் (சிலம்பு-மங்கல)

இது திகிரியைப் புனைந்து கூறியது.

6) மாணார்ச்சுட்டிய வாள் மங்கலமும் என்றது = பகைவர் தோல்வியுறுதலைக் கருதி மன்னரும் மறவரும் ஏந்திய வாட்படையை எத்திப் புகழ்தலாகிய வாண்மங்கலம் என்னும் துறையும் என்றவாறு

மன்னவன் ஆற்றலை வாளினிடத்து ஏற்றிப் புகழ்தலின் அவ்விழா வாண்மங்கலம் எனப்பட்டது. சிறப்புடைய வாளினை எடுத்துக் கூறினார். அதன் இனமாகிய வில், வேல் முதலிய கருவிகளும் கொள்ளப்படும்

இது சிறுபான்மை பேய்ச்சுற்றம் வாழ்த்துவதாகவும் வரும். பண்டையிலக்கியம் வந்துழிக் கண்டு கொள்க.

அரும்பவிழ்தார்க் கோதை அரசெறிந்த ஒள்வாள்
பெரும்புலவும் செஞ்சாந்தும் நாறிச் — சுரும்பொடு
வண்டாடும் பக்கமும் உண்டு குறுநரி
கொண்டாடும் பக்கமும் உண்டு.

என்பது முத்தொள்ளாயிரச் செய்யுள்.

ஆளிமதுகை அடல் வெய்யோன் வாள்பாடிக்
கூளிகள் வம்மினோ கூத்தாடக் — காளிக்குத்
தீராத வெம்பசி தீர்த்து நாம் செங்குருதி
நீராட்டியுண்ட நிணம். (நச் - மேற்)

இடைக்காலப்பரணிச் செய்யுட்களுள் இத்துறை பயின்றுவரும்.

7) மன்னெயில் அழித்த மண்ணுமங்கலமும் என்றது = பகைவரது நிலைபேறுடைய அரணாகிய மதிலை அழித்துக் கழுதை ஏர் பூட்டி உழுது வெள்வரகு வித்திப் பாழ்செய்து வீறு பெற்ற அந்நாளினைப் பற்றிப் புரியும் விழாவாகிய மண்ணு மங்கலம் என்னும் துறையும் என்றவாறு.

உழிஞைத் திணையின்கண் பகைவரது மதிலைக் கைப் பற்றியதுறையாகிய "இகன்மதிற்குடுமி கொண்ட மண்ணு மங்கலம்" என்பது மதிலைத்தனதாக்கிக் கொண்ட நிகழ்ச்சி யாகும். இது பகைவரது மதிலை அழித்து வெற்றி கொண்ட நிகழ்ச்சியைப் பின்னர் விழாவாகக் கொண்டாடுதற்கண் அத் தலைவனைப் புகழ்ந்து எத்துதலாகும். அதனான் அதுவேறு இதுவேறு என அறிக.

எ - டு : "கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ் செய்தனையவர் நனைந்தலை நல் லெயில்"
(புறம்—15)

என்பது எயில் அழித்தது. விழாக் கொண்டாடியது. வந்துழிக் கண்டு கொள்க.

8) பரிசில் கடைஇய கடைக் கூட்டு நிலையும் என்றது - கூத்தர் முதலானோர் பரிசிலர்க்கு வழங்கும் வள்ளியோனது நகர்வாயில் அணுகித் தம் பரிசில் வேட்கையைப் புலப்படுத்தும் உரையை அவன்பாற் செலுத்திய பரிசில்கடாநிலை என்னும் துறையும் என்றவாறு.

கடைக்கூடிப் பரிசில் கடாய நிலை என மாறிக் கூட்டிக் கொள்க. இதனை பரிசில்நிலை எனவும் வழங்குவர்.

வாயில் காவலர்க் குரைத்த கடைநிலை என முன்னர்க் கூறியதுறை வாயிலோர்க்குத்தன் வருகையைக் கூறித் தலைவனைப் பராயது. இத்துறை வேந்தர்பால் தன் பரிசில் வேட்கையைப் புலப்படுத்திப் புகழ்ந்து கூறியது.

எ - டு : ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பிபூப்பத் தேம்புபசி உழவாப்
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி
இல்லிதூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறு அழூஉந்தன் மகத்துமுகநோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண் என்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந்திசினே நற்போர்க் குமண
என்நிலை யறிந்தனையாயின் இந்நிலைத்
தொடுத்துங் கொள்ளாதமையலென் அடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சைநல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோயே (புறம் - 164)

9) பெற்றபின் அரும் பெருவளன் ஏத்தி நடைவயின் தோன்றும் இருவகை விடையும் என்றது = வள்ளியோன் நல்கப் பெற்றபின் அவ்அரிய பெரும் வளத்தினைப்புகழ்ந்து பாராட்டி ஒழுகுமிடத்து நிகழும் இருவகையாய பரிசில்விடை என்னும் துறையும் என்றவாறு.

இருவகை விடைகளாவன : பரிசிலர் தாமே விடை கூறிச் செல்லுதலும், புரவலனிடம் விடைபெற்றுச் செல்லுதலுமாம்.

எ - டு : குன்றும் மலையும் பலபின் ஒழிய
வந்தனென் பரிசில் கொண்டனென் செலற்கென
நின்ற என் நயந்தருளி ஈது கொண்டு
ஈங்கனம் செல்கதான் என என்னை
யாங்கறிந்தனனோ தாங்கருங்காவலன்
காணாதீத்த இப்பொருட்குயானோர்
வாணிகப் பரிசிலன் அல்லேன் பேணித்
தினையனைத் தாயினும் இனிது அவர்
துணையளவறிந்து நல்கினர் விடினே (புறம்-208)

இது அதியமானஞ்சி பிறர் வாயிலாக அளித்த பரிசிலைப் பெறாமல் மறுத்துக் கூறலின் தாமே விடைகூறிச் சென்ற பரிசில் விடை.

உயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந்து ஒருநாட்
செயிர்த்தெழு தெவ்வர் திறை துறை போகிய
செல்வ சேறும்எம் தொல்பதிப்பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தனமாக வல்லே
அகல்திரோவெம் ஆயம் விட்டெனச்
சிரறியவன்போற் செயிர்த்த நோக்கமொடு
துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறியளவையின் தரத்தர யானும்
என்னறியளவையின் வேண்டுவமுகந்து கொண்டு
இன்மை தீர வந்தனென் ” (பொருந - 119 - 129)

இது புரவலனிடம் விடைபெற்றுச் சென்ற பரிசில் விடை

“ நடைவயின் ” என்றதனான் பிறவாறு வரும் பரிசில் விடைக்கெல்லாம் இதுவே விதியாகக் கொண்டு முடித்துக் கொள்க.

புறம்-121 சிறிதெனக் கூறியவிடை. புறம்-162 புரவலனுக்கு இழிவு தோன்றக் கூறியவிடை. புறம்-102 இது மனைவியிடத்துக் கூறியது.

10) அச்சமும் உவகையும் எச்சமின்றி நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும், காலங்கண்ணிய ஓம்படை உளப்பட ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற் காலம்மூன்றொடு கண்ணியவருமே என்றது = நாளும் புள்ளும் தூமமும் பிறவுமாகிய நிமித்தங்களான் எய்தும் அச்சமும் உவகையும் ஆகிய உணர்வு களைக் குறைவின்றி அவ்வக் காலத்தே உரைத்தலைக் கருதிய ஓம்படை வாழ்த்து என்னும் துறை உட்பட மேற்கூறிய பாடாண் பகுதிகள்யாவும் உலகத்து நிகழும் மக்கள் ஒழுகலாற்றினது குறிப்பினான் முக்காலத்தொடும் பொருந்தக் கருதிக் கூறு மாற்றான்வரும் என்றவாறு

ஓம்புதலை அடுத்தல் ஓம்படையாயிற்று. அஃதாவது பாதுகாவலுறப்பண்ணுதல் என்றவாறாகும். வாழ்த்தென்பது அதிகாரத்தான் வந்தியைந்தது.

தலைமைபற்றி நாள் எனக் கூறினாராயினும் அதன் இன மாகிய கோளும் கொள்ளப்பெறும். (பிறநிமித்தங்களாவன மைம் மீன்புகைதல், தென்றிசை மருங்கின் வெள்ளியோடுதல் வெஞ் சுடர் மண்டிலத்துக் கவந்தம் வீழ்தல், அதன்கண் துளை தோன்றல், பகல் நிலவெறித்தல் ஓரியும் கழுதும் அரற்றல் முதலியனவாம்.

புள்நிமித்தமாவன புதுப்புள் வருதலும் பழம்புட்போதலும் கூகை, கோட்டான் முதலியவை குழறலும் பிறவுமாம் ‘ வேய் ’ என்னும் வாய்ச்சொற்களும், பல்லிமிழற்றலும் பிறவும் இதன் கண் அடங்கும்.

நாளும் புள்ளும் பிறவுமாகிய இவற்றின் இயக்கங்களும் செயற்பாடுகளும் பின்னர் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைத் தப்பாமல் முன்னறிவிப்பனவாதலின் அந்நிகழ்வுகள் நிமித்தம் எனப்பட்டன.

நன்மையும், தீமையுமாகிய காரியங்கட்கு ஊழ் முதற் காரணம், நிமித்தங்கள் துணைக் காரணம் என்பது நூலோர் துணிபு.

நன்மை பயப்பனவற்றை நன்னிமித்தம் என்றும் தீமை பயப்பனவற்றைத்தீநிமித்தம் என்றும் உற்பாதம் என்றும் கூறுப. நிமித்தம், விரிச்சி, வேய், ஏதுநிகழ்ச்சி என்பவை ஒத்த பொருளில் புலவோரான் வழங்கப்படுவன. சில நிமித்தங்கள் மன்பதைக்கெல்லாம் பொதுவாயும் சில வேந்தர்க்கும், சில மக்கட்கும் உரியவாயும் நிகழும். நிமித்தங்களின் பயனை நூல்வழியானும், உலக வழக்கானும் துய்ப்புணர்வானும் நன்கறிந்த சான்றோர் அவற்றை உரியவர்பாற்சென்று உணர்த்தித் அத்தீமைகளினின்று உய்யும் வழியைக் கூறி அறிவுறும் நிலையே ஈண்டுஓம்படை எனப்பட்டது.

நிமித்தங்களின் விளைவுகளைத் தேர்ந்துணர்ந்துள்ள சான்றோர் தீய நிமித்தங்கள் நிகழுமிடத்து அச்சமும் நன்னிமித்தம் நிகழுமிடத்து உவகையும் எய்தி அவற்றை மறையாது வெளிப்படுத்துவர். அவ்வழித் தம்மான் மதிக்கப்பெறும் தலைமக்கட்குத் தீங்குநேராமல் அவர் உய்தல் வேண்டுமென வாழ்த்தி ஏத்துதலே இப்பாடாண்டிணைத்துறையாகிய ஓம்படை வாழ்த்தாகும்.

ஊழினது முறைமைகளை ஓர்ந்துணர்ந்து கூறுதலின் “ காலங்கண்ணிய ” என்றார், ஈண்டுக்காலம் என்றது ஊழ்முறையாகிய நியதியை

ஓம்படை வாழ்த்தென்னும் துறைஉளப்பட அவை யாவும் பாடல் சான்ற புலநெறி வழக்கமாகிய புறத்திணை ஒழுகலாறு பற்றி வரும்துறை நிகழ்ச்சிகளும், சுட்டி யொருவர் பெயர் கொண்டு புரைதீர் காமப் பகுதியாக வரும் கிளவிகளும் பாடாண்டிணைக் குரியவையாக வரும்

அங்ஙனம் வருங்கால் அவை நாடக வழக்குப் பற்றிய புனைந்துரையின்றி உலகியல் வழக்கே பற்றி வரும் என்பது நனிவிளங்க. "ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பிற் காலம் மூன்றொடு கண்ணிய வரும்" என்றார் என்க.

மக்கள் ஒழுகலாறுகளின் வடிவும் நிலையும் முறைமையும் காலந்தொறும் வேறுபடினும், பொருளைக் கவர்தல், நாடுகளை அகப்படுத்தல் அரணை (பாதுகாப்பினை) வளைத்தல், அழித்தல், மைந்துபொருளாக இகலுறுதல், வாகை பெறுதல் முதலியவையும், நிலையாமை வழக்கும், பரவலும் புகழ்ச்சியுமாக ஏத்தலும் வாழ்த்தலும் மக்கள் உலகம் உள்ள அளவும் நிகழ்வனவாதலின் — "காலம் மூன்றொடு கண்ணிய வருமே" என்றார்

இவ்விலக்கண நூல் அறிவியலையும் மெய்ப்பொருளியலையும் அடிப்படையாகக் கொண்டிலங்குவதென்பது இதனானும் விளங்கும். ஓம்படைவாழ்த்தாவது,

எ - டு : மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவருவளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரும் என்றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கைபோலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்
வலியும் தெறலும் அளியும் உடையோய்
நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்தும்நின்
வெண்டலைப்புணரி குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாட்டுப் பொருந
வானவரம்பனை நீயோ பெரும
அலங்குளைப் புரவி ஐவரொடுசினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை
ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல் வேத நெறி திரியினும்
திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலீஇயரோ அத்தை — அடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்

முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட்டியமும் பொதியமும் போன்றே (புறம்-2)
எனவரும்.

காலனும் காலம் பார்க்கும் (புறம் - 41) என்னும் புறப்பாட்டு வஞ்சித்திணைக் கொற்றவள்ளைப்பற்றிப் புகழ்ந்துரைத்தலின் வஞ்சிப்பொருள்பற்றி வந்த பாடாண் பகுதியாகும்.

ஆடியல் அழற்குட்டத்து (புறம் 229) என்னும் புறப்பாட்டு தீ நிமித்தங்கண்டு சான்றோர் அஞ்சியமை கூறிற்று. அது பாட்டுடைத் தலைவனைப் புகழ்ந்துரைத்து ஓம்படை செய்யாமையான் பாடாண் பகுதியாகாது காஞ்சித்திணையின் பாற்படுமென்க.

இனி, புறநானூற்றுச் செய்யுள்கட்குக் கூறப்பட்டுள்ள திணையும் துறையும் பன்னிரு படலத்தை ஒட்டியவை என்பது நச்சினார்க்கினியர் கருத்து. ஆதலின் அவர் புறநானூற்றுப் பாக்கள் பலவற்றிற்குத் திணையும் துறையும் வேறு கூறிச் சென்றார். எனினும் அமரர் கண் முடியும் அறுவகை என்பதற்குப் பொருள் வேறு கொண்டமையானும், பாடாண் பகுதிகட்குத் தெளிவான எடுத்துக்காட்டுக்களைக் காட்டாமையானும் அவர் உரையான் தொல்காப்பிய நெறியைச் செம்மையாக அறிதல் கூடாதாயிற்று

தொல்காப்பியம் வகுத்துக்கூறும் புறத்திணைக்குரிய துறைகட்கெல்லாம் தொல்லோர் இலக்கியம் காணப் பெறாமையான் உரையாசிரியன்மார் இடைக்கால இலக்கண நூல்களின் கோட்பாடுகளையும் அவற்றின் வழிவந்த இலக்கியங்களையும் ஒட்டி விளக்கங்கூறிச் சென்றனர். அதனான் தொல்காப்பிய நெறியை அவை செம்மையாகத் தெரிவியாதுபோயின. மாணாக்கர் நூல்வழி நின்று உண்மை தேர்வாராக.

புறத்திணையியல்

ஆராய்ச்சிக் காண்டிகை உரை

நிறைவுற்றது

---

# சூத்திர முதற்குறிப்பு அகரநிரல்

## அகத்திணையியல்

## புறத்திணையியல்



---





ச. பாலசுந்தரம்

இவர் தஞ்சாவூர் கரந்தையில் 1924இல் பிறந்தார். கரந்தைப் புலவர் கல்லூரியில் பயின்று வித்துவான் வகுப்பில் முதலாவதாகத் தேர்ந்து 1950 முதல் அக் கல்லூரியிலேயே பேராசிரியராகவும் துணை முதல்வராகவும் பணியாற்றி 1982 இல் ஓய்வு பெற்று இப்பொழுது தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் சங்க இலக்கிய அகராதித் திட்டத்தில் பணியாற்றி வருகிறார். கரந்தைத் தமிழ்ச்சங்கப் பணிகள் நூல் வெளியீடுகள் தமிழ்ப் பொழில் ஆகிய வற்றில் இவர்க்குக் குறிப்பிடத் தக்க பங்கு உண்டு.

தொல்காப்பியர் கழகத் தலைவராக இருந்து சிறந்த இலக்கியத் தொண்டாற்றியுள்ளார். கரந்தைக்கோவை முதலிய இலக்கியங்களும் புலவருள்ளம் முதலிய கவிதைநாடக நூல்களும் சார்பெழுத்தாய்வு முதலிய பல இலக்கணக் கட்டுரைகளும் நாடகத்தமிழ் முதலிய இலக்கியக் கட்டுரைகளும் சொல்லாய்வுக் கட்டுரைகளும் வரைந்துள்ளார். தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடான புதிய ராகங்கள் நூலுக்கு இசைப் பாடல்களும் இசைக் கருத்தரங்கக் கட்டுரைகளும் எழுதியுள்ளார். சரசுவதிமகால் நூலகத்திற்காகப் பல நூல்கள் பதிப்பித்துள்ளார். வானொலி நாடகங்கள் பலவற்றில் நடித்துள்ளார். நூற்றுக்கும் மேற்பட்ட கவியரங்குகளிற் பங்கேற்றும் தலைமை தாங்கியும் கவிதைப் பணியாற்றியுள்ளார். சிறந்த இலக்கிய மன்றங்கள் பல இவர்க்குப் பாவலரேறு, கவிஞர்கோ, செஞ்சொற்கவிவலவன் தொல்காப்பியப் பேரறிஞர் முதலிய விருதுகள் அளித்துப் பாராட்டியுள்ளன. இவருடைய நூல்கள் சென்னை, மதுரை, அண்ணாமலை, பாரதிதாசன் பல்கலைக் கழகங்களில் இளங்கலை, முதுகலைப் பட்டப்படிப்பிற்குப் பாடநூல்களாக அமைந்துள்ளன. இப்பொழுது தமிழியக் கோட்பாடுகளை அறிவியல் நோக்கில் ஆராய்ந்து வருகிறார்.

அ. கி. மூர்த்தி.